ஶ்ருதிந்யாயாபேதம் ஜகதி விததம் மோஹநமிதம்
தமோ யேநாபாஸ்தம் ஸ ஹி விஜயதே யாமுநமுநி: ॥ 2

---

இவ்விதம் இவர்களின் கொள்கைகள் இருக்கின்றபடியால், ஸ்ரீபாஷ்யகாரர் இந்த ச்லோகத்தில் இந்த மூன்று மதங்களைப்பற்றியே சொல்லுகிறார் என்பது வ்யக்தம்.

**பரம் ப்ரஹ்மைவ** - பரப்ரஹ்மமே. அதாவது எந்த ப்ரஹ்மமானது ஹேய குணங்களை அற்றது என்றும், கல்யாணகுணங்களுடன் கூடினதென்றும், ஆகையினால் எல்லாவற்றையும் விட விலக்ஷணமென்றும், ஸ்வயம் ப்ரகாசமாக இருப்பதையே ஸ்வபாவமாக உடைத்தாயிருக்கிறது என்றும் ஓதக்கொள்ளப்பட்டிருக்கிறதோ, அதற்கே ப்ரமம் ஸம்பவிக்கின்றது என்று சொல்வது விருத்தமன்றோ? என்பது ஸர்வ என்பதன் தாத்பர்யம். ப்ரமம் ஸம்ஸாரம் இவைகளின் நிவ்ருத்திக்காக எந்த ப்ரஹ்மம் நம்மால் ஆச்ரயிக்கப்படுகிறதோ, அதுவே ப்ரமிக்கின்றது ஸம்ஸரிக்கின்றது என்பது ஆசயம்.

**அஜ்ஞம்** - அவித்யையால் மறைக்கப்பட்டதாய்க்கொண்டு, தன் ஸ்வரூபத்தைத் தானே அறியவில்லை.

**ப்ரமபரிகதம்** - பேதமில்லாத இடத்தில் பேதத்தைப் பார்த்து ப்ரமித்தும். **ஸம்ஸரதி** - ஸம்ஸரிக்கிறது. பேதத்தை உணர்வதால் உண்டாகும் ஸகல துக்கங்களுக்கும் பாத்ரமாவதே ஸம்ஸரிப்பது. இவ்வளவு சங்கரமதம்.

**பரோபாத்யாலீடம்** - வேறு (தன்னைப்போல ஸத்யமாயுள்ள) உபாதிகளால் ஸம்பந்தமாய். சங்கரமதத்தில் அங்கீகரிக்கப்படும் மித்யையான அவித்யையைக்காட்டிலும், ஸத்யமான இந்த உபாதி வேறு என்று சொன்னது ஆகிறது.

**விவசம்** - காம பரவசமாகி. இவ்வளவு பாஸ்கரமதம்.

**அசுபஸ்யாஸ்பதம்** - அசுபங்களுக்கு ஆஸ்பதமாகின்றது. அசேதநவஸ்து எப்பொழுதும் மாறிக்கொண்டே இருக்கின்றது என்பது அதற்கு அசுபம். சேதநனுக்கு கர்மத்தினால் ஜ்ஞாநக்குறைவு அடைந்ததாய் அல்பங்களான அர்த்தகாமங்களாகிற அபுருஷார்த்தங்களில் புருஷார்த்த புத்தியைச்செய்கிறது என்பது அதற்கு அசுபம். இது யாதவமதம்.

**இதி ஶ்ருதிந்யாயாபேதம் ஜகதி விததம்** - இப்படி, வேதம் தர்க்கம் இரண்டுக்கும் விருத்தமாயும், ஜகத்தில் பரவிவருகிறதாயும்.

**மோஹநம்** - மோஹநமாயும். பரமார்த்தமல்லாததில் பரமார்த்த புத்தியை ஜநிப்பிக்கிறபடியால் இவை மோஹநங்களே.

**இதம் தம: யேந அபாஸ்தம்** - யாதொரு யாமுநமுநியால் இந்த அஜ்ஞாநமானது நிரஸிக்கப்பட்டதோ. அஜ்ஞாநத்தை இருளாகப் பேசுவது அநுரூபமே.

**ஸ ஹி விஜயதே** - 'அவர் ஜயிக்கிறார்' என்பதால் அவருடைய உபாஸநம் சொல்லப்பட்டது. "ஜயத்யதிபலோ ராம:" என்று சிறிய திருவடி உத்கோஷிக்கவில்லையோ?

அஶேஷ ஜகத்திதாநுஶாஸந ஶ்ருதிநிகரஶிரஸி ஸமதிகத

தோயமர்த்த:, ஜீவ பராத்ம யாதாத்ம்ய ஜ்ஞாந வர்ணாச்ரம தர்ம

'அஶேஷ ஜகத்தித' என்பது முதல் 'வர்ணயந்தி' என்பது வரையில் ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்வபக்ஷத்தைச் சுருக்கமாகச் சொல்லுகிறார்.

அஶேஷ ஜகத் - ஸகல ஜகத்துக்கும். அதாவது - பலவித அதிகாரிகள் அடங்கிய ஜகத்துக்கு, ஸகல அதிகாரிகளுக்கும்

ஹிதாநுஶாஸந - ஹிதத்தைத் தெளிவாக ஜ்ஞாபிப்பதில் ப்ரவ்ருத்திக்கும். 'ஹிதம்' என்பது, உபாயம் உபேயம் இவைகளை விஷயமாக உடையது. அநுஶா ஸநமாவது - விவிச்ய ஜ்ஞாபநம். இப்படி ஹிதத்தைப் போதிக்க ப்ரவ்ருத்திக்கும் வேதம் ப்ரமத்தைச் சொல்லாது என்பது குறிப்பு. அபுருஷார்த்தமான ஸ்வர்க்கத்திற்குப் போகும் உபாயத்தையும், மிகவும் நிந்த்யமான அபிசார க்ரியைகளையும் வேதம் சொல்லுகின்றதே! இது உபபந்நமோ? என்று ஒரு சங்கை உதிக்கக்கூடும். வேதம் ஸ்வர்க்கம் முதலிய அபுருஷார்த்தங்களைச் சொல்வது, அப்படிப்பட்ட அதிகாரிகளும் ஜகத்தில் இருக்கிறபடியால். அத்யந்தம் அஹிதமான அபிசாரங்களைச் சொல்வதும், அம்மாதிரி காமங்களில் நோக்கமுள்ள துஷ்டர்களை, பக்ஷ்யவிசேஷங்களால் குழந்தைகளைப் போல வசீகரிப்பதற்காகவே 'த்ரைகுண்ய விஷயா வேதா:' (2-45) என்னும் ஸ்ரீ கீதாவாக்யத்தின் கீழ் ஸ்ரீபாஷ்யகாரர் பின்வருமாறு பாஷ்யம் செய்தருளியிருக்கிறார். ஸகல ஜநங்களிடமும் வேதம் வாத்ஸல்யம் உடையதானதால், அவரவர்களுக்குத் தக்கபடி அது ஹிதத்தை உபதேசிக்குமன்றோ? அப்படி உபதேசியாவிட்டால், ரஜஸ் தமஸ் குணம் நிறைந்துள்ள ஜநங்கள், தம்மால் அபேக்ஷிக்கப்படும் பலத்தை அடைய உபாயம் அறியாதவர்களாய் அநுபாதேயங்களில் உபாதேய ப்ரமம் செய்து அது வழியாக நாசத்தை அடைந்துவிடுவார்கள். 'யதா தாம்பத்ரிதாந்யாஸ்யபி நந்தந்தி வருத்தா: பித்ருதிஷ்ட்ரதஸ்ய நாநாவேவ வளயுதாகி நா ஷ்ருணுஸ்யந்தி' என்பது ஸ்ரீ தாத்பர்ய சந்த்ரிகையின் வாக்யம்.

ஶ்ருதி நிகர ஶிரஸி - வேதக்கூட்டத்தின் சிரஸ்ஸில். பரதேவதையைப் பற்றியே ப்ரதிபாதிக்கும் வேத பாகத்திற்கு 'வேதசிரஸ்' 'வேதாந்தம்' என்று பெயர். வேதங்களும் அநேக சாகைகளை உடையவை. 'ஸகல சாகைகளிலும் காணப்படும் வேதாந்த வாக்யங்களில்' என்பது அர்த்தம் 'ஶ்ருதி:' என்பது 'ஶ்ரூயதே நித்யம்' 'எப்பொழுதும் கேட்கப்படுகின்றது' என்னும் அர்த்தமுள்ளது. அதாவது - மனிதரால் சொல்லப்படாமல் அநாதி காரணத்தினாலே நித்யமாயும் எவ்வித தோஷமும் அற்றிருக்குமாம் வேதம்.

அயமர்த்த: ஸமதிகத: - இந்த அர்த்தமானது (அதாவது - பின்சொல்லப்படப் போகும் அர்த்தமானது) நன்கு அறியப்பட்டிருக்கிறது.

𑌶𑍍𑌰𑌮𑌧𑌰𑍍𑌮𑍇𑌤𑌿𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌤𑌾𑌕 𑌪𑌰𑌮𑌪𑍁𑌰𑍁𑌷𑌚𑌰𑌣𑌯𑍁𑌗𑌳 𑌧𑍍𑌯𑌾𑌨𑌾𑌰𑍍𑌚𑌨 𑌪𑍍𑌰𑌣𑌾𑌮𑌾𑌦𑌿𑌰𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌪𑍍𑌰𑌿𑌯 𑌸𑍍𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌫𑌲𑌃 । 𑌅𑌸𑍍𑌯 𑌜𑍀𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑍋𑌽𑌨𑌾𑌦𑍍𑌯𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌸𑌂𑌚𑌿𑌤 𑌪𑍁𑌣𑍍𑌯𑌪𑌾𑌪𑌰𑍂𑌪 𑌕𑌰𑍍𑌮𑌪𑍍𑌰𑌵𑌾𑌹

---

𑌜𑍀𑌵𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍂𑌰𑍍𑌵𑌕 - ஜீவாத்மா பரமாத்மா இவை களின் உண்மையான ஜ்ஞானத்தை முன்னிட்டுக்கொண்டிருக்கும். அதாவது - அப்படிப் பட்ட ஜ்ஞானத்துடன் செய்யப்படும். உண்மையான ஜ்ஞானமாவது - ப்ரபஞ்சம் முழுவதும் பரமாத்மாவை ஆத்மாவாக உடையது என்னும் ஜ்ஞானமே இதுதான் உண்மையான ஜ்ஞானம். “𑌐𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌮𑌿𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 - 𑌤𑌤𑍍𑌸𑌤𑍍𑌯𑌂” என்று பரமாத்மாவை ஆத்மாவாக உடைத்தாயிருப்பதே ஸத்யம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

𑌵𑌰𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌮 𑌧𑌰𑍍𑌮𑍇𑌤𑌿 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌤𑌾𑌕 - வர்ணாச்ரம தர்மானுஷ்டானத்தை அங்கமாக உடைய. ‘கீழ்ச்சொல்லப்பட்ட உண்மையான ஜ்ஞானத்தை முன்னிட்டுக்கொண்டிருக்கும் கர்மானுஷ்டானத்தை உடைய’ என்பதால் கேவலம் வாக்ய ஜந்ய ஜ்ஞானம் உதவாது என்று சொன்னதாயிற்று. சிலர், கர்மானுஷ்டானங்கள் கேவலம் ப்ரஹ்மோபாஸநத்தில் ஒரு இச்சையை மாத்ரம் ஜநிப்பிக்கும் என்று சொல்வர். மற்றும் சிலர், கர்மானுஷ்டானத்தால் ப்ரதிபந்தகங்கள் விலகுகின்றன, ஜ்ஞானத்தினுல் ப்ரஹ்மம் அடையப்படுகின்றது, ஆகையால் இரண்டும் ஸமமாகக் காரணமாகின்றன என்று சொல்வர். இவை இரண்டும் ஸ்ரீ பாஷ்யகாரருக்கு அநபிமதம். இந்தக் கர்மங்களே பகவதாராதநமாகின்றன, அதனுல் ப்ரஸந்நனுகி பகவான் அநுக்ரஹிக்கிறுன் என்னும் தமது மதத்தை இது ஸூசிப்பிக்கின்றது.

𑌪𑌰𑌮 𑌪𑍁𑌰𑍁𑌷 𑌚𑌰𑌣 𑌯𑍁𑌗𑌳 - பரம புருஷனுடைய திருவடிகளில். ‘பரம புருஷன’ என்பதால் தேவதா விசேஷமும், ‘𑌚𑌰𑌣𑌯𑍁𑌗𑌳’ என்பதால் தாஸ்யத்திற்குத் தகுந்த வ்யாபாரமும் தோன்றுகின்றன.

𑌧𑍍𑌯𑌾𑌨𑌾𑌰𑍍𑌚𑌨 𑌪𑍍𑌰𑌣𑌾𑌮𑌾𑌦𑌿𑌃 - த்யானம், அர்ச்சனம், ப்ரணமம் இவை முதலிய. அதாவது - நாமஸங்கீர்த்தனம் யஜனம் முதலியவைகளும் என்பது குறிப்பு. இவைகளுக்குள் த்யானம் முக்யமே. ஆனுலும், இவைகளால் ஏற்படும் பரமபக்தியைக் கவனித்து இவைகளைத் துல்யமாகச் சொன்னபடி. அர்ச்சனம் ப்ரணமம் இவைகளுடன் கூடிய த்யானமே உபேயத்தைக் கிடைக்கவொட்டாமல் தடுக்கும் ப்ரதிபந்தகங்களைப் போக்கடிக்கக்கூடியது.

𑌅𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 - மிகவும் ப்ரியமான- த்யானம் முதலியவைகள் அளவற்ற ப்ரீதி பூர்வகமாகவே செய்யப்படவேண்டும். ப்ரீதி விரஹிதமான த்யானம் முதலியவை உபாயமாகா என்பது தாத்பர்யம்.

“𑌸𑍍𑌨𑍇𑌹𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑌨𑍁𑌧𑍍𑌯𑌾𑌨𑌂 𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇” என்னும் பக்தி ஸ்வரூபத்தைச் சொல்லும் ச்லோகத்தில்,

அத்யர்த்தப்ரியஸ்த்வம் மந்மநா பவ - அத்யர்த்தமான ப்ரீதியுடன் என்னிடம் மனஸ்ஸை நிவேசிக்க வேண்டும்.

அத்யர்த்தப்ரியஸ்த்வம் மத்யாஜீ பவ - அத்யர்த்தமான ப்ரீதியுடன் என்னிடத்தில் சேஷவ்ருத்தியைச் செய்.

அத்யர்த்தப்ரியஸ்த்வம் மாம் நமஸ்குரு - அத்யர்த்தமான ப்ரீதியுடன் என்னிடத்தில் நமஸ்ஸையைச் செய், என்றன்றோ அந்வயம்?

தத்ப்ராப்திஹேதவ: - இப்படிப்பட்ட த்யானம் முதலியன அவனை அடைவதைப் பலமாக உடையன. ‘அத்யர்த்தப்ரிய: ஜ்ஞாநாதிஸ்தத்ப்ராப்திஹேதவ:’ என்பது அந்வயம்.

அஸ்ய ஜீவாத்மந: - இந்த ஜீவாத்மாவுக்கு, பரமாத்மாவைவிட விருத்தமான ஸ்வபாவத்தை உடைய இந்த ஜீவனுக்கு. வஸ்து ஸ்திதி இவ்விதம் இருக்கையில் ஐக்யம் எப்படிச் சொல்லக்கூடும் என்பது குறிப்பு

அநாத்யவித்யாஸஞ்சித - அநாதிகாலமாக வரும் அவித்யையால் ஏற்பட்டுள்ள. அவித்யை என்றால், தேஹத்தை ஆத்மா என்றும், ஆத்மா ஸ்வதந்த்ரன் என்றும் ப்ரமிப்பது.

“ஶ்ருதிபதாம் ஸர்வஸ்ய அவித்யாயா: ஸ்வரூபம் ச ஶ்ருணு ।
அநாத்மந்யாத்மபுத்திர்யா அஸ்வே ஸ்வமிதி யா மதி: ॥”

(ஆத்ம பிந்நவஸ்துவில் ஆத்மபுத்தியும் நமக்கு ஸ்வம் இல்லாததை நம்முடையது என்று நினைக்கும் புத்தியும் அவித்யை என்று சொல்லப்படும்) அவித்யையால் காமம், காமத்தால் தேஹப்ராப்தி, தேஹஸம்பந்தத்தால் அவித்யை என்று அந்யோந்யாச்ரய ரூபமான தோஷமானது ‘அநாதி’ என்பதால் பரிஹ்ருதம்.

புண்யபாபரூப - புண்யம் பாபம் இந்த ரூபமான. ‘புண்யம் என்பது தேஹத்தைக்காட்டிலும் ஆத்மா வேறு என்று நினைத்தன்றோ செய்யப்படுகிறது? அது அவித்யையின் கார்யம் என்று எப்படிச் சொல்லக்கூடும்’ என்றால், அந்த ஜ்ஞானம் இருந்த போதிலும் ஜீவாத்மா பரமாத்மாவுக்கே சேஷன் என்னும் ஜ்ஞானம் இல்லாமற் செய்யப்படுகிறபடியால் அது அவித்யா கார்யமே. ஸ்வர்க்கம் முதலிய ப்ரயோஜனத்தை உத்தேசித்தன்றோ புண்யம் செய்யப்படுகிறது? ஸ்ரீ கீதாபாஷ்யத்தில் ‘ஶுபாஶுப பரித்யாகீ’ (11-17) என்பதை விவரிக்குமிடத்தில் ‘பாபவத் புண்யஸ்யாபி பந்தஹேதுத்வாவிஶேஷாத் உபயம் பரித்யாகீ’ (பாபம்போலே புண்யமும் பந்தத்திற்குக் காரணமாதலால், இரண்டையும் த்யஜித்தவன்) என்று சொல்லப்பட்டி

ஹேதுக ப்ரஹ்மாதி ஸுர நர திர்யக் ஸ்தாவராத்மக சதுர்வித தே ஹப்ரவேச க்ருத தத்ததாத்மாபிமாந ஜநிதாவர்ஜநீய பவபய வித்வம் ஸநாய தேஹாதிரிக்தாத்மஸ்வரூப தத்ஸ்வபாவ ததந்தர்யாமி பரமாத்ம ஸ்வரூப தத்ஸ்வபாவ ததுபாஸந தத்பலபூதாத்மஸ்வரூபாவி

---

ருக்கிறது. ச்ருதியிலும் 'ந ஸுக்ருதம் ந துஷ்க்ருதம்' என்பதற்குப் பிறகு 'ஸர்வே பாப்மாநோ' என்பது காணப்படுகிறபடியால், முமுக்ஷுவுக்கு ஸுக்ருதமும் பாபம்போலே பந்தகமே என்று சொன்னதாகிறது

கர்மப்ரவாஹ ஹேதுக - கர்ம பரம்பரைக்குக் காரணமான

ப்ரஹ்மாதி ஸுர நர திர்யக் ஸ்தாவராத்மக - ப்ரஹ்மா முதலிய தேவதைகள், மநுஷ்யர்கள், பசுபக்ஷிகள், வ்ருக்ஷம் முதலியவை, இத்யாதியான,

சதுர்வித தேஹப்ரவேசக்ருத - நாலுவித தேஹங்களில் ப்ரவேசிப்பதால் உண்டாகும்.

தத்ததாத்மாபிமாந ஜநித - அந்தந்த தேஹங்களிற் செய்யப்படும் ஆத்ம ஜ்ஞாந பலமாய் ஏற்படும். அவித்யையால் புண்ணிய பாபரூபமான கர்மம், அதனால் தேஹப்ரவேசம், தேஹப்ரவேசத்தால் தேஹாத்மாபிமாநம் என்று அநாதிப்ரவாஹம்.

அவர்ஜநீய பவ வித்வம்ஸநாய - விலக்கக்கூடாத ஸம்ஸார பயத்தைப் போக்கடிக்கும்பொருட்டு. 'இதெல்லாம் பொய்' என்று எவ்வளவு தடவை உத்கோஷித்தாலும் இது நிவர்த்திக்கமுடியாது என்பது தயோதிதம்.

தேஹாதிரிக்தாத்மஸ்வரூப தத்ஸ்வபாவ - தேஹத்தைக்காட்டிலும் வேறுபட்டதான ஜீவாத்மாவின் ஸ்வரூபம், அதன் ஸ்வபாவம். இதன் ஸ்வரூபம், ஜ்ஞாநாநந்தங்களை லக்ஷணமாக உடையது, ஸ்வபாவம், பகவானுக்கு சேஷமாக இருக்கும் தன்மை. உபாஸிக்கவேண்டியவனுக்கு இந்த இரண்டும் அநுகுணங்கள்.

ததந்தர்யாமி பரமாத்மஸ்வரூப தத்ஸ்வபாவ - அந்த ஜீவாத்மாவுக்கு அந்தர்யாமியாக இருக்கும் பரமாத்மாவின் ஸ்வரூபம், அதன் ஸ்வபாவம். இதன் ஸ்வரூபம், எல்லாருக்கும் ஈச்வரனாக இருக்கும் தன்மை, ஸ்வபாவம், ஆச்ரிதர்களுக்கு ஸுலபனாக இருக்கும் தன்மை. உபாஸிக்கப்படவேண்டியவனுக்கு இந்த இரண்டும் அநுகுணங்கள்

ததுபாஸந - அந்தப் பரமாத்மாவை உபாஸிப்பது. இது உபாயம், இது ஏற்கெனவே விஸ்தாரமாக விவரிக்கப்பட்டது.

தத்பலபூத - அந்த உபாஸநத்திற்குப் பலமான.

ர்பாவ பூர்வகாநவதிகாதிசயாநந்த ப்ரஹ்மாநுபவஜ்ஞா பநே ப்ரவ்ருத்தம் ஹி வேதாந்தவாக்யஜாதம்,

'தத்த்வமஸி" (சாந்தோக்யே. 6-8-7.)

"அயமாத்மா ப்ரஹ்ம" (ப்ருஹதாரண்யகே, 6-4-5)

"ய ஆத்மநி திஷ்டந் ஆத்மநோऽந்தரோ யமாத்மா ந வேத யஸ்யாத்மா சரீரம் ய ஆத்மாநமந்தரோ யமயதி ஸ த ஆத்மாந்தர்யாம்யம்ருத:" (ப்ரு 5-7-22)

---

ஆத்மஸ்வரூபாவிர்பாவ பூர்வக - ஆத்மாவின் ஸ்வரூபம் ஆவிர்பவிப்பதை முன்னிட்டுக் கொண்டிருக்கும். உபாஸநத்தால் ஆத்மாவின் ஸ்வரூபம் வெளிப்படுகின்றது என்பது கருத்து. சுத்த ஆத்மா நித்யஸித்தமான வஸ்து, ஸர்வஜ்ஞத்வம் முதலிய குணங்கள் அதற்கு உண்டு. ப்ரக்ருதி ஸம்பந்தத்தால் ஜ்ஞாந ஸங்கோசம் ஏற்பட்டு, அவை ப்ரகாசிக்காமலிருக்கின்றன. கர்மபந்தம் விடவே முதலில் அவை ஆவிர்பவிக்கின்றன, பிறகு ப்ரஹ்மாநந்தம், என்பது க்ரமம்.

அநவதிகாதிசயாநந்த ப்ரஹ்மாநுபவஜ்ஞாபநே - அளவற்ற அதிசயத்துடன் கூடிய ஆநந்தத்தைக் குணமாக உடைய ப்ரஹ்மத்தை அநுபவிப்பதை அநுசாஸிப்பதில். கீழ் 'அநுஶாஸந' என்னும் பதமும் இவ்விடத்தில் 'ஜ்ஞாபந' என்னும் பதமும் ஒரே அர்த்தமுள்ளது.

வேதாந்தவாக்யஜாதம் ப்ரவ்ருத்தம் ஹி - ஸகல வேதாந்த வாக்யங்களும் ப்ரவ்ருத்திக்கின்றனவன்றோ? கேவலம் ஒரு வாக்யத்தை அவலம்பித்துச் சொல்லவில்லை, எல்லா வாக்யங்களும் இம்மாதிரி சொல்லுகின்றன என்பது தாத்பர்யம்.

அந்த வாக்யங்களாவன —

தத்த்வமஸி - நீ அதுதான். அதாவது - நீ பரமாத்மாவை ஆத்மாவாக உடைத்தாயிருக்கிறாய். 'நீ' என்று ஒரு ஜீவனைக் குறித்துச் சொல்லப்பட்டது.

அயமாத்மா ப்ரஹ்ம - ஆத்மாவென்று சொல்லப்படும் வஸ்து ப்ரஹ்மத்தை ஆத்மாவாக உடையது. இது ஜீவ ஸாமாந்யத்தைப் பற்றியது.

ய ஆத்மநி அம்ருத: - எந்தப் பகவான் ஜீவாத்மாவினிடத்தில் இருந்து கொண்டு அந்த ஆத்மாவுக்குள் இருக்கிறானோ, எவனை அந்த ஆத்மா அறியவில்லையோ, எவனுக்கு அந்த ஆத்மா சரீரமோ, எவன் அந்த ஆத்மாவை நியமிக்கிறானோ, அந்த விகார

“𑌏𑌷 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾𑌽𑌪𑌹𑌤𑌪𑌾𑌪𑍍𑌮𑌾 𑌦𑌿𑌵𑍍𑌯𑍋 𑌦𑍇𑌵 𑌏𑌕𑍋 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃” (𑌸𑍁. 7.)

“𑌤𑌮𑍇𑌤𑌂 𑌵𑍇𑌦𑌾𑌨𑍁𑌵𑌚𑌨𑍇𑌨 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾 𑌵𑌿𑌵𑌿𑌦𑌿𑌷𑌨𑍍𑌤𑌿 𑌯𑌜𑍍𑌞𑍇𑌨 𑌦𑌾𑌨𑍇𑌨 𑌤𑌪𑌸𑌾𑌽𑌨𑌾𑌶𑌕𑍇𑌨” (𑌬𑍃. 6-4-22)

“𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌪𑌰𑌮𑍍” (𑌤𑍈.)

“𑌤𑌮𑍇𑌵𑌂 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑌮𑍃𑌤 𑌇𑌹 𑌭𑌵𑌤𑌿 𑌨𑌾𑌨𑍍𑌯𑌃 𑌪𑌨𑍍𑌥𑌾 𑌅𑌯𑌨𑌾𑌯 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇” (𑌪𑍁 𑌸𑍂.)

𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌭𑌿𑌃

---

மற்றிருககும அநதாயாமி உனககு ஆதமா. இமமாதிரியான வாகயஙகள் பேத சருதிகளையும் அபேத ச்ருதிகளையும ஸமநவயம செயகிறபடியால கடக ச்ருதிகள் எனறு சொல்லபபடுகினறன.

**𑌏𑌷... 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃** - எல்லா பூதங்களுககும அந்தராதமாவாக இருககும இவன், காமஸம்பந்தம் அறறு திவ்யனுக ப்ரகாசிககும ஒருவனான நாராயணனே. இந்தச்ருதி, அநதப் பரமாத்மா நாராயணனே எனறு சொலலுகிறது

**𑌤𑌮𑍇𑌤𑌂 ..𑌅𑌨𑌾𑌶𑌕𑍇𑌨** – அப்படிப்பட்ட இநதப பரமாதமாவை வேதவாகயங்களைக்கொண்டு ப்ராஹமவிததுககள அநநயபரயோஜநமாகச் செய்யபபடும வாணச்ரம தாமாநுஷடாநமாகிற யஜஞத்தாலும தாநததாலும, தபஸஸினுலும அறிய இசசிககிறாகள். இது, வாணச்ரம தாமாநுஷடாந ரூபமான காமம உபாஸநததிறகு அஙகம என்பதைசசொல்லுகின்றது.

**𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌪𑌰𑌂** - பரமபுருஷனை உபாஸிககிறவன அவனையே அடைகிறுன். இது உபாஸநமே உபாயமெனபதைச சொலலுகினறது

**𑌤𑌮𑍇𑌵𑌂 ..𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇** - இவவிதம உபாஸிககிறவனே முகதனுகிறுன, இதைத தவிர்த்து வேறு வழி இல்லை. பரமாதம ப்ராப்திககு வேறு உபாயமில்லை எனபதை இது தெரிவிககிறது.

**𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌭𑌿𑌃** – இது முதலானவை அநத வாகயஙகள. முதலான எனறு சொன னதால், பேத சருதிகளும் உபாஸந சப்தததுடன் கூடிய ச்ருதிகளும கரஹிககபபடுகின்றன.

ஜீவாத்மந: ஸ்வரூபம் தேவமநுஷ்யாதி ப்ரக்ருதி பரிணாம விசேஷரூப நாநாவித பேதரஹிதம் ஜ்ஞாநாநந்தைக குணம்

---

"ஜீவாத்மந: – இதி" உதாஹரிக்கப்பட்டுள்ள ச்ருதி வாக்யங்களில் ஜீவனுடைய ஸ்வரூபமாவது பரமாத்மாவின் ஸ்வரூபமாவது விவரிக்கப்படவில்லையே என்று சங்கித்து, வேதத்திற்கு உபப்ருஹ்மணங்களாகிற ஸ்ம்ருதி புராணம் முதலியவைகளில் அவை உபபாதிக்கப்பட்டிருக்கின்றனவென்றும், ஆகையால் அவை ச்ருதி ப்ரதிபந்நங்களென்றும் நினைத்து அந்த உபபாதநப்படி அந்த ஸ்வரூபங்களை விவரிக்கிறார்.

வாக்யத்தின் அர்த்தம்,— ஜீவாத்மாவின் ஸ்வரூபமானது, தேவதேஹம் மநுஷ்ய தேஹம் முதலிய யாதொரு ப்ரக்ருதி பரிணாம விசேஷம் உண்டோ, அப்படிப்பட்ட எவ்வித பேதமும் இல்லாதது, ஜ்ஞாநத்வம் ஆநந்தத்வம் முதலிய குணங்களுடன் மாத்திரம் கூடினது. கர்மங்களினால் ஏற்பட்டுள்ள தேவமநுஷ்யபேதம் நாசம் அடைந்த பிறகு, அந்த ஜீவாத்மாக்களுக்குப் பரஸ்பரம் ஸ்வரூபத்திலுள்ள பேதம் வார்த்தைகளால் சொல்லமுடியாது; தன்தன்னாலேயே அறிந்து கொள்ளத்தக்கது. ஆகையால், அந்த ஸ்வரூபமானது ஜ்ஞாநஸ்வரூபமென்று மாத்திரம் சொல்லத்தகுந்தது. அது எல்லா ஜீவாத்மாக்களுக்கும் ஸமாநம்.

தேவமநுஷ்யாதி ...... ரஹிதம் – 'ஒருவன் தேவன் மற்றொருவன் மநுஷ்யன், என்று வ்யவஹரிக்கப்படும் பேதங்களெல்லாம் தேஹத்தைப் பற்றியவைகளே தவிர ஆத்மாவைப்பற்றியவையல்ல' என்று சொல்லப்படுகிறது

"ததாத்மா ப்ரக்ருதே: ஸங்காத் அஹம்மாநாதி தூஷித: ।
ஜாயதே ப்ராக்ருதாநேதாந் ப்ரக்ருதேரந்ய ஏவ ஸோ(அ)வ்யய: ॥"

(ப்ரக்ருதியின் விகாரமாகிற தேஹத்தின் ஸம்பந்தத்தால் ஆத்மாவுக்குத் தேஹாத்ம ப்ரமமும் ஸ்வதந்த்ராத்ம ப்ரமமும் இன்னும் இவ்வாறான ப்ராக்ருத தர்மங்கள் ஸம்பவிக்கின்றன, அந்த ஆத்மா இவைகளைக்காட்டிலும் வேறு) என்றும்,

"பும்ஸோ தேவாதயோ நரோ ந பசுர் நைவ பாதப: ।
சரீராக்ருதி பேதாஸ்து பூபைதே கர்மயோநய: ॥"

(தேவாதி பேதங்களெல்லாம் ஆத்மாவுக்கு இல்லை, சரீரத்திற்கே, இம்மாதிரியான சரீர பேதத்திற்குக் காரணம் கர்மமே) என்றும் உபப்ருஹ்மணங்களில் காணப்படுகின்றன.

**நாநாவிதபேத** – பலவித பேதங்கள். தேவன் மநுஷ்யன் திர்யக் ஸ்தாவரம் என்னும் பேதங்களுடன், 'ஒருவன் ஸுகி, மற்றொருவன் துக்கி, இத்யாதியான பேதங்களும் விவக்ஷிதங்கள்.

ஜ்ஞாநாநந்தைக குணம் – 'ஜ்ஞாநத்தன்மை ஆநந்தத்தன்மை இவைகளையே குணங்களாக உடையது' என்பது அர்த்தம். சரீரத்தில் காணப்படும் பேதங்

ணம் | தஸ்யைதஸ்ய கர்மக்ருத தேவாதிபேதே வித்வஸ்தே ஸ்வ-
ரூபபேதோ வாசாமகோசர: ஸ்வஸம்வேத்ய: | ஜ்ஞாநஸ்வரூப இத்யே-
தாவதேவ நிர்தேச்யம் | தச்ச ஸர்வேஷாமாத்மநாம் ஸமாநம் |

ஏவம்வித சிதசிதாத்மகப்ரபஞ்சஸ்ய உத்பவ ஸ்திதி ப்ரளய

---

கள் நசித்துவிட்டால், பிறகு ஆத்மாக்களுககு எவ்வித பேதமும் சொல்லமுடியாது; எல்லா ஆத்மாக்களுக்கும் ஜ்ஞாநாநந்த குணகத்வம் ஸமாநமாக இருககிறபடியால்.

**வாசாமகோசர:, ஸ்வஸம்வேத்ய:** — ஒரு ஆதமாவைவிட மற்றொரு ஆத்மா வேறு என்பதைத் தான்தானே அறிந்துகொள்ளும்படி இருககும். அதாவது, கர்மக்ருதமான சரீரபேதத்தைக்கொண்டு ஆத்மபேதததைச் சொல்லமுடியாதே தவிர, ஸ்வாபாவிகமாக பேதமுண்டு எனபது கருதது. **"ஜ்ஞாநஸ்வரூப இத்யேதாவதேவ நிர்தேச்யம்"** — ஆத்ம வஸ்து ஜ்ஞாந ஸ்வரூபமென்று மாத்ரம் சொல்லத்தகுந்தது. 'நிர்தேச்யம்' என்பதை அந்வயிக்க 'ஆத்மவஸ்து' என்பதை அத்யாஹாரம் செய்துகொள்ளவேண்டும்.

**தச்ச ஸர்வேஷாமாத்மநாம் ஸமாநம்** — அந்த ஜ்ஞாநஸ்வரூபம் எல்லா ஆத்மாககளுககும் துல்யம். "நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம" (சுத்தாத்மாககளெல்லாம் ஸமமே) என்று ஸ்ரீகீதாசார்யன்.

**"ஏவம்வித" இதி** — இதனால் அந்தர்யாமி ஸ்வரூபம் சொல்லப்படுகிறது. இதன் அர்த்தம் — அந்தர்யாமி ஸ்வரூபமேதென்றால், இப்படிப்பட்ட சேதந அசேதந வஸ்துக்கள் அடங்கிய ப்ரபஞ்சம் முழுவதின ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் மோக்ஷம் இவைகளுக்கு ஒரே காரணமாயும், ஸகல ஹேயகுணங்களுமற்று அநந்தமான ஆநந்தத்திற்கு இருப்பிடமாயிருப்பதால் தன்னைத்தவிர்த்த மற்றை எல்லா வஸ்துககளைககாட்டிலும் விலக்ஷணமான ஸ்வரூபத்தை உடையதாயும், அளவற்றமேன்மையுடன் பொருந்திய எண்ணமுடியாத கல்யாணகுணக்கூட்டங்களை உடையதாயும், 'ஸர்வாத்மா' 'பரப்ரஹ்மம்' 'பரஞ்ஜ்யோதிஸ்' 'பரதத்வம்' 'பரமாத்மா' 'ஸத்' இவைமுதலிய சப்தபேதங்களால் எல்லா வேதாந்தங்களிலும் ப்ரதிபாதிக்கப்படுவதாயும், ஷாட்குண்ய பரிபூர்ணமாயும், உபய விபூதியையும் உடையதாயுமுள்ள நாராயணனென்றும் புருஷோத்தமனென்றும் சொல்லப்படும் ஸ்வரூபமே. இந்த அந்தர்யாமியினுடைய வைபவததை ப்ரதிபாதிக்கும் ஸகல ச்ருதிகளும், அந்த அந்தர்யாமி தனனைத தவிர்த்த ஸமஸ்த சேதநாசேதந வஸ்துககளெல்லாவற்றிற்கும அந்தராத்மாவாக இருந்துகொண்டு ஸகல வஸ்துககளையும் நியமித்துககொண்டு வருகிறான் எனபதை, 'மற்றை வஸ்துககளெல்லாம் அவனுடைய சக்தி' 'அவனுடைய அம்சம' 'அவனுடைய விபூதி' 'அவனுடைய ரூபம்' 'அவனுடைய சரீரம்' 'அவனுடைய தநு' இதயாதியான சப்தங்களாலும், 'இவையெல்லாம் அவனே' என்னும் ஸாமாநாதிகரண்யத்தைச் சொல்லியும ப்ரதிபாதிக்கின்றன.

ஸம்ஸாரநிவர்த்தநைகஹேதுபூதஃ, ஸகலஹேய ப்ரத்ய-
நீகதயா அநந்தகல்யாணைகதாநதயா ச ஸ்வேதர ஸமஸ்த-
வஸ்து விலக்ஷண ஸ்வரூபோऽநவதிகாதிஶயாஸங்க்யேய கல்யா-
ணகுணகணஃ ஸர்வாத்மா பரப்ரஹ்ம பரஞ்ஜ்யோதிஃ பரதத்வ பர

---

உத்பவஃ - ஸ்ருஷ்டி. ஸ்திதி - ஸ்ருஷ்டியின் அநுவ்ருத்தி, அதாவது ஸம்ரக்ஷணம். ப்ரளய - நாசம், அல்லது ஸம்ஹாரம். **ஸம்ஸார நிவர்த்தந** - மோக்ஷம் ஆக இந்த நாலுக்கும் அவன் ஒருவனே காரணம். ‘**ஜகஜ்ஜந்மஸ்திதித்வம்ஸ மஹாநந்தைகஹேதவே**’ என்னும் ஆகமப்ராமாண்ய ச்லோகமும், ‘**ஜகதுத்பவ ஸ்திதி ப்ரணாஶ ஸம்ஸார விமோசந ஆதயஃ**’ என்னும் ஸ்ரீ ஸ்தோத்ர ரத்ந ச்லோகமும், ‘**நிகிலஜகதுதய விபவ லய மஹாநந்தைக காரணம்**’ என்னும் ஸ்ரீபாஷ்ய வாக்யமும் ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் மோக்ஷம் ஆகிற நாலையும் ப்ரஸ்தாவிக்கின்றன. ஆகையால் அவை இவ்விடத்தில் அநுஸந்தேயங்கள் ப்ருகு வல்லியாகிற உபநிஷத்திலும், ‘**யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே**’ என்று ஸ்ருஷ்டியும், ‘**யேந ஜாதாநி ஜீவந்தி**’ என்று ஸ்திதியும், ‘**யத் ப்ரயந்தி**’ என்று மோக்ஷமும், ‘(**யத்**) **அபிஸம்விஶந்தி**’ என்று ப்ரளயமும், ஆக நாலுக்கும் காரணம் ப்ரஹ்மமென்று சொல்லப்பட்டிருக்கின்றது.

**ஸ்வேதர . . . விலக்ஷண ஸ்வரூபஃ** - ‘பகவானுடைய ஸ்வரூபம் மற்ற வஸ்துக்களின் ஸ்வரூபம் போலன்று’ என்று சொன்னால் போதாதோ? ‘ஹேயகுணங்கள் இல்லையாகையாலும் கல்யாணகுணங்கள் நிரம்பியிருக்கையாலும் மற்றை வஸ்துக்களைக்காட்டிலும் விலக்ஷணம்’ என்று காரணத்தைச் சொல்லுவானேன்? என்றால், லோகத்தில் ஒவ்வொரு வஸ்துவும் மற்றொரு வஸ்துவைக்காட்டிலும் விலக்ஷணமாயிருக்கிறபடியாலும் கேவலம் வைலக்ஷண்யம் ஏற்றத்துக்குக் காரணமாகாதாகையாலும் இவ்விடத்தில் காரணத்தைக் குறிப்பிட்டு வைலக்ஷண்யம் சொல்லப்பட்டிருக்கிறது. ‘**கல்யாண**’ என்பது ஆநந்தத்தைக் குறிக்கின்றது.

**அநவதிக... குணகணஃ** - அளவற்ற மேன்மையுடன் கூடிய கல்யாண குணங்களை உடையது அந்த ப்ரஹ்மம் என்று சொன்னதால், அது எல்லாராலும் உபாஸிக்கத்தகுந்த வஸ்து, அடையத்தகுந்ததும் அதுவே என்று விவரிக்கப் படுகிறது.

**ஸர்வாத்ம . . . வேதாஃ** - பரமாத்மா, பரப்ரஹ்மம், பரஞ்ஜ்யோதிஸ், பரதத்வம், ஸத் இம்மாதிரியான பதங்களால் பகவான் நாராயணனே ச்ருதிகளில் சொல்லப்படுகிறான், என்பது கருத்து. இந்த அர்த்தத்தை ஸ்ரீகூரேசன்,

[illegible]

'[illegible] நாராயணஇதி'

என்று விவரித்திருக்கிறார்.

நாராயணः - இதனால் அவன் இரண்டு விபூதிகளையும் உடையவன் என்றும், பராத்பரः எனபதனால் தனது விபூதிகளுள்ளடங்கிய மற்றை வஸ்துக்களைக் காட்டிலும் விலக்ஷணன் என்றும் சொல்லப்பட்டது.

ஸர்வஸ்ய ..... வ்யுத்பாதயந்தி - கீழ்ச்சொல்லப்பட்டதெல்லாம், 'பரமாத்மா வேறு ஜீவாத்மா வேறு' என்று சொல்லும் ச்ருதிகளுக்கு ஒத்திருக்கலாம். 'இரண்டும் ஒன்று' என்று சொல்லும் ச்ருதிகளுக்கு இது விருத்தமன்றோ? என்றால் அதற்கு ஸமாதானம் சொல்லப்படுகின்றது.—'விருத்தமன்று: ஏனென்றால், அம்மாதிரியான அபேத ச்ருதிகளும் பேத ச்ருதிகளால் ப்ரதிபாதிக்கப்படும் நாராயணனுடைய வைபவத்தையே சொல்லுகின்றன. ஸகல வஸ்துக்களுக்கும் அந்தர்யாமியாக இருந்துகொண்டு ஸகலத்தையும் நாராயணனே நியமித்துக்கொண்டு வருகிறான் என்று சொன்னால், அது அவனுடைய பெருமையைக் காண்பிக்கிறதன்றோ? அபேத ச்ருதியின் ஆசயமும் அம்மாதிரியான நியமநமே.'

சக்தி - 'பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே' (ஜகத் முழுவதும் அவனுடைய சக்தி), ஜகத் அவனுக்கு சரீரம், ஆகையால் காரியோபயோகி விசேஷமாகின்றது, ஆகையால் சக்தி. அம்ச - 'விஷ்ணோரம்சோ ஜகத்' (ஜகத் விஷ்ணுவின் அம்சம்), நாராயணன் விசேஷ்யம், ஜகத் அவனுக்கு விசேஷணம், ஆகையால் ஜகத் விசிஷ்டத்தின் அம்சம். விபூதி - 'விஷ்ணோரேதா விபூதயः' (எல்லாம் விஷ்ணுவின் விபூதிகள்), விஷ்ணு நியமிக்கிறவன், ஜகத் நியமிக்கப்படும் வஸ்து, ஆகையால் அது அவனுடைய விபூதி. ரூப சரீர தநு - 'பராஸ்ய ப்ரஹ்மணோ ரூபம்' 'ஜகத் ஸர்வம் சரீரம் தே' 'தாநி ஸர்வாணி தத்வபுः' (எல்லாம் அவனுடைய ரூபம், சரீரம், தநு); விஷ்ணு வ்யாபகன், ஜகத் அவனால் வ்யாபிக்கப்பட்டிருக்கிறது, அவனால் நியமிக்கப்பட்டும் வருகிறது, ஆகையால் அது அவனுடைய

ஸ்ருதி தநுசப்த தநூரீர தத்ந்ந வ்யாஹ்ருதிபிஃ ஶரீரவாசி ஶப்த ஸாமாநாதிகரண்யேந ச வ்யாஹ்ருதிவாக்ஷணி ।

---

சரீரம். ஸம்ஸ்க்ருத பாஷையில் தநு என்றால சரீரம் என்றே அர்த்தம். இவ்விடத்தில் 'தநு' 'ஶரீரம்' என்று வேறுவேறாகச்சொன்னது, 'எப்படி இவை இரண்டும் ஒரே அர்த்தத்தைக் குறிக்கின்றனவோ அப்படியே மற்ற 'சக்தி' முதலிய சப்தங்களும் அந்த ஒரு அர்த்தத்தையே குறிக்கின்றன' என்பதை ஸூசிப்பிக்கும்பொருட்டே. 'அவன் அந்தர்யாமியாக இருந்துகொண்டு எல்லாவற்றையும் நியமித்து வருகிறான்' என்பதைத்தான் இந்த சப்தங்களெல்லாம் சொல்லுகின்றன 'நிவிஷ்டிய நம் வ்யாஹ்ருதிவாக்ஷணி' என்பது அந்வயம். ஸாமாநாதிகரண்யேந - கீழ்ச் சொல்லப்பட்டுள்ள சப்தங்கள் அவனுடைய நியமநத்தைச் சொல்வதுபோல, ஸாமாநாதிகரண்யத்தைச் சொல்லும் அபேத ச்ருதிகளும் அவனுடைய நியமநத்தையே காட்டுகின்றன. ஆகையால் எல்லா ச்ருதி வாக்யங்களும் அவனுடைய வைபவத்தையே ப்ரதிபாதிக்கின்றன என்பதில் ஸந்தேஹமே இல்லை

'ஸாமாநாதிகரண்யம்'—ஸமாநமான அதிகரணத்தை உடைத்தாயிருக்கும் தன்மை. அதாவது - வெவ்வேறு அர்த்தமுள்ள இரண்டு சப்தங்கள் ஒரே பொருளை ஆச்ரயித்து நின்றால் அவைகளை ஸமாநமான அதிகரணத்தை உடையவை (ஸமாநாதிகரணங்கள்) என்றும், வெவ்வேறு பொருள்களை ஆச்ரயித்து நின்றால் வெவ்வேறு அதிகரணங்களை உடையவை (வ்யதிகரணங்கள்) என்றும் வ்யவஹரிப்பார்கள். 'ஜகத் ப்ரஹ்மமே' என்று சொல்லும இடத்தில் ஜகத் என்னும் சப்தமும ப்ரஹ்மம் என்னும் சப்தமும் ஒரே பொருளை ஆச்ரயித்திருக்கிறபடியால், அவை ஸமாநாதிகரணங்கள். 'ஜகத் என்பது ஒன்று ப்ரஹ்மம் என்பது மற்றொன்று' என்று சொல்லும் இடத்தில் இரண்டும் வெவ்வேறுபொருளை ஆச்ரயித்திருக்கிறபடியால், அவை வ்யதிகரணங்கள். நமது ஸித்தாந்தத்தில் ப்ரபஞ்சமும் ப்ரஹ்மமும் வெவ்வேறு அர்த்தமானாலும், அவைகளுக்கு ஸாமாநாதிகரண்யம் இல்லை. ... சப்தமும், ப்ரபஞ்சத்தினுள் ப்ரஹ்மம் அந்தர்யாமியாக இருந்துகொண்டு அதை நியமித்துக்கொண்டு வருகிறபடியால், சரீரத்தைச் சொல்லும் சப்தங்கள் சரீரி பர்யந்தம போகும என்னும் ந்யாயப்படி அவைகளுக்கு ஸாமாநாதிகரண்யம் சொல்லக்கூடும். ஆகையால் ஸாமாநாதிகரண்யம சொல்லும் பொழுதெல்லாம் ப்ரஹ்மத்தின் நியமநம (எல்லாவஸ்துக்களையும் ப்ரஹ்மம் நியமிக்கிறது என்பது) சொல்லப்படுகிறபடியால், அதன் வைபவம் சொன்னதாகவே ஆகிறது.

இதுவரையில் ஸ்வபக்ஷ ஸங்க்ஷேபம் ... — சித் என்று சொல்லப்படும் ஜீவன ஜ்ஞாநத்தையே குணமாக உடையவன், ஜ்ஞாந ஸ்வரூபன்; கர்மவசியாக வேறு வேறு தேஹங்களை அடைகிறான், அந்தக் கர்மம் நிவ்ருத்தியானால், ஸ்வரூபத்தில் பேதம் இருக்கையிலும், வேறு வேறு தேஹங்களால் பரஸ்பரம உண்டாகும் பேதம் போய்விடுகிறது, அது போயவிட்டால் ஸகல ஜீவனகளும ஸமமே, அவர்கள் அவிகாரி. அசித் என்று சொல்லப்படும் ப்ரக்ருதி, ஒருவித பரிணாமத்தை அடைந்து அந்த ஜீவன்களு

க்குக் காமமடியாக ஏற்படும் தேஹங்களாக மாறுகின்றது, அது விநாசி சித் அசித் இவை இரண்டுமே சேர்ந்து உதயமாகி இருக்கும் ப்ரபஞ்சத்தை ஸ்ருஷ்டிப்பவன் பரமாத்மா நாராயணன், அதை ரக்ஷித்து ஸம்ஹரித்து சேதநவஸ்துவுக்கு அந்தந்த காலங்களில் மோக்ஷத்தைக்கொடுத்து வருகிறவனும் அவனே, அவன் ஹேயகுணங்களற்றவன்; ஆநந்தநிதி, மற்றை வஸ்துக்களின் ஸ்வரூபத்தைவிட வேறு விலக்ஷணமான ஸ்வரூபத்தை உடையவன், அவனே தவிர்த்த மற்றை வஸ்துக்களெல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாக இருந்துகொண்டு அவைகளெல்லாவற்றையும் நியமித்து வருகிறான்; அது காரணமாக அவன் சரீரியாகவும் மற்றை வஸ்துக்கள் அவனுடைய சரீரமாகவும் ச்ருதிகளில் சொல்லப்படுகின்றன, அந்தக்காரணத்தினாலேயே அவனே ப்ரபஞ்சம் என்றும் அந்த ச்ருதிகள் சிலவிடங்களில் சொல்லுகின்றன, மற்றும் சில விடங்களில் ப்ரபஞ்சத்தை அவனுடைய அம்சமென்றும் சக்தியென்றும் விபூதியென்றும் பேசுகின்றன; அந்த ச்ருதிகள் அந்த நாராயணனையே ஆத்மாவென்றும் ஜ்யோதிஸ் என்றும் தத்வமென்றும் ஸத் என்றும் வ்யவஹரிக்கின்றன.

இம்மாதிரியான உண்மையான ஜ்ஞானத்துடன், அந்த நாராயணனால் சொல்லப்பட்டுள்ள வர்ணாச்ரம தர்மத்தை லோபமின்றிக்கு ச்ரத்தையுடன் அவனது ஆராதநமாகச் செய்துகொண்டு, அவனுடைய திருவடிகளில் தயாந அர்ச்சந ப்ரணம நாமஸங்கீர்த்தநம் முதலிய உபாஸநத்தை அத்யர்த்தமான ப்ரீதியுடன் செய்துவந்தால், தமது காமம் நிவ்ருத்தமாகி, வேறு வாக்யார்த்த ஜ்ஞாநம் முதலியவற்றால் மாத்திரம் போக்கடிக்கக்கூடாத ஸம்ஸார பயத்தினின்றும் கரையேறினவர்களாய், தமது ஸ்வரூபாவிர்பாவத்தைப் பெற்று அளவற்ற ஆநந்தத்தைக் கொடுக்கும் ப்ரஹ்மாநுபவத்தை ஸகல ஜீவர்களும் அடைகிறார்கள். ச்ருதிகள் சொல்வது இதுதான்.

இதுவரையில் ஸ்வபக்ஷ ஸங்க்ஷேபம் சொல்லப்பட்டது. இப்பொழுது 'தத்வ' என்று ஆரம்பித்து 'வர்ணயந்தி' என்னுமவரையில் சங்கர மதத்தையும், 'அபரே' என்று ஆரம்பித்து 'வ்யவஹரந்தி' என்னுமவரையில் பாஸ்கரமதத்தையும், 'அந்யே' என்று ஆரம்பித்து 'ப்ரதிஷ்டந்தே' என்னுமவரையில் யாதவமதத்தையும் ஸங்க்ரஹிக்கிறார். இம்மூன்று மத ப்ரவர்த்தகர்களும், 'ப்ரஹ்மமே ஜகத்' என்னும் அர்த்தமுள்ள அபேத ச்ருதிவாக்யங்களையே பலிஷ்டங்களாகநினைத்து, 'இரண்டும் ஒன்றே' என்று அங்கீகரியாவிட்டால் இந்த வாக்யங்களுக்கு விரோதம் வந்துவிடுமோ என்னும் பயத்துடன் தங்கள் தங்கள் மதத்தை ப்ரவ்ருத்திப்பித்திருக்கிறார்கள் என்று சொல்லவேண்டும். 'ப்ரஹ்மமும் ஜகத்தும் வேறு' என்னும் அர்த்தமுள்ள பேத ச்ருதி வாக்யங்களை அவர்கள் எக்காரணத்தினாலோ அநாதரித்துவிட்டார்கள். பரஸ்பரம் விருத்தம்போலத் தோன்றும் பேத அபேத ச்ருதி வாக்யங்களை ஸமந்வயம் செய்யும் 'ஜகத் ப்ரஹ்மத்தை ஆத்மாவாக உடைத்தானது' என்னும் அர்த்தமுள்ள கடக ச்ருதிவாக்யங்கள் அவர்களுக்கு ஸ்புரிக்கவில்லை போலும்.

தஸ்ய வைபவப்ரதிபாதநபராணி ஶேஷாணி ஸாமாநாதி கரண்யாதீநி விவரணே ப்ரவ்ருத்தாநி கேசந, 'நிர்விஶேஷ ஜ்ஞாந

---

தஸ்ய... ப்ரவ்ருத்தா: கேசந — [அந்த பரஹ்மத்தின் வைபவத்தை பர திபாதிப்பதையே நோக்கமாக உடைய ஸாமாநாதிகரண்யம் முதலியவைகளின் விவரணத் தில் பரவருத்திக்கும் சிலர் ] அபேத சருதிவாக்யங்களிற் சொல்லப்பட்டுள்ள ஸாமாநாதி கரண்யம், கீழ் விவரித்திருக்கிறபடி நமது ஸித்தாந்தத்தில் 'ஜகத்துக்கு பரஹ்மம் அந்த ராத்மாவாக இருந்துகொண்டு ஜகத் முழுவதையும் நியமிக்கிறது' என்பதைக் குறிக்கின் றது அந்தக் காரணத்தினாலே அது ப்ரஹ்மத்தின் வைபவத்தை பரதிபாதிக்கின்றது என்றேசொல்லவேண்டும் அப்படி இருக்கையில் இவர்கள் அந்த ஸமாநாதிகரண்யத்திற்கு வேறு விதமாக விவரணம் செய்யப் புகுகிறார்களே என்று ஆச்சர்யப்படுகிறார். ஸாமாநாதி கரண்யாதீநி — ஸாமாநாதிகரண்யம் முதலிய. அதாவது— ஸாமாநா திகரண்யத்தைச்சொல்லும் அபேத ச்ருதிகள், 'பரபஞ்சம் சரீரம், பரஹ்மம் ஆத்மா' என் பதைச்சொல்லும் கடகச்ருதிகள், பேதத்தைச்சொல்லும் பேதச்ருதிகள், இந்த ச்ருதிகள் எல்லாம் என்று அர்த்தம். கேசந — சிலர், அதாவது சங்கர மதக்காரர்கள்.

இந்த ஸாமாநாதிகரண்ய சப்தம் அடிக்கடி இவ்விடத்தில் வருகிறபடியால், அதைத் தெளிவாக நாம் தெரிந்துகொள்ளவேண்டியது அவசியம். கீழ்ச்சொல்லியபடி, வெவ்வேறு அர்த்தமுள்ள பல சப்தங்கள் ஒரே பொருளை அவகாஹித்து நின்றால், அவைகளுக்கு ஸாமா நாதிகரண்யம் உண்டு. இதை வேறுவிதமாகவும் சொல்லலாம் விசேஷணங்களால் பிரகாரத்வமும் விசேஷ்யத்தால் ஏகார்த்தத்வமும் இருக்கும் காலத்தில் ஸாமாநாதி கரண்யம் ஏற்படும் உதாஹரணம் — 'நீலமாயும் வாத்துலமாயும் பெரியதாயுமுள்ள குடம்' என்னுமிடத்தில் ஸாமாநாதிகரண்யம் வ்யக்தம். இதுபோலவே, 'ப்ரஹ்மம் விசேஷ்யம் பரபஞ்சம் முழுவதும் விசேஷணம்' என்று சொல்லும் நமது ஸித்தாந் தத்தில் ஸாமாநாதிகரண்யம் எப்பொழுதும் உண்டு 'விசேஷணமாகிற பரபஞ்சம் விசேஷ்யமாகிற பரஹ்மமே' (அதாவது — விசேஷண விசேஷ்யங்கள் இரண்டும் ஒன்று) என்று சொல்லும் சங்கர மதத்தில் ஐக்யம் சொல்லப்பட்டதாகுமேதவிர ஸாமாநாதிகரண்யம் ஏற்படாது. 'ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம' என்னும் சருதி வாக்யத்தின் அர்த்தத்தை விசாரிக்கும் இடத்தில் இது வ்யக்தமாக ஏற்படும்.

நிர்விஶேஷ ...ப்ரஹ்ம—[பரஹ்மம் என்பது எவ்விதவிசேஷமுமற்ற ஜ்ஞாந மாத்ரமே ] ஜ்ஞாநமாத்ரம் என்றதால் முழுவதும் ஜ்ஞாநமென்பது சொல்லப்படுகிறது. 'ஸ யதா ஸைந்தவகந:' (உப்புக் கட்டிபோல அவன் இருக்கிறான்) என்னும் தருஷ்டாந்தம் இதைக் குறிக்கின்றது. உப்புக் கட்டி எப்படி உள்ளும் புறமும் ஒவ் வொரு அம்சத்திலும் உப்பாகவே இருக்குமோ, அப்படியே ப்ரஹ்மம் முழுவதும் ஜ்ஞாநமே. 'நிர்விஶேஷ' என்றால் 'பேதமற்ற' என்று அர்த்தம். பேதம் மூன்றுவிதம்.— விஜாதீயம், ஸஜாதீயம், ஸ்வகதம். பரஹ்மத்திற்கும் அசேதந வஸ

ஏதாத்ருசஸ்ய ப்ரஹ்மண:, தஸ்ய நித்யசுத்த முக்த ஸ்வப்ரகாசஸ்வரூபஸ்ய தத்வமஸ்யாதி ஸாமாநாதிகரண்யாவகததஜ்ஜீவைக்யம் ப்ரஹ்மைவாஜ்ஞம் பத்யதே முச்யதே ச, நிர்விசேஷ சிந்மாத்ராதிரேகி ஈசரேசிதவ்யாத்யநந்த விகல்ப ஸ்வரூபம் க்ருத்ஸ்நம் ஜகந்மித்யா; கச்சித் பத்த: கச்சித்

---

துக்களுக்கும் உள்ள பேதம் விஜாதீயம், ப்ரஹ்மத்திற்கும் சேதநவஸ்துக்களுக்கு முள்ளது ஸஜாதீயம், ப்ரஹ்மத்திற்கும் அதன் குணங்களுக்கும் உள்ளது ஸ்வகதம் இந்த மூன்றாவது பேதம் விஜாதீய பேதத்தில் அடங்கியதென்றும் சொல்லலாம் இம்மூன்று பேதங்களும் அற்றிருப்பதே நிர்விசேஷத் தன்மை. அதாவது— ப்ரஹ்மமொன்றே ஸத்யம், அதைக்காட்டிலும் பின்னமாக ஒன்று இருக்கின்றதென்பது இல்லையென்று சொன்னதாயிற்று.

தஸ்ய.........முச்யதே ச - [ப்ரஹ்மம் ஒருபொழுதும் எவ்வித பந்தமும் இல்லாமலும் ஸ்வயமே ப்ரகாசமாகவும் இருப்பதை ஸ்வபாவமாக உடைத்தாயிருக்கையிலும், 'நீ ப்ரஹ்மமாகவே இருக்கிறாய்' என்று சொல்லும் ஸாமாநாதிகரண்ய வாக்யத்தினால ஜீவனைக்காட்டிலும் அது வேறுபட்டது அன்று என்று ஏற்படுகின்றது, அந்த ப்ரஹ்மம் அவித்யையினால் மறைக்கப்பட்டதாய்க்கொண்டு பேத ப்ரமத்தை அநுபவித்து, பந்தம் மோக்ஷங்களை அடைகின்றது.] அதாவது—'அபேத வாக்ய பலத்தினால், நாம் இம்மாதிரி கல்பிக்கவேண்டும்; அதனாலேயே அதற்குப் பந்தம் மோக்ஷம் இரண்டும் உபபந்நங்களாகின்றனவென்று சொல்லவும் வேண்டும்' என்று சொன்னதாயிற்று தனது உண்மையை அறியாமல் இருப்பது பந்தத்தின் தன்மை, அது ஸ்வப்ரகாசமாயுள்ள வஸ்துவில ஸம்பவியாதாகையால், 'பந்தமில்லாமல ஸ்வயம் ப்ரகாசமாயிருக்கையிலும்' என்று சொல்லப்பட்டிருக்கின்றது. பந்தம் அடையும் பொருள் மோக்ஷம் அடையும் பொருள் எல்லாம் ப்ரஹ்மமே. இந்த அர்த்தத்தைத்தான் 'பரம் ப்ரஹ்மைவ ஸம்ஸாரதி' என்று இரண்டாவது ச்லோகத்திற் சொல்லியிருக்கிறார். இவ்விதம் கல்பிக்கவேண்டுமே தவிர, இதற்கு ஸாக்ஷாத் ப்ரமாணம் இல்லை என்பது குறிப்பு

நிர்விசேஷ சிந்மாத்ர.......க்ருத்ஸ்நம் ஜகந்மித்யா - [இந்த ஜ்ஞாநமாத்ரமாகவிருக்கும் ப்ரஹ்மத்தைத் தவிர்த்த மற்றவையெல்லாம் பொய் ஒருவன் ஈச்வரன் போலவும் மற்றவை அவனுக்கு உட்பட்டவை போலவும் இவ்வாறு கணக்கற்ற பேதங்களை ஸ்வரூபமாக உடைய ஜகத் முழுவதும் பொய்.] சுருதியிலேயே, 'ஈச்வரன் என்று ஒருவன் உண்டு; ஜகத் முழுவதும் அவனுக்கு உட்பட்டது' என்று பலவாறுகச் சொல்லப்பட்டிருக்கையிலும், இந்த அபேத வாக்ய பலத்தைக் கொண்டு அந்த வாக்யங்களெல்லாம் பொய் என்று சொல்லவேண்டிவருகின்றது.

கச்சித் பத்த:.........ந வித்யதே - [ஒருவன் ஸம்ஸாரத்தில் அகப்பட்டவன், மற்றொருவன் அதிலிருந்து விடப்பட்டவன் என்னும் வ்யவஸ்தையும் இல்லை] பத்த

[illegible] 𑌇𑌤𑍀𑌯𑌂 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌾 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇; 𑌇𑌤𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌕𑍇𑌚𑌨 𑌮𑍁𑌕𑍍𑌤𑌾 𑌇𑌤𑍍𑌯𑌪𑌿 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾; 𑌏𑌕𑌮𑍇𑌵 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌜𑍀𑌵𑌵𑌤𑍍; 𑌨𑌿𑌰𑍍𑌜𑍀𑌵𑌾𑌨𑍀𑌤𑌰𑌾𑌣𑌿 𑌶𑌰𑍀𑌰𑌾𑌣𑌿, 𑌤𑌚𑍍𑌛𑌰𑍀𑌰𑌂 𑌕𑌿𑌮𑌿𑌤𑌿 𑌨 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍; 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌪𑌦𑍇𑌷𑍍𑌟𑌾 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾; 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌚 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾; 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌪𑍍𑌰𑌮𑌾𑌤𑌾 𑌚 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾; 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌜𑌨𑍍𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌚 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾; 𑌏𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌭𑍂𑌤𑍇𑌨𑍈𑌵 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌣𑌾𑌵𑌗𑌮𑍍𑌯𑌤𑍇' 𑌇𑌤𑌿 𑌵𑌰𑍍𑌣𑌯𑌨𑍍𑌤𑌿 ;

---

ஜீவன் முகதஜீவன என்று ஒரு வயவஸதையை ஒததுககொண்டால் ஜீவபேததததை ஒததுககொள்ளும்படி ஸம்பவிககுமே என்று பயநது அம்மாதிரி வயவஸதையே இல்லை எனகிறாகள.

**𑌇𑌤𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 ..... 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾** -[இதற்கு முன்னதாக சிலா முகதியை அடைந்திருககிறாகள எனபதும் பொய ] சுகா முதலான மஹாஷிகள் முகதாகளென்று சொல்லபபடுகிறாகளே என்றால், அதுவும பொய

**𑌏𑌕𑌮𑍇𑌵 .. 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍** - [ஒரு சரீரமே ஜீவனுடன்கூடியது, மற்றை சரீரஙகளெலலாம் ஜீவனற்றவை, அபபடி ஜீவனை உடைய சரீரம் எதுவென்று சொல்ல முடியாது.] இநதக கல்பனை மிக்க ஆசசாயத்தைக கொடுககக்கூடியது. ஆதமாக்களுககுப் பாஸபாம பேதம் இலலை என்பதை ஸதாபிககும் பொருட்டு இம்மாதிரி கல்பனைகளைச் செயயவேண்டிவருகின்றது. ஜீவனெல்லாம் ஒன்றானல், ஒருவன் ஸுகத்தை அநுபவிககையில் எலலாரும ஸுகததை அநுபவிககவேண்டுமே என்பது போன்ற பல வித ஸஙகடங்களை உததேசித்து, 'ஒரே சரீரம் தான் ஜீவனுடன்கூடியது, அது எதுவென்று வயவஸ்தை இல்லை' என்று கலபிககிறாகள்.

**𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌃 . . . 𑌅𑌵𑌗𑌮𑍍𑌯𑌤𑍇**- [ஜ்ஞானோபதேசம் செய்யும் ஆசார்யனும் பொய், சாஸதரமும பொய், அதைக கேட்கிறவனும் பொய், சாஸத்ரத்தினல் ஏற்படும ஜ்ஞானமும பொய், இவையெல்லாம, பொய்யாகிற சாஸதரத்திலேயே அறியப்படுகின்றன] ஒருவன ஆசாாயன,மறறெருவன சிஷ்யன்என்னும வ்யவஸ்தையை ஒத்துக்கொண்டால, ஆத்மாககள் பஹு எனபது ப்ரஸங்கிககும்; சாஸத்ரம் பரமாணமென்று ஒத்துககொண்டால் பரஹமததைத் தவிாதத மற்றொரு பொருளும் ஸத்யமென்று ஏற்படும். இவையெலலாம அநிஷ்டங்களாகையால் எல்லாம் பொய் என்று கல்பிககிறார்கள். 'இபபடி எல்லாம பொய என்று ஏற்படுவதும் பொய்யான சாஸ்த்ரத்திலிருநது' என்று ஆச்சாயபபடுகிறார். இதற்காகவே 'பொய்' என்று திருப்பத் திருபபச் சொல்லபபடுகிறது.

**𑌇𑌤𑌿 𑌵𑌰𑍍𑌣𑌯𑌨𑍍𑌤𑌿** - இப்படி வாணிககிறாகள். அதாவது - சொல்லும் அாத்தும் நிலைபெறாது என்பது குறிபபு.

𑌮𑌾𑌤𑍍𑌰𑍈𑌵 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮; 𑌤𑌤𑍍𑌤𑍁 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌵𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌮𑌪𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌸𑍍𑌯𑌾𑌦𑌿 𑌸𑌾𑌮𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍍𑌯𑌾𑌵𑌗𑌤𑌜𑍀𑌵𑍈𑌕𑍍𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑌾𑌜𑍍𑌞𑌂 𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 𑌚, 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍇𑌷𑌚𑌿𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌤𑌿𑌰𑍇𑌕𑍇𑌣𑍇𑌶𑍍𑌵𑌰𑍇𑌶𑌿𑌤𑌵𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌨𑌨𑍍𑌤𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌂 𑌸𑌰𑍍𑌵𑌮𑍇𑌵𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌂 𑌜𑌗𑌨𑍍𑌮𑌿𑌥𑍍𑌯𑌾; 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑍍𑌬𑌦𑍍𑌧𑌃 𑌕𑌶𑍍𑌚𑌿

---

துக்களுக்கும் உள்ள பேதம் விஜாதீயம், ப்ரஹ்மத்திற்கும் சேதநவஸ்துக்களுக்கும் உள்ளது ஸஜாதீயம்; ப்ரஹ்மத்திற்கும் அதன் குணங்களுக்கும் உள்ளது ஸ்வகதம் இந்த மூன்றாவது பேதம் விஜாதீய பேதத்தில் அடங்கியதென்றும் சொல்லலாம் இம்மூன்று பேதங்களும் அற்றிருப்பதே நிர்விசேஷத் தன்மை. அதாவது— ப்ரஹ்மமொன்றே ஸத்யம், அதைக்காட்டிலும் பிந்நமாக ஒன்று இருக்கின்றதென்பது இல்லையென்று சொன்னதாயிற்று.

தத்.........ச்யதே ச - [ப்ரஹ்மம் ஒருபொழுதும் எவ்வித பந்தமும் இல்லாமலும் ஸ்வயமே ப்ரகாசமாகவும் இருப்பதை ஸ்வபாவமாக உடைத்தாயிருக்கையிலும், 'நீ ப்ரஹ்மமாகவே இருக்கிறாய்' என்று சொல்லும் ஸாமாநாதிகரண்ய வாக்யத்தினால ஜீவனைக்காட்டிலும் அது வேறுபட்டது அன்று என்று ஏற்படுகின்றது, அந்த ப்ரஹ்மம் அவித்யையினால் மறைக்கப்பட்டதாய்க்கொண்டு பேத ப்ரமத்தை அநுபவித்து, பந்தம் மோக்ஷங்களை அடைகின்றது.] அதாவது—'அபேத வாக்ய பலத்தினால், நாம் இம்மாதிரி கல்பிக்கவேண்டும்; அதனாலேயே அதற்கு பந்தம் மோக்ஷம் இரண்டும் உபபந்நங்களாகின்றனவென்று சொல்லவும் வேண்டும்' என்று சொன்னதாயிற்று. தனது உண்மையை அறியாமல் இருப்பது பந்தத்தின் தன்மை, அது ஸ்வப்ரகாசமாயுள்ள வஸ்துவில் ஸம்பவியாதாகையால், 'பந்தமில்லாமல ஸ்வயம் ப்ரகாசமாயிருக்கையிலும்' என்று சொல்லப்பட்டிருக்கின்றது. பந்தம் அடையும் பொருள் மோக்ஷம் அடையும் பொருள் எல்லாம் ப்ரஹ்மமே. இந்த ஆசயத்தைத்தான் 'ஸா ச ப்ரஹ்மைவ ஸம்ஸாரதி' என்று இரண்டாவது சலோகத்திற் சொல்லியிருக்கிறார். இவ்விதம் கல்பிக்கவேண்டுமே தவிர, இதற்கு ஸாக்ஷாத் ப்ரமாணம் இல்லை என்பது குறிப்பு

நிர்விசேஷ சிந்மாத்ர . . . . க்ருத்ஸ்நம் ஜகந்மித்யா - [இந்த ஜ்ஞாநமாத்ர மாகவிருக்கும் ப்ரஹ்மத்தைத் தவிர்த்த மற்றவையெல்லாம் பொய். ஒருவன் ஈச்வரன் போலவும் மற்றவை அவனுக்கு உட்பட்டவை போலவும் இவ்வாறு கணக்கற்ற பேதங்களை ஸ்வரூபமாக உடைய ஜகத் முழுவதும் பொய்.] சுருதியிலேயே, 'ஈச்வரன் என்று ஒருவன் உண்டு, ஜகத் முழுவதும் அவனுக்கு உட்பட்டது' என்று பலவாறாகச் சொல்லப் பட்டிருக்கையிலும், இந்த அபேத வாக்ய பலத்தைக் கொண்டு அந்த வாக்யங்களெல்லாம் பொய் என்று சொல்லவேண்டிவருகின்றது.

கஶ்சித் பத்த:..... ...ந வித்யதே - [ஒருவன் ஸம்ஸாரத்தில் அகப்பட்டவன், மற்றொருவன் அதிலிருந்து விடுபட்டவன் என்னும் வ்யவஸ்தையும் இல்லை] பத்த

ந்முக்த இதீயம் வ்யவஸ்தா ந வித்யதே; இத: பூர்வம் கேசந முக்தா இத்யபி மித்யா; ஏகமேவ ஶரீரம் ஜீவவத்; நிர்ஜீவாநீதராணி ஶரீராணி, தச்சரீரம் கிமிதி ந வ்யவஸ்திதம்; ஆசார்ய: ஜ்ஞாநோபதேஷ்டா மித்யா; ஶாஸ்த்ரம் ச மித்யா; ஶாஸ்த்ரப்ரமாதா ச மித்யா; ஶாஸ்த்ரஜந்யம் ஜ்ஞாநம் ச மித்யா; ஏதத் ஸர்வம் மித்யாபூதேநைவ ஶாஸ்த்ரேணாவகம்யதே' இதி வதந்தி;

---

ஜீவன் முக்தஜீவன் என்று ஒரு வ்யவஸ்தையை ஒத்துக்கொண்டால் ஜீவபேதத்தை ஒத்துக்கொள்ளும்படி ஸம்பவிக்குமே என்று பயந்து அம்மாதிரி வ்யவஸ்தையே இல்லை என்கிறார்கள்.

இத: பூர்வம் ... மித்யா -[இதற்கு முன்னதாக சிலர் முக்தியை அடைந்திருக்கிறார்கள் என்பதும் பொய்] சுகர் முதலான மஹர்ஷிகள் முக்தர்களென்று சொல்லப்படுகிறார்களே என்றால், அதுவும் பொய்

ஏகமேவ . . வ்யவஸ்திதம் - [ஒரு சரீரமே ஜீவனுடன்கூடியது, மற்றை சரீரங்களெல்லாம் ஜீவனற்றவை, அப்படி ஜீவனை உடைய சரீரம் எதுவென்று சொல்ல முடியாது] இந்தக் கல்பனை மிக்க ஆச்சர்யத்தைக் கொடுக்கக்கூடியது ஆத்மாக்களுக்குப் பரஸ்பரம் பேதம் இல்லை என்பதை ஸ்தாபிக்கும் பொருட்டு இம்மாதிரி கல்பனைகளைச் செய்யவேண்டிவருகின்றது. ஜீவனெல்லாம் ஒன்றானால், ஒருவன் ஸுகத்தை அநுபவிக்கையில் எல்லாரும் ஸுகத்தை அநுபவிக்கவேண்டுமே என்பது போன்ற பலவித ஸங்கடங்களை உத்தேசித்து, 'ஒரே சரீரம் தான் ஜீவனுடன்கூடியது, அது எது வென்று வ்யவஸ்தை இல்லை' என்று கல்பிக்கிறார்கள்.

ஆசார்ய: . . அவகம்யதே- [ஜ்ஞானோபதேசம் செய்யும் ஆசார்யனும் பொய், சாஸ்த்ரமும் பொய், அதைக் கேட்கிறவனும் பொய், சாஸ்த்ரத்தினால் ஏற்படும் ஜ்ஞானமும் பொய், இவையெல்லாம், பொய்யாகிற சாஸ்த்ரத்தினாலேயே அறியப்படுகின்றன] ஒருவன் ஆசார்யன், மற்றொருவன் சிஷ்யன் என்னும் வ்யவஸ்தையை ஒத்துக்கொண்டால், ஆத்மாக்கள் பஹு என்பது ப்ரஸங்கிக்கும், சாஸ்த்ரம் ப்ரமாணமென்று ஒத்துக்கொண்டால் ப்ரஹ்மத்தைத் தவிர்த்த மற்றொரு பொருளும் ஸத்யமென்று ஏற்படும். இவையெல்லாம் அநிஷ்டங்களாகையால் எல்லாம் பொய் என்று கல்பிக்கிறார்கள். 'இப்படி எல்லாம் பொய் என்று ஏற்படுவதும் பொய்யான சாஸ்த்ரத்திலிருந்து' என்று ஆச்சர்யப்படுகிறார் இதற்காகவே 'பொய்' என்று திருப்பத் திருப்பச் சொல்லப்படுகிறது.

இதி வதந்தி - இப்படி வாதிக்கிறார்கள். அதாவது - சொல்லும் ஆத்தும நிலைபெறாது என்பது குறிப்பு.

அபரே, 'அபஹத பாப்மத்வாதி ஸமஸ்தகல்யாணகுணோபே தமபி ப்ரஹ்ம ஐக்யோபதேசவைபல்யபயேந கேநசிது பாதிவிசேஷேண ஸம்பத்தம் பத்யதே முச்யதே ச; நாநாவித மலரூபபரிணாமாஸ்பதம் ச' இதி வ்யவஸ்திதா:।

அந்யே து பேதாபேதவாக்யயாதாத்ம்யம் வர்ணயந்த: 'ஸ்வாபாவிக நிரதிசயாபரிமிதோதாரகுணஸாகரம் ப்ரஹ்மைவ ஸுர நர திர்யக் ஸ்தாவர நாரகி ஸ்வர்க்யபவர்கி சேத

---

அபரே ........ வ்யவஸ்திதா: — [மற்றும் சிலர் (பாஸ்கர மதஸ்தர்கள்), 'ப்ரஹ்மமென்பது நிர்விசேஷமன்று, காமபந்தமற்றது, ஸகல கல்யாணகுணங்களும் அதற்கு உண்டு, அப்படி இருக்கையிலும் சில உபாதிகளுடன் ஸம்பந்தமடைந்து ஸம்ஸார பந்த மோக்ஷங்களுக்கும் அநேகவித தோஷ ரூபங்களான விகாரங்களுக்கும் ஆஸ்பதமாகின்றது. இப்படி கல்பிப்பதற்கு ஐக்ய பதத்தைச்சொல்லும் அந்த அபேத ச்ருதி வாக்ய ஜ்ஞாநமே காரணம்' என்று ஸித்தாந்தம் செய்திருக்கிறார்கள்.] இந்தப் பாஸ்கர மதஸ்தர்களும் ஸாமாநாதிகரண்ய வாக்யத்தின் விவரணத்தில் ப்ரவ்ருத்திக்கிறவர்களே. இவர்கள், சங்கர மதஸ்தர்கள் போலன்றிக்கே, ப்ரஹ்மம் குணங்களுடன் கூடியது என்று ப்ரமாண பலத்தைக்கொண்டு ஒத்துக்கொள்ளுகிறார்கள். ஆனால், ஐக்யோபதேசத்திற்கு வேறு உபபத்தி சொல்ல அசக்தர்களாய் உபாதி ஸம்பந்தமொன்றை அப்யுபகமம் செய்கிறார்கள். தேவ தேஹம், மநுஷ்ய தேஹம், திர்யக்குக்களின் தேஹம், ஸ்தாவரங்களின் தேஹம் இவை உபாதிகள். இப்படி உபாதி ஸம்பந்தத்தால் ப்ரஹ்மம் ஜீவனாக மாறுவதுடன் அசேதந வஸ்துவாகவும் மாறுகிறது என்று 'பலவித தோஷரூபமான பரிணாமத்திற்கும் ஆஸ்பதமாகிறது' என்பதால் சொல்லப்படுகின்றது.

இவர்கள் மதத்தில் ப்ரஹ்மம் நிர்விசேஷமன்று. அதாவது— ப்ரஹ்மத்தைக் காட்டிலும் ஸஜாதீயமாகவும் விஜாதீயமாகவும் ஸ்வகதமாகவும் பேதங்கள் உண்டு. உபாதி ஸத்யம்; ஆகையால், அந்த உபாதியின் கார்யமாகிற ப்ரபஞ்சமும் ஸத்யம். ப்ரஹ்மத்திற்கும் சேதந வஸ்துக்களுக்கும் ஸ்வபாவத்தால் பேதமில்லையாயினும், உபாதி கார்யமாக பேதமுண்டு, முக்தி அடைந்த பிறகு பேதமே இல்லை. ப்ரஹ்மத்திற்கும் அசேதந வஸ்துக்களுக்கும் பேதம் அபேதம் இரண்டும் ஸ்வாபாவிகங்கள்.

அந்யே ......வ்யவதிஷ்டந்தே — [மற்றும் சிலர் (யாதவப்ரகாச மதஸ்தர்கள்), ஐக்யம் சொல்வதின் உண்மையை வர்ணிக்கிறவர்களாய்ப் பின்வருமாறு நிச்சயம் செய்திருக்கிறார்கள். ப்ரஹ்மம், ஸ்வபாவத்தாலேயே குணங்களுக்கெல்லாம் இருப்பிடம், அந்தக் குணங்கள், அளவற்ற மேன்மையுடையவை, எண்ணிக்கையற்றவை, உத்க்ருஷ்டங்கள். அப்படிப்பட்ட ப்ரஹ்மமே தேவதைகளாகவும் மநுஷ்யர்களாகவும் தி

நைகஸ்வபாவம் ஸ்வபாவதோ விலக்ஷணம் அவிலக்ஷணம் ச வியதாதி நாநாவிதரூபபரிணாமாஸ்பதம் ச ' இதி ப்ரத்யவதிஷ்டந்தே ।

தத்ர ப்ரதமபக்ஷஸ்ய ஶ்ருத்யர்த்தபர்யாலோசநபரா துஷ்பரிஹாராந் தோஷாநுதாஹரந்தி ।

---

யக்குக்களாகவும் ஸ்தாவரங்களாகவும் நரகம் ஸ்வர்க்கம் மோக்ஷம் இவ்விடங்களிலுள்ள ஆத்மாக்களாகவும் இருக்கும் ஸ்வபாவத்தை உடையது, ஸ்வபாவத்தாலேயே இவைகளைக்காட்டிலும் அது வேறுபட்டதாகவும் வேறுபடாததாகவும் இருக்கின்றது, ஆகாசம் முதலிய பலவித தோஷரூபங்களான விகாரங்களுக்கும் ஆஸ்பதம் ]

பாஸ்கர மதத்தில், ' சேதநாசேதந வஸ்துக்களுக்கும் ப்ரஹ்மத்திற்கும் அபேதம் ஸ்வாபாவிகமே, பேதமோவென்றால் அசேதந விஷயத்தில் ஸ்வாபாவிகம் சேதந விஷயத்தில் ஔபாதிகம் ' என்று சொல்லப்பட்டுள்ளது அது யுக்திக்குப் பொருந்தாதது என்று, இந்த மதஸ்தர்கள், ' சேதநாசேதந வஸ்துக்கள் இரண்டின விஷயத்திலும் அபேதம் ஸ்வாபாவிகமாக இருப்பதுபோல பேதமும் ஸ்வாபாவிகமே ' என்று நிர்ணயித்திருக்கிறார்கள். ஆனால், ஐக்யோபதேசத்தின (அதாவது— அபேதோபதேசத்தின்) உண்மையை வர்ணிக்க ஆரம்பித்த இவர்களுக்கு, பேதமும் ஸ்வபாவத்தினாலேயே ஏற்படுகிறது என்று சொல்வதின அஸாங்கத்யம் தோன்றவில்லைபோலும் ! இவர்கள் மதத்தில், ப்ரஹ்மமே எவ்வித உபாதியுமின்றிக்கே சித் அசித் ஈச்வரன் இம்மூன்றாகப் பரிணமிக்கின்றது, ஆகையால் இம்மூன்று தத்வங்களும் ஸத்யம், பேதமும் பாரமார்த்திகம் என்று சொன்னதாகின்றது.

' தத்ர ப்ரதமபக்ஷஸ்ய ' என்று சங்கரமதத்திலுள்ள தோஷங்களைச் சொல்ல ஆரம்பிக்கிறார்.

தத்ர...... உதாஹரந்தி - [இந்த மூன்று மதங்களுக்குள் முதலாவது (சங்கர) மதத்திற்கு, ச்ருதிகளின் அர்த்தத்தை நன்றாக ஆலோசித்துப்பார்த்தவர்கள் (அதாவது— யாமுநாசார்யர் முதலானவர்கள்) பின்வருமாறு தோஷங்களைச் சொல்லுகிறார்கள்; அந்தத் தோஷங்கள் பரிஹரிக்கக்கூடாதவை.] 'இந்தத் தோஷங்கள் தம்மாலேயே சொல்லப்பட்டவையல்ல, பெரியோர்களால் சொல்லப்பட்டவை ' என்று சொல்வது கவனிக்கத்தக்கது. அந்தப் பெரியோர்கள், ஒரு வாக்யத்தினாலே மாத்ரம் த்ருப்தி அடையாமல், அபேத ச்ருதிவாக்யங்களைப்போல மற்றை பேத கடக ச்ருதி வாக்யங்களையும் நன்றாகப் பராமர்சித்துப் பார்த்து இந்தத் தோஷங்களைச் சொல்லுகிறார்கள் என்பது ' பர்யாலோசநபரா: ' என்பதால் சொல்லப்பட்டதாகிறது. ஆகையால், அந்தத் தோஷங்கள் துஷ்பரிஹாரங்கள்.

முதலில், இந்த அபேத வாதிகளால் மிகவும் ப்ரதாநமாக அங்கீகரிக்கப்படும் ' தத்த்வமஸி ' என்னும் அபேத ச்ருதிக்கு அவர்கள் சொல்லும் அர்த்தத்திலுள்ள தோஷங்களைச் சொல்லுகிறார்.

அந்த ச்ருதிவாக்யம் எவ்விடத்தில் எந்த ஸந்தர்ப்பத்தில் வருகிறது என்பதை நாம் தெரிந்துகொள்ளவேண்டும். இது சாந்தோக்யோபநிஷத்தில் ஆறாவது ப்ரபாட கத்தில் எட்டாவது கண்டத்தில் காணப்படுகிறது. இந்த ப்ரபாடகத்திற் சொல்லப் படும் வித்யையை 'ஸத்வித்யை' என்று வேதாந்திகள் வ்யவஹரிப்பார்கள். ஆக்யாயிகை என்னவென்றால்— அருணனுடைய புத்ரரான உத்தாலகருக்கு, ச்வேதகேது என்று ஒரு புத்ரர் இருந்தார். அவருக்குப் பன்னிரண்டு வயதாகியும், பலவத்தான அதிருஷ்ட வசத்தினால் உபநயநமாகாமல் இருந்தது. அதைப்பற்றிச் சோகித்த பிதா ஒரு நாள் தமது புத்ரனைப் பார்த்து, 'ஹே ச்வேதகேதோ! ஒரு குருவைத் தேடி ப்ரஹ்ம சர்யம் வஸித்து அத்யயநம் செய்து வா' என்று அனுப்பினார். புத்ரன் அதற்கிணங்கி ஒரு குருவைத் தேடிப் பன்னிரண்டு வருஷகாலம் குருகுலவாஸம் செய்து வேதங்களெல் லாவற்றையும் அத்யயநம் பண்ணி வித்யையால் பரிபூர்ணன் ஆனதாகத் தன்னை நினைத் துக்கொண்டு இருபத்து நான்காவது வயதில் பிதரு க்ருஹம் திரும்பி வந்தான். அப் படி வந்த புத்ரனைப் பார்த்து பிதா, அவனை அநுக்ரஹிக்க வேண்டுமென்னும் எண்ணத் துடன் ப்ரஹ்மவிஷயமாக ஒரு ப்ரச்நம் செய்ய, அதற்கு ஸமாதாநம் சொல்ல அசக்தனாய் அந்தப் புத்ரன், மறுபடியும் ஒருகால் பிதா தன்னைக் குருகுலத்திற்குத் திருப்பி அனுப்பி விடுவாரோ என்று பயந்து, 'ஹே பிதாவே! ப்ரச்நத்தின் ஸமாதாநத்தை என்னுடைய குருவே அறியார் என்று நினைக்கிறேன், அறிந்திருந்தால் எனக்கு அதை உபதேசம் செய்திருப்பார். ஆகையால், நீங்களே எனக்கு அதை உபதேசிக்கவேணும்' என்று ப்ரார்த்தித்தான். அப்பொழுது அந்தப் பிதா இந்த ஸத் வித்யையை அவனுக்கு உபதே சிக்கிறார். "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம்" என்று

இந்த வித்யை ஆரம்பிக்கிறபடியாலும், இதில் ப்ரஹ்மம் 'ஸத்' என்றே வ்யவஹரிக்கப் படுகிறபடியாலும் இதற்கு 'ஸத் வித்யை' (அதாவது-ப்ரஹ்ம வித்யை) என்று பெயர்.

இந்த உபநிஷத்தின் வாக்யங்களின் அர்த்தத்தைப்பற்றி காந்தத்தில் விசாரம் வரு கிறபடியால், அதன் விஷயத்தை நாம் தனியாகப் பார்ப்பது நலமாகும். முதலில் பிதா செய்த ப்ரச்நம் -

> "உத தமாதேஶமப்ராக்ஷ்ய:, யேநாஶ்ருதம் ஶ்ருதம் பவத்யமதம் மதமவிஜ்ஞாதம் விஜ்ஞாதம்?"

(எதைக் கேட்டால் கேட்கப்படாததெல்லாம் கேட்கப்பட்டதாகிவிடுமோ, எதை மநநம் செய்தால் மநநம் செய்யப்படாததெல்லாம் மநநம் செய்யப்பட்டதாகிவிடுமோ, எதை நிதித்யாஸித்தால் நிதித்யாஸிக்கப்படாததெல்லாம் நிதித்யாஸிக்கப்பட்டதாகிவிடுமோ, அப்படிப்பட்ட ஆதேசத்தை நீ கேட்டிருக்கிறாயா?). ஆதேசம் என்றால் ப்ரசாஸிதா அதாவது-நியமிக்கிறவன், என்று அர்த்தம். அவனை அறிந்தால், எல்லாம் அறியப்பட்டதா கிவிடுமன்றோ? இந்த ப்ரச்நத்தின் கருத்தை அறியாத புத்ரன், 'அது எப்படி?' என்று சோதநம் செய்ய, பிதா, அதற்கு ஒரு த்ருஷ்டாந்தம் சொல்லுகிறார்.

"யதா ஸோம்யைகேந ம்ருத்பிண்டேந ஸர்வம் ம்ருண்மயம் விஜ்ஞாதம் ஸ்யாத்"

(எப்படி, உபாதாந காரணமான ஒரு மண்கட்டியை அறிந்த மாத்ரத்தால், அதன் உபாதேயமான குடம் மடக்கு முதலானவை எல்லாம் அறியப்பட்டனவாகின்றனவோ, ஹே பரியதாசா! அம்மாதிரியே). அதாவது - உபாதாநமும் உபாதேயமும் பரஸ்பரம் பேதமற்றவை என்பது கருத்து. அவை இரண்டும் எப்படி ஒன்றாகும் என்று ஸந்தேஹித்த புத்ரனைப் பார்த்து பிதா மறுபடியும் சொல்லுகிறார்—

"வாசாரம்பணம் விகாரோ நாமதேயம், ம்ருத்திகேத்யேவ ஸத்யம்"

(நம்முடைய வாக்ரூபமான வ்யவஹாரத்தின் பொருட்டு, குடம் மடக்கு முதலிய லக்ஷணமுள்ள மாறுதலும் அம்மாதிரி பெயர்களும் மண்ணுகிற த்ரவ்யத்தால் ஸ்பர்சிக்கப் படுகின்றன, ஆகையால் மண்ணைக் காட்டிலும் அவை பிந்நங்களல்ல) அதாவது—மண்ணே இம்மாதிரியான ரூபம் பெயர் உள்ளதாக ஆகின்றது என்பது அர்த்தம். இம்மாதிரியான பல த்ருஷ்டாந்தங்களைக் காட்டி 'இப்படியே அந்த ஆதேசமும் ஆகின்றது' என்று முடித்தார். 'இதை நீங்களே எனக்கு உபதேசிக்கவேண்டும்' என்று புத்ரன் ப்ரார்த்திக்க, பிதா உபதேசிக்கிறார்—

"ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம்"

[ஹே ஸோம்ய! (வெவ்வேறு ரூபம் பெயர் இவைகளுடன் பஹுவாக இருக்கும்) இந்த ஜகத்தானது ஸ்ருஷ்டிக்கு முன் ஒன்றான ரூபம் பெயர் அற்று ஒன்றான அவஸ்தையை உடையதாய்) ஸத்தாகவே இருந்தது, அதற்கு அந்த ஸத்தைத் தவிர வேறு ஒரு நியந்தாவும் இல்லை]

"ததைக்ஷத 'பஹுஸ்யாம், ப்ரஜாயேய' இதி"

[அந்த 'ஸத்' என்று சொல்லப்படும் வஸ்து ஸங்கல்பித்தது, என்ன ஸங்கல்பித்ததென்றால், 'விசித்ரமாயும் அநந்தமாயுமுள்ள சேதநாசேதநங்கள் கலந்த ஜகத் ரூபமாய் பஹுவாக ஆகக்கடவேன், அதற்காக முதலில் தேஜஸ் அப் அந்நம் இவை முதலிய ரூபங்களாக ஆகக்கடவேன் என்று ஸங்கல்பித்தது] 'ஐக்ஷத' என்பதற்கு 'ஸங்கல்பித்தான' என்று அர்த்தம். இப்படி தேஜஸ் அப் அந்நம் இவைகளை முதலில் ஸ்ருஷ்டித்தது, பிறகும் ஸங்கல்பித்தது—

'ஸேயம் தேவதைக்ஷத 'ஹந்தாஹமிமாஸ்திஸ்ரோ தேவதா அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிஸ்ய நாமரூபே வ்யாகரவாணி' இதி.

('ஸத்' என்னப்படும் அந்த தேவதை ஸங்கல்பித்தது என்னவென்றால்— 'இந்தத் தேஜஸ் அப் அந்நம் ஆகிய இம்மூன்று தேவதைகளுக்குள், நான், இந்த ஜீவனைச் சரீரமாகக்கொண்டு அநுப்ரவேசித்து, விசித்ரமான ரூபம் பெயர் இவைகளை அந்தத் தேஜஸ் முதலானவைகளுக்குச் செய்யக்கடவேன்'). தேஜஸ் முதலிய மூன்றும் இவ்வி

டத்தில் தேவதைகளாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. அத்தன் அபிமானிதேவதைகள் விவக்ஷிதங்கள். முதல் ஸங்கல்பத்தால் ஏற்பட்ட தேஜஸ் முதலியவைகளின் ஸ்ருஷ்டியை ஸமஷ்டி ஸ்ருஷ்டி என்றும், பிறகு செய்த ஸங்கல்பத்தால் ஏற்பட்டதை வ்யஷ்டி ஸ்ருஷ்டி என்றும் சொல்வது வழக்கம். இப்படி ஸகல அசேதந வர்க்கத்திற்கும் ப்ரஹ்மம் காரணமென்று சொல்லிவிட்டுப் பிறகு, பிதா, ஸகல சேதந வர்க்கத்திற்கும் அந்த ப்ரஹ்மமே காரணமென்று ப்ரதிபாதிக்க ஆரம்பித்து, முதலில் 'ஸுஷுப்தி காலத்தில் இந்த ஜீவன்களெல்லாம் 'ஸத்' என்னப்படும் ப்ரஹ்மத்துடன் ஸங்கதங்களாகின்றன' என்று சொல்லி அவைகளுக்கும் ப்ரஹ்மத்துக்குமுள்ள சரீர சரீரி பாவத்தைச்சொல்லுகிறார்—

'ஸந்மூலா: ஸோம்யேமா: ஸர்வா: ப்ரஜா: ஸதாயதநா: ஸத்ப்ரதிஷ்டா:'

(ஜீவன்களுடன்கூடிய இந்த ஜகத் முழுவதும், 'ஸத்' என்னும் ப்ரஹ்மத்திற்கு அதீனமான உத்பத்தியை உடையது, ப்ரஹ்மாதீனமான லயத்தையும் உடையது, அந்த 'ஸத்' என்பதையே ஆதாரமாகவும் உடையது). 'ப்ரஜை' என்பதால் ஜீவன்களுடன் கூடிய ஜகத் சொல்லப்படுகிறது. 'மூலம்' என்றால் உத்பத்தி, 'ப்ரதிஷ்டை' என்றால் லயம், 'ஆயதநம்' என்றால் ஆதாரம். ஆகையால், ஜகத் ப்ரஹ்மத்திற்குச் சரீர ஸ்தானத்தில் இருக்கின்றது என்று சொன்னதாயிற்று ஸுஷுப்தி காலத்தில் ஜீவன்களுக்கு 'ஸத்' என்பதுடன் சேர்க்கையைச் சொல்லிவிட்டு, தேஹவியோகமான பிறகு ப்ரயாணகாலத்திலும் ஜீவன்களுக்கு அந்த 'ஸத்'துடன் ஸம்பத்தியைச் சொல்லி, உபதேசத்தைப் பின்வருமாறு முடிக்கிறார்—

'ஐததாத்ம்யமிதம் ஸர்வம், தத்ஸத்யம், ஸ ஆத்மா, தத்த்வமஸி, ச்வேதகேதோ'

(இதெல்லாம் இந்த 'ஸத்' என்பதை ஆத்மாவாக உடையது; ஜீவன்களுடன் கூடிய இந்த ஜகத் முழுவதும் 'ஸத்' என்பதையே ஆத்மாவாக உடைத்தாயிருக்கின்றது என்பது ப்ராமாணிகம், ப்ரமாண ப்ரதிபந்நமாக இருக்கிறபடியால், 'ஸத்' என்னப்படும் வஸ்து இதற்கு ஆத்மா, ஹே ச்வேதகேதோ! நீயும் அது தான்). அபிமுகமாக இருக்கும் ச்வேதகேதுவைப் பார்த்து 'நீ' என்று சொல்வது, சரீர வாசி சப்தங்களெல்லாம் சரீரி பர்யந்தம் குறிக்கும் என்னும் ந்யாயத்தினலே ச்வேதகேதுவின் அந்தர்யாமியைக் குறிக்கின்றது. ஸம்ஸாரியான ச்வேதகேதுவுக்கும் நித்ய முக்தமாயிருக்கும் 'ஸத்' என்னப்படும் ப்ரஹ்மத்திற்கும் அபேதம் அந்தக் காரணத்தினலேயே ஏற்படுகின்றது என்பது கீழச்சொல்லப்பட்டிருப்பதிலிருந்து வ்யக்தமாகும்.

இந்த உபநிஷத்தின் க்ரமம்— முதலில் ப்ரச்நம், அதில் ஏக விஜ்ஞானத்தால் ஸர்வ விஜ்ஞானம் ப்ரதிஜ்ஞாதம், பிறகு அதன் ஸமர்த்தநத்திற்காக, 'ப்ரஹ்ம வ்யதிரிக்த

ததா ஹி—ப்ரக்ருத வாக்யஸ்யாபி ததுபக்ரமத்வஸ்ய ப்ரஹ்மண: ஸ்வ ஸங்கல்ப க்ருத ஜகதுத்பத்தி ஸ்திதி விலயாதயம், 'ததைக்ஷத, பஹு ஸ்யாம், ப்ரஜாயேய' இத்யாரப்ய 'ஸந்மூலா: ஸோம்யேமா: ஸர்வா: ப்ரஜா: ஸதாயதநா: ஸத்ப்ரதிஷ்டா:' இத்யாதிபி: பதை: ப்ரதிபாதிதா: । தத்ஸ்வம்

---

மான ஸகல ஜகத்துக்கும் அந்த ப்ரஹ்மமே காரணம் என்று சொல்ல ஆரம்பித்து, 'அசேதநம் முழுவதற்கும் ப்ரஹ்மமே உபாதாந காரணம்' என்று முதலில் சொல்லி, பிறகு, 'சேதந வஸ்துவுக்கும் அந்த ப்ரஹ்மமே காரணம்' என்று ப்ரதிபாதிக்கின்றது. இவ்வாறு 'ஜீவனுடன் கூடிய ஜகத் முழுவதும் ப்ரஹ்மத்தின் சரீரம்' என்பதை விளக்கி, கடைசியில், 'ப்ரஹ்மம் ஜகத்திற்கு ஆத்மா' என்பதைச் சொல்லி, 'ஆகையால், நீயும் அது தான்' என்று ச்வேதகேதுவைப் பார்த்துப் பிதா சொல்வதாக முடிகிறது.

இதில் இப்பொழுது நாம் விசாரிக்கவேண்டிய அம்சம் ஒன்றே. அதாவது - 'இந்த உபநிஷத்தில் சொல்லப்படும் ப்ரஹ்மம் நிர்விசேஷமா ஸவிசேஷமா' என்பதுதான். அத்வைதிகள் நிர்விசேஷமென்றும் விசிஷ்டாத்வைதிகள் ஸவிசேஷமென்றும் சொல்லுகிறார்கள்

இனி ஸ்ரீ க்ரந்தத்தை அநுஸரிப்போம்

**ததா ஹி... .. ....விஹந்யதே**—['நீ அதுதான்' என்னும் வாக்யத்திலுள்ள 'அது' என்னும் பதம் ப்ரக்ருதத்தைப் பராமர்சிக்கின்றது. ப்ரக்ருதம் என்னவென்றால், 'ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேய' என்று ஆரம்பித்து, 'ஸந்மூலா: ஸோம்யேமா: ஸர்வா: ப்ரஜா: ஸதாயதநா: ஸத்ப்ரதிஷ்டா:' என்பது வரையிலுள்ள பதங்களால் சொல்லப்படும் பகவத் ஸங்கல்பாதீநங்களான ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள். ஆகையால், 'அது' என்னும் பதத்திற்கு, 'தனது ஸங்கல்பத்தால் ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்யக்கூடிய ப்ரஹ்மம்' என்பது அர்த்தம். ஆகையால், இங்கு குறிக்கப்படும் ப்ரஹ்மம் ஸவிசேஷமே. தவிரவும், இந்த ஜகத்காரண வஸ்துவான ப்ரஹ்ம ஸப்தத்தமாயுள்ள வேறு ச்ருதிகளில் அநேக குணங்கள் ப்ரஹ்மத்துக்குச் சொல்லப்பட்டிருக்கின்றன. அவை என்னவென்றால்—ஸர்வஜ்ஞத்வம், ஸர்வசக்தித்வம், ஸர்வேச்வரத்வம், ஸர்வ ப்ரகாரத்வம், தனக்கு ஸமனாகவாவது அதிகனாகவாவது வேறு ஒருவனும் இல்லாமல் இருக்கும் தன்மை, ஸத்யகாமத்வம், ஸத்ய ஸங்கல்பத்வம், ஸர்வத்தையும் ப்ரகாசிப்பிக்கும் தன்மை இவை முதலிய அளவற்ற மேன்மையை உடைய அஸங்க்யேய கல்யாண குணக் கூட்டங்கள். இன்னும் வேறு அநேக வாக்யங்களில் அபஹத பாப்மத்வம் முதலான ஹேய குண ராஹித்யமும் சொல்லப்பட்டிருக்கின்றது. இவைகளெல்லாம் 'ப்ரஹ்மம் நிர்விசேஷம்' என்று சொல்லும் பக்ஷத்திற்கு விருத்தங்கள்]

ஸம்ஹிதயா ப்ரகரணாந்தர நிர்திஷ்டம் ஸர்வஜ்ஞதா ஸர்வசக்தித்வ ஸர்வேச்வரத்வ ஸர்வப்ரகாரத்வ ஸமாப்யதிகநிவ்ருத்தி ஸத்யகாமத்வ ஸத்யஸங்கல்ப

---

ப்ரக்ருதபராமர்சித்வாத்—ப்ரக்ருதத்தைப் பராமர்சிக்கும் 'அது' என்னும் சப்தம் ப்ரக்ருதத்தைப் பராமர்சிக்கிறபடியால் குணங்களுடன் கூடிய ப்ரஹ்மத்தையே அது குறிக்கின்றது என்பது குறிப்பு

உதய விபவ விலயாதய:—ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் முதலியவை. 'முதலிய' என்பதால், இந்த உபநிஷத்திலேயே சொல்லப்பட்டுள்ள அநுப்ரவேசம் நாமரூப வ்யாகரணம் இவை குறிக்கப்படுகின்றன.

ஸர்வஜ்ஞதா—எல்லாவற்றையும் அறியும் தன்மை. "ய: ஸர்வஜ்ஞ: ஸர்வவித்" (முண்டக உபநிஷத்)

ஸர்வசக்தித்வம்—ஸர்வ சக்தனாக இருக்கும் தன்மை. "பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே" (ச்வேதாச்வதர உபநிஷத்)

ஸர்வேச்வரத்வம்—எல்லாவற்றிற்கும் ப்ரபுவாக இருக்கும் தன்மை. "ய ஈசேஸ்ய ஜகதோ நித்யமேவ நாந்யோ ஹேதுர் வித்யத ஈசனாய" (ச்வேதாச்வதர உபநிஷத்)

ஸமாப்யதிகநிவ்ருத்தி—ஸமனும் அதிகனும் இல்லாமல் இருக்கும் தன்மை 'ந தத்ஸமச்சாப்யதிகச்ச த்ருச்யதே" (சாந்தோக்யம்)

ஸத்யகாமத்வம்—நித்ய விபூதியுடன் கூடி இருக்கும் தன்மை. 'ஸத்ய' என்பதற்கு அமோகமான என்றும், 'காம' என்பதற்குக் காமனை (அல்லது இச்சை) என்றும் அர்த்தம் செய்யக்கூடும், அப்பொழுது 'ஸத்யகாம' என்பதற்கு அமோகமான இச்சையை உடையவன் (அதாவது—அவன் இச்சிப்பதெல்லாம் உடனே நிறைவேறுகின்றன) என்று அர்த்தம் கிடைக்கும். ஆனால் அந்த அர்த்தம், அடுத்துவரும் 'ஸத்யஸங்கல்ப' என்னும் சப்தத்தால் ஏற்படுகிறபடியால், இதற்கும் அந்த அர்த்தம் சொல்வது நிஷ்ப்ரயோஜநமாகும் 'காம' என்னும் பதத்திற்கு இச்சிக்கப் படுபவை (காம்யந்த இதி காமா:) என்றும் அர்த்தம் செய்யக்கூடும் அதாவது கல்யாண குணங்கள். அப்பொழுது 'ஸத்யகாம' என்பதற்கு ஸத்யமாயுள்ள கல்யாண குணங்களை உடையவன் என்று அர்த்தம் கிடைக்கும். ஆனால், வேறு சில குணங்கள் இவ்விடத்தில் பிரித்துச் சொல்லப்பட்டிருக்கிறபடியால், அந்த அர்த்தம் ஒவ்வாது ஆகையால் இந்த அர்த்தங்களை விலக்கி, போக்ய போகோபகரண போகஸ்தாந ரூபங்களான காமங்களை உடையவன் (அதாவது-நித்ய விபூதியை உடையவன்) என்று அர்த்தம் சொல்லப்படுகின்றது.

ஸ்ய ஸர்வஜ்ஞஸ்ய ஸர்வசக்தேரநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாண குண கணா அபஹதபாப்மத்வாத்யநேக வாக்யாவகத நிரஸ்த நிகிலதோஷதா ச ஸமஸ்தவஸ்து விலக்ஷணத்வம் ச விஹந்யேதே ।

---

ஸத்யஸங்கல்பஸ்ய—அப்ரதிஹதமான (அதாவது—தடையின்றி பரவுந்திறமுள்ள) ஸங்கல்பத்தை உடையவன். அவன் ஸங்கல்பிக்குமவையெல்லாம் அப்ரதிஹதங்களாய்ப் பலிக்கின்றன.

ஸர்வஜ்ஞஸ்ய—எல்லாவற்றையும் ப்ரகாசிப்பிக்கும் சக்தியுள்ளவன். "தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி." (கடோபநிஷத்)

அநவதிகாதிசய—அளவற்ற மேன்மையை உடைய அவனிடமுள்ள குணங்கள் ஒவ்வொன்றும் அளவற்ற மேன்மையை உடையவை, அப்படி அவனிடம் இருக்கும் குணங்களும் கணக்கற்றவை.

ஒரு வஸ்துவை ஜகத் காரணமென்று அங்கீகரித்தால், அப்படி காரணமாக இருப்பதற்கு இந்தக் குணங்கள் எல்லாம் அபேக்ஷிதங்கள் ஆகையால், ஜகத்காரண வஸ்துவைக் குறிக்கும் 'தத்' என்னும் பதம் இந்தக் குணங்களுடன் கூடியதாகவே இருக்கவேண்டுமென்பது குறிப்பு. இதே மாதிரி, அந்தக் காரண வஸ்துவினிடத்தில் கெட்ட குணங்கள் ஒன்றும் இருக்கக்கூடாது. அவை இல்லாமல் இருக்கும் தன்மையை 'அபஹத பாப்ம' என்று ஆரம்பிக்கும் வாக்யத்தால் சொல்லுகிறார்.

அபஹத பாப்ம—பாபம் என்றால் ஸத்கர்ம துஷ்கர்மங்கள் இந்த லோகத்தின் ஸம்பந்தமில்லாமல் இருந்துகொண்டு எந்தக் காமம் அநிஷ்டத்தை விளைவிக்கின்றதோ அது பாபம். ஆகையால் துஷ்கர்மங்களெல்லாம் பாபங்கள். மோக்ஷத்தை இச்சிப்பவனுக்கு ஸ்வர்க்கம் முதலிய பலம் அநிஷ்டமாகையால், அப்படிப்பட்ட ஸ்வர்க்கத்திற்குக் காரணமாகும் ஸத்கர்மங்களும் முமுக்ஷுவுக்குப் பாபங்களேயாகும். 'அபஹத' என்பதற்குப் போக்கடிக்கப் பட்ட என்று அர்த்தம் சொல்லக்கூடும் ஆனால், போக்கடிக்கப் பட்ட பாபத்தை உடையவன் என்று சொன்னால், ஏதோ ஒரு காலத்தில் பாபம் அவனிடத்தில் இருந்தது என்று அர்த்தமாகும். அது ப்ரஹ்மத்திற்கு ஒவ்வாது. ஆகையால், 'அபஹத' என்பதற்கு 'ஒட்டாத' என்று அர்த்தம் சொல்லவேண்டும் ஒட்டாத ஸத்கர்ம துஷ்கர்மங்களை உடையவன் என்று ஆயிற்று அதாவது ஈச்வரனால் செய்யப்படும் புண்யபாபரூபமான காமங்கள் சுப அசுப பலங்களை விளைவிக்கமாட்டா, பாபம் செய்யப்பட்ட போதிலும், தன் பலத்தைக் கொடுக்காமல் இருக்கும்படி அதைத் தடுக்கும் ஒரு ஸ்வபாவ விசேஷம் ஈச்வரனிடம் இருக்கின்றது என்று சொன்னதாயிற்று. ஈச்வரன் பாபத்தைச் செய்வனோ? செய்யலாமோ? என்று ஒரு சங்கை உதிக்கலாம் அது அர்த்தமன்று. நமக்குப் பாபங்களாக இருக்கும் காமங்களை அவன் செய்ய நேரிட்டபோதிலும், அவை அவனுக்குப் பல ப்ரதங்களாகா என்பதுதான் அர்த்தம். அந்த ஸ்வபாவத்தைத்தான்

அயமர்த்த:—ஏக விஜ்ஞாநேந ஸர்வவிஜ்ஞாநம் வதந் காரணஸ்யைவ ஸத்யதாம் ப்ரதிஜ்ஞாய, தஸ்ய காரணஸ்யைவ ஸத்யதாம் விகாரஜாதஸ்ய அஸத்யதாம் த்ருஷ்டாந்தேந உபபாத்ய, ஸத்யஸ்யைவ ப்ரஹ்மண: ‘ஸதேவ ஸோம்யேதம் அக்ர ஆஸீத் ஏகமேவாத்விதீயம்’ இதி ஸஜாதீய விஜாதீய நிகிலபேத நிராஸநேந நிர்விசேஷதைவ ப்ரதிபாதிதா। தத்ப்ரக்ரியாகாநி ப்ரகரணாந்தரகதவாக்யா

‘அவஹத வாக்யம்’ என்று சொல்லுகிறார்கள் ‘‘அவஹதபாப்மா விஜரோ விம்ருத்யு: விசோகோ விஜிகத்ஸோऽபிபாஸ:’’ என்று உபநிஷத்தில் பகவானுடைய தோஷங்களற்றதன்மை சொல்லப்பட்டிருக்கின்றது

ஜகத்காரண வஸ்து எவ்வித குணமுமற்றது என்று சொல்வது இந்த உபநிஷத் வாக்யங்களுக்கெல்லாம் பொருந்தாது என்பது சொன்னதாயிற்று

அயமர்த்த:... .. ..அபாத்வத்தாத்—இதனால் இந்த உபநிஷத் வாக்யங்களுக்குச் சங்கர மதஸ்தர்கள் சொல்லும் அர்த்தம் விவரிக்கப்படுகின்றது [அது என்னவென்றால்—உபநிஷத்தின் ஆரம்பத்தில் ‘ஒன்றை அறிவதனால் எல்லாம் அறிந்ததாகிவிடும்’ என்று ப்ரதிஜ்ஞை செய்திருப்பதனால், ஸகலத்திற்கும் காரணமாயுள்ள ப்ரஹ்மமாகிற வஸ்துவே உண்மையான வஸ்து என்று சொல்லப்பட்டதாகிறது பிறகு மண் த்ருஷ்டாந்தத்தினால் ‘காரண வஸ்துவே உண்மை, அதன் மாறுதல்களெல்லாம் பொய்’ என்பது நிரூபிக்கப்படுகின்றது.பிறகு ‘ஸதேவ ஸோம்யேதம் அக்ர ஆஸீத் ஏகமேவாத்விதீயம்’ என்னும் வாக்யத்தால், ‘அந்த உண்மையான ப்ரஹ்மம், ஸஜாதீயம் விஜாதீயம் ஆகிய ஸகல பேதமுமற்றது’ என்று சொல்லப்படுகின்றது. இப்படி ஸகலவித பேதங்களும் நிராகரிக்கப்படுகிறபடியால் ‘ப்ரஹ்மம் நிர்விசேஷமே’ என்று ப்ரதிபாதிக்கப்பட்டதாகிறது வேறு ப்ரகரணங்களில் காணப்படும் ‘ஸத்யம் ஜ்ஞாநம் அநந்தம் ப்ரஹ்ம’, ‘நிஷ்களம் நிஷ்க்ரியம் நிர்குணம் நிரஞ்ஜநம்’, ‘விஜ்ஞாநம் ஆநந்தம்’ இவை முதலான வாக்யங்களும் ‘ஸதேவ ஸோம்ய’ இத்யாதியான காரண வாக்யத்தால் ஏற்படும் ப்ரஹ்மத்தைச் சோதிக்கும் வாக்யங்களாகிறபடியால், ‘அந்த ப்ரஹ்மம் எல்லா விசேஷங்களுக்கும் விருத்தமான ஸ்வரூபத்தை உடையது’ என்பதையே தெரிவிக்கின்றன. அப்படி ‘ஒரே விதமான ஸ்வரூபத்தை உடையது அந்த ப்ரஹ்மம்’ என்பதைத் தெரிவிப்பதனால் அந்தப் பதங்களெல்லாம் ஒரே அர்த்தத்தைச் சொல்லவேண்டும் (அதாவது நிஷ்ப்ரயோஜநமாக வேண்டும்) என்பதும் இல்லை. வஸ்து ஒன்றாய் இருந்தபோதிலும், அந்த வஸ்துவைக் குறிக்கும் பதங்கள், ‘அந்தப் பதங்களால் சொல்லப்படும் விசேஷங்கள் எல்லாவற்றிற்கும் விருத்தமான ஸ்வரூபத்தை உடையது அது’ என்பதை ஸ்தாபிப்பதால் அந்தப் பதங்களுக்கெல்லாம் ப்ரயோஜநம் உண்டு ஆகையால் நிர்விசேஷமான ப்ரஹ்மமே இவ்விடத்திற் சொல்லப்படுகின்றது ] இதுதான் இந்த உபநிஷத்திற்குச் சங்கரமதஸ்தர்கள் சொல்லும் அர்த்தம்.

ந்தி 'ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம', 'நிஷ்கலம் நிஷ்க்ரியம் ஶாந்தம் நிரவத்யம் நிரஞ்ஜநம்' 'விஜ்ஞாநமாநந்தம்' இத்யாதீநி ஸகலவிஶேஷப்ரத்யநீகாகாரதாம் போதயந்தி। நைகாகாரதாவபோதே வாக்யாநாம் வையர்த்யதா, ஶோதகவாக்யைரபி ஸகலவிஶேஷப்ரத்யநீகாகாரைகவஸ்த்வவ நேந ஸகலவசநாநாம் ஐகார்த்யாத்—இதி।

---

ப்ரஹ்மத்தை ப்ரதிபாதிக்கும் ச்ருதிவாக்யங்களுள் காரணவாக்யங்கள் சில, சோதக வாக்யங்கள் சில. ஸதேவ ஸோம்ய என்னும் வாக்யம் காரண வாக்யம், ஸத்யம் ஜ்ஞாநம் இத்யாதியான வாக்யங்கள் சோதக வாக்யங்கள். 'எல்லாவற்றிற்கும் காரணம் ப்ரஹ்மம்' என்பதைச் சொல்லும் வாக்யம் காரணவாக்யம், அந்த வாக்யத்தால் ஏற்படும் ப்ரஹ்மம் எப்படிப்பட்டது என்பதைச் சோதிக்கும் வாக்யங்கள் சோதகவாக்யங்கள். இந்தச் சோதகவாக்யங்களுள் சில (நிரஞ்ஜநம் நிஷ்கலம் இவை முதலியவை) வ்யக்தமாக நிர்விசேஷ ப்ரஹ்மத்தைச் சொல்வன போல இருக்கின்றன. மற்றும் சில (ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம முதலியவை) அவ்வளவு வ்யக்தமாக நிர்விசேஷத் தன்மையை வெளியிடாவிடினும் காரண வாக்யத்திற்கும் மற்றைச் சோதக வாக்யங்களுக்கும் அவிருத்தமாக இருக்க வேண்டுமாதலால், அவைகளும் நிர்விசேஷ பரங்களாகவே இருக்க வேண்டும் என்பது இம்மதஸ்தர்களின் கருத்து.

ஸஜாதீய விஜாதீய ஸ்வகத—பேதங்கள் இருவகைப்படும் என்பது கீழே சொல்லப்பட்டிருக்கின்றது (17-வது பக்கத்தைப் பார்க்க).

ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம—இந்த வாக்யம் தைத்திரீய உபநிஷத் ஆநந்தவல்லியில் இருக்கின்றது. இதற்கு ஸத்யமாயும் ஜ்ஞாநமாயும் அநந்தமாயும் இருக்கும் ப்ரஹ்மம் என்பது பொருள். அதாவது—ப்ரஹ்மம் அஸத்யமன்று, அஜ்ஞாநமன்று, ப்ரஹ்மத்திற்கு அந்தமில்லை என்று சொன்னதாயிற்று. சங்கர மதஸ்தர்கள் இம்மாதிரி அர்த்தம் சொல்லுகிறார்கள். இப்படி அர்த்தம் சொன்னால் தான் ப்ரஹ்மம் நிர்விசேஷம் என்பது ஸித்திக்கும். இருக்கிறபடி அர்த்தம் சொன்னால், ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறுபட்ட ஸத்யம் முதலிய குணங்கள் ப்ரஹ்மத்திற்குச் சொல்லப்படுவதுபோல் ஆகும், அது அவர்களின் கொள்கைக்கு விருத்தம்.

'இவ்வித எல்லா விசேஷணங்களும் ஒரே ஸ்வரூபத்தைப் போதிப்பவையாக இருந்தால், அவற்றுள் ஏதேனும் ஒன்றைச் சொன்னால் போதாதோ? மற்றவை நிஷ்ப்ரயோஜநங்களாக அன்றோ நிற்கின்றன?' என்று ஒரு ஆக்ஷேபம் செய்யக்கூடும். அதற்கு ஸமாதானமாக அவர்கள் சொல்வதாவது—'எல்லா விசேஷணங்களும் ஒரே ஸ்வரூபத்தைப் போதிக்கின்றன என்பது உண்மையே, ஆனால், அவற்றுள் ஒவ்வொரு பதமும் தன்னெதிர்த்தட்டான விசேஷங்களை ஜ்ஞாபித்துக்கொண்டு 'அந்த விசேஷத்திற்கு

நைதத்ஏவம் ! ஏகவிஜ்ஞாநேந ஸர்வவிஜ்ஞாநம் ஸர்வஸ்ய மித்யாத்வே ஸர்வஸ்ய ஜ்ஞாதவ்யஸ்யாபாவாத் நோபபத்யதே, ஸத்யத்வேऽபி ஏக தாத்ரூப்யஸக்திவார், கவிதா ஏகவிஜ்ஞாநேந ஸர்வவிஜ்ஞாநப்ரதிஜ்ஞா ஸர்வஸ்ய தத்ராத்மகத்வேநைவ ஸத்யத்வே ஸித்யதி ।

---

விருத்தமான ஆகாரத்தை உடையது ப்ரஹ்மம்' என்பதைச் சொல்லுகின்றது. ஆகை யால், எல்லாப் பதங்களும் பர்யோஜநமுள்ளவைகளே' என்பதுதான் இந்த ஸாரமம், இவ்விடத்தில் 'நைகாரகாரத்வமோ' என்று ஆரம்பிக்கும் வாக்யத்தால் விவரிக்கப்பட்டிருக்கின்றது

இப்படி அர்த்தம் சொல்லும் சங்கரமஸ்தர்கள், ஸத்யம்ஜ்ஞாநமநந்தம் என்னும் மூன்று பதங்களுக்கும் ஸாமாநாதிகரண்யம் உண்டு என்பதை ஒத்துக்கொள்ளுகிறார்கள். பல விசேஷணங்கள் ஒரே விசேஷ்யத்தை அவகாஹித்து நிற்பதும் அந்த விசேஷணங் களுக்கு ப்ரவ்ருத்தி நிமித்தங்கள் (அதாவது-அர்த்தங்கள்) வேறுபட்டு இருப்பதும் ஸாமா நாதிகரண்யத்திற்கு முக்யமான லக்ஷணம். இவ்விடத்தில் மூன்று விசேஷணங்களும் ப்ரஹ்மம் கிற ஒரே விசேஷ்யத்தை அவகாஹித்து நிற்கின்றன என்பது வ்யக்தம். அவை களின் ப்ரவ்ருத்தி நிமித்தங்களும் வேறுபட்டு நிற்கின்றன என்பதை நிரூபித்துவிட்டால், ஸாமாநாதிகரண்ய லக்ஷணம் இவ்விடத்தில் அந்வயித்துவிடும். ஜ்ஞாபிக்கப்படும் எதிர்த்தட்டான அர்த்தங்கள் (அதாவது ப்ரதியோகி விசேஷங்கள்) ப்ரவ்ருத்தி நிமித்தங் களாகிறபடியால், ப்ரதியோகிவிசேஷங்கள் வேறுபட்டு நிற்கவே ப்ரவ்ருத்தி நிமித்தங் களும் பின்னங்களாக இருக்கின்றன என்பது நிரூபிக்கப்பட்டதாகிறது.

இந்த 'ஸத்யம்ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம' என்னும் வாக்யத்திற்கு நமது ஆசார்யர் கள் என்ன அர்த்தம் சொல்லுகிறார்கள் என்பதைப் பிறகு விசாரிப்போம்-

நிஷ்கலம்-நிரவயவம் (அவயவமற்றது, நிஷ்க்ரியம்-க்ருதக்ருத்யம் (அதனால் செய்யப்படவேண்டியது ஒன்றுமில்லை) நிர்குணம்-குணமற்றது, நிரஞ்ஜநம்-ஸமல ரஹிதம் (ஒட்டாத ஸ்வபாவத்துடன் கூடினது.]

விஜ்ஞாநம் ஆநந்தம்—ஜ்ஞாநஸ்வரூபம் ஆநந்த ஸ்வரூபம்

நைதத்ஏவம்..... ஸித்யதி—இது சங்கரமதஸ்தர்களுக்கு விசிஷ்டாத்வைதி கள் சொல்லும் ஆக்ஷேபம். [அது அப்படியன்று ஏகவிஜ்ஞாநேந ஸர்வவிஜ்ஞாநம் (ஒன்றை அறிவதனால் எல்லாம் அறிந்ததாகிவிடும்) என்பது உங்கள் மதத்தில் எப்படி ஸித்திக்கும்? நீங்களோ 'எல்லாம் பொய்' என்று சொல்லுகிறீர்கள் எல்லாம் பொய்யா னால் அறியப்படவேண்டிய வஸ்து இல்லாமையால் ஸர்வவிஜ்ஞாநம் (எல்லாவற்றையும் அறிவது) என்பதே ஏற்படாது இல்லாவிட்டால், ஜகத் ஸத்யமென்றாவது அல்லது ப்ரஹ்மம் பொய்யென்றாவது சொல்லவேண்டி வரும் அது உங்களுக்கு அநிஷ்டம். எங்கள் மதத்திலேயோ வென்றால், ஜகத் முழுவதும் ப்ரஹ்மத்தை ஆத்மாவாக உடைத்தா

அய மத்ர—ஶ்வேதகேதும் ப்ரத்யாஹ "ஸ்தப்தோஸி உத தமாதேஶம் அப்ராக்ஷ்ய:" இதி—(ஸர்வம் ஏவ ஸ்ருஷ்ட்யாதௌ, தாந்நாமரூபாநு ஸ்ருதி தமாதேஶம் ப்ரஷ்டாஸி" இதி) ।"

---

யிருக்கிறபடியால், ஜகத் முழுவதும் பொய், ஆகையால் ஸர்வவிஜ்ஞாநம் என்பது ஸித்திக்கும்]

இந்த ஆக்ஷேபத்தின் ப்ரக்ரியை பின்வருமாறு — 'ஒரே வஸ்துதான் இருப்பது, மற்றவை ஒன்றும் இல்லை' என்று அறிவதுதான் 'ஏகவிஜ்ஞாநேந ஸர்வவிஜ்ஞாநம்' என்பதற்கு அர்த்தம் என்று சொன்னால், அப்படி அர்த்தமாவதற்கு 'ஏக விஜ்ஞாநேந ஸர்வவிஜ்ஞாநம்' (ஒன்றை அறிவதனால் எல்லாம் அறிந்ததாகிவிடும்) என்று சொல்லக்கூடாது, 'ஏகவிஜ்ஞாநேந ஸர்வாபாவஜ்ஞாநம்' (ஒன்றை அறிவதனால் 'மற்றொன்றும் இல்லை' என்பது அறிந்ததாகிவிடும்) என்றன்றோ சொல்லவேண்டும்? ஸர்வ என்பதற்கு ஸர்வாபாவ என்று அர்த்தமுண்டோ? ஒருகால், 'ஒரே வஸ்துதான் இருப்பது, மற்றவை இருப்பது போலத் தோன்றுவதெல்லாம் பொய், அவை, அந்த ஒரு வஸ்துவின் ஸ்வபாவத்தைப் போன்ற ஸ்வபாவத்தையே உடைத்தாயிருக்கிறபடியால் அவை அதுவே' என்பது தான் அந்த வாக்யத்திற்கு அர்த்தம் என்று சொன்னால், அப்பொழுது, இரண்டுக்கும் ஸ்வபாவம் ஒன்றாக இருக்கிறபடியால், ப்ரஹ்மம் போல ப்ரபஞ்சமும் ஸத்யமென்றாவது, அல்லது ப்ரபஞ்சம் போல ப்ரஹ்மம் பொய் என்றாவது ஒத்துக்கொள்ள வேண்டிவரும். அதுவும் பாதகமன்றோ? ஒருகால், 'ஒருவனை ப்ரதாநன் என்று சொன்னால் மற்றவர்களுக்கு அப்ராதாந்யம் தோற்றுவது போல, ஒன்று இருக்கின்றது என்று அறிவதனாலேயே மற்றவை இல்லை என்று ஏற்படுகின்றது என்பதுதான் அதன் அர்த்தம் என்று சொல்லலாமோ?" என்றால், அப்பொழுது 'எல்லாம் அறிந்ததாகிவிடும்' என்னும் இடத்தில் 'எல்லாம் பொய் என்று அறிந்ததாகிவிடும்' என்று ஒரு வார்த்தை அத்யாஹாரம் செய்துகொள்ள வேண்டிவரும். அது அவ்வளவு ஸ்வரஸமன்று தவிரவும், ஒன்று உண்மை என்னும் ஜ்ஞாநம், மற்றொன்று பொய் என்னும் ஜ்ஞாநம், ஆகையால் அவைகளுக்கு வைரூப்யம் தோன்றும், அதுவும் ஸ்வரஸமன்று 'ஒன்றை அறிவதனால் எல்லாம் அறிந்ததாகிவிடும்' என்னும் இடத்தில் ஜ்ஞாநங்களுக்கு ஸாரூப்யம் சொல்வதன்றோ ஸ்வரஸமாக இருக்கும்? 'அந்த ஸாரூப்யம் எப்படிச் சொல்லக்கூடும்?" என்று கேட்டால், 'ப்ரஹ்மம் என்பது ஒன்று, அதையே ஆத்மாவாக உடையது மற்றது (ப்ரபஞ்சம்)' என்று ஒத்துக்கொண்டு, ஒன்றை அறிந்த மாத்ரத்தாலே, அதையே ஆத்மாவாக உடைய மற்றதும் அறிந்ததாகிவிடும் என்று ஸமர்த்தித்தால், ஸாரூப்யம் சொன்னதாகிவிடும். அதாவது—'ஏகம்' என்பதும் 'ஸர்வம்' என்பதும் ஒரே விசேஷ்யத்தை அவகாஹிக்கின்றன, ஆகையால் ஏக விஜ்ஞாநத்தால் ஸர்வ விஜ்ஞாந ப்ரதிஜ்ஞை ஸமர்த்திதமாகிவிடுகின்றது. இது தான் வாதத்தின் ப்ரக்ரியை.

𑌆𑌦𑌿𑌶𑍍𑌯𑌤𑍇𑌽𑌨𑍇𑌨𑍇𑌤𑍍𑌯𑌾𑌦𑍇𑌶𑌃 । 𑌆𑌦𑍇𑌶𑌃—𑌪𑍍𑌰𑌶𑌾𑌸𑌨𑌮𑍍, “𑌏𑌤𑌸𑍍𑌯 𑌵𑌾 𑌅𑌕𑍍𑌷𑌰𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌶𑌾𑌸𑌨𑍇 𑌗𑌾𑌰𑍍𑌗𑌿 𑌸𑍂𑌰𑍍𑌯𑌾𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑍌 𑌵𑌿𑌧𑍃𑌤𑍌 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌃” 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑍍𑌯𑌮𑌾𑌨𑌃 । 𑌤𑌥𑌾 𑌚 𑌮𑌾𑌨𑌵𑌂 𑌵𑌚𑌃 “𑌪𑍍𑌰𑌶𑌾𑌸𑌿𑌤𑌾𑌰𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌮𑍍” 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 । 𑌅𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 “𑌸𑌦𑍇𑌵” 𑌇𑌤𑌿 𑌜𑌗𑌦𑍁𑌪𑌾𑌦𑌾𑌨𑌤𑌾𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑍍𑌯 “𑌅𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯” 𑌪𑌦𑍇𑌨𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌤𑍍𑌰𑌨𑍍𑌤𑌰𑌨𑌿𑌵𑌾𑌰𑌣𑌾𑌦𑍁𑌪𑌾𑌦𑌾𑌨𑌸𑍍𑌯𑍈𑌵𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌤𑍃𑌤𑍍𑌵𑌮𑌪𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌤𑌃 “𑌤𑌂

---

இனி, தமது அர்த்த ப்ரகாரம் உபநிஷத்தை விவரிக்கிறார், '𑌅𑌯𑌮𑌰𑍍𑌥𑌃' இத்யாதியால். 𑌅𑌯𑌮𑌰𑍍𑌥𑌃............𑌪𑍃𑌷𑍍𑌟𑌵𑌾𑌨𑌸𑍀𑌤𑌿 - [இதன் அர்த்தம் - '𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑍋𑌽𑌸𑌿, 𑌉𑌤 𑌤𑌮𑌾𑌦𑍇𑌶𑌮𑌪𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑍍𑌯𑌃?' என்று ச்வேதகேதுவைப் பார்த்துச் சொல்லுகிறார். '𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑍋𑌽𑌸𑌿' என்பதற்கு '𑌪𑌰𑌿𑌪𑍂𑌰𑍍𑌣 𑌇𑌵 𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇' (பரிபூர்ணன் போல, அதாவது எல்லாம் அறிந்தவன் போலக் காணப்படுகிறாய்) என்று அர்த்தம் '𑌉𑌤 𑌤𑌮𑌾𑌦𑍇𑌶𑌮𑌪𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑍍𑌯𑌃?' என்பதற்கு '𑌤𑌾𑌨𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌤𑌮𑌪𑍍𑌯𑌾𑌦𑍇𑌶𑌂 𑌪𑍃𑌷𑍍𑌟𑌵𑌾𑌨𑌸𑌿' (அந்த ஆசார்யர்களிடத்தில் அந்த ஆதேசத்தைக் கேட்டாயோ?) என்று அர்த்தம்.] ச்ருதியில் '𑌤𑌾𑌨𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿' என்பதற்குப் பதங்கள் இல்லை, இது அர்த்தத்தால் கிடைக்கின்றது. '𑌤𑌮𑌪𑍍𑌯𑌾𑌦𑍇𑌶𑌂' என்பதில் '𑌅𑌪𑌿' என்னும் பதமும் ச்ருதியில் இல்லை, வ்யாக்யானத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றது. கேட்கிறவனுக்குத் தாப்பலமென்பதை அந்த '𑌅𑌪𑌿' சப்தம் குறிக்கின்றது.

இனி '𑌆𑌦𑍇𑌶𑌃' என்னும் சப்தத்தின் அர்த்தத்தை விசாரித்து, '𑌉𑌤 𑌤𑌮𑌾𑌦𑍇𑌶𑌮𑌪𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑍍𑌯𑌃' என்று ஆரம்பிக்கும் வாக்யத்தின் கருத்தை விவரிக்கிறார். '𑌆' என்னும் உபஸர்க்கத்துடன் கூடிய '𑌦𑌿𑌶𑍍' என்பதற்கு ப்ரசாஸனம் (அதாவது நியமனம்) என்பது அர்த்தம். அந்தத் தாதுவிலிருந்து, '𑌆𑌦𑌿𑌶𑍍𑌯𑌤𑍇 𑌅𑌨𑍇𑌨' என்று '𑌆𑌦𑍇𑌶𑌃' என்னும் சப்தம் வருகிறது அதாவது - எவனால் நியமிக்கப்படுகிறதோ அவன் 'ஆதேசன்' என்று அர்த்தம். ப்ரஹ்மத்தினாலேயே இந்த ப்ரபஞ்சம் முழுவதும் நியமிக்கப்படுகிறபடியால், அந்த ப்ரஹ்மமே இவ்விடத்தில் 'ஆதேச' என்னும் சப்தத்தாற் சொல்லப்படுகிறது. ப்ருஹதாரண்யக உபநிஷத்திலும், '𑌏𑌤𑌸𑍍𑌯 𑌵𑌾' என்று ஆரம்பிக்கும் வாக்யத்தால் 'ப்ரஹ்மமே இந்த ப்ரபஞ்சத்தை நியமிக்கிறது' என்று சொல்லப்படுகிறது. (அந்த வாக்யத்தின் அர்த்தமாவது—கார்கியே! ஸூர்யன் சந்திரன் இவர்கள் இந்த ப்ரஹ்மத்தின் நியமனத்தில் தரிக்கப்பட்டவர்களாய் நிற்கிறார்கள்) மநுஸ்ம்ருதியிலும், '𑌪𑍍𑌰𑌶𑌾𑌸𑌿𑌤𑌾𑌰𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂' (ஸகல வஸ்துக்களையும் நியமித்துவரும்) இத்யாதியான வாக்யம் காணப்படுகின்றது. இந்த உபநிஷத்திலும் '𑌸𑌦𑍇𑌵𑌾𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌂' என்னும் வாக்யத்தில் '𑌸𑌦𑍇𑌵' என்பதால் 'ப்ரஹ்மமே ஜகத்திற்கு உபாதாந காரணம்' என்பது முதலிற் சொல்லப்பட்டு, பிறகு '𑌅𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌂' என்பதால் 'இந்த ப்ரபஞ்சத்தை நியமிக்கிறவன் வேறு ஒருவனும் இல்லை' என்று சொல்லப்படுகிறது. இப்படி இந்த ப்ரபஞ்சத்தின் நியமனம் ப்ரஹ்மத்திற்கே அஸாதாரணமான தர்மமாக ஏற்படுகிறபடியால், அந்த அஸாதாரண தர்மத்தை '𑌆𑌦𑍇𑌶' என்னும் சப்தத்தால் குறிப்

ப்ரஶாஸிதாரம் ஜகது³பாதா³நம் ச தமாதே³ஶமப்ராக்ஷ்ய: யேந அஶ்ரு-
தேந ஶ்ருதேந மதேந விஜ்ஞாதேந அஶ்ருதமமதமவிஜ்ஞாதம் ஶ்ருதம் மதம் விஜ்ஞாதம்
ப⁴வதி ?'' இத்யுக்தம் ஸ்யாத்। "நிகி²லஜக³து³த³ய விப⁴வ லயாதி³ காரண

---

பிட்டு அப்படி நியமிக்கிறவனையே 'ஆதே³ஶ:' என்று இந்த உபநிஷத் சொல்லுகிறது என்பது வ்யக்தமாகின்றது பிறகு 'யேநாஶ்ருதம் ஶ்ருதம் பவதி' இத்யாதியான வாக்யம் வருகிறபடியால், அதன் அர்த்தத்தையும் பராமர்சித்தால், 'உத தமாதே³ஶமப்ராக்ஷ்ய:?' என்பதற்கு 'ஜகத்தை நியமிக்கிறவனாகவும் ஜகத் முழுவதற்கும் உபாதான காரணமாகவுமுள்ள ப்ரஹ்மத்தைப் பற்றி நீ கேட்டாயா?" என்றே அர்த்தம் சொல்ல வேண்டும் என்பது ஏற்படும். உபாதான காரணத்தைத் தெரிந்து கொண்டாலன்றோ உபாதேயம் தெரிந்ததாகும்? ஆகையால், இந்த வாக்யத்தின் உட்கருத்து என்னவென்றால்—'ஸகலமான ஜகத்தினுடைய உத்பத்தி ஸ்திதி லயம் இவை முதலியவைகளுக்குக் காரணமாயும், ஸர்வஜ்ஞத்வம் ஸத்ய காமத்வம் ஸத்ய ஸங்கல்பத்வம் முதலிய கணக்கில்லாத உதார குணங்களுக்கெல்லாம் ஸமுத்ரம் போலவுமுள்ள ப்ரஹ்மமானது உன்னால் கேட்கப்பட்டதா?" என்பதே

சங்கர மதஸ்தர்கள் 'ஆதே³ஶ' என்னும் சப்தத்திற்கு வேறு அர்த்தம் செய்கிறார்கள். 'ஆ' என்னும் உபஸர்க்கத்துடன் கூடிய 'தி³ஶ' என்னும் தாதுவுக்கு உபதேசம் என்று அர்த்தம் சொல்லி, 'உபதேசிக்கப்படும் வஸ்துவே உபதேசம் என்று சொல்லப்படுகிறது' என்று வ்யுத்பத்தி செய்து, 'ஆதே³ஶ:' என்றால் 'உபதேசிக்கப்படும் வஸ்து' அதாவது—ப்ரஹ்மம் என்று சொல்லுகிறார்கள். இப்படிச் சொல்வதால் அவர்களுக்குக் கிடைப்பது என்னவென்றால், 'ஆதே³ஶ' என்பதால் நிர்விசேஷ ப்ரஹ்மமே சொல்லப்படுகின்றது என்பதுதான். 'நியமிக்கிறவன்' என்னும் அர்த்தத்தை அங்கீகரித்தால், 'நியமிக்கும் குணமுள்ளவன்' என்று ஸவிசேஷமான ப்ரஹ்மமே குறிக்கப்படுமன்றோ? இந்த இரண்டு அர்த்தங்களின் ஸ்வாரஸ்ய தாரதம்யத்தைப் பார்த்தால், நமது மதஸ்தர்கள் சொல்லும் அர்த்தத்திலேயே அதிக ஸ்வாரஸ்யம் இருக்கின்றது என்று சொல்லவேண்டும் முதலாவது 'ஆ' என்னும் உபஸர்க்கத்துடன் கூடிய 'தி³ஶ' என்னும் தாதுவுக்கு நியமனமே ப்ரஸித்தமான அர்த்தம், உபதேசம் என்னும் அர்த்தம் அவ்வளவு ப்ரஸித்தமன்று இரண்டாவது, இவ்விடத்தில் அஸாதாரணமான நாமத்தைச் சொல்லி ப்ரஹ்மத்தைக் குறிப்பதுதான் ஸங்கதமாகுமே தவிர, மற்ற வஸ்துக்களுக்கும் பொதுவான நாமத்தைச் சொல்லிக் குறிப்பது ஸங்கதமாகாது. நிருபாதிக ப்ரசாஸனம் ப்ரஹ்மத்திற்கே அஸாதாரணம், உபதேச்யத்தன்மையோ லௌகிகா லௌகிக நாம ப்ரஹ்ம பதார்த்த ஸாதாரணம். ஆனால், 'ஆதி³ஶ்யதே அநேந இதி ஆதே³ஶ:' என்று வ்யுத்பத்தி செய்வதில் ப்ரத்யய ஸம்பந்தமாக வ்யாகரண விரோதம் கொஞ்சம் உண்டு; 'உபதி³ஶ்யதே அஸௌ இதி உபதே³ஶ:' என

ஶ்ருதம் ஸர்வஜ்ஞஸ்ய ஸத்யகாமஸ்ய ஸத்யஸங்கல்பஸ்யாப்ய பரிபூர்ணதோபாதா மாணவானாம் கிம் ப்ரஹ்மஸ்வயா ச்ருதம்? '' இதி ஹாஸோபஹாஸ: |

---

னும வயுதபததியில பரதயய ஸ்வாரஸயம் அதிகமே. இபபடி பரதயயததின் அஸவா ரஸ்யம் இருநதபோதிலும், பரகருதயாத்ததததின ஸவாரஸயமும ஆாதததின ஔசிதய மும் நமது மதஸ்தாகள சொலலும ஆாததததில இருககிறபடியால, அதிக ஸவாரஸயம இருக்கும நமது அாததமே அஙகீகரிககத தகுநதது.

'ப்ரசாஸிதாரம் ஜமந்வாஷாநஹேதவி' என்பதறகு 'நியமிக கிறவனுகவும ஜகததுககு உபாதாந காரணமாகவுமுளள' எனபது அாததம். 'ப்ரசாஸிதா' என்பதால நியமிககிறவன என்னும அாததமும, 'யேநாஶ்ருதம் ஶ்ருதம்பவதி' இதயாதியால உபாதாந காரணமாக இருககிறவன எனனும அாததமும கிடைககினறன. ஸ்ரீ விஷ்ணுபுராணததிலும்,

"யதுயம் அ ஜமஸ்வஹு யதயோஹ்யோஶாதவா"

என்னும் வாகயஙகளில் 'யதுயம்' என்பதால ஆதம ஸ்வரூபமும் 'யதயோஹ்யோ ஶாதவா' என்பதால உபாதாநமும் ஆக இரணடுமே சொலலப்பட்டிருககின்றன. இவவிடததிலும், மேல 'ஸஜ்ஜனா:' இதயாதியில, 'ஸ்வாயதநா:' என்ப தால் ஆதமதவமும், 'ஸஜ்ஜனா: ஸப்ரதிஷ்டா:' எனபதால உபாதாநதவமும் பரதி பாதிககப் படுகின்றன.

அவிதீய வஹேநாயிஷ்டாந்தர நிவாரணாக—'அதவிதீய' என்னும் பதம், 'மறறுமொரு அதிஷ்டாதா இலலை' எனபதைச் சொலலுகினறது. 'அதிஷ்டாதா' என்பதற்கு 'ப்ரேரகன்' (அதாவது—ஏவுகிறவன) எனறு பொருள, ஆகையால 'நியமிக கிறவன்' எனறு பலிதம.

யேந ஶ்ருதேந அஶ்ருதம் ஶ்ருதம் பவதி—உபநிஷததில 'யேநா ஶ்ருதம் ஶ்ருதம்பவதி' எனறு மாதரம இருககினறது. இதன பொருள்—'எதனுல் கேடகப்படாததெல்லாம கேடகபபட்டதாகுமோ' எனபது தான. அதாவது—'எது கேட் கபபட்டால, கேடகப்படாததெலலாம கேடகபபட்டதாகுமோ' என்று சொனனதாயிறறு இதை விளககும்பொருட்டே, 'யேந ஶ்ருதேந' எனறு வயாக்யாநததில 'ஶ்ருதேந' என்னும பதததைச் சேர்ததிருககிரு. இம்மாதிரியே, 'யேந மதேந' எனறும் 'யேந விஜ்ஞாதேந' எனறும எஙகும விளக்கிக காட்டபபட்டிருககின்றது. இப்படி அாத தம செய்யாமல, உபநிஷததில இருககிறபடி அாததம செயதால, 'எதனுல் கேடகப்படாத தெல்லாம கேட்கப்பட்டதாகுமோ',(அதாவது-எதனுல எதனுடைய இருப்பால, எது இரு

தஸ்ய நிகிலகாரணதயா, காரணைவ நாநாஸம்ஸ்தாந விஶேஷ ஸம்ஸ்திதம் கார்யம் இத்யவதீத ஜதி காரணஹேத ஸம்க்ஷ்ம் நிகிலஸ்ய ஶரீரக ப்ரஹ்மவிஜ்ஞாநேந கார்யம் ஹேதவிலம் ஜம விஜ்ஞாதம் ஹவதீதி

---

பபதால) எனறு அாததம கிடைககும. அது அஸஙகதம். தருஷடாநததகிலும 'மணணின இருபபிைல, குடம முதலியவை அறியப்படுகின்றன எனபது இலலே, மணணே அறிநதால அதனவிகாரஙகளாகிற குடம முதலியவை அறியபபடுகினறன' எனறு சொலவதே ஸஙக தம இநத விஷயததை விவரிககும வேறு உபநிஷததுககளேப் பாாததாலும், இநதஅாததமே ஸஙகதமெனறு ஏறபடும. 'கஸ்மிஞ் விஜ்ஞாதே ஸர்வமிதம் விஜ்ஞாதம் ஹவதி ?' (எதை அறிநதால எலலாம அறிநததாகிவிடும ?) எனறு சொலலபபட் டிருககினறது.

நிகிலஜகதுதய விஹவ விலயாதிகாரணஹேதும்—இநதப பதம், 'யேநாஶ்ருதம் ஶ்ருதம் இதயாதியில ஜகத காரணதவம கணேடாகதமாக இராவிடி னும, அது பலிதமாகினறது' எனபதை விளககும பொருடடு. மேலே சொலலபபடும ஸாவஜ்ஞதவம முதலிய குணஙகளும இநதக காரணதவததிறகு உபயோகிகளாகவே சொலலப்பட டிருககினறன.

ஆகையால, உத தமாதேஶமப்ராக்ஷ்ய:, யேநாஶ்ருதம் ஶ்ருதம் ஹவதி, அமதம் மதம், அவிஜ்ஞாதம் விஜ்ஞாதம் என்னும வாககியததிற்கு, ' ஜகததுக கெலலாம உபாதாந காரணமாகவும், அபபடிப்பட்ட காரணதவததிறகு உபயோகிகளான ஸகல கலயாண குண விஶிஷ்டமாகவுமுளள பரஹ்மததைபபறறி பரஶ்நம செயதாயோ?' என்பது ஹ்ருதயததுள்ளில இருககுமதாதபாயம. 'அப்ராக்ஷ்ய:' (பரஶ்நம செயதாயோ) எனபதின குறிபபு எனனவெனறால, பரஶ்நம செயத பிறகு ஶ்ரவணம ஏறபட வேணடும் என்பதே.

தஸ்ய ...... ..வைஷம்யா விதா—'பரஹ்மம் ஜகத எலலாவறறிற்கும் காரணம்' எனபதை ஒததுககொணடாலும், பரஹ்மததை அறிவதனல, ஜகத அறிநததாகி விடுமோ? காரணமும காாயமும வெவவேறு தரவயஙகளலலவோ ? ஒரே தரவயமாக இருநதால பரஹ்மததிறகு விகாரமாகிற ஹேய ஸமபநதம பரஸஙகியாதோ ? இதயாதியான ஶஙகை களே உததேசிதது, 'தஸ்ய............விதா' எனபதனல அவைகளுககு ஸமாதாநம சொலலுகிறார.

இதன் பொருள:—[காரணமாகிற பரஹ்மமும் காாயமாகிற ஜகததும வெவவேறு த்ரவயமலல, ஒரே தரவயம, ஸமஸதாநம (அமைபபு) வெவவேறே தவிர, தரவயம வேறனறு ஒருவிதமான அமைபபுடன கூடியது காரணம, மறறொரு விதமான அமைப புடன கூடியது காாயம. ஸூக்ஷ்மாவஸ்தையிலுள்ள சித அசித இவைகளே ஶரீரமாக உடைய ப்ரஹ்மம காரணம, ஸ்தூலாவஸ்தையிலுள்ள சித அசித இவைகளே ஶரீரமாக

ஹ்ருதி நிதாய, "யேநாஶ்ருதம் ஶ்ருதம் பவத்யமதம் மதமவிஜ்ஞாதம் விஜ்ஞாதம்" இதி வாக்யம் புத்ரம் ப்ரதி வ்யாஹ்ருதவாந் பிதா।

ததேதத் ஸகலஸ்ய வஸ்துஜாதஸ்ய ஐககாரண்யம் பித்ருஹ்ருதி நிஹிதமஜாநந் புத்ர:, பரஸ்பர விலக்ஷணேஷு வஸ்துஷு அந்யஸ்ய விஜ்ஞாநேந அந்யவிஜ்ஞாநஸ்ய அகடமாநதாம் புத்த்வா பரிசோதயதி "கதம் நு பகவ: ஸ ஆதேஶ:?" இதி

---

உடைய ப்ரஹ்மம் கார்யம் ஆகையால் ஸகலத்துக்கும் காரணமாயுள்ள ப்ரஹ்மத்தை அறிந்தால், கார்யமாயுள்ள ஜகத் முழுவதும் அறியப்பட்டதாகி விடும் என்று சொல்வது உபபந்நமே. இந்தப் பாவத்தை மநஸ்ஸில் கொண்டு 'யேநாஶ்ருதம் ஶ்ருதம் பவதி' என்னும் வாக்யத்தைப் ப்ரயோகித்து பிதா புத்ரனைப் பார்த்து ப்ரஶ்நம் செய்தார் ] 'நிகில காரணதயா கார்யபூதமகிலம் ஜகத் விஜ்ஞாதம் பவதி' என்பது அந்வயம்.

சேதந வஸ்துவும் அசேதந வஸ்துவும் ஈஶ்வரனுக்கு ஶரீரம். இவை, சில காலங்களில் ஸூக்ஷ்மமென்று வ்யவஹரிக்கப்படும் அவஸ்தையிலும், மற்றும் சில காலங்களில் ஸ்தூலமென்று வ்யவஹரிக்கப்படும் அவஸ்தையிலும் இருக்கின்றன. ஸூக்ஷ்மாவஸ்தையை ப்ரளயமென்றும் ஸ்தூலாவஸ்தையை ஸ்ருஷ்டி என்றும் சொல்வார்கள். இந்த அவஸ்தையின் மாறுதல் முழுவதும் ஶரீரத்திற்கே தவிர, ஶரீரி எவ்வித மாறுதலுமற்றே இருக்கின்றது. ஆகையால், 'இந்த மாறுதலை அங்கீகரித்தால் ப்ரஹ்மம் ஹேயாஸ்பதமாகிவிடும்' என்று ஆக்ஷேபிக்க அவகாஶமில்லை. காரணமும் கார்யமும் ஒரே த்ரவ்யமென்பதும் உபபந்நமே.

புத்ரம் ப்ரதி வ்யாஹ்ருதவாந் பிதா—புத்ரனைப் பிதா இவ்வாறு கேட்டார், அதாவது—பிதா புத்ரனுக்கு உபதேஶித்தார் என்பது குறிப்பு ப்ரஹ்மத்திற்கும் சேதநாசேதநங்களுக்குமுள்ள ஶரீர ஶரீர ஸம்பந்தம் காரணகார்யபாவம் இவை முதலிய ரஹஸ்யார்த்தங்கள், வைராக்யத்தால் உபஸந்நனான ஶிஷ்யனுக்கன்றோ உபதேசிக்கப்படவேண்டும்? இவ்விடத்தில் எப்படி தாமே அதை உபதேஶிக்கிறார்? என்று ஒரு ஶங்கை ஜநிக்கக் கூடும் அதற்கு ஸமாதானம்—'புத்ரஶிஷ்யத்ரிகத்துக்கு மாத்ரம் அம்மாதிரி நியமம்; புத்ரனுக்குப் புத்ரத்தன்மையே ப்ரஹ்மோபதேஶஹேது' என்னும் ஶாஸ்த்ரார்த்தமும் இதனால் ஸூசிதமாகின்றது.

ததேதத்...............ஆதேஶ இதி—[இவ்விதம் பிதாவின் ஹ்ருதயத்தில் உள்ள கருத்தை அறியாத புத்ரன், பரஸ்பரம் விலக்ஷணங்களாயுள்ள வஸ்துக்களுள் ஒன்றை அறிவதனால் மற்றவையெல்லாம் எப்படி அறியப்பட்டனவாகும் என்று ஶங்கித்து 'கதம் நு பகவ: ஸ ஆதேஶ:?' என்று பிதாவைப் பார்த்துக் கேட்கிறான் ] 'ஹே

பரிப்ருஷ்ட: பிதா ததேவ ஹ்ருதி நிஹிதம் ஜ்ஞாநாநந்தாமலத்வைக ஸ்வரூபம் அபரிச்சேத்ய மாஹாத்ம்யம் ஸத்யஸங்கல்பத்வாத்யநவதிகாதிஶயாஸங்க்யேய கல்யாண குணகணம் அஶேஷவிகாரஶூந்யம் பரம் ப்ரஹ்மைவ நாமரூப விபாகாநர்ஹ ஸூக்ஷ்ம சிதசித்வஸ்து ஶரீரம்

---

பகவானாகிய பிதாவே! அந்த ஆதேசம் என்பது எப்படிப்பட்டது" என்பது அந்த வாக்யத்தின் பொருள். இந்தக் கேள்விக்கு, பிதா த்ருஷ்டாந்தங்களைக்கொண்டு ப்ரதிவசநம் கொடுத்து உபபாதிக்கிறபடியால், 'ஒன்றின் ஜ்ஞாநத்தால் மற்றவைகளின் ஜ்ஞாநம் ஏற்படுகின்றது என்பது எப்படிப் பொருந்தும்" என்பதே இந்தக் கேள்வியின் தாத்பர்யம் என்று நாம் அறியவேண்டும்.

பரிப்ருஷ்ட: பிதா: ........அஶேஷவிகார—[இவ்விதம் கேட்கப்பட்ட பிதா, தான் மநஸ்ஸில் ஏற்கெனவே வைத்துக் கொண்டிருந்த கருத்தை நிரூபிப்பதற்காக லோகத்தில் காணப்படும் த்ருஷ்டாந்தத்தைச் சொல்லுகிறார். அந்தக் கருத்து என்னவென்றால்—ஜ்ஞாநம் ஆநந்தம் அமலத்வம் இவைகளையே ஸ்வரூபமாய் உடையதாயும், பரிச்சேதிக்க முடியாத மாஹாத்மயத்தை உடையதாயும், ஸத்ய ஸங்கல்பத்வம் முதலிய எல்லையில்லாத மேன்மையை உடைய கணக்கற்ற கல்யாண குணகணங்களை உடையதாயும், எவ்வித விகாரமுமற்ற ஸ்வரூபத்தை உடையதாயுமுள்ள பர ப்ரஹ்மமே, முதலில் நாம ரூப விபாகத்திற்கு அநர்ஹமான ஸூக்ஷ்மாவஸ்தையிலுள்ள சேதநா சேதந வஸ்துக்களை ஶரீரமாகக்கொண்டு, பிறகு தனது லீலார்த்தமாகத் தனது ஸங்கல்ப மாத்ரத்தாலே அந்தச் சேதநா சேதந வஸ்துக்களுக்கு அநந்தமாயும் விசித்ரமாயுமுள்ள ஜங்கம ஸ்தாவர ரூபமான அமைப்பை ஜநிப்பித்து, அவைகளைத் தனது அம்ஶமாக வைத்துக்கொண்டே நிற்கிறது; ஆகையால் அந்தக் காரண வஸ்துவை அறிந்தால் மற்றைக் கார்ய வஸ்துவெல்லாம் அறியப்பட்டதாகிவிடும், என்பதுதான்.]

இதில், 'ப்ரஹ்மம் காரணம், ஜகத் கார்யம்' என்பதும், அப்படிக் காரணமாக இருப்பதற்கு உபயோகிகளான கணக்கற்ற குணங்கள் அந்த ப்ரஹ்மத்திற்கு உண்டு என்பதும், அப்படிக் காரணமாக இருப்பதால் அதற்கு எவ்வித தோஷமும் ஸம்பவிக்கவில்லை என்பதும் ஸூசிப்பிக்கப்படுகின்றன.

ப்ரஹ்மம் ஜகத்திற்கு எப்படிக் காரணமென்றால்-தனது ஸங்கல்பத்தினால் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிறபடியால் அது நிமித்த காரணம், தன்னுடைய அம்ஶமாகிய ஶரீரத்தைக் கொண்டே அதை ஸ்ருஷ்டிக்கிறபடியால் அது உபாதாந காரணம், இவ்விதம் இரண்டுவிதமாகவும் காரணமாகின்றது என்பது ஸமாதாநம். சட்டி பானைகளைக் குயவன் செய்கிறபடியால், அவனை அவைகளுக்கு நிமித்த காரணமென்றும், மண்ணினால் அவை செய்யப்படு

ஸ்வயமேவ ஸ்வஸங்கல்பாநந்த விசித்ர ஸ்திர த்ரஸ அநாதி ஸ்வ
ரூபேண ஜகத் ஸ்ருஷ்ட்வா ஸ்வாம்ஶேநாவஸ்தித இதி தஜ்ஜ்ஞாநேநாவஸ்ய நிவர்த்யஸ்ய

---

கிற படியால் மண்ணை அவைகளுக்கு உபாதான காரணமென்றும் தார்க்கிகர்கள் சொல்வார்கள் அம்மாதிரியே இவ்விடத்திலும். ஆனால், தன் ஶரீரத்தைக் கொண்டே தானே ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிறபடியால், ப்ரஹ்மம், தானே இரண்டு வித காரணமாகவும் இருக்கின்றது என்பது விஶேஷம்.

ஒவ்வொரு பொருளிலும் இரண்டு அம்ஶங்கள் உண்டு, அவையாவன—எந்தக் குணங்களால் அந்தப் பொருள் அறியப்படுகின்றதோ அவை ஒரு அம்ஶம், அந்தக் குணங்களுடன் கூடியிருக்கும் பாகம் மற்றொரு அம்ஶம், முதல் அம்ஶத்தை விஶேஷணமென்றும் தர்மமென்றும், இரண்டாவதை விஶேஷ்யமென்றும் தர்மி என்றும் சொல்வார்கள். ‘ஸத்யமாயும் ஜ்ஞாநமாயும் அநந்தமாயும் இருக்குமது ப்ரஹ்மம்’ என்பதில், ஸத்யத்வம் ஜ்ஞாநத்வம் அநந்தத்வம் இவை ப்ரஹ்மத்தின் விஶேஷணாம்ஶம், இவைகள் எதற்கு தர்மங்களோ அது விஶேஷ்யாம்ஶம், அதாவது—ஸத்யத்வம் முதலியவை தர்மங்கள், அவைகளை உடையது தர்மி என்று சொன்னதாயிற்று. நமது ஸித்தாந்தத்தில் ஸமஸ்த சேதநாசேதந வஸ்துக்களும் ப்ரஹ்மத்திற்கு ஶரீரமாக இருக்கிறபடியால், அவைகளும், ஸத்யத்வம் முதலிய குணங்களைப்போலே, ப்ரஹ்மத்திற்கு விஶேஷணாம்ஶமாகின்றன. இந்த விஶேஷண விஶேஷ்ய அம்ஶங்கள் இரண்டும் ஒன்றை விட்டு மற்றொன்று ஒரு பொழுதும் பிரியாமல் இருக்கும், விஶேஷணங்களை விலக்கி விஶேஷ்யத்தை மாத்ரம் தனியாக நினைக்க முடியாது. ஆனாலும், வ்யவஹாரத்திற்காக அவைகளுள் ஒன்றை விஶேஷணமென்றும் மற்றொன்றைத் தர்மி என்றும் நாம் தனித்துப் பேசுவது உண்டு. ப்ரக்ருதத்தில், ப்ரஹ்மத்தின் விஶேஷணாம்ஶமாகிய சேதநாசேதந வஸ்துக்கள், முதலில் நாமரூபங்களற்றிருக்கும் ஸூக்ஷ்மாவஸ்தையிலிருந்து பிறகு நாமரூபங்களுடன் கூடிய ஸ்தூலாவஸ்தையை அடைகிறபடியால், இந்த ஸ்தூலாவஸ்தையிலுள்ள ப்ரபஞ்சத்திற்கு ப்ரஹ்மமே உபாதாநகாரணமாகின்றது என்று நாம் ஒத்துக்கொள்ளுகிறோம்; அந்த மாறுதலும், ப்ரஹ்மத்தின் ஸங்கல்பத்தால் ஸம்பவிக்கிறபடியால், அந்த ப்ரஹ்மமே அந்த ப்ரபஞ்சத்திற்கு நிமித்தகாரணமாகவும் ஆகின்றது என்பது நமது கொள்கை. ஆனால், அந்த மாறுதல், விஶேஷணாம்ஶத்தை மாத்ரம் பற்றிக்கொண்டு தர்மியாகிற ப்ரஹ்மத்திற்கு ஸம்பந்தமில்லாமல் இருக்கிறபடியால், ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம் (அதாவது-தர்ம்யம்ஶம்) அவிகாரி (அதாவது—மாறுதலற்றது) என்று சொல்லப்படுகிறது. இந்த அர்த்தத்தை ‘அவிகாராய’, ‘ஸ்வாம்ஶேநாவஸ்திதம்’ என்னும் பதங்களில் கண்டு கொள்ளுகிறது. ஆகையால், ப்ரஹ்மத்தை உபாதாந காரணமாக ஒத்துக்கொள்வதனால், எவ்வித தோஷமும் ப்ரஸங்கியாது. அல்பத்து ஸமஸ்த காமனாக இருக்கையிலும்

ஜ்ஞாத்ருத்வம் ஸர்வஸ்ய லோகஸ்ருஷ்டிம் கார்யகாரணயோ: அநந்யத்வம் உபபாதிதம் த்ருஷ்டாந்தைஸ்ச ।

---

லீலைக்காக இந்த ஜகத்வ்யாபாரத்தைச் செய்கிறபடியால், அந்தப் பகவானை ஜகத்திற்கு நிமித்த காரணமாகவும் ஒத்துக்கொள்வதில் யாதொரு தோஷமுமில்லை. ஸங்கல்ப மாத்ரத்தாலே இந்த ஜகத் வ்யாபாரம் முழுவதும் நடைபெறுகிறபடியால், இதில் எவ்வித ஆயாஸமும் பகவானுக்கு நேரக் காரணமில்லை.

இவ்விடத்தில், சேதநா சேதநவஸ்துக்களைப் பகவானுடைய ஶரீரமாகச் சொல்வதன் அர்த்தமென்ன என்பதைச் சற்று விசாரிப்போம். இந்த அர்த்தத்தை இந்த க்ரந்தத்திலேயே விஶதமாக மேல் பாகங்களில் விசாரிக்கப் போகிறபடியால், இப்பொழுது ஸ்தூலமாக மாத்ரம் அதன் கருத்தைத் தெரிந்துகொண்டால் போதும். ந்யாய ஸூத்ரத்தில் சொல்லி இருக்கிறபடி, சேஷ்டேந்த்ரியார்த்தாஶ்ரயம் ஶரீரமென்று நம் ஶரீர லக்ஷணத்தை எடுத்துக்கொள்ளக் கூடாது. எந்த த்ரவ்யம் மற்றொன்றைப்பற்ற நியமேந தார்யமுமாய் நியமேந நியாம்யமுமாய் நியமேந ஶேஷமுமாய் இருக்கிறதோ, அது அந்த மற்றொன்றுக்கு ஶரீரம் என்று வேதாந்திகள் சொல்லும் லக்ஷணமே பரிக்ராஹ்யம். சேதநா சேதநங்களுடைய ஸத்தையுள்ள காலமெல்லாம், அவைகளின் ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்திகள், ஈஶ்வரனுடைய ஸ்வரூபத்தையும் ஸங்கல்பத்தையும் சார்ந்து நிற்கிறபடியால், அவைகளை ஈஶ்வரனுடைய ஶரீரமென்று நாம் க்ரஹிக்கின்றோம். இதன் பூர்ண விசாரம் மேல் செய்யப்படும்

ஜ்ஞாநாநந்தாமலத்வைக ஸ்வரூப:—ஜ்ஞானம் ஆனந்தம் அமலத்தன்மை இவைகளையே ஸ்வரூபமாக உடையதாய். அமலத்வம் என்றால் எவ்வித தோஷமும் அற்றிருக்கும் தன்மை. இவ்விடத்தில் 'ஸ்வரூபம்' என்பது தர்மியின் ஸ்வரூபத்தை நிரூபித்துக் காட்டும் தர்மத்தை (அதாவது—விஶேஷணமத்தைச்) சொல்லுகின்றது. ஜ்ஞானம் முதலியவை ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை நிரூபித்துக் காட்டும் தர்மங்களன்றோ?

அபரிச்சேத்யமாஹாத்ம்ய:—அளவிடக்கூடாத மேன்மையை உடையதாய் இதில் 'ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம' என்பதின் 'அநந்த' ஶப்தார்த்தம் விவக்ஷிதம்.

ஸத்யஸங்கல்ப:—இத்யாதியால் 'குணங்களாலும் பகவான் அநந்தன்' என்பது குறிக்கப்படுகின்றது

அவிகாரஸ்வரூப:—ஒரு விதமான விகாரமும் இல்லாத ஸ்வரூபத்தை உடைய, இது 'ஸத்ய' என்னும் ஶப்தத்தின் அர்த்தத்தைக் குறிக்கின்றது. இதில்

"யதா ஸோம்யைகேந ம்ருத்பிண்டேந ஸர்வம் ம்ருண்மயம் விஜ்ஞாதம் ஸ்யாத் வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம்" இதி ।

---

'ஸர்வம்' என்னும் பதத்தால், விசேஷ்யாம்சமாகிற ப்ரஹ்மம் சொல்லப்படுகின்றது. ஸூக்ஷ்மாவஸ்தையிலிருந்து ஸ்தூலாவஸ்தைக்கு மாறுவதெல்லாம் விசேஷணாம்சமாகிற சேதநாசேதந வஸ்துக்களைப் பற்றியதே தவிர விசேஷ்யாம்சத்தை ஸ்பர்சிக்கவில்லையாதலால், அவிகாரமாக இருப்பது விசேஷ்யாம்சமே.

ஸ்திர த்ரஸம்—ஸ்தாவர ஜங்கம ரூபமான; த்ரஸம் என்றால் ஜங்கமம் என்று அர்த்தம். சராசரங்கள் என்பதே தாத்பர்யம்.

யதா ஸோம்ய.........பவதீத்யாதி:—'யதா............ஸத்யம்' என்னும் ச்ருதி வாக்யத்திற்கு அர்த்தமென்னவென்றால்—'மண் என்னும் ஒரே வஸ்து பற்பல வ்யவஹாரங்களுக்கு ஆஸ்பதமாக இருக்கும் பொருட்டு, தன்னுடைய சில பாகத்தால், குடம் மடக்கு இவை முதலிய பலவித அமைப்புகளாகிற அவஸ்தா ரூபங்களான விகாரங்களை அடைகின்றது, பற்பல பெயர்களையும் பெறுகின்றது. அப்படிப் பல விகாரங்களை அடைந்து பல பெயர்களைப் பெற்றபோதிலும், மண் என்னும் ஒரே வஸ்துவின் பலவிதங்களான அமைப்புகளாக மாத்ரம் இருக்கிறபடியினால், அவையெல்லாம் மண் த்ரவ்யமே என்றும் வேறு வஸ்து அன்றென்றும் நாம் அறிகிறோமன்றோ? அந்த மண் பிண்டத்தை அறிந்ததனாலேயே, அதன் பலவித அமைப்புகளை உடைய குடம் மடக்கு முதலியவையெல்லாம் அறியப்பட்டனவன்றோ? அம்மாதிரியே ப்ரக்ருதத்திலும்' என்பது தான் அதன் அர்த்தம்.

இந்த ச்ருதி வாக்யத்தில் இரண்டு கண்டங்கள் இருக்கின்றன. அவையாவன—'யதா..... ...ஸ்யாத்' என்பது முதல் கண்டம்; 'வாசா.........ஸத்யம்' என்பது இரண்டாவது கண்டம். காரண ஜ்ஞானத்தால் கார்ய ஜ்ஞானம் ஸித்திக்கின்றது என்பது முதல் கண்டத்தால் சொல்லப்படுகின்றது, இரண்டாவது கண்டம் அதன் உபபாதநம். ஸ்ரீபாஷ்யகாரருடைய வ்யாக்யாநத்தில் 'ஏகஸ்யைவ.........ந வஸ்த்வந்தரமிதி' என்பதனால் இரண்டாவது கண்டத்தின் அர்த்தமும், 'யதா ம்ருத்பிண்ட.........பவதி' என்பதனால் முதல் கண்டத்தின் அர்த்தமும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. பூர்வபக்ஷியுடைய சங்கை 'காரணமும் கார்யமும் வெவ்வேறாகிறபடியால் ஒன்றின் ஜ்ஞானத்தால் மற்றொன்றின் ஜ்ஞானம் எப்படி ஸித்திக்கும்?' என்பதே. 'காரணமும் கார்யமும் வெவ்வேறு அல்ல' என்பது ஸமாதாநம்.

நாநாவ்யவஹாராஸ்பதத்வாய—பல வ்யவஹாரங்களுக்கு ஆதாரமாக இருக்கும் பொருட்டு. இது ச்ருதியிலுள்ள 'வாசா' என்பதன் அர்த்தம். 'வாக்' என்பதனால் 'வாக்கினால் செய்யப்படும் வ்யவஹாரம்' க்ரஹிக்கப்படுகின்றது. வாக் பூர்வக வ்யவஹாரம் ப்ரயோஜநம் என்று சொன்னதாயிற்று.

'ஸகலமேவ த்ரவ்யம் ஸ்வைகதேசேந நாநாவ்யவஹாராஸ்பதத்வாய யதா கடசராவாதி நாநாஸம்ஸ்தாநாவஸ்தாரூபவிகாரவத்வம் நாநாநாமதேயமபி ம்ருத்திகாஸம்ஸ்தாநவிசேஷஸ்யாஸ்ய த்ரவ்யஸ்யைவேதி வ்யவஸ்திதம். ந வஸ்த்வந்தரமிதி, யதா ம்ருத்பிண்டவிஜ்ஞாநேந தத்ஸம்ஸ்தாநவிசேஷரூபம் கடசராவாதி ஸர்வம் ஜ்ஞாதமேவ பவதி', இத்யர்த்தஃ।

ததஃ க்ருத்ஸ்நஸ்ய ஜகதோ ப்ரஹ்மைககாரணதாமஜாநந் புத்ரஃ ப்ருச்சதி "பகவாம்ஸ்த்வேவ மே தத் ப்ரவீது" இதி।

ததஃ ஸர்வஜ்ஞம் ஸர்வசக்தி ப்ரஹ்மைவ ஸர்வகாரணமித்யுபதி

---

ததஃ ப்ருச்சதி ப்ரவீத்விதி — இதைக் கேட்ட பிறகு, 'ஸமஸ்தமான ப்ரபஞ்சத்திற்கும் ப்ரஹ்மம் ஒன்றே காரணம்' என்பதை அறியாத புத்ரன், பகவாம்ஸ்த்வேவ மே தத் ப்ரவீது (பகவானே எனக்கு அதைச் சொல்லவேண்டும்) என்று கேட்கிறான்.

ததஃ ஸர்வஜ்ஞம் ஸதேவாத்விதீயமிதி — பிறகு, பிதா, 'ஸர்வஜ்ஞமாயும் ஸர்வ சக்தியாயுமுள்ள ப்ரஹ்மமே ஸகலத்திற்கும் (விஜாதீயங்களாயுள்ள பலவித கார்யங்களுக்கும்) காரணம் என்பதை உபதேசிக்கும்பொருட்டு, 'ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம்' என்று சொல்லுகிறார்.

---

ச்ருதியின் யதாவஸ்திதமான அர்த்தத்தை 23 வது பக்கத்தில் பார்க்க (இரண்டாவது கண்டத்தின் அன்வயம் ஸ்வல்ப ச்ரமத்தைக் கொடுக்கக்கூடியது) விகாரோ நாமதேயம் (ஸஹிதௌ) வாசா (வாக்பூர்வகவ்யவஹாராய) ஆரம்பணம் (ஆரப்யதே ஆலப்யதே ஸ்ப்ருச்யதே, த்ரவ்யேணேதி சேஷஃ) வாக்பூர்வகஹாநோபாதாநாதி வ்யவஹாரார்த்தம் கடசராவாதி லக்ஷணோ விகாரோ கடசராவாதி நாமதேயம் ச த்ரவ்யேண ஸ்ப்ருச்யதே, ம்ருத்பிண்டஸ்ய நாமரூபேண பவதி இத்யர்த்தஃ ॥

அஜாநந் — பிதா உபபாதனம் செய்ததிலிருந்து 'காரண ஜ்ஞாநத்தினால் கார்ய ஜ்ஞாநம் ஸித்திக்கக்கூடும்' என்பதை மாத்ரம் புத்ரன் உணர்ந்தான். அப்படி அது ஸித்தித்தபோதிலும், ப்ரபஞ்சத்தில் கார்யங்கள் விஜாதீயங்களாகவும் பலவாகவும் இருக்கிறபடியால் அவைகள் எல்லாவற்றிற்கும் காரணம் ஒன்றே என்பது

ஸௌம்ய ஸ ஹோவாச "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத் ஏகமேவாத்விதீயம்" இதி ।

அத்ர "இதம்" இதி ஜகந்நிர்தேஶ: । "அக்ரே" இதி ச ஸ்ருஷ்டே: பூர்வகால: । தஸ்மிந் காலே ஜகத: ஸதாத்மதாம் "ஸதேவ" இதி ப்ரதிபாத்ய, தஸ்ய ஸ்ருஷ்டிகாலேऽவ்ய விஶிஷ்டிதிம் க்ருத்வா "ஏகமேவ"

---

அத்ர ஶ்ருதிஷ்விதம் — இந்த 'ஸதேவ ஸோம்யேதம்' என்னும் வாக்யத்தில் 'இதம்' என்னும் பதத்தால், ஜகத் குறிக்கப்படுகின்றது, 'அக்ரே' என்னும் பதத்தால் ஸ்ருஷ்டிக்குப் பூர்வமான காலம் (ப்ரளயகாலம்) குறிக்கப்படுகின்றது, 'ஸதேவ' என்பதனால் அந்தப் பூர்வகாலத்திலும், ஜகத் ஸத்ஸ்வரூபமாகவே (அதாவது காரண ஸ்வரூபமாகவே) இருந்தது என்பது ப்ரதிபாதிக்கப்படுகின்றது; 'ஏகமேவ' என்பதனால், ஸ்ருஷ்டி காலத்திலும் ஜகத்துக்கு அந்த

---

அஸங்கதம், ஆகையால் ஒன்றை அறிவதனால் எல்லாம் அறியப்பட்டன வாகிவிடும் என்பது உபபந்நமன்று' என்று சங்கித்து மறுபடியும் கேட்கிறான் என்பது தாத்பர்யம்.

ஸர்வஜ்ஞம் — இதன் அர்த்தம் 26 வது பக்கத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. சில ஆசார்யர்கள் இதற்கு மற்றொரு அர்த்தம் சொல்வார்கள். அந்த அர்த்தத்தில் ஸ்வாரஸ்ய விசேஷம் இருப்பதால், அது இவ்விடத்தில் ப்ரஸ்தாவிக்கத்தகுந்ததே. ஸர்வஶ்சாஸௌ ஜ்ஞஶ்ச — முழுமையும் ஜ்ஞான ஸ்வரூபம். பகவானுடைய திவ்யாத்ம ஸ்வரூபம் முழுவதும் ஜ்ஞான ஸ்வரூபம் என்று சொன்னபடி "க்ஷேத்ரஜ்ஞ: ப்ரஜ்ஞாநகு ந:" என்னும் சுருதி ப்ரக்ரியையால் விபுவாக இருக்கும் ஈச்வரன் முற்றிலும் ஜ்ஞான ஸ்வரூபன். 'ஸர்வ' என்னும் சப்தத்தால் ஸர்வ சரீரத்வமும் 'ஜ்ஞ' என்னும் சப்தத்தால் சேதநத்வமும் சொல்லப்படுகின்றன என்றாகவுமாம்.

இதமிதி ஜகந்நிர்தேஶ: — 'இதம்' (இது) என்னும் பதம் ஒரு வாக்யத்தில் ப்ரயோகம் செய்யப்பட்டிருந்தால், ப்ரக்ருதம் ஏதாவது இருக்கும் பக்ஷத்தில் அதையே அந்தப் பதம் குறிக்கவேண்டும் என்பது ந்யாயம், ப்ரக்ருதம் ஒன்றும் இல்லாவிட்டால் ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணங்களாலே ப்ரஸித்தமாயுள்ள ஒரு பொருளைக் குறிக்கவேண்டுமென்பதே உசிதமாகும், ஆகையால் இவ்விடத்தில் 'இதம்' என்பது ஜகத்தைக் காட்டுகின்றது.

'அக்ரே' இதி ஸ்ருஷ்டே: பூர்வகால: — பின்னால் ஸ்ருஷ்டிகாலம் ப்ரஸ்தாவிக்கப்படப் போகிறபடியால், இவ்விடத்தில் 'அக்ரே' (பூர்வத்தில்) என்பதால் ஸ்ருஷ்டிக்குப் பூர்வம் இருக்கும் ப்ரளயகாலமே குறிக்கப்படவேண்டும்.

இதி ஸதவஸ்தஸ்ய ஜகத: ததாநீம் அவிபக்த நாமரூபதாம் ப்ரதிபாத்ய, தத்வ்யதிரேகேணைவ ஸதோ ஜகதுபாதாநத்வம் ப்ரதிபாதிதமிதி தத்வ்யதிரிக்த நிமித்த காரணம் "அத்விதீய" பதேந ப்ரதிஷித்யதே।

---

ஸத்தாகவே இருக்கும் தன்மை துல்யம், ஆனால், அந்த ஸத்தாகவே இருக்கும் ப்ரபஞ்சம் ப்ரளய காலத்தில் இன்னதுதான் என்று குறிப்பிடக்கூடாத நாம ரூபங்களை உடையதாக இருந்தது' என்பது சொல்லப்படுகின்றது, ஆகையால் (இப்படிச் சொல்லப் படுகிறபடியாலேயே) ஸத் என்பதே ப்ரபஞ்சத்திற்கு உபாதாந காரணம் என்று சொல்லப்பட்டதாயிற்று இப்படி ஜகத்துக்கு ஸத் உபாதாந காரணம்' என்பதை 'ஏகமேவ' என்பது நிரூபிக்கிறபடியால 'அத்விதீயம்' என்னும் பதம், ப்ரஹ்மத்தைத் தவிர்த்து மற்றொன்றும் ஜகத்துக்கு நிமித்த காரணமன்று என்பதை விளக்குகின்றது.

---

தச்ச ஸ்ருஷ்டிகாலேऽப்யவிசிஷ்டம்—ஸ்ருஷ்டிக்குப் பூர்வ காலத்திலும் ஸ்ருஷ்டி காலத்திலும் அது ஸத்தாகவே இருந்தது, ஆகையால் ஸத்தாகவே இருப்பது இந்த இரண்டு காலங்களுக்கும் துல்யம் 'இப்படி இரண்டு காலங்களிலும் அது துல்யமாக இருந்தால் இரண்டு காலங்களுக்கும் வாசிதான் என்ன?' என்று ஒரு ஆக்ஷேபம் ஜநிக்கக்கூடும் அதற்கு ஸமாதாநம் என்னவென்றால்— 'த்ரவ்யம் நித்யம், ஆனால் ப்ரளய காலத்தில், அது இன்னது என்று ஏற்படாத நாம ரூபங்களை உடைத்தாயிருக்கின்றது, ஸ்ருஷ்டி காலத்திலோ அது விபக்தங்களான நாம ரூபங்களுடன் கூடியிருக்கின்றது; இதுதான் வாசி' என்பதுதான் ஸமாதாநம் இந்த ஸமாதாநம் ச்ருதியிலுள்ள 'ஏகமேவ' என்னும் பதத்தால் சொல்லப்பட்டதாகின்றது

தத்வ்யதிரேகேணைவ ஸதோ ஜகதுபாதாநத்வம் ப்ரதிபாதிதம்—இதனாலேயே 'ப்ரஹ்மம் ஜகத்திற்கு உபாதாந காரணம்' என்று சொல்லப்பட்டதாகிறது உபாதாந காரணம் என்றால் என்ன? 'கார்யாவஸ்தாவிசேஷவத: ப்ராகவஸ்தாயோக உபாதாநத்வம்'—வரப்போகும் ஒரு புதிய அவஸ்தையையுடைய த்ரவ்யத்துக்கு, முன்னிருந்த அவஸ்தையின் ஸம்பந்தமே உபாதாநத்வம்; மண்ணை த்ருஷ்டாந்தமாக எடுத்துக்கொண்டால் இது விளங்கும் மண் தன்மை பூர்வாவஸ்தை, குடம் மடக்கு இவைகளின் தன்மை உத்தராவஸ்தை ஆகையால், மண் பிண்டத்தை உபாதாநமென்றும், குடம் மடக்கு முதலியவைகளை உபாதேயமென்றும் வ்யவஹரிக்கின்றோம் இம்மாதிரியே அவிபக்த நாம ரூபாவஸ்தையிலுள்ள சேதநா சேதநங்கள் உபாதாநம், விபக்த நாம ரூபாவஸ்தையிலுள்ள சேதநா சேதநங்கள் உபாதேயம். இந்தச் சேதநா சேதநங்கள் ப்ரஹ்மத்திற்கு விசேஷணமாகிறபடியால், அவிபக்த

“उत तमादेशमप्राक्ष्यः, येनाश्रुतं श्रुतं भवति ?”
इत्यारभ्यैव व्यासादिभिरेव जगदुपादानत्वादि हृदि निहितम्,
उपादानं संकल्प्य तदेतदेवावधारयति—स्वयमेव जगदुपादानं
जगन्निमित्तं च सन् “तदैक्षत बहु स्यां प्रजायेय” इति ।

---

தம் நிஹிதம்—உபகரமததிலேயே சொலலியிருபபதான பரசாஸிதாவாக இருககுமவனே ஜகததுககு உபாதாந காரணமாகிருன ’ எனபதை மநஸஸில வைத்து க் கொணடனரே ‘ உத தமாதேசமப்ராக்ஷ்ய யேநாச்ருதம் ச்ருதம் பவதி ” எனறு சொலலபபட்டது ?

உபாதாநம் ஸங்கல்ப்ய ... ப்ரஜாயேயேதி—இதே அர்த்தத்தை இபபொழுது தெளிவாக உபபாதிககிருா எபபடி யெனருல—தானே ஜகத்துககு உபாதாந காரணமாகவும நிமிதத காரணமாகவும இருககிற அநத ஸத எனனும பரஹமம ‘ நான பஹுவாகக கடவேன , அதறகாக உ கபததியை அடையக கடவேன’ எனறு ஸஙகலபிததது எனறு சொலவதால

---

நாம ரூப சேதநா சேதந விசிஷ்ட பரஹமம உபாதாந காரணமெனறும, விபகத நாமரூப சேதநா சேதந விசிஷ்ட பரஹமம உபாதேய மெனறும சொலவது ஸஙககம

ஸ்வவ்யதிரிக்த நிமித்தகாரண உபிதீயமவேந வ்யதிஷ்டிஷ்ட—‘ஏகமேவ’ எனபது உபாதாந காரணததைக குறிககிறபடியால, ‘அத்விதீயம்’ நிமிதத காரணததைப பறறிப பேசுகினறது தவிரவும காரண காரயஙகளுககு ஐககியததைச சொலலுமிடம இது அதைககொணடு, காரணஜஞாநம காரயஜஞாநததிறகு ஸாதநம எனபதை நிரூபிகக வேணடும அதறகு உபாதாந காரணமும அதன காரயமும ஒனறு எனறு சொனனுல போதாது , பரஹமததைத தவிரதது வேறு ஒரு நிமிதத காரணமும இலலை எனறும நிரூபிகக வேணடுமே அதை ‘அத்விதீயம்’ (இரணடாவதுடன கூடிய தனறு , அதாவது—மறறொரு நிமிதத காரணததுடன கூடியதனறு) எனனும பதம பரதிபாதிககினறது

இபபடி பரஹமம ஜகததுககு உபாதாந காரணமாகவும நிமிதத காரணமாகவும இருககினறது எனபதை விவரிததுவிடடு இநத விவரணம உபகரமததுககு ஸஙகதம எனபதைச சொலலுகிருா “ உத தமாதேசமப்ராக்ஷ்ய: ஹ்ருதி நிஹிதம் ” எனபதால ஆதேசம் எனனும பதததால நியமிககும தனமை (அதாவது—நிமிதத காரணமாக இருககும தனமை) ஸபுடமாக வெளியிடபபட் டிருககிறது , ‘யேநா

தஸ்மாத் ஸ்வாபாவ்யம் ஸர்வம் ப்ரஹ்மைவ ஸர்வஜ்ஞம் ஸர்வசக்தி ஸத்ய
ஸங்கல்பம் அவாப்தஸமஸ்தகாமமபி லீலார்த்தம் விசித்ராநந்தவிநிர்

---

தஸ்மாத் ஸ்வாபாவ்யம் வ்யாகரவாணீதி—அப்படிப்பட்ட
இந்த ஸத் என்னும் சப்தத்திற்கு வாச்யமாக இருக்கும் பர ப்ரஹ்மமே, ஸர்வஜ்ஞமா
யும் ஸர்வசக்தியாயும் ஸத்ய ஸங்கல்பமாயும் அவாப்த ஸமஸ்த காமமாயும் இருக்கையி
லும், லீலைக்காக ' நான் விசித்ரங்களாயும் அநந்தங்களாயுமுள்ள சேதந அசேதந வஸ்
துக்களடங்கிய ஜகத்ரூபமாயப் பஹுவாகக் கடவேன், அதற்காக உற்பத்தியை

---

சப்தம்' இத்யாதி பாதிஜ்ஞையால் உபாதாந காரணமாக இருக்கும் தன்மை
ஸூசிப்பிக்கப்பட்டிருக்கிறது என்பது குறிப்பு உபநிஷத்தில் “ தத்தைக்ஷத
பஹு ஸ்யாம் ப்ரஜாயேய” என்று மாத்ரம் இருக்கிறது “ஸ்யமேவ. ஸது”
என்னும் பதங்கள் அர்த்தத்தைப் பூரணம் செய்வதற்காக ஸ்ரீ பாஷ்யகாரால் இவ்விடத்
தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன 'ஸதேவ' இத்யாதியான வாக்யம் ஸஜாதீய விஜாதீய
பேதங்களை நிஷேதிக்கின்றது என்று அத்வைதிகள் சொல்லுகிறார்கள், நம்முடைய
ஆத்தமோவென்றுல ஜகதுபாதாநத்வம் ஜகந்நிமித்தத்வம் இவைகளைக் குறிக்கின்றது '
என்பதை விளக்குவதற்காகவே இந்தப் பூரக பதங்கள்

இவ்விடத்தில் ஸர்வஜ்ஞம் முதலிய சப்தங்கள், சொல்லப்போகும் ஸ்ருஷ்
டியை உபபாதிக்கும் விசேஷணங்கள் 'விசித்ர' என்னும் சப்தமும் 'அநந்த' என்னும்
சப்தமும் உபநிஷத்திலுள்ள “பஹு” என்பதை விவரிக்கின்றன ஸத்யஸங்கல்பம்
என்னும் சப்தம் இவ்வளவு பெரிய ஜகத்தை ஸ்ருஷ்டிப்பது பரஹ்மத்திற்கு எவ்வித
ஆயாஸத்தையும் ஜநிப்பிக்கமாட்டாது என்பதைக் குறிக்கின்றது பகவான் அவாப்த
ஸமஸ்த காமனுக இருக்கிறபடியால் இந்த ஜகத் ஸ்ருஷ்டி அவனுக்கு ஏன்? என்னும்
ப்ரச்நத்திற்கு லீலார்த்தம் (லீலைக்காக) என்பது ஸமாதாநத்தைச் சொல்லுகின்றது

பஹுஸ்யாம் தத்ர்த்தம் ப்ரஜாயேய—[நான் பஹுவாகக் கடவேன்,
அதற்காக உத்பத்தியை அடையக்கடவேன்] முதலில் உத்பத்தி பிறகு பஹுவாவது'
என்பது க்ரமமாக இருக்கையிலும், ஸங்கல்பிக்கும்பொழுது முதலில் பஹுவாக ஆவதை
ஸங்கல்பித்துப் பிறகு அப்படி பஹுவாக ஆவதற்காக உத்பத்தியை அடையக்கடவேன்'
என்றுசொல்லும் க்ரமம் உபபந்நமே இந்த உபநிஷத்தில் ஸ்ரீபகவான் முதலில் தனது
அம்சமாகிற ப்ரக்ருதியைக்கொண்டு தேஜஸ் அப் அந்நம் இவைகளை உத்பத்தி செய்த
தாகவும், பிறகு சேதநாசேதந ரூப விபாகத்தைச் செய்ததாகவும் சொல்லப்பட்டிருக்கின்
றது ' ப்ரஜாயேய ' என்பதனுல் முதல் அவஸ்தையும், ' பஹுஸ்யாம் '
என்பதனுல் இரண்டாவது அவஸ்தையும் க்ரஹிக்கப்படுகின்றன

ஜமதூ-ரெண 'அஹமெவ பஹுஸ்யாம், தஷ்ய்ெ ஜாயெய' ஐதி ஸ்யமெவ ஸங்கஷ்பூ, ஸ்ரொஶெகெதொஜெவ வியதாதி ஸ-தாநி

---

அடையக கடவேன்' எனறு தானே ஸஙகலபிததது, தனனுடைய அமஶமாகிய' (விஶேஷணாமஶமாகிய) பரகருதியின ஒரு பாகததால் ஆகாஶம முதலிய பூதஙகளை ஸருஷடிததது மறுபடியும். அநத ஸத எனனும ஶபதததிறகு வாசயமாக இருககும அநதப பர தேவதையே " ஹநதாஹ மிமாஸ்திஸ்ரா தெவதா அநெந ஜீவெநாத்மநாநுப்ரவிஶ்ய நாமரூபெ வ்யாகரவாணி " எனறு ஸஙகலபிததது

---

வியதாதி ஸ-தாநி ஸ்ருஷ்ட்வா—[ஆகாசம முதலியவறறை ஸருஷடிதது]

உபநிஷததில தேஜஸ அப அநநம இவைகள மாததிரம பரஸதாவிககப பட்டிருககினறன ஆனால, அவை ஆகாஶம முதலியவறறையும ஸூசிபபிககினறன ஸ்ரீ பாஷயத்தில 'மஹததததவம முதலியவைகளும கரஹிககபபடுகினறன' எனறு விவரிககபபட்டிருககினறது இதனால இநத ஸமஷடி ஸருஷடியில அசேதந ததவஙகளெலலாம ஸருஷடிககபபட்டன எனறு சொனனதாயிறறு

ஸைவ பரா தெவதா— அநதப பரதேவதையே] 'ஸத் எனனும பதத்தால சொலலபபடும பரஹமம நிரவிசேஷமனறு, ஸவிசேஷமே' எனபதை விளககுகினறது தெவதா எனனும சபதம

ஹநதாஹம் வ்யாகரவாணி—இது உபநிஷத வாகயம [அஹோ! நான இநத மூனறு தேவதைகளையும ஜீவாதமாவின வழியாக அநுபரவேஶிதது அவைகளுககுப பெயரையும ரூபததையும உணடு பணணுகிறேன] இது இரணடாவது அவஸதையாகிற வயஷடி ஸருஷடியைச செயவதறகாக ஏறபட்ட ஸஙகலபம ஒவவொனறுககுளளும அநுபரவேஶிதது எலலாவறறிறகும பெயரையும ரூபததையும உணடு பணணுகிறேன்' எனபதால குடததிறகுக குடம என்னும பெயரும அதன ரூபமும பகவானுடைய அநுபரவேஶததால ஏறபடுகினறன எனறு சொனனதாயிறறு ஆகையால, அபபடி ஏறபடும பெயரும ரூபமும அநதப பதாரததததைக குறிபபதுடன நினறு விடுகினறன எனபது இலலை, அதனுடன, அநதப பதாரதத்திறகுள அநுபரவேஶிததிருககும பகவான பாயநதம அவை போகினறன எனறு நாம அறிய

ஸ்ருஷ்ட்வா, ஸர்வாணி சைவ ஸச்சப்தாபிஹிதா ஸா தேவதா ஐக்ஷத — "ஹந்தாஹமிமாஸ்திஸ்ரோ தேவதா அநேந ஜீவேநாத்மநாऽநுப்ரவிஶ்ய"

---

அநேந ஜீவேநாத்மநேதி உபபாதயதி — 'அநேந ஜீவேநாத்மநா' என்று ஆரம்பிக்கும் உபநிஷத் வாக்யத்தின் கருத்து என்னவென்றால் —

---

வேண்டும் ஏனென்றால், கீழ் 'பஹுஸ்யாம்' [நான் பஹுவாகக் கடவேன்] என்று ஸங்கல்பிக்கப்பட்டிருக்கிறதன்றோ? பகவானே குடமாக ஆனால், குடம் என்னும் பதம் அந்தப் பகவானையும் குறிக்கவேண்டுமன்றோ?

அநேந ஜீவேநாத்மநா — [ஜீவனை ஶரீரமாகக் கொண்டிருக்கும் என்னால்] இந்த அநுப்ரவேஶத்தில் ஒரு விஶேஷமுண்டு. அது என்னவென்றால், பகவான் ஜீவனுக்குள் ஆத்மாவாக இருந்துகொண்டு, அந்த ஜீவனாகிற தன்னுடைய ஶரீரத்துடன் பதார்த்தங்களுள் அநுப்ரவேஶிக்கிறான் என்பதுதான். இதனால் சேதந வஸ்துக்களுள் மாத்ரமின்றிக்கே, அசேதந வஸ்துக்களுள்ளும் ஒரு ஜீவனைக் கொண்டே ப்ரஹ்மம் ப்ரவேஶிக்கின்றது என்று சொன்னதாயிற்று. இப்படி சேதந அசேதந வஸ்துக்கள் எல்லாம் ஜீவனுடன் கூடியிருந்தபோதிலும், சைதந்யம் ஸ்வல்பமாக இருந்தால் அவைகள் அப்ராணிகளென்றும், சைதந்யம் ஸ்வல்பமில்லாமல் இருந்தால் அவைகளை ப்ராணிகளென்றும் வ்யவஹரிக்கின்றோம். இந்த ப்ரகரணத்திலேயே, "ப்ரஹ்மாத்மகஜீவாநுப்ரவேஶாதேவ க்ருத்ஸ்நஸ்ய வஸ்துந: பதார்த்தத்வம்" [ப்ரஹ்மத்தை ஆத்மாவாக உடைத்தாயிருக்கும் ஜீவனுடைய அநுப்ரவேஶத்தாலேயே ஸகலமான அசேதந வஸ்துக்களுக்கும் பதார்த்தத்தன்மை ஏற்படுகின்றது] என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

"ததா ஹி ஶைலாப்தி தராதி பேதாந்
ஜாநீஹி விஜ்ஞாந விஜ்ரும்பிதாநி।"

[மலை ஸமுத்ரம் பூமி முதலிய ஸகல பதார்த்தங்களும் விஜ்ஞானத்தின் விஜ்ரும்பிதங்களென்று அறி என்றும்,

"பூதாநாம் ப்ராணிந: ஶ்ரேஷ்டா:"

[ஶரீரத்துடன் கூடிய ஜீவன்களுக்குள் ப்ராணிகள் ஶ்ரேஷ்டங்கள்] என்றும் சொல்லியிருப்பதிலிருந்து கல், கட்டை முதலியவைகளும் ஜீவன்களால் அதிஷ்டிதங்களாக இருக்கின்றன என்பது வ்யக்தமாக ஏற்படுகின்றது. ப்ரஹ்மாத்மக ஜீவாநுப்ரவேஶம் இல்லாவிட்டால் ஒரு பொருளுக்கும் நாமம் ரூபம் என்பவை விதிக்கமாட்டா

நாமரூபே வ்யாகரவாணி” இதி । “அநேந ஜீவேந ஆத்மநா” இதி ஜீவஸ்ய ப்ரஹ்மாத்மகத்வம் ப்ரதிபாத்ய, ‘ப்ரஹ்மாத்மகஜீவாநுப்ரவேசாதேவ க்ருத்ஸ்நஸ்யாசித்வஸ்துந: பதார்த்தத்வம் ஸர்வஸ்ய வஸ்துநோ நாமரூபபாக்த்வம்’ இதி தர்சயதி ।

---

‘ஜீவன் ப்ரஹ்மத்தை ஆத்மாவாக உடையவன்’ என்பதை முதலில் ப்ரதிபாதித்து பிறகு ‘அம்மாதிரியான ப்ரஹ்மாத்மக ஜீவாநுப்ரவேசத்தாலேயே ஸகல அசேதன வஸ்துக்களுக்

---

வன்றோ? இது ஸம்பந்தமாக ஒரு ஸ்வாரஸ்யம் கவனிக்கத்தக்கது. ஒரு ப்ராணியினிடத்தில் அந்த ப்ராணியாக இருக்கும் அவஸ்தைக்கு அதிஷ்டாதாவாயுள்ள ஜீவன் அதைத் த்யஜித்து விட்டுப்போன பிறகும் அந்த ப்ராணியின் சரீரத்திற்கு நாமமும் ரூபமும் இருக்கின்றபடியால், அது ம்ருதமாக இருந்த போதிலும் அந்த ம்ருத சரீராவஸ்தைக்கு அதிஷ்டாதாவாயுள்ள மற்றொரு அல்ப சைதந்யத்தையுடைய ஜீவன் அதில் இருக்கின்றது என்றே நாம் அறியவேண்டும். மாமரமாக இருக்கும் பொழுது ஒரு ஜீவன் உள்ளது, அது வெட்டப்பட்டுக் காஷ்டமான பிறகும் அதில் மற்றொரு ஜீவன் இருக்கிறது என்று சொன்னதாயிற்று. இது ஒரு ஆச்சர்யமே.

ஆனால் இந்த ப்ரஹ்மாத்மக ஜீவாநுப்ரவேசம் வ்யஷ்டிஸ்ருஷ்டியில் மாத்ரமே உண்டு. ஸமஷ்டி ஸ்ருஷ்டியில் ஸ்ருஷ்டிக்கப்பட்டுள்ள தேஜஸ் அப் அந்நம் ஆகாசம் மஹத்தத்வம் முதலியவைகளுள் கேவலம் ப்ரஹ்மாநுப்ரவேசம்தான் உண்டு. அந்தக் காரணத்தால் தேஜஸ் முதலியவைகளுக்கு நாமரூபங்கள் ஏற்படுவதை அத்வாரகமென்றும் ப்ரபஞ்சத்திலுள்ள சேதந அசேதந வஸ்துக்களுக்கு அவை ஏற்படுவதை ஸத்வாரகமென்றும் சொல்வார்கள். ஜீவனை த்வாரமாகக் கொண்டு பகவான் பதார்த்தங்களுக்கு ஆதாரமாவதுபோல அத்வாரகமாகவும் அவன் அவைகளுக்கு ஆதாரமாகக் கூடும் என்பது சில ஆசார்யர்களுடைய நிர்வாஹம்.

இந்த ‘அநேந ஜீவேநாத்மநாऽநுப்ரவிஸ்ய’ என்னும் வாக்யத்தில் வ்யாகரண ஸம்பந்தமான ஒரு விசேஷமுண்டு, அது என்னவென்றால் இவ்விடத்திலிருக்கும் மூன்றாவது வேற்றுமையால் கர்த்தா சொல்லப்படுகிறான் என்பதுதான். “ஸிம்ஹேந ஹத்வா பஹவோ க்ரஸ்தா:” ஸிம்ஹமாக இருந்துகொண்டு என்றால் பஹு ப்ராணிகள் பக்ஷிக்கப்பட்டன என்னும் லௌகிக வாக்யத்தை இம்மாதிரியான ப்ரயோகத்தின் ஸாதுத்வத்தை நிரூபிக்க நிதர்சனமாக வ்யாக்யாதா சொல்லியிருக்கிறார்.

ஸாதஉக்தம் ஹவதி—ஜீவாத்மாதஉ ப்ரஹ்மண: ஶரீரதயா ப்ரகாரதவாத் ப்ரஹ்மாத்மக: ''யஸ்யாத்மா ஶரீரம்'' இதி ஶ்ருத்யந்தராத், ஸாவம் ஹஉதஸ்ய ஜீவஸ்ய ஶரீரதயா ப்ரகார ஹஉதாநி தேவஉநஷ்யாதி ஸம்

---

கும பதாரததமாக இருககும தனமை விருத்திககிறது' எனறும, 'அபபடி இருககும வஸ துவுககே பெயா ரூபம இவைகளை உடைததாயிருககும தனமை உணடு' எனறும இநத வாகயம நிரூபிககினறது எனபதுதான.

ஸாஉக்தம் ஹவதி.......... .....வாசகா இதி—இதனால எனன சொன னதாயிறறெனறால—ஜீவாதமா எனபது, பரஹ்மததுககு சரீரமாக இருநதுகொணடு விசேஷணமாக இருககிறபடியால, அது பரஹமததை ஆதமாவாகஉடைததாயிருககினறது இதறகு பரமாணம "யஸ்யாத்மாஶரீரம்" எனனும மற்றொரு ச்ருதி வாகயம.

---

வஉாயஉகவாழ—'பதாரததஙகள நிராகாரஙகளலல, ஒவவொரு அஸாதா ரண ஆகாரம ஒவவொரு பதாரத்ததததுககும உணடு, அமமாதிரியான ஆகார வைசிஷட யம பரஹமாதமக ஜீவாநுபரவேச மிலலாவிடடால விததிகக மாட்டாது என்பது தாதபாயம.

ஸாதஉக்தம் ஹவதி—இதன் தாதபாயமாவது—ஜீவாதமா பரஹமததுககு சரீ ரம; அநத ஜீவாதமாவுககு இநத பரபஞசததில காணபபடும எலலாப பொருளகளும சரீரஙகள, ஆகையால, இநதப பொருளகளெலலாம ஜீவதவாரா பரஹமததுககும சரீர ஙகள, ஆகையால, இநதபபொருளகளைக குறிககும பெயாகளெலலாம அநதப் பொருள களுககு அதிஷடாதாவான ஆதமாவைக குறிததுக கொணடு, அதுவழியாக அநத ஆத மாவுககும ஆதமாவாக இருககும ப்ரஹமததையும குறிககினறன எனபதுதான.

ஶரீரதயா ப்ரகாரதவாத்—'ப்ரகார' எனபதறகு விசேஷணம என் பது பொருள. 'ப்ரகாரி' எனபதற்கு விசேஷயம எனபது பொருள. இநத விசே ஷணம இருவகைபபடும—சரீரமாயிருபபதால விசேஷணமா யிருபபது ஒனறு, சரீர மாயிலலாமல விசேஷணமாயிருபபது மற்றொனறு. குணடலம தரிததிருககிறவனுககு அநதக குணடலம ஒரு விசேஷணம ஆனால அது அவனுககு சரீரமனறு. அவனுககு அவனுடைய தேஹமும ஒரு விசேஷணம, அது அவனுககு சரீரம. எவவிடததில ஒனறு மற்றொனறுககு சரீரமாயிருநதுகொணடு விசேஷணமாக இருக்கினறதோ, அவவி டததில மாததிரம ஒனறைச சரீரமென்றும மறறொனறை அதறகு ஆதமாவெனறும சொல லககூடும. பரகருததததில, பரஹமததுககு ஜீவாதமா சரீரமாயிருபபதனால விசேஷணமாக

ஸூாநாநி வஸ்துநீதி ஸூஹாத்தகாநி தாநி ஸவாணி ; அதோ தெவோ உநுஷ்யோ யக்ஷோ ராக்ஷஸ: வமா உரூமு: வக்ஷீ வரக்ஷோ ஞதா காஷ்டம் பிஞா தரணம் வட: வட ஐத்யாதய: ஸவெ வகூதி வதூய யோமெ நாஹியாயகதயா வூவிஷ்ஊ: ஸஷூ ஜொகெ தத்ஆஅூதயா

---

இபபடி இருககும ஜீவாதமாவுககு சரீரமாக இருநதுகொணடு தேவன மநுஷயன முத லிய அமைப்பை உடைய வஸதுககளெலலாம அநத ஜீவாதமாவுககு விசேஷணஙகளாக இருககிறபடியால, அவையெலலாம பரஹமததை ஆதமாவாக உடைததாயிருககினறன. ஆகையால, 'தேவன மநுஷயன யக்ஷன ராக்ஷஸன பசு மருகம பக்ஷி வருக்ஷம கொடி கடடை கல புல குடம வஸதரம' எனறு பகுதி விகுதி ஸமபநதஙகளாய பதாாததங களின பெயராக லோகததில வழஙகிவரும சபதஙகளெலலாம, அததனால குறிககபபடடன வாகத தோனறும அநதநத அமைபபுககளை உடைய வஸதுககளின வழியாக, அநத வஸ

---

இருககிறபடியால, பரஹமததை ஜீவாதமாவுககு ஆதமாவெனறு சொலலுகிறோம அம மாதிரியே, தேவன மநுஷயன முதலிய அமைபபுககள ஜீவாதமாவுககு சரீரமாயிருநது கொணடு விசேஷணஙகளாக இருககிறபடியால, அவைகளுககு ஜீவாதமாவை ஆதம வெ னறு சொலலுகிறோம 'சரீரம எனறால எனன?' எனபதறகு 39-வது பககம பாாககு.

வகூதி வூதூயமொமெநாஹியாயகதயா—எலலா சபதஙகளும பரக ருதி என்னும ஒரு பாகததையும பரதயயம எனனும மறறொரு பாகததையும உடையவை. தமிழில ஒனறைப பகுதி எனறும, மறறொனறை விகுதி எனறும சொலவாாகள. இவை இரணடும சோநதுதான சபதஙகள வாசகஙகளாகினறன ராஜ (ஒரு ராமன), ராஜள (இரணடு ராமனகள), ராஜா: (மூனறலலது அதிக ராமனகள) எனனும சபதஙகள ஒரே பரகருதியை உடையவை, ஆனால வெவவேறு பரதயயஙகளை உடை யவை, இம்மாதிரியே தெவ: (தேவன) உநுஷ்ய: (மநுஷயன) எனனும சப்தஙகளு ககு பரகருதி வெவவேறு, பரதயயம ஒனறு

தத்ஆஅூதயா வூதீயஜாந தத் தூஷூாநவஸூஉவெந— [அநதநதப பததிறகு வாசயமெனறு தோனறும அநதநத அமைபபுககளை உடைய வஸ துககளின் வழியாக]. அதாவது—'வட:' எனனும பதததிறகு வாச்யம குடம என னும பொருள், அதறகு ஒரு விதமான அமைப்பு உணடு, அவவிதமான அமைபபை உடைய அநதப பொருளை அநதப பதம முதலில குறிககினறது, அதன வழியாக அதை

ப்ரதீயமாந தத்தத்வஸம்ஸ்தாந வஸ்தூபாதாவேந தஹிதாநி ஜீவ தத்ஜ்ஞயஷ்டாதி வஸ்தூநி வயஷ்டஸஹித ஸம்வாதயேஸ்வைவ வாசகா இதி ।

ஸவம் ஸத்ஸஹிதா இத்யாதிக ப்ரபஞ்சஸ்ய ஸதுபாதாநதா ஸந்நிமித்தா ஸதாதாரதா ஸந்நியாம்யதா ஸச்சேஷதாதி ஸர்வஞ்ச "ஸந்மூலா: ஸோம்யேமா: ப்ரஜா: ஸதாயதநா: ஸத்ப்ரதிஷ்டா:" இத்யாதிநா விஸ்த

துககளின அபிமாநியாயுளள ஜீவாதமா வெனன அந்த ஜீவாதமாவுகது அநதாயாமியாயுளள பரமாதமாவெனன இவைகளின சேரககையைச சொலலுகினறன எனபதுதான.

ஸவம் ஸத்ஸ . . . . ப்ரதிஷ்டா—இபபடி ஸமஸத சேதந அசேதநஙகளாகிற இநத பரபஞசம ஸத எனறு சொலலபபடும பரஹமததையே உபாதாந காரணமாக உடையது, அதையே நிமிதத காரணமாக உடையது, அதையே ஆதாரமாக உடையது, அதனலேயே நியமிககபபடுகினறது, அதறகே சேஷமாக இருககினறது எனறு இவை முதலிய ஸகல அாததததையும, "ஸந்மூலா: ஸோம்யேமா: ப்ரஜா: ஸதாயதநா: ஸத்ப்ரதிஷ்டா:" இது முதலான வாகயததால விஸதாரமாக நிருபிததது,

அதிஷடிதது இருககும ஜீவனையும, அநத ஜீவனுககு அநதாயாமியாக இருககும பரமாத்மாவையும குறிககினறது எனறு சொனனதாயிறறு இதறகு ஒரு ஆக்ஷேப முணடு. அது எனனவெனருல, 'தேவதவம' (தேவாகளின தனமை) 'மநுஷயதவம' (மனுஷயாகளின தனமை) முதலிய பருககருதியின் அாததமும, 'தேவள' (இரணடு தேவாகள) முதலான பரதயயததின அாததமும, அநதச சபதம பரமாதமாவைக குறிக்கும பொழுது எபபடி அநவயிககும? எனபதுதான இதறகு ஸமாதாநததை 'வஸ்தூபாதாவேந' எனபது சொலலுகினறது. அதாவது—'அநத அாததஙகள பரமாதமாவி னிடததில ஸாக்ஷாததாக அநவயிககமாடடா எனபது உணமையே, ஆனால அவைகள ஸதவாரகமாக (அநதநத வஸதுககளின வழியாக) அநவயிககக கூடுமாதலால ஆக்ஷேபத திறகு அவகாசம இலலை' எனபதுதான

ஸவம்—உபநிஷததிலுளள 'ஸந்மூலா:' எனனும சபதம், 'ஸதுபாதாநதா' 'ஸந்நிமித்தா' (ஸததை உபாதாநகாரணமாக உடைததாயிருககும தனமை, ஸததையே நிமிதத காரணமாக உடைததாயிருககும தனமை) எனனும சபதஙகளால வயாக்யாநம் செயயபபடடிருககினறது. 'ஸதாதாரதா' (ஸததையே ஆதாரமாக உடையது)

ரேண ப்ரதிபாத்ய, கார்யகாரண பாவாதி வசனை: "ஐததாத்ம்ய மிதம் ஸர்வம் தத் ஸத்யம்" இதி க்ருத்ஸ்நஸ்ய ஜகதோ ப்ரஹ்மாத்மகத்வமேவ ஸத்யமிதி ப்ரதிபாத்ய, 'க்ருத்ஸ்நஸ்ய ஜகத: "ஸ ஆத்மா"', க்ருத்ஸ்நம்

---

கார்ய காரண ஸம்பந்தம் முதலியவற்றைக் கொண்டு "ஐததாத்ம்யமிதம் ஸர்வம் தத் ஸத்யம்" என்னும் வாக்யத்தால் 'ஸகல ஜகத்தும் ப்ரஹ்மத்தையே ஆத்மாவாக உடையது' என்பதே உண்மை என்று ப்ரதிபாதித்து, 'ஸகல ஜகத்துக்கும் அந்த ப்ரஹ்மமே ஆத்மா, ஸகல ஜகத்தும் அந்த ப்ரஹ்மத்திற்கே சரீரம், ஆகையால் நீ என்னும் சப்தத்திற்கு வாச்யமாயுள்ள பொருளும் ஜீவனை விசேஷணமாக உடைய ப்ரஹ்மமே' என்று, பூர்வமே

---

என்னும் சப்தத்தால் 'ஸதாயதந' என்னும் சப்தத்தின் அர்த்தம் சொல்லப்பட்டது இப்படி ப்ரபஞ்சத்திற்கு 'ஸத்' என்பது தாரகமாகிறபடியால், தாரகத்தன்மையில் உள்ளடங்கி நிற்கும் 'ஸந்நியாம்யதா' (ஸத் என்பதினாலேயே நியமிக்கப்படும் தன்மை) என்னும் தன்மையும், இந்தத் தன்மைகளால் அர்த்த வித்தமாக இருக்கும் 'ஸச்சேஷதா' (ஸத்துக்கே சேஷமாக இருக்கும் தன்மை) என்னும் தன்மையும் கீழ்ச் சொல்லப் பட்டவைகளுடன் சேர்த்து சொல்லப்படுகின்றன. ஸத்ப்ரதிஷ்டா:—ப்ரதிஷ்டை என்றால் லயம்; ஆகையால் 'ப்ரபஞ்சம் முழுவதும் ப்ரஹ்மாதீனமான லயத்தை உடையது' என்பது 'ஸத்ப்ரதிஷ்டா:' என்பதின் பொருளாகும். இவை எல்லாவற்றினாலும், 'ஜகத் ப்ரஹ்மத்தின் சரீரம்' என்று சொன்னதாயிற்று.

கார்யகாரண பாவாதி வசனை:—['ப்ரபஞ்சம், கார்யம்; ப்ரஹ்மம் காரணம்' என்று இது முதலிய ஹேதுக்களாலும்.] 'ஆதி' (முதலிய) என்பதால் கீழ்ச் சொல்லப்பட்டுள்ள 'ஸதாதாரகத்வ' முதலியவை க்ரஹிக்கப்படுகின்றன.

"ஐததாத்ம்ய மிதம் ஸர்வம் தத் ஸத்யம் ஸ ஆத்மா"—ஏஷ: ஆத்மா யஸ்ய (எதற்கு ஸத் என்று சொல்லப்படும் வஸ்து ஆத்மாவோ) அது ஏததாத்மகம்; அந்த ஆத்மமே ஐததாத்ம்யம் என்பதாலும் சொல்லப்படுகின்றது. தத் ஸத்யம்—அதுவே ப்ராமாணிகம். ஸ ஆத்மா—அதுவே இதற்கு ஆத்மா. ஜகத் முழுவதும் ப்ரஹ்மத்தையே ஆத்மாவாக உடையது என்று சொன்னதனாலேயே, ஜகத் ப்ரஹ்மத்திற்கு சரீரம் என்று சொன்னதாயிற்று, ஆகையால் "ஐததாத்ம்யம்" என்று சொன்னால் போதுமே "ஸ ஆத்மா" என்பது எதற்காக? என்று கேட்டால், ஸ்ரீமத் ராமாயணத்தில் மஹாகவி வால்மீகி "ராமாநுஜம் லக்ஷ்மண பூர்வஜஞ்ச" என்று ப்ரயோகித்தது போலவே என்பது ஸமாதானம்.

இதி உபயோரபி பதயோ: ஸ்வரூபமாத்ராவஸ்தாபநபரத்வம் ஸ்வரூபஸ்ய ஐக்யம் ப்ரதிபாத்யதே' இதி சேத் நைததேவம் | ஸோऽயம் தேவதத்த இத்யத்ராபி லக்ஷணாகந்தோ ந வித்யதே, விரோதாபாவாத் | ஏகஸ்ய ஹி பூதவர்த்தமாந க்ரியாத்வய ஸம்பந்தோ ந விருத்த:, தேசா

---

பதங்களும் அந்தந்த தேச கால ஸம்பந்தத்தை த்யஜித்து விட்டு வஸ்துவின் ஸ்வரூபத்தை மாத்ரம் குறிக்கின்றன வென்றும், அந்த ஸ்வரூபத்திற்கே ஐக்யம் சொல்லப்படுகின்றதென்றும் நாம் க்ரஹிக்கவேண்டும். அம்மாதிரியே தத் த்வமஸி என்னும் வாக்யத்திலும்' என்று சொல்லலாமோ வென்னில், அது யுக்தமன்று ஸோऽயம் தேவதத்த: (அந்தத் தேவதத்தனே இவன்) என்னும் இடத்திலும் லக்ஷணை என்பதே இல்லை, முக்யார்த்தங்களுக்கு விரோதமில்லாததால் ஒரே வஸ்துவுக்குச் சென்ற காலம் நிகழ்காலம் என்னும் பேதத்தைக்கொண்டு இரண்டு க்ரியைகளின் ஸம்பந்தம் ஏற்படுவது விருத்த

---

ஸாத்யமில்லை. ஆகையால் 'அவன்' 'இவன்' என்னும் பதங்களுக்கு லக்ஷணை சொல்லி, அவை தேவதத்தனுடைய ஸ்வரூபத்தை மாத்ரம் குறிக்கின்றனவென்று சொல்லவேண்டாம். இப்படியே ப்ரக்ருதத்திலும். இதுதான் அத்வைதிகளின் மதம்.

நைததேவம்—இந்த வாதத்திற்கு ஸ்ரீ பாஷ்யகாரர் பரிஹாரம் சொல்லுகிறார். த்ருஷ்டாந்தத்திலும் லக்ஷணை சொல்ல வேண்டியதில்லை. எந்த விரோதம் வருமென்று அதிசங்கிக்கப்படுகிறதோ அது கால பேதத்தால் பரிஹாரம் அடைந்து விடுகிறது. ஒரே வஸ்துவுக்கு இரண்டு தேச ஸம்பந்தம் காலபேதத்தால் விருத்தமாகாது என்பது ஸ்பஷ்டம். அம்மாதிரியே இரண்டு காலங்களின் ஸம்பந்தமும் விருத்தமாக மாட்டாது. நாம் வஸ்துவுக்கு க்ஷணிகத் தன்மையை ஒத்துக் கொள்ளவில்லை. இந்த க்ஷணத்தில் இருக்கும் வஸ்து அடுத்த க்ஷணத்தில் இல்லை என்று கொள்கை கொண்டவர்களன்றோ ஒரே வஸ்துவுக்கு இரண்டு கால ஸம்பந்தம் விருத்தமென்று சொல்வார்கள்? நாம் ஒருவரும் அவ்வித கொள்கை கொண்டவரல்லர்.

லக்ஷணாகந்தோ ந வித்யதே—லக்ஷணையின் கந்தமும் இல்லை. அதாவது—இரண்டு பதங்களுள் ஒன்றுக்கும் லக்ஷணை சொல்லவேண்டாம் என்பது தாத்பர்யம்.

க்ரியாத்வய ஸம்பந்தோ ந விருத்த:—இரண்டு க்ரியைகளின் ஸம்பந்தமும் விருத்தமன்று. க்ரியைகளின் ஸம்பந்தமாவது—ஸ்தலத்தில் இருப்பது ஒரு க்ரியை, 'ஒரு வஸ்து பூர்வம் ஒரு ஸ்தலத்தில் இருந்து பிறகு மற்றொரு ஸ்தலத்தில் இருக்கின்றது' என்னும் இடத்தில், அந்த வஸ்துவுக்கு இரண்டு க்ரியைக

न्तरस्थितिर्भूता, सन्निहितदेशस्थितिर्वर्तते, अतो भूत
वर्तमान क्रियाद्वय सम्बन्धितया ऐक्यप्रतिपादनाविरोधश्च।
देशद्वय विरोधस्तु कालभेदेन परिहृतः। लक्षणायामपि न
द्वयोरपि पदयोः लक्षणासमाश्रयणम्, एकत्रैव लक्षि
तेन विरोध परिहारात्। लक्षणाभाव एवोक्तः, देशान्तर
सम्बन्धितया भूतत्वस्य इतरदेश सम்बन्धितया वर्तमानत्वा
विरोधात्। एवमत्रापि जगत्कारण भूतस्यैव परस्य

---

மன்று தருஷ்டாந்தத்தில், மற்றொரு ஸ்தலத்தில் இருந்தது என்பது ஒரு க்ரியை, ஸமீபித்த ஸ்தலத்தில் இருப்பது மற்றொரு க்ரியை ஆனால் இவைகளுள் முதல் க்ரியையானது சென்ற காலத்தைத் தழுவியுள்ளது, இரண்டாவது நிகழ் காலத்தைத் தழுவியுள்ளது, ஆகையால் இந்த இரண்டு க்ரியைகளுடனும் ஸம்பந்தம் ஏற்பட்டதாகச் சொல்லி வஸ்துக்களுக்கு ஐக்யத்தைப் ப்ரதிபாதிப்பதில் எவ்வித விரோதமும் இல்லை. இரண்டு ஸ்தல ஸம்பந்தத்தால் ப்ரஸங்கிக்கும் விரோதமும் வெவ்வேறு காலங்களில் அந்த ஸம்பந்தம் ஏற்பட்டது என்பதால் பரிஹரிக்கப்பட்டதாகிறது. (ஆகையால் இவ்விடத்தில் லக்ஷணையே இல்லை.) அப்படி லக்ஷணை சொன்ன போதிலும் இரண்டு பதங்களுக்கும் லக்ஷணை சொல்லவேண்டுவதில்லை, ஒரு பதத்திற்கு லக்ஷணை சொல்வதாலேயே விரோதம் பரிஹரிக்கப்பட்டதாகிவிடும். லக்ஷணையே இல்லை என்பது தான் நமமால் சொல்லப்பட்டது, சென்ற காலத்தில் ஏற்பட்ட ஒரு தேச ஸம்பந்தத்திற்கும் நிகழ்காலத்தில் ஏற்படும் மற்றொரு தேச ஸம்பந்தத்திற்கும் விரோதமில்லையன்றோ? இம்மாதிரியே ப்ரக்ருதத்திலும், ஜகத்காரணமாக இருக்கும் பர ப்ரஹ்மத்

---

தின் ஸம்பந்தம் சொல்லப்படுகின்றது. இப்படிச் சொல்வதில் என்ன விரோதம் ஸம்பவிக்கக் கூடும்? இரண்டு க்ரியைகளின் ஸம்பந்தம் வெவ்வேறு காலத்தில் நேர்கிறபடியால் எவ்வித விரோதத்திற்கும் அவகாசம் இல்லை.

लक्षणायामपि—'லக்ஷணை சொல்வது நமக்கு அநபிமதம், அப்படி லக்ஷணை சொன்னபோதிலும் இரண்டு பதங்களுக்கும் லக்ஷணை சொல்வது பெரிய தோஷமே ஆகும்' என்பது இந்த வாக்யத்தின் கருத்து

एवमत्रापि—தருஷ்டாந்தத்தில், லக்ஷணை சொல்லுமளவு முக்யார்த்தத்திற்கு எவ்வித விரோதமும் நேரவில்லை என்பதை நிரூபித்துவிட்டு, ப்ரக்ருதத்திலும் விரோதத்திற்கு அவகாசமில்லை என்பதை நிரூபிக்கிறார் 'तत्' (அது) என்பதற்கு ஜகத்காரணமாயுள்ள ப்ரஹ்மம் முக்யார்த்தம் என்பதில் எவ்வித ஆக்ஷேபமுமில்லை. ஆனால் 'त्वम्' (நீ) என்பதற்கு ஜீவாந்தர்யாமியான ப்ரஹ்மம் எப்படி முக்யார்த்தமாகும்?'

ப்ரஹ்மணோ ஜீவாந்தர்யாமிதயா ஜீவாத்மகத்வாவிருத்தமிதி ப்ரதிபாதிதம் । யதாவஸ்திதயோரேவ ஹி த்வயோரைக்யம் ஸாமாநாதிகரண்யேந ப்ரதீயதே; தத்பரித்யாகேந ஸ்வரூபமாத்ரைக்யம் ந ஸாமாநாதிகரண்யார்த்த: । பிந்ந ப்ரவ்ருத்தி நிமித்தாநாம் ஶப்தாநாம் ஏகஸ்மிந்நர்த்தே வ்ருத்தி

---

திற்கே, அந்த ப்ரஹ்மம் ஜீவனுள் அந்தர்யாமியாக இருப்பதால் ஜீவாத்மத் தன்மை சொல்வது விருத்தமன்று என்று நம்மால் ப்ரதிபாதிக்கப்படுகின்றது. உள்ளபடி இருக்கும் விசேஷணங்களுடன் கூடிய இரண்டு வஸ்துக்களின் ஐக்யத்தை ஸாமாநாதிகரண்யம் குறிக்குமே தவிர, அந்த விசேஷணங்களையெல்லாம் த்யஜித்துவிட்டு வஸ்து ஸ்வரூபத்திற்கு மாத்ரம் ஐக்யத்தைப் போதிப்பது ஸாமாநாதிகரண்யத்தின் அர்த்தமாகாது. ஸாமாநாதிகரண்யத்தின் அர்த்தத்தை அறிந்தவர்கள், வெவ்வேறான ப்ரவ்ருத்தி நிமித்த

---

என்று ஒரு சங்கை ஜநிக்கக்கூடும். சரீர சரீரிபாவத்தாலே அதை முக்யார்த்தமாகக் கொள்ளலாமென்பது அதற்கு ஸமாதாநம். இந்த முக்யார்த்தத்திற்கு எவ்வித விரோதமும் இல்லை. ஜகத்காரணபூதமான பரஹ்மத்திற்கும் ஜீவனுக்கும் ஐக்யம் சொல்வதன் தாத்பர்யமும் இதுவே. இந்த அர்த்தத்தைத்தான் 'ஜீவாந்தர்யாமிதயா ஜீவாத்மகத்வாவிருத்தம்' என்பதால் ஸ்ரீ பாஷ்யகாரர் இவ்விடத்தில் விளக்கியிருக்கிறார்.

யதாவஸ்திதயோரேவ ஹி—தவிரவும், 'தத்' 'த்வம்' இந்த இரண்டு பதங்களாலும் கேவலம் ப்ரஹ்ம ஸ்வரூபம் மாத்ரம் க்ரஹிக்கப்படுவதாக நாம் சொன்னால், இரண்டும் பர்யாய பதங்கள் ஆகிவிடுமன்றோ? அப்பொழுது, அவைகளால் குறிக்கப்படும் ஒரே வஸ்துவுக்கு ஐக்யம் சொல்வது என்பது வ்யர்த்தமே. ஐக்யம் சொல்வது எப்பொழுது ஸங்கதமாகுமென்றால், ஒரு வஸ்துவுக்கு விசேஷணாம்சத்தில் பேதம் ஏற்பட்டு அந்தப் பேதத்தைக்கொண்டு வஸ்துவும் பிந்நமோ என்று சங்கை ஏற்படும்பொழுது விசேஷணாம்சத்தில் பேதம் இருந்தபோதிலும் விசேஷ்யத்தில் எவ்வித பேதமுமில்லையென்று ஐக்யம் சொல்வதுதான் பொருந்தும். அதாவது—வேறுபட்டிருக்கும் ப்ரவ்ருத்தி நிமித்தங்களை த்யஜித்துவிட்டு ஐக்யம் சொல்லத் தொடங்குவது வீண் என்று சொன்னதாயிற்று. இதைத்தான் ஸாமாநாதிகரண்ய லக்ஷண ஹாநி ரூபமான தோஷமென்று இவ்விடத்தில் சொல்லுகிறார். 'யதாவஸ்திதயோ:' என்பதற்கு எந்த விசேஷணங்களுடன் கூடிய' என்பது பொருள். 'தத்பரித்யாகேந' என்பதற்கு 'அந்த விசேஷணங்களைப் பரித்யஜித்து' என்பது அர்த்தம். ப்ரக்ருதத்தில், விசேஷ்யமாகிற ப்ரஹ்மத்திற்கு, ஜகத்காரணமாயிருப்பது ஒரு விசேஷணம்; ஜீவாந்தர்யாமியாயிருப்பது மற்றொரு விசேஷணம். இந்த விசேஷணங்கள் இரண

ஸாமாநாதிகரண்யஸித்திர் ஹி ததிஃ । ததா ஹேதுதயோரைக்யம் ஸம்வாதிதஸ்யாஹி: ।

உபக்ரம விரோத்யுபஸம்ஹார வாக்ய தாத்பர்ய நிச்சயஸ்ய ந

---

தங்களையுடைய சப்தங்களுக்கன்றோ ஒரே வஸ்துவைக் குறிக்கும்பொழுது ஸாமாநாதி கரண்யத்தைச் சொல்லுகிறார்கள்? அப்படிப்பட்ட ஸாமாநாதிகரண்யமே நம்மால் இவ்விடத்தில் ப்ரதிபாதநம் செய்யப்பட்டிருக்கின்றது.

உபக்ரம............ப்ரஹணம்—தவிரவும், ஆரம்பத்தில் சொல்லப்பட்டுள்ள அர்த்தத்திற்கு விருத்தமாக, முடிவில் வரும் வாக்யங்களுக்குத் தாத்பர்ய நிச்சயம் செய்வது பொருந்தாது. ஆரம்பத்தில், "ததைக்ஷத பஹு ஸ்யாம்" [அது ஸங்கல்பித்

---

டும் வெவ்வேறே 'அப்படி வெவ்வேறான விசேஷணங்களுடன் கூடியிருக்கும் ப்ரஹ்மம் ஒன்றே' என்னும் ஐக்யமே இவ்விடத்தில் சொல்லப்படுகிறது. இப்படிச் சொல்வது தான் ஸாமாநாதிகரண்யத்தின் லக்ஷணத்திற்குப் பொருந்தும் என்பது கருத்து

பிந்நப்ரவ்ருத்தி நிமித்தாநாம்—இந்த வாக்யம் ஸாமாநாதிகரண்யத்தின் லக்ஷணத்தைச் சொல்கின்றது. ஒரு சப்தம் ஒரு வஸ்துவைக் குறிக்கின்றது என்பது அந்தச் சப்தத்திற்கு 'ப்ரவ்ருத்தி' என்று சொல்லப்படும். அப்படிக் குறிப்பதற்கு இந்தச் சப்தத்தால் சொல்லப்படும் அந்த வஸ்துவின் அஸாதாரண தர்மம் காரணம், அது 'ப்ரவ்ருத்தி நிமித்தம்' என்று சொல்லப்படும் அந்தக் காரணங்கள், வெவ்வேறாக இருந்தால் அந்தச் சப்தங்கள் 'பிந்நப்ரவ்ருத்தி நிமித்தங்கள்' என்று சொல்லப்படும். அப்படிப்பட்ட இரண்டு சப்தங்கள் ஒரே பொருளை அவகாஹித்து நின்றால் அப்பொழுது அந்தச் சப்தங்களுக்கு ஸாமாநாதிகரண்யம் ஏற்படும் என்பது லக்ஷணவாக்யத்தின் அர்த்தம். 'நீலோ கட:' என்னும் இடத்தில் 'நீல' என்னும் சப்தத்திற்கு நீலரூபம் ப்ரவ்ருத்தி நிமித்தம்; 'கட:' என்னும் சப்தத்திற்கு கடத்வம் ப்ரவ்ருத்தி நிமித்தம். இந்த நிமித்தங்கள் இரண்டும் பின்னங்கள்; அப்படி பின்னங்களான ப்ரவ்ருத்தி நிமித்தங்களுடன் அந்தச் சப்தங்கள் இரண்டும் 'குடம்' என்னும் ஒரே பொருளைக் குறித்துக்கொண்டு நிற்கிறபடியால், அந்தச் சப்தங்களுக்கு ஸாமாநாதிகரண்யம் சொல்லப்படுகின்றது; இம்மாதிரியே 'தத்த்வம்' என்னும் இடத்திலும்.

உபக்ரம—இது வரையில் ஸாமாநாதிகரண்ய லக்ஷணத்தின் ஹாநி ஸம்பவிக்கின்றது என்னும் தூஷணம் சொல்லப்பட்டது. இப்பொழுது, மற்றொரு தூஷணத்தை ஸங்க்ரஹமாக ப்ரஸ்தாவிக்கிறார். அது என்னவென்றால் 'இந்த ஸத் வித்யையில், உபக்ரமத்தில், ப்ரஹ்மத்தை ஸத்ய ஸங்கல்பத்வம் முதலிய விசேஷணங்களுடன் கூடியது என்று ப்ரஸ்தாவித்து விட்டு, உபஸம்ஹாரத்தில் அந்த ப்ரஹ்மம் அவித்யைக்கு ஆச்ரய மாகிறது என்று சொல்லுகிறது என்று விவரணம் செய்தால் அது முன் பின் விரோத மாகுமே' என்பது தான்.

ஶ்ருதே: । உபக்ரமே ஹி “ ததைக்ஷத பஹு ஸ்யாம் ” இத்யாதிநா ஸத்யஸங்கல்பத்வம் ஜகதேககாரணத்வம் ச உபதிஷ்டம் ; ததிதமவித்யா ஶ்ரயத்வாதி ப்ருவாண: ।

அபி ச ஸர்வஸ்ய ஶப்தஸ்ய விஶேஷ ப்ரமாணகத்வ வச

---

த்து 'நான் பலவாக கடவேன்' என்று] முதலான வாக்யங்களால் ப்ரஹ்மத்திற்கு ஸத்ய ஸங்கல்பத்தன்மையும் ஜகத் முழுவதற்கும் ஒரே காரணமாக இருக்கும் தன்மையும் சொல்லப்பட்டிருக்கின்றன. 'ப்ரஹ்மம் அவித்யைக்கு ஆச்ரயமாக இருக்கின்றது' இத்யாதியாகச் சொல்வதெல்லாம் அதற்கு விருத்தமன்றோ?

அபி ச......... ..வாக்யஸ்ய—மேலும், 'எவ்வித விசேஷமும் இல்லாமல் ஒரு வஸ்து உண்டு' என்று சொல்வதற்குச் சப்தம் ப்ரமாணமாகமாட்டாது ஏனென

---

ததைக்ஷத— அந்த ப்ரஹ்மம் ஸங்கல்பித்தது, இதனால் அதன் ஸத்யஸங்கல்பத்வம் வெளியிடப்படுகின்றது. பஹு ஸ்யாம்—பலவாக கடவேன். இதனால் ஜகதேக காரணத்வம் சொல்லப்படுகிறது. அப்படிப்பட்ட ப்ரஹ்மம் நிர்விசேஷ சிந்மாத்ரமாக இருந்துகொண்டு ஸத்ஸத்நிர்வாசயையான அநாத்யவித்யையால் மறைக்கப்பட்ட ஸ்வரூபத்தை உடையதாய் ப்ரமித்தத் தன்னிடத்தில் நாநாத்வத்தைப் பார்க்கின்றது என்று சொல்வது பொருந்துமோ? பொருந்தாதாகையால் அப்படி ஆத்தம் சொல்வது பிசகு என்பது தான் ப்ரக்ருத தூஷணம்.

ஆஹத்ய, நிர்விசேஷ வஸ்து ஸித்திக்கு நாலு தூஷணங்கள் சொல்லப்பட்டன.—(1) ப்ரக்ருதத்தைப் பராமர்சிக்கும் 'தத்' என்னும் சப்தத்தால் அறியப்படும் குண கணங்கள் பாதிக்கப் படுகின்றன, (2) இரண்டு பதங்களுக்கும் லக்ஷணை சொல்லும் தோஷம், (3) ஸாமாநாதிகரண்ய லக்ஷணத்தின் ஹாநி, (4) உபக்ரம விரோதம்.

அபி ச—இனி நிர்விசேஷமாக ஒரு வஸ்து உண்டு என்பதற்கு ப்ரமாணம் இல்லை என்பது நிரூபிக்கப்படுகின்றது. ப்ரமாணங்களுள் ப்ரத்யக்ஷமும் சப்தமும் ப்ரதாநங்கள். அத்வைதிகள், நிர்விசேஷ வஸ்து ஸித்திக்கு ப்ரமாணத்தை நிரூபிப்பதில், ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தைக் காட்டிலும் சப்த ப்ரமாணத்திற்கு ப்ராபல்யம் சொல்லுகிறார்கள். அந்தக் காரணத்தினால், அந்தச் சப்த ப்ரமாணத்தை ஸ்ரீபாஷ்யகாரர் இவ்விடத்தில் முக்யமாக ப்ரஸ்தாவிக்கிறார் தவிரவும், சப்த ப்ரமாணம் ப்ரஹ்மத்தை ஸவிசேஷமாகவே அதிசயத்துடன் போதிக்கின்றது என்பது ஸ்ரீபாஷ்யகாரருடைய திருவுள்ளம்.

இவ்விடத்தில் செய்யப்படும் நிரூபணம் பின்வருமாறு காணப்படுகின்றது — சப்தம் என்பது பதரூபமாகவும் வாக்யரூபமாகவும் ப்ரவ்ருத்திக்கின்றது. பதத்வம் என்பது ப்ரக்ருதி (பகுதி) ப்ரத்யயம் (விகுதி) இவைகளின் சேர்க்கையால் ஏற்படுகின்றது. ப்ரக்ருதி ப்ரத்யயங்களுக்கு அர்த்தபேதம் உண்டாகையால், அவைகளின் யோகத்தால்

வாக்ய ஸ்வரூபவதா ப்ரக்ருதி ப்ரத்யய ஜாதஸ்ய ஶப்தஸ்ய நிர்விஶேஷ வஸ்து போதகதா ஸம்பவதி । ந நிர்விஶேஷ வஸ்துநி ஶப்த: ப்ரமாணம் । நிர்விஶேஷ இத்யாதி ஶப்தாஸ்து கேநசித் விஶேஷேண விஶிஷ்டதயா அவஸ்தி்தஸ்ய

---

ருல், சப்தம் என்பது பதம் வாக்யம் இவைகளின் ஸ்வரூபத்தால் ப்ரமாணம் பெற்றதா கின்றது, பதங்களின் ஸ்வரூபம் (ப்ரக்ருதி ப்ரத்யயங்களின் வழியாக) வெவ்வேறு அர்த் தங்களைப் போதிப்பதால் ஏற்படுகின்றது, வாக்யங்களின் ஸ்வரூபமும் அப்படிப்பட்ட அநேக பதங்களின் அர்த்தங்கள் ஒன்று சேரும் விசேஷத்தைப் போதிப்பதால் ஏற்படு கின்றது இப்படிப்பட்ட பதவாக்ய ஸ்வரூபத்தால் ப்ரமாணம் பெற்றுள்ள சப்தம் எவ் விதத்திலும் நிர்விசேஷமான வஸ்துவைப் போதிக்கமாட்டாதாகையால் நிர்விசேஷ வஸ் துவை ஸாதிப்பதற்குச் சப்தம் ப்ரமாணமாகுமென்று சொல்வது ஸாத்யமில்லை 'நிர்விசே ஷம்' என்பது முதலான சப்தங்களோ வென்றால், 'சிற்சில விசேஷங்களுடன் கூடின

---

ஏற்படும் பதம் விசேஷங்களுடன் கூடிய அர்த்தத்தையே ப்ரதிபாதிக்கவேண்டும் இவ் வாறு பதங்களே ஸவிசேஷ பரங்களானால், அம்மாதிரியான பதங்களின் கூட்டமாகிற வாக்யத்திற்கு ஸவிசேஷபரத்வம் உண்டு என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? ஆகையால் பத வாக்ய ரூபமாயுள்ள சப்தம் நிர்விசேஷ வஸ்துவை ஸாதிப்பதில் ப்ர மாணமாகமாட்டாது, ப்ரத்யுத, ஸவிசேஷ வஸ்துவையே ஸாதிசயமாக ஸாதிக்கும்.

அநேக பதார்த்த ஸம்ஸர்க்க விசேஷ போதக ரூப வாக்ய ஸ்வரூப வதா ப்ரக்ருதி ப்ரத்யய ஜாதஸ்ய—இதைப் பின் வருமாறு பிரிக்கவேண்டும்.—'அநேக பதார்த்த போதக ரூப பத ஸ்வரூப வதா ப்ரக்ருதி ப்ரத்யய ஜாதஸ்ய' 'அநேக பதார்த்த ஸம்ஸர்க்க விசேஷ போதக ரூப வாக்ய ஸ்வரூப வதா ப்ரக்ருதி ப்ரத்யய ஜாதஸ்ய'. அர்த்த பேத போதநத்தால் ஏற்படுவது பதஸ்வரூபம், அந்த அர்த்த ஸம்ஸர்க்க விசேஷ போத நத்தால் ஏற்படுவது வாக்ய ஸ்வரூபம். அம்மாதிரியான பத வாக்ய ரூபங்களாலேயே சப்தத்திற்குப் போதகத்வம் ஏற்படுகின்றது 'ப்ரக்ருதி ப்ரத்யய ஜாதஸ்ய' என்பதற்குப் போதகத் வம் என்பது பொருள்

ஸவிசேஷம் நிர்விசேஷம் என்பவைகளிலுள்ள விசேஷசப்தத்தின் அர்த்தத்தை இவ் விடத்தில் சற்று விசாரித்தால் நிர்விசேஷமான வஸ்து ப்ரமாணசூந்யமென்பது விளங்கும். 'வெண்மையான வஸ்த்ரம்' என்பதில் 'வெண்மை' என்பது தர்மம், 'வஸ்த்ரம்' என்பது தர்மி. இவ்விடத்தில் 'வெண்மை' என்பது கறுப்பு வஸ்த்ரத்திலிருந்து இந்த வஸ்த்ரத் தனைத் வ்யாவ்ருத்திக்கிறபடியால், அது வ்யாவர்த்தகம் ஆகின்றது. அதாவது அது ஒரு விசேஷம் என்று சொன்னது ஆயிற்று. தர்மத்தால் தர்மி ஸவிசேஷமாவதற்கு இது உதாஹரணம். தர்மியால் தர்மமும் ஸவிசேஷமாகும். 'வஸ்த்ரம்' என்னும் தர்மி, தன்னை ஆச்ரயித்திருக்கும் 'வெண்மை' என்னும் தர்மத்தை மற்றொரு பொருளாகிற காகிதம் முதலானவற்றை ஆச்ரயித்திருக்கும் வெண்மையிலிருந்து வ்யா வ்ருத்திக்கிறபடியால், அந்தத் தர்மியும் வ்யாவர்த்தகமாக (அதாவது, விசேஷமாக) ஆகின்

வஸ்துநோ வஸ்த்வந்தராவ்ருத்த விஶேஷ நிஷேதகதயா ப்ரயோகாத், உக்

ரீத்யா தேஷாம் ஶப்தாநாம் ப்ரயோகஸ்யைவ, ப்ரக்ருதி ப்ரத்யய விபாகேண ஸ

---

தாகத் தென்படும் ஒரு வஸ்துவுக்கு மற்றொரு வஸ்துவில் தென்படும் வேறு விசேஷங்கள் இல்லை' என்பதை மாத்ரம் போதிக்கின்றன. இல்லாவிடில் அவைகளுக்கு போதிக்கும் தன்மையே ஸம்பவியாமற் போய்விடும், ஏனென்றால் ஸமஸ்த பதங்களுக்கும் ப்ரக்ருதி (பகுதி) ப்ரத்யயம் (விகுதி) இவைகளின் வழியாக அநேக விசேஷங்களைத் தோற்றுவிக்கும் தன்மை ஸம்பவிக்கின்றதன்றோ? ஸமஸ்த வாக்யங்களுக்கும் அநேக பதங்

---

ந்து; இவ்விதம் நாமத்தால் நாமி ஸவிசேஷமாகவும், நாமியால் நாமமும் ஸவிசேஷமாகவும் இருக்கின்றன. ஒவ்வொரு பதார்த்தமும் மற்றொன்றுக்கு நாமமாகவாவது நாமியாகவாவது இருக்கவேண்டுமாதலால், ஸவிசேஷமாக அல்லாத வஸ்து (அதாவது—நிர்விசேஷமாக இருக்கும் வஸ்து) ப்ரமாண சூன்யமே ஆகுமன்றோ?

நிர்விஶேஷ வஸ்துவாதிபிஸ்து—'நிர்விசேஷமாக ஒரு வஸ்து உண்டு என்பதற்குச் சப்தம் ப்ரமாணமாக மாட்டாது என்று சொல்லக்கூடுமோ? 'நிர்விசேஷம்' என்னும் சப்தமே அதற்கு ப்ரமாணமாகாதோ?' என்னில், அது ப்ரமாணமாக மாட்டாது என்கிறார். 'நிர்விசேஷம்' என்பதற்குச் 'சிற்சில விசேஷங்களற்ற' என்று பொருள் கொள்வதே ந்யாயத்திற்கு ஒத்ததாகும். ஏனென்றால், 'நிர்விசேஷம்' என்னும் சப்தம் ஒரு ப்ரத்யயத்துடன் கூடியதாகவும் மற்றொரு பதத்துடன் சேர்ந்துமன்றோ அர்த்தத்தைப் போதிப்பிக்கின்றது? ஆகையால், அந்த ப்ரத்யயம் அந்த மற்றொரு பதத்துடன் சேர்க்கை இவைகளால் ஏற்படும் விசேஷங்களுடன் கூடியதாகவே அதன் போதகம் இருக்கவேண்டுமே தவிர, 'எவ்வித விசேஷமும் அற்றது' என்பது அதன் போதகமாக மாட்டாது. ஆகையால், 'நிர்விசேஷம்' முதலிய சப்தங்கள் சிற்சில விசேஷங்களை மாத்ரம் நிஷேதிக்கின்றன, ஸகல விசேஷங்களையும் நிஷேதிக்கமாட்டா என்றே நாம் க்ரஹிக்கவேண்டும். தவிரவும், கீழ்ச் சொல்லியபடி நாமம் நாமி எல்லாம் வ்யாவர்த்தகமாகக் கூடுமாகையால், நிர்விசேஷ சப்தம் ஸமஸ்த விசேஷ நிஷேதபரம் என்று சொல்லும் பக்ஷத்தில், நாமியாக இருக்கும் ப்ரஹ்மமும் நிஷித்தமாகிவிடுமன்றோ? [அதாவது—நிர்விசேஷம் என்பது ஸமஸ்த விசேஷங்களையும் நிஷேதிக்கின்றது என்றால், ஸமஸ்த வ்யாவர்த்தகங்களையும் நிஷேதிக்கின்றது என்று சொன்னதாயிற்று. ப்ரஹ்மமும் தன்னைத் தவிர்த்த மற்றவைகளைக் குறித்து வ்யாவர்த்தகமாகையால் அதுவும் நிஷேதிக்கப்பட்டதாகிவிடும்.]

உக்தரீத்யா தேஷாம் ஶப்தாநாம் ப்ரயோகஸ்யைவ—நிர்விசேஷம் என்னும் சப்தத்திற்கும் அதைப் போன்ற மற்றைச் சப்தங்களுக்கும் கீழ்ச் சொல்லியபடி சிற்சில விசேஷ நிஷேதபரமாக அர்த்தம் செய்யாமல், 'எவ்வித விசேஷமுமற்ற' என்று அர்த்தம் செய்யும் பக்ஷத்தில், அவை ஒன்றையும் போதிக்காமலே நின்றுவிடும்படி ஸம்பவிக்கும், ஏனென்றால், ப்ரக்ருதி ப்ரத்யயங்களுடன் கூடிய பதங்களுக்கு அவைகளின்

வைஶ்ஷ்வா நேக விஶேஷ மஹிதத்வாத், அநேக பதார்த்த ஸம்ஸர்க்க போதகத்வாத் வாக்யஸ்ய ।

அத ஸ்யாத், நாஸ்மாபி: நிர்விஶேஷே ஸ்வயம் ப்ரகாஶே வஸ்துநி ஶப்த: ப்ரமாணமித்யுச்யதே, ஸ்வத: ஸித்தஸ்ய ப்ரமாணாநபேக்ஷத்வாத் ; ஸர்வை: ஶப்தை: தத்ராரோபித விஶேஷா: ஜ்ஞாத்ருத்வாதய: ஸர்வே

---

களின அா தநஙகளுடைய சேரகையின வழியாகவே போதிககும தனமை ஸமபவிககினற தனறோ ?

அத ஸ்யாத்............உச்யதே—'நிாவிசேஷமான ஒரு ஸவயம பரகாச வஸது உணடு எனபதறகுச சபதம பரமாணமெனறு நாஙகள சொலலவிலலே, ஏனெனறால, ஸவயமாகவே பரகாசிககும ஒரு வஸதுவுககு எவவித பரமாணமும அநபேக்ஷிதம. ஸகல சபதஙகளும், நிாதத்தேசிககபபடும வஸதுவின மீது தஙகளால ஆரோபிககபபடுகினற ஜ்ஞாதருதவம முதலான விசேஷஙகளெலலாவறறையும விலககுகினறன, ஸகலமான

---

அா்தத பேததகால ஏறபடும விசேஷஙகளைப போதிககாமல இருபபது ஸாத்ய மிலலையனறோ ?

வாக்யஸ்ய—பதமே அநேக விசேஷ காபபிதமாக இருநதால, அநதப பதஙக ளின ஸஙகாததகால உணடாகும வாகயம விசேஷ காபபிதமாக இருககும எனபதைச சொலலவும வேணடுமோ? எனபதுதான 'ஏவ' என்னும அவதாரணத்தின கருதது

அத ஸ்யாத்—இவவாறு நிாவிசேஷ வஸதுவுககு சிஷபரமாணதவததை நிரு பிதது விட்டு, 'ஸவயம பரகாசமாயுளள வஸதுவுககு பரமாணம எனபதே அநபேக்ஷித மனறோ? அநதக காரணததால கீழச செயயபபடடுளள நிருபணம வயாததம' எனறு சஙகிககிறா. இவவிடததில பூாவபக்ஷி சொலவதாவது—'பரஹமம எனபது ஸவதஸ ஸிததமான வஸது, ஆகையால, அதை ஸாதிகக பராமண மொனறும வேணடுவதிலலை. அபபடிச் சொனனால பரஹமததை ஸாதிககும வேதாநத சாஸதரம வயாததமாகி விடுமோ வெனனில, அது வயாததமாகாது. ஏனெனறால, வேதாநத சபதஙகளெல்லாம், அநத ப்ரஹமததினிடததில ஆரோபிககப்படும விசேஷஙகளை நிரஸிப்பதில பரயோ ஜந மடைகிறபடியால், அநத வேதாநத சாஸதரம் ஸபரயோஜநமாகிறது அபபடி விசே ஷஙகளெலலாம நிரஸிககபபடடுப் போயவிடடால, கேவலம நிாவிசேஷமாகவும் ஸவயம் பரகாசமாகவும பரஹமம எவவித பரமாணததையும அபேக்ஷியாமலே நிறகும' எனபது தான.

நிரஸ்யந்தே, ஸர்வ-விஶேஷ-நிவ்ருத்தௌ வஸ்துமாத்ரம் அநவச்சிந்நம் ஸ்வயம்ப்ரகாஶம் ஸ்வத ஏவாவதிஷ்டதே' இதி । நைததேவம் । கேந ஶப்தேந தத்வஸ்து நிர்திஶ்ய தத்கதா விஶேஷா நிரஸ்யந்தே? ஜ்ஞ

---

விசேஷங்களும் இம்மாதிரி நிவருத்திப்பிக்கப்பட்டுப் போய்விட்டால், கேவலம் ஒரு வஸ்து மாத்ரம் 'எவ்வித விசேஷங்களாலும் குறிக்கப்படாமலும் ஸ்வயம் ப்ரகாசமாகவும் மற்றை எவ்வித ப்ரமாணத்தையும் சாராமலும் நிற்குமன்றோ?' என்று சொல்லலாமோ வென்னில், அதுவும் அப்படியன்று. ஒரு வஸ்துவிலிருந்து விசேஷங்களை விலக்கவேண்டுமானால், அந்த வஸ்துவை ஒரு சப்தத்தால் நிர்தேசித்தே அவ்விசேஷங்களை விலக்கவேண்டுமன்றோ? ப்ரக்ருதத்தில் ப்ரஹ்மமாகிற வஸ்துவை என்ன சப்தத்தால் நிர்தேசித்து அதிலுள்ள விசேஷங்களை விலக்குகிறீர்கள்? கேவலம் ஜ்ஞப்தி

---

'தத்கதா விஶேஷா:'—என்பதற்கு அதில் ஆரோபிக்கப்படும் விசேஷங்கள் என்பது பொருள்.

'அநவச்சிந்நம்'—எவ்வித அவச்சேதகமும் இல்லாமல், அதாவது—நிர்விசேஷமாய.

நைததேவம்—இது முதல், கீழ்க் கூறப்பட்டுள்ள பூர்வபக்ஷத்திற்கு ஸமாதானம் சொல்லப்படுகிறது. ஸமாதானமாவது—வேதாந்த சப்தங்களெல்லாம் ப்ரஹ்மத்தின் மீது ஆரோபிக்கப்படும் விசேஷங்களை நிரஸிக்கும்பொழுது, ப்ரஹ்மத்தை ஒரு சப்தத்தால் நிர்தேசித்தே விசேஷங்களை நிரஸிக்கவேண்டும். அப்படி நிர்தேசிக்காமல் ஸாமான்யமாக விசேஷங்களை நிரஸிக்கப் ப்ரவருத்தித்தால், ப்ரஹ்மமும் கீழ்ச் உபபாதித்திருக்கிறபடி ஒரு விசேஷமாகிறபடியால், அதுவும் நிரஸிதமாகிவிடும். அது அநிஷ்டம். 'ஒரு சப்தத்தால் நிர்தேசித்தே, விசேஷங்கள் நிஷேதிக்கப்படுகின்றன' என்று சொல்லும் பக்ஷத்தில், எந்தச் சப்தத்தைக் கொண்டு ப்ரஹ்மம் நிர்தேசிக்கப் படுகின்றதோ, அந்தச் சப்தத்தால் சொல்லப்படும் விசேஷங்கள் அநிஷித்தங்களாகவே நிற்கும். ஆகையால் ப்ரஹ்மத்தை எவ்வித விசேஷமும் மற்றது என்று சொல்ல ஸாத்யப் படமாட்டாது. தவிரவும், ப்ரஹ்மத்திற்கு ஸ்வயம் ப்ரகாசத்தன்மையும், அது ஸவிசேஷமாக இருப்பதினாலேயே ஏற்பட வேண்டும். எந்த வஸ்துவானது தனது ப்ரகாசத்தால் தன்னைத் தவிர்த்த மற்றை வஸ்துக்களுக்கும் வ்யவஹார யோக்யதையைக் கொடுக்கின்றதோ அது ஸ்வயம் ப்ரகாசம் என்று சொல்லப்படும். அப்படி மற்றை வஸ்துக்களுடைய வ்யவஹாரத்திற்கு ஹேதுவாயுள்ள ஸ்வயம் ப்ரகாசத் தன்மையை உடைய பொருள் விசேஷங்களுடன் கூடியதாகவே இருத்தல் வேண்டுமன்றோ? ஆகையால், நிர்விசேஷத் தன்மைக்கு ஸ்வயம் ப்ரகாசத்வம் உபபந்நமாக மாட்டாது. ஸவிசேஷத்தன்மைக்கே அது உபபந்நமாகும்; இதுதான் ஸமாதானம்.

ப்திஶப்³தே³ன இதி ஶேஷ: ; லோகவேத³யோ: ஸவிஶேஷ ஏவ வஸ்துனி பதே³, ப்ரக்ருதி ப்ரத்யயார்தே²ன விஶேஷணஹிதத்வாத் । "ஜ்ஞா அவபோ³த⁴னே" இதி ஸகர்மக: ஸகர்த்ருக: க்ரியாவிஶேஷ: க்ரியாந்தரவ்யாவ்ருத்த ஸ்வபா⁴வ விஶேஷஸ்ய ப்ரக்ருத்யா அபி⁴தீ⁴யதே; ப்ரத்யயேன லிங்க³ஸங்க்²யாத³ய: । ஸ்வத: ஸித்³தா⁴வபி ஸ்வபா⁴வவிஶேஷ விஶி

---

(ஜ்ஞானம்) என்னும் சப்தத்தால் அதை நிர்தேசிக்கிறோம் என்று சொன்னால், அந்தச் சப்தமும் (கீழ்ச்சொல்லியபடி) தனது ப்ரக்ருதி ப்ரத்யயம் இவைகளின் வழியாக விசேஷங்களைத் தோற்றுவிக்கிறபடியால் விசேஷத்துடன் கூடிய வஸ்துவை அவலம்பித்தே நிற்கும். 'ஜ்ஞப்தி' என்னும் பதம் 'ஜ்ஞா' என்னும் தாதுவிலிருந்து நிஷ்பந்நம், அந்தத் தாதுவுக்குப் போதிப்பது என்பது பொருள். ஆகையால், அதன் ப்ரக்ருதி (பகுதி) யினுடைய அர்த்தத்தின் வழியாக, ஒரு கர்த்தாவுடன் கூடியதும் ஒரு கர்மாவுடன் கூடியதுமான ஒரு க்ரியா விசேஷமும் வேறொரு க்ரியையை வ்யாவ்ருத்

---

ஜ்ஞப்திஶப்³தே³ன—ப்ரஹ்மம் அநேக சப்தங்களால் நிர்தேசிக்கப்பட்டிருக்கின்றது. அவைகளுள் ஒன்றான 'ஜ்ஞப்தி' (அதாவது—ஜ்ஞானம்) என்னும் சப்தத்தை எடுத்துக்கொண்டு இவ்விடத்தில் விஷயம் உபபாதநம் செய்யப்படுகின்றது. இந்தச் சப்தத்தின் ப்ரக்ருதி (அதாவது—பகுதி)க்கு அவபோ³த⁴னே 'அறிகிறது' என்பது பொருள் ஆகும். அந்த அறிகிறது என்பதானது ஒரு கர்த்தாவையும் கர்மாவையும் தழுவி நிற்கும் ஒரு க்ரியா விசேஷத்தை அறிவிக்கின்றது. தவிரவும், வேறொரு க்ரியையிலிருந்து வ்யாவ்ருத்திப்பிக்கும் ஸ்வபாவ விசேஷத்தையும் அது உடையது. ஆகையால் ப்ரக்ருதி ஸம்பந்தப்பட்ட வரையில் அந்தச் சப்தத்தால் நிர்தேசிக்கப்படும் வஸ்து, ஸவிசேஷமாகவே இருக்கவேண்டும் என்பது நிச்சிதம். இம்மாதிரியே ப்ரத்யயம் ஸம்பந்தப்பட்ட வரையிலும். ப்ரத்யயம் (அதாவது விகுதி) லிங்கத்தையும் குறிக்கும், ஒருமை பன்மை என்பதையும் குறிக்கும். அவைகளும் விசேஷங்களே.

ப்ரத்யயேன லிங்க³ஸங்க்²யாத³ய:—'ஜ்ஞப்தி' என்பது ஒரு ஜடமான க்ரியையைக் குறிக்கிறபடியால், அதனுடன் சேர்க்கப்படும் ப்ரத்யயம் எவ்விதம் லிங்கத்தைப் போதிப்பிக்கும்? என்று ஒரு சங்கை ஜனிக்கக் கூடும். உண்மையாகவே ஜடமான க்ரியைக்கு லிங்கம் சொல்வது ஒவ்வாது. ஆனால் இவ்விடத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கும் 'ஜ்ஞப்தி' என்னும் சப்தம் போல, 'தேவன்' 'ஈச்வரன்' 'புருஷோத்தமன்' இத்யாதியான சப்தங்களும் ப்ரஹ்மத்தை நிர்தேசிக்கும் சப்தங்களாக எடுத்துக் கொள்ளத் தகுந்தவையாதலால், 'ப்ரத்யயம் லிங்கத்தைப் போதிக்கின்றது' என்று சொல்வது அநுபபந்நமாக மாட்டாது.

ஸ்வத:ஸித்³தா⁴வபி—ஸ்வதஸ்ஸித்தியைச் சொல்லும் விஷயத்திலும்,

ஷே ஸித்தேரேவ ந ஸ்யாத் | அந்யஸாதந ஸ்வபாவதயா ஹி ஜ்ஞப்தே: ஸ்வத: ஸித்திருச்யதே |

அபி ச ப்ரஹ்மஸ்வரூபம் க்ருத்ஸ்நம் ஸர்வதா ஸ்வயமேவ ப்ரகாஶதே சேத், ந தஸ்மிந் அந்யதர்மாத்யாஸ: ஸம்பவதி | ந ஹி ரஜ்ஜுஸ்வரூபே அவபாஸமாநே ஸர்பத்வாதிரத்யஸ்யதே | அத ஏவ ஹி பவத்பி

---

திக்கும் ஸ்வபாவ விசேஷமும் அதனால் போதிக்கப்படுகின்றது; அதன் ப்ரத்யயத்தை (விகுதியை)க் கொண்டு அதன் லிங்கமும் அதன் ஒருமை பன்மை பேதங்களும் குறிக்கப்படுகின்றன. ஸ்வயம் ப்ரகாசத்வ ஸித்தியும் கீழ்ச் சொல்லப்பட்டுள்ள ஸ்வபாவ விசேஷமின்றிக்கு ஏற்படமாட்டாது, ஏனென்றால், ‘ஜ்ஞப்தி’க்கு ஸ்வதஸ்ஸித்தி என்பது மற்றொரு பொருளுக்கு ஸாதநமாக இருக்கும் ஸ்வபாவத்தால் ஏற்படுகின்றதன்றோ?

ப்ரஹ்மஸ்வரூபம்.........பவத்பி:—தவிரவும், ப்ரஹ்ம ஸ்வரூபம் முழுவதும் எப்பொழுதும் ஸ்வயமாகவே ப்ரகாசித்துக்கொண்டிருக்கின்றது என்றால், அந்த ப்ரஹ்மஸ்வரூபத்தில் மற்றொரு பொருளுடைய தர்மத்தின் அத்யாஸமானது ஸம்பவிக்க மாட்டாது. கயிற்றின் ஸ்வரூபம் நன்றாக ப்ரகாசித்துக்கொண்டிருக்கும்பொழுது

---

ஸ்வபாவ விஶேஷஸித்தே—கீழ்ச் சொல்லப்பட்டுள்ள ஸகாமகத்வ ஸகர்த்ருகத்வங்களை த்யஜித்துவிட்டால்.

அந்யஸாதந ஸ்வபாவதயா—‘அந்ய’ என்றால் வேறொரு பொருள். அதன் ஸாதந ஸ்வபாவ: என்றால் அதை வ்யவஹாரத்திற்கு யோக்யமாகச் செய்து கொடுக்கும் ஸ்வபாவம். அப்படிப்பட்ட ஸ்வபாவத்தைக் கொண்டேயன்றோ ஜ்ஞப்திக்கு ஸ்வதஸ்ஸித்தி சொல்லப்படுகின்றது, ‘ஸ்வஸம்பந்தாத் அர்த்தாந்தர வ்யவஹாரஹேதுத்வம் ஹி ஸ்வயம்ப்ரகாஶதா நாம ஹேது:’

ப்ரஹ்மஸ்வரூபம்........ இவ்வாறு, ஸ்வயம் ப்ரகாசமாக இருக்கும் ஒரு வஸ்து நிர்விசேஷமாக இருக்கமாட்டாது என்பதை உபபாதித்து விட்டு, இப்பொழுது, ‘வஸ்துவின் ஸ்வரூபத்தை மறைக்கும் குணத்தை யுடைய அவித்யையின் நிவ்ருத்தி ஸவிசேஷமாயுள்ள வஸ்துவுக்கே உபபந்நமாகும், நிர்விசேஷமாயுள்ள வஸ்துவுக்கு அது உபபந்நமாகாது’ என்பதை நிரூபிக்கிறார். ‘ப்ரஹ்மம் என்பது கேவலம் ஜ்ஞாந ஸ்வரூபம், ஸ்வயம் ப்ரகாசம், நிர்விசேஷம், அது ஒன்றுதான் உண்மையாக இருக்கின்றது; அவித்யை என்னப்படும் ஒரு வஸ்து அதை மறைக்கின்றது; அப்படி மறைக்கப்பட்டதாய்க் கொண்டு, அந்த ப்ரஹ்மம் ஜகத் முதலான பற்பல வஸ்துக்களைப் பார்ப்பதாக ப்ர

மிக்கின்றது, சாஸ்த்ரத்தைக் கொண்டு உண்மையான ஜ்ஞானம் ஸம்பாதிக்கப்பட்டால் அந்த அவித்யையால் ஏற்படும் மறைவு நிவ்ருத்தமாகின்றது' என்பது அத்வைதிகளின் கொள்கை. அப்படிப்பட்ட மறைப்பின் நிவ்ருத்தி, பரஹ்மம் ஸவிசேஷமாக இருந்தால் மாத்ரம் ஸம்பவிக்கும் என்பதுதான் இவ்விடத்திற் செய்யப்படும் நிரூபணம். இந்த நிரூபணத்தின் ப்ரக்ரியை பின்வருமாறு காணப்படும் கயிற்றைப் பார்த்துப் பாம்பு என்று ப்ரமிப்பது போலன்றோ ஜகத்தில் காணப்படும் பல விதங்களான வஸ்துக்களின் தோற்றம்? ப்ரஹ்மம் எப்பொழுதும் ப்ரகாசித்துக் கொண்டிருக்கும் பக்ஷத்தில், அப்படிப்பட்ட ப்ரமத்திற்கே இடமில்லை யாகையால், ஜகத்தில் காணப்படும் பரமத்தை விளக்குவதற்காக நீங்கள் அவித்யையை அங்கீகரித்திருக்கிறீர்கள். அந்த அவித்யையால் பரஹ்மம் மறைக்கப்படும்பொழுது, அந்த பரஹ்மம் முழுவதும் மறைக்கப்படுகின்றதா? இல்லாவிட்டால் ஒரு அம்சம் மாத்ரம் மறைக்கப்படுகின்றதா? 'ப்ரகாசத்தை மாத்ரம் ஸ்வரூபமாக உடைத்தாயிருக்கும் ப்ரஹ்மம் பூர்ணமாக மறைக்கப்பட்டுத் தனது ப்ரகாசம் முழுவதையும் இழந்து விடுகின்றது' என்னில், அந்த பரஹ்மம் இல்லை யென்றே சொன்னதாகி விடும். ஒரு அம்சம் மாத்ரம் மறைக்கப்படுகின்றது என்னில், நிரம்சமாயும் நிர்விசேஷமாயும் ப்ரகாச மாத்ரமாயுமுள்ள வஸ்துவினிடத்தில் இரண்டு ஆகாரங்கள் ஏற்படமாட்டா வாகையால், அது அஸங்கதமாகும். அம்மாதிரியான வஸ்துக்களில், ஒரு அம்சத்தில் மறைப்பும் ஒரு அம்சத்தில் ப்ரகாசமும் காணப்படுகின்றன என்று சொல்வது அஸங்கதமன்றோ? ஆகையால், ப்ரஹ்மம் வேண்டுமானால், அவித்யை வேண்டுமானால், அவித்யா நிவ்ருத்தியும் வேண்டுமானால், பரஹ்மத்தை நிர்விசேஷ மென்று ஒத்துக்கொள்வது கூடாது.

அத்யாஸ:—ஒரு பொருளின் பேரில் மற்றொரு பொருளின் தர்மத்தை ஆரோபிப்பது அத்யாஸம் என்று சொல்லப்படும். பூர்வம் வெள்ளியைப் பார்த்திருக்கும் ஒருவன், இப்பொழுது முத்துச் சிப்பியைப் பார்த்துவிட்டு, வெள்ளிக்கும் முத்துச் சிப்பிக்கும் தென்படும் சில ஸாத்ருச்யங்களைக் கொண்டு, இப்பொழுது பார்க்கப்படும் முத்துச் சிப்பியின்மீது வெள்ளியின் தன்மையை ஆரோபித்தால், அப்பொழுது அவன் ரஜதத்வத்தைச் சுக்தியின்மீது அத்யவஸிக்கிறான் என்று சொல்லக்கூடும். சுக்தி இவ்விடத்தில் அதிகரணம், ரஜதம் அவபாஸிக்கப்படும் அர்த்தம், அந்த அர்த்தத்திற்கு அந்த அதிகரணம் அயோக்யம். இம்மாதிரியான இடங்களில் அத்யாஸம் செய்யப்படுகின்றது என்று சொல்லுகிறார்கள்.

ந ஹி ரஜ—ஸ்வ—ரூபெ.........இம்மாதிரியாக அத்யாஸம் ஏற்படுவதற்கு அதிகரணத்தின் பூர்ணப்ரகாசம் விரோதிக்கும். அதிகரணம் எவ்விடத்தில் நன்றாக ப்ரகாசிக்கவில்லையோ, அவ்விடத்திலேயே அத்யாஸம் உண்டு. பரஹ்மமாகிற அதிகரணத்தில் மித்யாரூபமான ப்ரபஞ்சம் அத்யவஸிக்கப் படுகின்ற தென்றால் ப்ரஹ்மம் பூர்ணமாக ப்ரகாசிக்கவில்லை என்று சொன்னதாகிறது. 'இது கயிறு' என்று ஒருவனுக்கு நன்றாக ப்ரகாசம் ஏற்பட்டால், ஸர்ப்பத் தன்மையை அதில் அவன் அத்யவஸிக்கமாட்டானன்றோ?

அத ஏவ.........அந்தக் காரணத்தினாலேயே, (அத்யாஸத்தை ஸாதிக்கும் பொருட்டே) அவித்யை என்று ஒன்று உண்டென்றும், அது பரஹ்மத்தின் ப்ரகாசத்தை மறைக்கின்றதென்றும் அத்வைதிகள் சொல்லுகிறார்கள்

ஶாஸ்த்ரிகா அவித்யா அப்யுபகம்யதே । தத்ர ஶாஸ்த்ரீய நிவர்தக ஜ்ஞாநஸ்ய ப்ரஹ்மணி திரோஹிதாம்ஶோ விஷய: ; அந்யதா தஸ்ய நிவர்தகத்வம் ச ந ஸ்யாத் । அதிஷ்டாநாதிரேகி ரஜ்ஜுத்வ ப்ரகாஶநேந ஹி ஸர்பத்வம் பாத்யதே । ஏகதேஶ விஶேஷ ஜ்ஞாநாத் வஸ்துநி

---

ஸர்ப்பத்தின் நாமம் முதலியவை அதில் அத்யஸிக்கப்படமாட்டா வன்றோ? அந்தக் காரணத்தாலேயே நீங்கள், வஸ்து ஸ்வரூபத்தை மறைக்கும் ஸ்வபாவத்தையுடைய அவித்யை என்னும் ஒரு பதார்த்தத்தை ஒத்துக்கொண்டிருக்கிறீர்கள். ஆகையால், சாஸ்த்ரத்தால் உண்டாகிறதாயும், வஸ்து ஸ்வரூபத்தின் மறைப்பை நிவருத்திக்கிறதாயு முள்ள ஜ்ஞானத்திற்கு எது விஷயமாகின்றதென்னில், அந்த அவித்யையால் மறைப்பை அடைந்திருக்கும் பரஹ்மத்தின் ஒரு அம்சமே அப்படிப்பட்ட விஷயமாகின்றது. அப்படி பரஹ்மத்தின் ஒரு அம்சம் மறைப்பை அடைகின்றது என்பதை ஒத்துக்கொள்ளாவிட்டால், சாஸ்த்ர ஜந்யஜ்ஞானத்திற்கு மறைப்பை நிவருத்திக்கும் தன்மையே ஸம்பவியாமற் போய்விடும். அதிஷ்டாநமாகிற ரஜ்ஜுவில் இருக்கும் ரஜ்ஜுத்வம் பரகாசித்தாலன்றோ 'ஸர்ப்பமோ' என்னும் ப்ரமம் விலகும். கேவலம் ஜ்ஞானமாக இருக்கும் ப்ரஹ்மத்தினிடத்தில் 'ஒரு விசேஷம் சப்தத்தால் சொல்லப்படுகின்றது [அதாவது மறைப்பை அடையக்கூடிய ஒரு

---

**அந்யதா தஸ்ய நிவர்தகத்வம் ந ஸ்யாத்**—மறைக்கப்பட்டு அறியப்படாமல் ஒன்று இருந்தால் மாத்ரம், மறைப்பை நிவ்ருத்திக்கும் சாஸ்த்ர ஜந்ய ஜ்ஞானத்திற்கு நிவருத்திக்கும் தன்மையை நாம் சொல்லக்கூடும். ஆச்சாத்யம் இல்லாவிட்டால் நிவர்த்தகத்வம் எப்படி ஏற்படும்?

**அதிஷ்டாநாதிரேகி ரஜ்ஜுத்வ ப்ரகாஶநேந**—அதிஷ்டாநம் இவ்விடத்தில் ரஜ்ஜு, அதனுடைய தன்மை யாகிற ரஜ்ஜுத்வம் ப்ரகாசித்தால் ஸர்ப்பத்வம் பாதிக்கப்படும். ஸர்ப்பத்வம் பாதிக்கப்படாமல் நின்றால் ரஜ்ஜுத்வம் பரகாசிக்கவில்லை என்பது அநுமானம். அதுபோல, ப்ரபஞ்சத்வம் பாதிக்கப்படாமல் இருக்கும் வரையில் ப்ரஹ்மத்வம் ஏதாவது ஒரு அம்சத்திலாவது பரகாசிக்காமல் இருக்கவேண்டும்.

**ஏகதேஶவிஶேஷ:**.........அப்படி பரஹ்மத்தினிடத்தில் ஒரு அம்சம் ப்ரகாசிக்காமல் இருக்கின்றது என்பதை ஒத்துக்கொண்டால், 'ப்ரஹ்மம் அம்சத்துடன் கூடியது, அதாவது விசேஷத்துடன் கூடியது' என்று ஒத்துக்கொண்டதாகிறது. அந்த விசேஷத்தின் ப்ரகாசத்தால் அத்யாஸம் நிவருத்தமாகிறபடியால், அந்த விசேஷம் கேவலம் உபலக்ஷணமாக மாத்ரம் இராமல் விசேஷணமாகவே இருத்தல் வேண்டும். அப்பொழுது பரஹ்மம் விசேஷண விசிஷ்டமென்றே அங்கீகரித்ததாக ஆயிற்று.

ஶப்தேநாபிதீயதே, ஸ ச ப்ரஹ்மவிஶேஷணம் பவதீதி, ஸர்வஶ்ருதி ப்ரதிபாதித ஸர்வ விஶேஷண விஶிஷ்டம் ப்ரஹ்ம பவதி । அத: ப்ராமாணிகாநாம் ந கேநாபி ப்ரகாரேண நிர்விஶேஷவஸ்து ஸித்தி: ।

நிர்விகல்பக ப்ரத்யக்ஷேऽபி ஸவிஶேஷமேவ வஸ்து ப்ரதீயதே;

---

அம்சம் உண்டு] என்பதை' ஒத்துக்கொண்டால், அது ப்ரஹ்மத்திற்கு ஒரு விசேஷணமாக ஆகிவிடுமாகையால், ப்ரஹ்மம், எல்லா ச்ருதிகளாலும் ப்ரதிபாதிக்கப்படும் ஸகல விசேஷணங்களுடனும் கூடியதாகவே ஏற்பட்டுவிடும். ஆகையால், ப்ரமாணத்திற்குக் கட்டுப்படுபவரெல்லாரும் 'நிர்விசேஷமாயிருக்கும் வஸ்து ஒரு ப்ரகாரத்தாலும் ஸாதிக்கப்படமாட்டாது' என்பதை அங்கீகரிக்கவேண்டும்.

---

ப்ராமாணிகாநாம்—ப்ரமாண சரணர்களாய்ப் புகுந்தால் ப்ரஹ்மத்திற்கு நிர்விசேஷத்வம் சொல்வது ஸாத்யமில்லை.

நிர்விகல்பக ப்ரத்யக்ஷேऽபி—நிர்விசேஷ வஸ்துவுக்கு ப்ரமாணம் இல்லை என்பதை நிரூபிக்க ஆரம்பித்து, சப்த ப்ரமாணம் இல்லை என்பதை இதுவரையில் நிரூபித்து முடித்தார். இனி, அதற்கு ப்ரத்யக்ஷ ப்ரமாணமும் இல்லை என்பதை நிரூபிக்க உபக்ரமிக்கிறார். பௌத்தர் முதலான சில மதஸ்தர்கள், ப்ரத்யக்ஷத்தில் நிர்விகல்பக ப்ரத்யக்ஷமென்று ஒன்று உண்டென்றும், அது எவ்வித விசேஷமுமில்லாமல் இருக்கும் ஒரு வஸ்துவை விஷயமாக உடையதென்றும் சொல்லுகிறார்கள். அது உண்மையாக இருக்கும் பக்ஷத்தில், நிர்விசேஷ வஸ்துவின் ஸித்தி அதனால் ஏற்படும் என்பதில் ஆக்ஷேபமில்லை. ஆனால், ஸ்ரீபாஷ்யகாரர், 'அது உண்மையன்று, யுக்திக்கும் விருத்தம்' என்று உபபாதித்து, நிர்விகல்பக தசையிலும் ஸவிசேஷமாகவே வஸ்து தோன்றுகின்றது என்று இவ்விடத்தில் நிரூபிக்கிறார்.

ப்ரத்யக்ஷமாவது—திவ்யமல்லாத கண் காது மூக்கு முதலிய பாஹ்யேந்த்ரிய வ்யாபாரத்தால் உண்டாகும் யதார்த்த ஜ்ஞானமே. இந்த ப்ரத்யக்ஷத்தை நிர்விகல்பகமென்றும் ஸவிகல்பகமென்றும் இரண்டு விதமாகப் பகுப்பது உண்டு. ஒரு வஸ்துவை நாம் நமது இந்த்ரியத்தைக் கொண்டு முதல் முதலில் க்ரஹிக்கையில் நமக்கு எந்த ஜ்ஞானம் ஏற்படுகின்றதோ அதை நிர்விகல்பகமென்றும், அவ்விதம் ஒரு வஸ்துவை க்ரஹித்த பிறகு மறுபடியும் அந்த ஜாதியைச் சேர்ந்த மற்றை வஸ்துக்களை ஏற்கெனவே ஏற்பட்டிருக்கும் ஸம்ஸ்காரத்துடன் க்ரஹிக்கும்பொழுது ஏற்படும் ஜ்ஞானத்தை ஸவிகல்பகமென்றும் சொல்வார்கள். முதல் முதலில் ஒருவன் ஒரு பசுவைப் பார்த்தால், அப்பொழுது அவனுக்கு அந்தப் பசுவைப் பற்றி ஜநிக்கும் ஜ்ஞானம் நிர்விகல்பகம், பிறகு வேறு

---

பசுக்களைப் பார்க்கும்பொழுது அவனுக்கு அவைகளைப்பற்றி ஜநிக்கும் ஜ்ஞாநம் ஸவிகல்பகம். முதலில், 'பசு ஒரு விதமான அமைப்புடன் கூடியிருக்கின்றது' என்னும் ஜ்ஞாநம் மாத்ரம் ஜநிக்கின்றது, பிறகு வேறு பசுக்களைப் பார்க்கும்பொழுது, 'முன் நான் பார்த்த வஸ்துவில் எவ்விதமான அமைப்பு தென்பட்டதோ, அம்மாதிரியான அமைப்பே இவைகளிலும் தென்படுகின்றது' என்னும் ஜ்ஞாநமும் ஜநிக்கின்றது. இதை அநுவ்ருத்தி என்று சொல்வார்கள். அதாவது—நிர்விகல்பக தசையில் ஏற்படும் ஜ்ஞாநம் ஸவிகல்பகத்தில் ப்ரதிஸந்தாநம் செய்யப்படுகின்றது என்று சொன்னதாயிற்று. இரண்டு தசைகளிலும் அஸாதாரணமாயுள்ள ஒரு அமைப்புடன் கூடியிருப்பதாகவே பசுவின் ஜ்ஞாநம் ஏற்படுகையிலும், ஸவிகல்பக தசையில் 'அந்த அமைப்பு வேறு வஸ்துக்களிலும் அநுவ்ருத்திக்கின்றது' என்னும் ஜ்ஞாநம் அதிகமாக ஏற்படுகின்றது. நிர்விகல்பக தசையில் அந்த அநுவ்ருத்தி இல்லை என்பதுதான் இதன் தாத்பர்யம். இந்த அர்த்தத்தை ஸ்ரீபாஷ்யத்தில் பின் வருமாறு விவரித்திருக்கிறார்—" நிர்விகல்பகம் ஏகஜாதீய த்ரவ்யேஷு ப்ரதமபிண்ட க்ரஹணம், த்விதீயாதி பிண்ட க்ரஹணம், ஸவிகல்பகம் இத்யுச்யதே। தத்ர ப்ரதமபிண்ட க்ரஹணே கோத்வாதேர் அநுவ்ருத்தாகாரதா ந ப்ரதீயதே, த்விதீயாதி பிண்ட க்ரஹணேஷ்வேவ அநுவ்ருத்தி ப்ரதீதி:"

நிர்விகல்பத்திற்கும் ஸவிகல்பத்திற்கு முள்ள வைஷம்யம் இவ்வாறு இருக்க, இதை அறியாமலே பௌத்தர் முதலான சிலர், நிர்விகல்பகம் என்பது முதல் முதலில் ஒரு வஸ்துவைப் பார்த்தவுடன் ஏற்படும் ஜ்ஞாநமாதலால், அது எவ்வித விசேஷமுமற்ற ஒரு வஸ்துவை விஷயமாக உடைய தென்றும், ஸவிகல்பக தசையில் ஜநிக்கும் ஜ்ஞாநம் பல வஸ்துவைப் பார்த்த பிறகு ஜநிக்கிறபடியால், அது அந்த வஸ்துக்களுக்குள்ள விசேஷங்களுடனேயே ஸ்புரிக்கின்றதென்றும் நினைத்து, 'நிர்விகல்பக ப்ரத்யக்ஷத்தில் நிர்விசேஷ வஸ்துவின் ஸித்தி ஏற்படுகின்றது' என்று வாதிக்கிறார்கள். 'அது தவறுதலான வாதம், நிர்விகல்பக தசையிலும் விசேஷங்களுடன் கூடினவாகவே வஸ்துக்கள் தோன்றுகின்றன' என்பதுதான் இவ்விடத்தில் நிரூபிக்கப் படுகின்றது.

அந்த நிரூபணம் என்னவென்றால்—ஒரு வஸ்துவைப் பார்க்கும்பொழுது, அப்படிப் ப்ராப்தது முதல் தடவையாக இருந்தபோதிலும், 'இந்த வஸ்து இப்படிப் பட்டது' என்றே தோற்றம் ஜநிக்கின்றது. பசுவைப் பார்க்கும் பொழுதெல்லாம், அது ஸாஸ்நா (மடி) முதலானவைகளுடன் கூடி யிருக்கின்றது என்றே தோன்றுகின்றதன்றோ? அப்படி ஒரு விசேஷத்துடனும் கூடியிராமல் தோற்றமே ஜநிக்கமாட்டா

---

தாகையால், எல்லா ப்ரத்யக்ஷங்களும் ஸவிசேஷங்களே. தவிரவும், நாம் ஒரு ஜாதியைச் சேர்ந்த ஒரு வ்யக்தியை ஒரு காலத்தில் பார்த்துவிட்டு, மற்றொரு காலத்தில் அந்த ஜாதியைச் சேர்ந்த மற்றொரு வ்யக்தியைப் பார்த்தால் அப்பொழுது, 'பூர்வம் நம்மால் பார்க்கப்பட்ட வ்யக்தியின் அமைப்புக்கு ஸத்ருசமான அமைப்புடன் கூடியதாகவே இந்த வ்யக்தி தென்படுகின்றது' என்று தோற்றம் ஏற்படுகின்றது என்பது அநுபவ ஸித்தம். அது அவ்விதம் ஸித்தமாக இருந்தால், அந்த அமைப்பின் ஸாத்ருச்யம் இப்பொழுது தோற்றுவதற்கு, ப்ரதம தர்சநத்திலும் அந்த அமைப்பு தோன்றியிருக்க வேண்டுமன்றோ? இந்தக் காரணத்தாலும் நிர்விகல்பக ப்ரத்யக்ஷமும் ஸவிசேஷம் என்றே ஏற்படவேண்டும். 'அப்படி இரண்டு தசைகளிலும் ஸவிசேஷமாகவே தோற்றம் ஏற்பட்டால், இரண்டு தசைகளுக்கும் வைஷம்யம் என்ன?' என்று கேட்டால், விசேஷத்தின் அநுவ்ருத்தியினுடைய ப்ரதீதி ஸவிகல்பகத்துக்கு உண்டு, நிர்விகல்பகத்துக்கு அந்த அநுவ்ருத்தியின் ப்ரதீதி இல்லை என்பது தான் அதற்கு ப்ரத்யுத்தரம். பசுவைப் பார்க்கும் பொழுதெல்லாம் கோத்வம் (பசுவின் தன்மை) என்னும் விசேஷமும் தோன்றுகின்றது, ஆனால் ப்ரதம கோ தர்சநத்தில் அந்த கோத்வத்திற்கு அநுவ்ருத்தி தோன்றவில்லை, இரண்டாவது கோ தர்சநத்தில் அந்த அநுவ்ருத்தி தோன்றுகின்றது என்பதுதான் அவைகளுக்குப் பரஸ்பரமுள்ள வைஷம்யம். கோத்வம் என்பது ஜாதி, அநுவ்ருத்தி ஜாதி அன்று. "ஸாஸ்நாதி வஸ்து ஸம்ஸ்தாநரூப கோத்வாதேரநுவ்ருத்தி: ந ப்ரதமபிண்ட க்ரஹணே க்ருஹ்யத இதி ப்ரதமபிண்ட க்ரஹணஸ்ய நிர்விகல்பகத்வம், ந புந: ஸம்ஸ்தாநரூப ஜாத்யாதேர் அக்ரஹணாத்" என்பது ஸ்ரீ பாஷ்ய பங்க்தி.

தவிரவும், ஒருவனுக்கு ஒரு தடவை பசுவின் க்ரஹணம் ஏற்பட்டிருக்கையிலும், ஏதாவது ஒரு காரணத்தால் அந்த ஸம்ஸ்காரம் மலிநமாகி இருக்கும் பக்ஷத்தில், மற்றொரு தடவை அவனுக்கு அதன் க்ரஹணம் நேரும்பொழுது பூர்வம் க்ரஹிக்கப்பட்ட ஜாதியின் அநுவ்ருத்தி ஸம்பவியாதாகையால், இரண்டாவது தடவை நேரும் ப்ரத்யக்ஷமும் அவன் விஷயத்தில் நிர்விகல்பகமாகவே இருக்கும். ஆகையால் 'ப்ரதம பிண்ட க்ரஹணம் நிர்விகல்பகம், த்விதீயாதி பிண்ட க்ரஹணம் ஸவிகல்பகம்' என்று சொல்வதைக் காட்டிலும், அநுவ்ருத்தி தாம் விசிஷ்டமாக இருப்பது ஸவிகல்பகமென்றும், அது இல்லாமல் இருப்பது நிர்விகல்பகமென்றும் அவைகளுக்கு வைஷம்யம் சொல்வது யுக்ததரமாக இருக்கும். இதைத் திருவுள்ளத்தில் வைத்துக்கொண்டே ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகனும் தமது ந்யாய பரிசுத்தியில் ''நிர்விகல்பகம் ஏக ஜாதீய த்ரவ்யேஷு

அந்யதா ஸவிகல்பகே ‘ஸோऽயம்’ இதி பூர்வாவகத ப்ரகார விஶிஷ்ட ப்ரத்யயாநுபபத்தே: । வஸ்து ஸம்ஸ்தாந விஶேஷ ரூபத்வாத் கோத்வாதே:, நிர்விகல்பகதஶாயாமபி ஸஸம்ஸ்தாநமேவ வஸ்து ‘இத்தம்’ இதி ப்ரதீயதே । த்விதீயாதி ப்ரத்யயேஷு தஸ்யைவ ஸம்ஸ்தாந விஶேஷஸ்ய அநேக வஸ்துநிஷ்டதாமாத்ரம் ப்ரதீயதே ; ஸம்ஸ்தாநரூப ப்ரகா

---

நிர்விகல்பக...அபி— நிர்விகல்பக ப்ரத்யக்ஷத்திலும் ஒவ்வொரு வஸ்துவும் விசேஷத்துடன் கூடியதாகவே தோன்றுகின்றது. அப்படித் தோன்றாவிட்டால், ஸவிகல்பக ப்ரத்யக்ஷத்தில், ‘அதுவே இது’ என்று ஏற்கெனவே நம்மால் அறியப்பட்டுள்ள ஒரு ப்ரகாரத்துடன் கூடினதாகத் தோற்றம் தோன்றுவது அநுபபந்நமாகும். ‘பசுவின் தன்மை’ இத்யாதிகள் வஸ்துக்களின் ஒருவிதமான அமைப்பின் ரூபங்களே, ‘இது இப்படிப்பட்டது’ என்று அந்தந்த அமைப்புடன் கூடியதாகவே ஒவ்வொருவஸ்துவும் நிர்விகல்பக தசையில்கூடத் தோன்றுகிறபடியால், அந்தத் தசையிலும் கோத்வம் முதலியவைகள் தோன்றுகின்றன என்றே சொல்லவேண்டும். (ஆகையால் நிர்விகல்பகமும் ஸவிசேஷமே ஆகும்) இரண்டாவது முதலிய ப்ரத்யயங்களில், அந்த அமைப்பின் ஸாத்ருச்யம் பல வஸ்துக்களில் தொடர்ந்து இருப்பதாக மாத்ரம் (அதிகமாகத்) தெரியவரு

---

ப்ரதமபிண்டக்ரஹணே’ இத்யாதி பாஷ்யஞ் உதாஹரணவாக்யம் யோஜ்யம்” என்று அநுக்ரஹித்து விட்டு, “அத ஏவ ஹி ஸ்ரீவிஷ்ணுசித்தைஸ்து ‘ஸம்ஸ்காரோத்போதஸஹக்ருதேந்த்ரிய ஜந்யம் ஜ்ஞாநம் ஸவிகல்பகம்’” என்று பூர்வாசார்யர்களுடைய அபிமதத்தையும் வெளியிட்டிருக்கிறார். நிர்விகல்பக ஸவிகல்பகங்களுக்கு வைலக்ஷண்யம் எதுவாக இருந்தபோதிலும், இரண்டு இடங்களிலும் ஸவிசேஷமாகவே க்ரஹணம் ஸம்பவிக்கின்றது என்பது ஸித்தம். ஆகையால் பௌத்தர்கள் சொல்லும் வாதத்திற்கு இடம் இல்லை.

கோத்வாதே:— கோத்வம் (பசுவின் தன்மை) என்பது ஜாதி. அது, பசுவின் க்ரஹணம் ஏற்படும் பொழுதெல்லாம் ஏற்படுகின்றது. இந்த ஜாதி, முதல் பிண்ட க்ரஹணத்திலும் தோன்றுகின்றது, இரண்டாவது முதலிய பிண்ட க்ரஹணத்திலும் தோன்றுகின்றது. ஆனால், இரண்டாவது க்ரஹணத்தில் அநுவ்ருத்தியின் ப்ரதீதி அதிகமான அம்சம். இதிலிருந்து ஜாதி வேறு அநுவ்ருத்தி வேறு என்பதை நாம் அறிய வேண்டும்.

அநேகவஸ்துநிஷ்டதா— அநேக வஸ்துக்களில் இருக்கும் தன்மை. அதாவது— அந்தந்த வஸ்துவின் அமைப்பினுடைய ஸாத்ருச்யம் என்று சொன்னதாயிற்று.

பாவஸ்ய பஹ்வாகாரஸ்ய அநேக வஸ்து நிஷ்டதயா அநேக வஸ்து விசேஷணத்வம் த்விதீயாதி ப்ரத்யயாவஸேயமிதி த்விதீயாதி ப்ரத்யயா: ஸவிகல்பகா இத்யுச்யந்தே ।

அத ஏவ ஏகஸ்ய பஹ்வாகாரஸ்ய பிந்நா பிந்ந ரூபேண ஆஸ்தா

---

கின்றது ; அப்படி அந்த அமைப்பு பல வஸ்துக்களுக்கு விசேஷணமாக இருக்கின்றது என்பது இரண்டாவது முதலிய ப்ரத்யயங்களில் மாத்ரம் அந்த அமைப்பின் அநுவ்ருத்தியால் வெளிப்படுகின்றபடியால், இரண்டாவது முதலிய ப்ரத்யயங்களை ஸவிகல்பகங்களென்று நாம் சொல்லுகிறோம்.

---

அத ஏவ—ப்ரஸக்தாநுப்ரஸக்தமாக நேர்கிறபடியால் பேதாபேத மதத்தை நிரஸிக்கிறார். நிர்விகல்பக தசையிலும் ஸவிசேஷமாகவே தோற்றம் ஏற்படுகின்றது என்பதே அந்தப் பேதாபேத மதத்திற்கும் பாதகமாகிறபடியால், அதற்கு இவ்விடத்தில் ப்ரஸக்தி ஏற்படுகின்றது.

இந்தப் பேதாபேத மதம், பாஸ்கர மதஸ்தர்களிடமும் யாதவப்ரகாச மதஸ்தர்களிடமும் காணப்படுகின்றது. அத்வைதிகளாகிற சங்கர மதஸ்தர்களின் மதம் அபேத மதம்; விசிஷ்டாத்வைதிகளாகிற ஸ்ரீ வைஷ்ணவர்களின் மதம் பேத மதம்; யாதவ ப்ரகாச பாஸ்கர மதஸ்தர்களின் மதம் பேதாபேத மதம். இந்த யாதவ மதத்திற்கும் பாஸ்கர மதத்திற்கும் வைஷம்யம் என்னவென்றால்—பாஸ்கர மதத்தில், 'அசித் வஸ்துவுக்கும் ப்ரஹ்மத்திற்கும் பேதம் அபேதம் இரண்டும் உண்டு, ஆனால் அவை இரண்டும் ஸ்வாபாவிகங்கள். சித் வஸ்துவுக்கும் ப்ரஹ்மத்திற்கும் பேதம் அபேதம் இரண்டும் இருக்கையிலும் அபேதம் மாத்ரம் ஸ்வாபாவிகம், பேதம் ஸ்வாபாவிகமன்று, கேவலம் ஔபாதிகமே' என்று சொல்லப்படுகின்றது. யாதவ மதமென்னவென்றால்—'அசித் வஸ்துவுக்கும் ப்ரஹ்மத்திற்கும் பேதம் அபேதம் இரண்டும் ஸ்வாபாவிகமாக இருப்பதுபோல், சித் வஸ்துவுக்கும் ப்ரஹ்மத்திற்கும் பேதம் அபேதம் இரண்டும் ஸ்வாபாவிகங்களே, ஔபாதிக பேதம் என்பதே இல்லை' என்பது தான். (20, 21-வது பக்கங்களைப் பார்க்க.) ஆகையால் இந்த இரண்டு மதஸ்தர்களும் பேதாபேத மதஸ்தர்கள்.

இவ்விடத்தில் ஸ்ரீ பாஷ்யகாரர் செய்திருக்கும் உபபாதநத்தைச் சரியானபடி அறிவதற்கு யாதவ பாஸ்கரர்களால் அங்கீகரிக்கப்படும் இந்தப் பேதாபேத மதத்தின் கொள்கையின் ஜ்ஞாநம் அவசியம் அபேக்ஷிதம். ஆகையால் அதை ஸங்க்ரஹமாக இவ்விடத்தில் ப்ரஸ்தாவிக்கிறோம். லோகத்தில் எல்லா வஸ்துக்களும் அவ்வவைகளின்

ப்ரதீதிககு அநுகுணமாகவே வயவஸதையைப பெறுகினறன. ஆகையால், வஸ்துககள் பிநநமாயும அபிநநமாயும அறியபபடும பக்ஷததில, அவைகளுககுப் பேதாபேதரூபமான வயவஸதை உணடெனறே அங்கீகரிகக வேணடும 'வஸ்துககள பிநநங்களாயும அபிநநங்களாயும அறியபபடுகினறனவெனபது அநுபவ ஸிததம மாடு, குதிரையைக காட்டிலும வேறுபட்டதே, ஆனால மாடும மருக ஜாதியைச சோநதது, குதிரையும மருக ஜாதியைச்|சோநதது எனனும காரணததால அவை இரணடும அபிநநஙகளென்றும் சொலலலாம, ஆகையால் குதிரைககும மாட்டுககும பேதாபேதமுணடு. மண் என்பது வேறு, அதனால செயயபபடும குடம் வேறு, ஆனால, குடததிறகுக காரணம் மணணா கிறபடியால், காரணததை ஆலோசிககும பொழுது அவை இரணடையும அபிநநங்களென றும வயவஹரிக்கலாட இம்மாதிரி ஸகல வஸதுக்களும, காரணத தனமையாலும ஜாதியின தனமையாலும அபிநநஙகளாகவும பிநநஙகளாகவும நமககுத தோனறுகினறன. இபபடி பிநநம அபிநநம, இநத இரணடு ரூபமாகவும தெனபடாத வஸதுவே லோகததில இலலை யாகையால, எலலா வஸ்துககளையும பிநநாபிநநஙக ளெனறே சொலலவேண்டும.

'இந்தப பேதரூபம அபேதரூபம இரணடும பரஸபரம் விருத்தஙக ளாகையால் இவை ஒரே வஸ்துவில ஒரே காலததில எபபடி இருக்கக்கூடும்?' எனனில், அப்படி இரணடும இருப்பதாக நமககு ஏற்படும ப்ரதீதியே அதற்கு ஆதாரம. அப்படி விருததாகாரங கள் ஒரே வஸதுவில இருக்கமாட்டா எனபதறகும நமமுடைய அநுபவமன்றோ காரண மாகச் சொலலப்படுகினறது? அம்மாதிரியான ப்ரதீதியே, அவை இரணடும அப்படி பரஸ்பரம விருததஙகளாக இலலாமல ஒரே வஸ்துவில இருக்ககூடும எனபதற்கும் காரணமாகினறது.

இவவாறு பிணடஙகளுககுப் பரஸபரம பேதாபேதததை உபபாதித்து விட்டு, அவாகள, ஜாதிககும வ்யக்திககும், காரணத்திற்கும காரயத்திற்கும் கூட பரஸ்பரம பேதாபேதம உணடு எனறு சொலலுகிறாகள. இவைகளுககுப பரஸ்பரம் பேதம வயகதம், அபேதமும சற்று ஆலோசிததுப பாாததால புலபபடும, 'இநதக குடம மண, இநதக கிரீடம ஸவாணம' எனறனறோ ப்ரதீதி ஏறபடுகினறது? மணணுடன கூடிய குடம எனறாவது, ஸவாணததுடன கூடிய கிரீடம் என்றாவது, ப்ரதீதி ஏற படவிலலை இப்படி ஜாதி வயகதிகளுக்கு ஸாமாநாதிகரணயம சொலவதே ஜாதி வயகதி இரணடும அபிநநங்கள என்பதற்கு ஒரு ஹேது. ஜாதியை விட்டுப் பிரிதது வயக்தியின் உபலமபம ஸம்பவிககமாட்டாது, எபபொழுதும அவை இரணடும சோநதே காணப் படுகினறன. அவைகளின் அபேதததிற்கு இதுவுமஒருஹேது தவிரவும, வயகதிகளுககுள் ஆவவளவு பேதம இருநதபோதிலும, ஜாதியைக குறிககும் ஒரே சப்தததால் எல்லா வ்யக்

கக்ஷ்யம் விரோத: ப்ரஸஜ்யேத । ஸம்ஸ்தாநஸ்ய ஸம்ஸ்தாநிந: ப்ரகாரதயா

---

அதவைவ.........விரோத: —சிலர், பேதாபேதம் என்று ஒரு மதம் கொள்கின்றார்கள். அவர்கள் சொல்வதாவது—ஒவ்வொரு பதார்த்தமும் மற்றொரு பதார்த்தத்தைக் காட்டிலும் வேறு பட்டதாகவும் இருக்கின்றது, வேறு படாததாகவும் இருக்கின்றது என்பது தான். அதாவது, ஒரே பதார்த்தத்தில் பரஸ்பரம் விருத்தங்களான பிந்ந

---

திகளும் க்ரஹிக்கப்படுகின்றன. மாடு என்னும் ஒரே சப்தத்தால் கொம்பு ஒடிந்த மாடு கொம்பு இல்லாத மாடு, எல்லா மாடுகளும் சொல்லப்படுகின்றனவன்றோ? அது போல் இந்த ஒரே சப்தத்தால் அநுவித்தமான ப்ரத்யயமும் ஜாதி வ்யக்திகளின் ஐக்யத்தை விளக்குகின்றது. நான்காவது ஹேதுவும் ஒன்று உண்டு ப்ரதம பிண்ட க்ரஹணத்தில ஜாதி வ்யக்திகள் இரண்டிற்கும் எவ்வித பேதமும் இல்லாமல் ப்ரத்யயம் ஏற்படுகின்றதன்றோ? அவைகள் அபிந்நங்களாக இல்லாவிட்டால் அப்படிப்பட்ட ப்ரத்யயம் ஸம்பவிக்க மாட்டாதாகையால், அவை அபிந்நங்கள் தாம் என்பதற்கு இதுவும் ஒரு ஹேது. இம் மாதிரியே வைதிகங்களான ஆத்மாக்களிலும் பேதாபேதம் உண்டென்பது அவர்களுடைய மதம். அசித் வஸ்துக்களும் ப்ரஹ்மமும், சித்வஸ்துக்களும் ப்ரஹ்மமும் பரஸ்பரம் பிந்நாபிந்நங்களேயாம். இதற்கு சுருதி வாக்யங்களே ப்ரமாணம். ப்ரதீதி இவ் விடத்தில் ப்ரமாணமாக மாட்டாது.

இப்படி இவர்கள் செய்யும் உபபாதநம் எல்லாவற்றையும் திருவுள்ளத்தில் வைத்துக்கொண்டே இவ்விடத்தில் "அத ஏவ" இத்யாதியான வாக்யத்தை அநுகரஹித்திருக்கிறார். அத ஏவ—இந்தக் காரணத்தினாலேயே கீழ், நிர்விகல்பக ப்ரத்யக்ஷத்திலும் விசேஷத்துடன் கூடியதாகவே க்ரஹணம் ஏற்படுகிறதென்று நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. அந்தக் காரணத்தாலேயே பேதாபேத மதம் ப்ரத்யுக்தமாகின்றது என்பது தாத்பர்யம். விசேஷண விசேஷ்ய பாவம் எப்பொழுதும் பேதகம். ப்ரதம பிண்ட க்ரஹணத்திலும் ஸம்ஸ்தாநத்துடன் (அமைப்புடன்) ப்ரதீதி ஏற்படுகிறபடியால் ப்ரகார ப்ரகாரிகள் பிந்நங்களாக க்ரஹிக்கப்படுவதுபோல ஜாதிவ்யக்திகளும் பிந்நங்களாக க்ரஹிக்கப்படுகின்றனவே தவிர அபிந்நங்களாக க்ரஹிக்கப்படவில்லை என்பது வ்யக்தம்.

ஹிநாதிநாவேண அர்த்தாந்தரத்வம் விரோத:—ஒரு பதார்த்தத்திற்கு தவிரூபத்வம் எப்பொழுதும் விருத்தமன்று, பிந்நாபிந்ந ரூபமாக இருக்கும் பொழுது மாத்ரம் அது விருத்தமாகும்.

ஸம்ஸ்தாநஸ்ய—ஸாஸ்நா (மடி) முதலியவைகளாகிற அமைப்பின் விசேஷம், பசுவுக்கு ஸம்ஸ்தாநம், பசு ஸம்ஸ்தாநி. ஆகையால் ஸம்ஸ்தாநமானது ஸம்ஸ்தாநிக்கு ப்ரகாரம், அப்படி ப்ரகாரமாகிறபடியால் அது ஸம்ஸ்தாநியைக் காட்டிலும் வேறான பதார்த்தமே.

வஹாயஒ-ரஷுா த்வ ; வ-்காரகூாஜெவ வூாயகிஉ ஷூ நஹ-உகூ வாயஒஹ்ந வஶ்ஹஹெஷ்தி ந அயாத்தககூவஷிஜிஃ ।

---

அபிந்ந ரூபங்களை உடைய இரண்டு ஆகாரங்களை உண்டு என்று சொன்னதாயிற்று. ''இந்த வாக்யமும் கீழ்க் கூறப்பட்டுள்ள காரணத்தாலேயே நிரஸ்த மாகிவிட்டது. அமைப்பு என்பது, அந்த அமைப்பை உடைய வஸ்துவுக்கு ஒரு ப்ரகாரம்; ஆகையால் அந்த வஸ்துவைக் காட்டிலும் அது வேறுபட்ட பதார்த்தமே. அப்படி அது ப்ரகாரமாக இருக்கும் காரணத்தாலேயே அது தனித்து நிற்கவும் யோக்யமன்று, தனித்து க்ரஹணமும் அதற்கு ஸம்பவிக்க மாட்டாது, ஆகையால், பிந்ந அபிந்ந ரூபமான இரண்டு விருத்த ஆகாரங்களை ஒரே வஸ்துவுக்கு விதிக்க மாட்டா.

---

வ-்காரதயா—ப்ரகாரமாக இருப்பதே, ஸம்ஸ்தாநம் ஸம்ஸ்தாநியைக் காட்டிலும் வேறான பதார்த்தம் என்பதற்கு ஹேது.

வ-காரகூாஜெவ வூாயகிஉ ஷூநஹ-உகூ வாயஒஹ்ந வஶ்ஹஹ—ஜாதி வ்யக்திகளுக்குப் பரஸ்பரம் அபேதம் உண்டு என்பதற்கு நான்கு ஹேதுக்கள் உபபாதிக்கப்பட்டனவன்றோ? அந்நான்கு ஹேதுக்களையும் இந்த வாக்யத்தால் பரிஹரிக்கிறார். அவைகளுள் முதல் ஹேது ஸாமாநாதிகரண்யம். 'இந்தக் குடம் மண்' என்னும் இடத்தில் விசேஷண விசேஷ்யங்களுக்கு ஸாமாநாதிகரண்யம் சொல்வது அவைகளின் ஐக்யத்தாலன்று. ஆனால் அந்த விசேஷணம் அப்ருதக் ஸித்த விசேஷணமாக இருப்பதால். எந்த விசேஷணம் விசேஷ்யத்தை விட்டுத் தனித்து நிற்க அநர்ஹமோ அது அப்ருதக் ஸித்த விசேஷணம். ஜாதி வ்யக்திகளுக்கும் அப்படிப்பட்ட ஸம்பந்தமே. 'வ-காரகூாஜெவ வூாயகிஉ ஷூநஹ-உகூ'' என்பதால் இது ஏற்படுகின்றது. ''வ-காரகூாஜெவ'' என்பதற்கு ''நியதவ-காரகூாஜெவ''என்பது அர்த்தம். இரண்டாவது ஹேது, எப்பொழுதும் ஜாதியும் வ்யக்தியும் சேர்ந்தே க்ரஹிக்கப்படுகின்றன என்பது. இது அபேதத்திற்கு ஹேதுவாக மாட்டாது. 'சேர்ந்து க்ரஹிக்கப்படுகின்றன' என்பதே பேதத்தைக் காண்பிக்கின்றதன்றோ? வஸ்து ஒன்றாக இருந்தால், சேர்ந்து க்ரஹிக்கப்படுகின்றன என்று எவ்விதம் சொல்லக்கூடும்? ஆகையால் இது அபேதத்திற்கு ஹேதுவாகமாட்டாது. ஆனால், ப்ரகார ப்ரகாரிகளுக்குள்ள ஸம்பந்த நியமத்தையே இது காண்பிக்கும். இந்த ஸமாதாநம் 'வ-காரகூாஜெவ வாயஒஹ்நவஶ்ஹஹஃ' என்பதிலிருந்து ஏற்படுகின்றது. மூன்றாவது ஹேது 'ஏகசப்தாநு-விஷ்டஜ்வ-த்யய:'என்பது. இந்த ப்ரத்யயம், இரண்டுக்கும் தர்மி ஒன்றாக இருக்கிறபடியால் ஏற்படுகிறதே தவிர, தர்மியின் ஐக்யத்தால் இல்லை. 'மாடு' என்பதால் கொம்பு ஒடிந்த மாடு கொம்பு இல்லாத மாடு எல்லாம் ப்ரதீதிக்கு இடமானால், அது

அவி த்³யா நிர்விஶேஷ வஸ்து வாதி³நா ஸ்வயம்வ்யுத்பாத³ந ஸித்³த்⁴யர்த²ம் அந்யநிரூபிதாத்மக விஶேஷா: ஶப்³தை³: ஸர்வை நிஷித்⁴யந்த இதி வத³தா

அவித்³யா...... ..வ்யுத்பாதி³த —அத்வைதிகள் நிர்விசேஷ வஸ்துவை ஸாதிக்கும் பொருட்டு, 'ஸ்வயம் ப்ரகாசமான வஸ்துவின் விஷயத்தில், அதன் மீது ஆரோபிக்கப்படும் விசேஷங்களெல்லாம் ஸகல சப்தங்களாலும் நிஷேதிக்கப்படுகின்றன' [பக்கம் 85] என்று சொன்னார்கள், 'அப்படி விசேஷங்களை நிஷேதிக்கும் சப்தங்கள் எவை?'

எல்லா மாடுகளும் ஒன்றே என்பதை எப்படிக் காட்டும்? கொம்பு ஒடிந்திருப்பது கொம்பு இல்லாமல் இருப்பது முதலிய தர்மங்கள் வேறுபட்டனவாக இருந்தாலும் தர்மியாகிற மாடு ஒன்றே என்பதை மாத்ரமன்றோ இது விளக்குகின்றது? இதுவும் 'வ்யாகாரணாதேவ' என்பதனால் ஏற்படுகின்றது. நானாகாவது ஹேதுவாகிற 'வ்யவஹாரஸ் ஸ்ரீ மத் ஜாதிவ்யக்த்யோ ரஹேது வ்யக்தி:' என்பது ஐக்யத்தைச் சாதிக்க மாட்டாது. விசேஷண விசேஷ்ய பாவம் பேதகம். ப்ரத்ம பிண்டக்ரஹணத்தில் 'இது இப்படிப் பட்டது' என்று ப்ரதீதி ஏற்படுகிறபடியால் விசேஷண விசேஷ்ய பாவத்தின் க்ரஹணம் உண்டு, அந்தக் காரணத்தால் பேதம் க்ருஹீதமாகுமே தவிர அபேதம் க்ருஹீதமாக மாட்டாது.

யாதவ ப்ரகாசர் மதஸ்தர்கள் சொல்லும் மற்றை யுக்திகளும் இவ்விடத்தில் நிரஸிக்கப்படவில்லை ப்ரதீதி விதத்தமாக இருக்கிறபடியால் பேதாபேதங்கள் பரஸ்பரம் விருத்தங்கள் அல்ல என்று அவர்கள் சொல்வது நிலைபெறாது. 'ஒன்றைக் காட்டிலும் மற்றொன்று விலக்ஷணமாக இருப்பது அவைகளின் பேதம், அப்படி இல்லாமல் இருப்பது அவைகளின் அபேதம்' என்பதை அறிந்த ஒருவன் இரண்டையும் ஓர் இடத்தில் ஸம்பவத்தை ஒருபொழுதும் சொல்லமாட்டான். இம்மாதிரியே அவர்களுடைய மற்றை வாதங்களும் நிலை பெறமாட்டா என்பதைக் கண்டு கொள்க.

அவித்³யா—நிர்விசேஷ வஸ்துவுக்கு ப்ரமாணம் இல்லை என்று சொல்லிக்கொண்டுவந்த ப்ரகரணத்தில், ஒருகால் நிர்விகல்பக ப்ரத்யக்ஷத்துக்கு நிர்விசேஷ விஷயத்வம் இருக்குமோ என்று சங்கித்து, அந்தச் சங்கையைப் பரிஹாரம் செய்தார், ப்ரஸங்காத் பேதாபேத நிரஸனத்தையும் செய்தார். இப்பொழுது, அதற்குமுன் ப்ரஸ்துதமாக இருந்த விஷயத்தை எடுத்துக்கொள்ளுகிறார். அத்வைதிகள் நிர்விசேஷ வஸ்து ஸித்தியைச் சொல்லிக்கொண்டு வந்த இடத்தில், "நாநாஹி நிர்விசேஷ ஸ்வயம்வ்யுத்பத்த்யர்த்த ஸப்தா: வ்யுத்பாதிதா:" என்று ஆரம்பித்து

'கே தே ஶப்³தா³ நிஷேத⁴கா: ?" இதி வக்தவ்யம்! "வாசாரம்ப⁴ணம் விகாரோ நாமதே⁴யம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம்" இதி விகாரநாமதே⁴யயோ: வாசாரம்ப⁴ணமாத்ரத்வாத் யத் தத் காரணதயோபலக்ஷ்யதே வஸ்து தத் ததே³வ ஸத்யம் அந்யத³ஸத்யம் இதி ஶ்ருதிர் வத³தீதி சேந்நைதத்-

---

என்று ப்ரசனம் செய்யப்பட்டால் அதற்கு அவர்கள் உத்தரம் சொல்லவேண்டியவர்கள் 'வாசாரம்ப⁴ணம் விகாரோ நாமதே⁴யம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம்' என்னும் சுருதி வாக்யம், அம்மாதிரி விசேஷங்களை நிஷேதிக்கின்றது என்று ஒருவன் சங்கிக்கக்கூடும். எப்படி யென்றால், 'வேறு ரூபம் வேறு பெயர் இவை யெல்லாம் கேவலம் வ்யவஹாரத்திற்காக மாத்ரம் இருக்கிறபடியால் அவைகளுள் எது வஸ்து மாத்ரமாக இருந்துகொண்டு காரணமாகக் காணப்படுகின்றதோ அதுவே பரமார்த்தமானது, மற்றவை யெல்லாம் அபரமார்த்தங்கள்' என்பதே அந்த வாக்யத்தின் தாத்பர்யம் என்று சொல்லலாம் அப்படிச் சொல்வது உபபன்னமாகாது அப்படிச் சொன்னால் அது த்ருஷ்டாந்த வாக்யத

---

"ஸதே³வ ஸோம்யேத³மக்³ர ஆஸீத்" ... "ஸர்வம் க²ல்விதம் ப்³ரஹ்ம" ... "ஏகமேவாத்³விதீயம்"

"ஸவைஷ: ஶப்³தை³: ஸ்தூ²லவாத³ விஶேஷா: ஸவை நிரஸ்யந்தே"

என்று வேதாந்த வாக்யங்களுக்குப் பேத நிராஸபரத்வத்தை ப்ரஸ்தாவித்து மேல் கொண்டு வாதம் செய்தார்கள். வேதாந்த வாக்யங்களுக்குப் பேத நிராஸபரத்வம் ஸ்ரீ பாஷ்யகாரருக்கு அபிமதமன்று. அப்படி இருக்கையிலும், அதை ஒத்துக்கொண்டே அத்வைதிகளின் வாதத்தைக் கண்டித்தார் அப்படி அதைக் கண்டித்துவிட்டு, இப்பொழுது, வேதாந்த வாக்யங்களுக்குப் பேதநிராஸபரத்வமே அநுபபன்னமென்று நிரூபிக்கிறார்.

கே தே ஶப்³தா³ நிஷேத⁴கா இதி வக்தவ்யம்— 'அப்படிப் பேதத்தை நிஷேதிக்கும் சப்தங்கள் எவை?' என்று ப்ரசனம் செய்தால், அதற்கு அவர்கள் ப்ரத்யுத்தரம் சொல்லவேண்டும் இவ்விடத்தில் 'சொல்லவேண்டும்' என்பதன் குறிப்பு 'அது அவர்களால் அசக்யம்' என்பதுதான்

வாசாரம்ப⁴ணம் விகாரோ நாமதே⁴யம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம்— இதில் 'வாசாரம்ப⁴ணம்' என்பதற்கு அத்வைதிகள் 'வாசாரம்ப⁴ணம்' அதாவது வ்யாவஹாரிகம், (அபரமார்த்தம்) என்று அர்த்தம் சொல்லுகிறார்கள். மண் பிண்டம் ரூபம் மாறி, குடம் மடக்கு முதலியவைகளாக விகாரம் அடைவதும், மண் என்னும்பெயர் மாறி, குடம் முதலிய பெயர் அடைவதும் ஆகிய எல்லாம் அபாரமார்த்திகம், பொய் என்று சொன்னது ஆயிற்று. இந்த அர்த்தம் பூர்வோத்தர அஸங்கதம். ஆகையால் ஸ்ரீ பாஷ்யகாரர் இதற்கு வேறு அர்த்தம் சொல்லுகிறார். அது பூர்வோத்தரத்திற்கு ஒத்திருப்ப

பாத்யதே । 'ஏகஸ்மிந் விஜ்ஞாதே ஸர்வம் விஜ்ஞாதம் பவதி' இதி ப்ரதிஜ்ஞாதே கதமந்யஜ்ஞாநேநாந்யஜ்ஞாநஸம்பவம் ஆஶங்க்ய, 'ஏகமேவ வஸ்து விகாராத்யவஸ்தா விஶேஷேண காரணாவஸ்தயைவ நாநா ரூபாவஸ்திதம் அத: தஸ்மிந்நேகஸ்மிந் விஜ்ஞாதே தஸ்யாவிலக்ஷண ஸம்ஸ்தாநாந்தராபத்தி ததேவ வஸ்து' இதி தத்ர த்ருஷ்டாந்தோऽயம் நிதர்ஶித:, நாத்ர கஸ்யசித் விஶேஷஸ்ய நிஷேதக: கோऽபி ஶப்தோ த்ருஶ்யதே । வாசாரம்பணமிதி—வாசா வ்யவஹாரேண ; ஆரப்யத இதி

---

திற்கு அநுகுணமாக மாட்டாது. 'ஒன்று அறியப்பட்டால் எல்லாம் அறியப்பட்ட தாகி விடும்' என்று உபதேசம் செய்யப் பட்டவுடன், அது எப்படி என் பதை அறியாத ச்வேதகேதுவுக்காக வன்றோ இந்த த்ருஷ்டாந்தம் நிதர்சிக்கப் பட்டது? அந்த த்ருஷ்டாந்தத்தின் கருத்து என்னவென்றால், ஒரே வஸ்து காரணமாகவும் கார்யமாகவும் பலவித அவஸ்தையில் பரமார்த்தமாகவே இருக்கும் பக்ஷத் தில், அப்பொழுது ஒரு அவஸ்தையுடன் கூடிய அந்த வஸ்துவை அறிந்துவிட்டால், அதைக் காட்டிலும் வேறு விதமான அவஸ்தையுடன் கூடியதும் அந்த வஸ்துவே என்று அறிந்துவிடலாம் என்பதே. இந்த த்ருஷ்டாந்தத்தில் விசேஷங்களை நிஷேதிக் கும் சப்தம் ஒன்றும் காணப்படவில்லை. 'வாசாரம்பணம்' என்பதற்கு, வாசா—வ்யவஹாரமாகிற ப்ரயோஜனத்தின் பொருட்டு, ஆரம்பணம்—ஆலம்பிக்கப்படு கின்றது (அதாவது—ஸ்பர்சிக்கப்படுகின்றது) என்பது அர்த்தம். மண், பிண்ட

---

தையும் அத்வைதிகள் சொல்லும் அர்த்தம் பூர்வோத்தரத்திற்கு அஸங்கதமாக இருப்ப தையும் மூலத்திலேயே பார்த்துக்கொள்ளலாம்.

விகாராத்யவஸ்தாவிஶேஷேண—'விகாரம்' என்றால் 'மாறுதல்'; கார்ய மான வஸ்து, காரண வஸ்துவின் விகாரம். ஆகையால், கார்யாவஸ்தை என் றும் காரணாவஸ்தை என்றும் இரண்டு அவஸ்தைகள் உண்டு. இவ்விடத்தில் 'ஆதி' என்னும் சப்தத்தால் காரணாவஸ்தை சொல்லப்படுகிறது.

வாசா—வ்யவஹாரேண இவ்விடத்தில் மூன்றாம் வேற்றுமையின் கருத்து ப்ரயோஜநத்வத்தைச் சொல்வதே, அதாவது-வார்த்தையால் வ்யவஹரிக்கும் பொருட்டு. 'வாக்' என்பதால் 'வார்த்தையால் செய்யப்படும் வ்யவஹாரம்' க்ரஹிக்கப்படு கின்றது. வாக்யத்தின் அந்வயம்—விகாரஶ்ச நாமதேயம் ச (ஶ்ருதிவேத்யேண) வாசா ஆரம்பணம் ; வாக்பூர்வக வ்யவஹாரார்த்தம் ப்ரவ்ருத்தே நாமரூபே

ஸூர்ஸம்ஹண்டி । விஜ்ஞாநமேவைஷாவஸ்தாயா ஏதாத்ருஷ்யா நாம ஆநத்ய வ்யவஹாரயார்த்ய: ; வடபராவாதிரமேவைஷாவஸ்தாயா ஷூவஷ்த ஸைவ ஏதாத்ருஷ்யா அநத்யாநி நாமயெயாநி வ்யவஹாரார்த்யாதாநஶ்ச । தயாபி ஸைவக்ரு ஏதாதுஷ்டா ஏதாவத்யேகமேவ நாநாஸம்ஸ்தாந நாநாநாம யெயாஹ்யம் நாநாவ்யவஹாரேணாஹ்யத உபத்யதமேவ ஸத்யஇத்யநேந

---

மாகிற அவஸ்தையில இருககுமபொழுது ஒரு பெயரையும ஒரு ரூபததையும உடைத தாயிருககினறது, அநத மணணே, குடம மடக்கு முதலிய அவஸதையிலிருககும பொழுது வேறு பெயாகளையும வேறு ரூபங்களையும உடைததா யிருககினறது அபபடி இருககையிலும, எல்லா அவஸதைகளிலும, மண எனனும ஒரே தரவயம பலவித ரூபங களாலும பலவித பெயாகளாலும பலவித வயவஹாரததிறகாக ஸபாசிககபபடுகிறது என பதே பரமாாததமாதலால, ஒனறின ஜஞானததால மறறொனறின ஜஞானததின் ஸமபவம உபபநநமாகும எனபது நிரூபிககப்படடதாகினறது இவவிடததில எவவித

---

ஸ்ப்ருஶ்யதே ; ஏதாத்ருஷ்ய ஸைவ நாமரூபவ்யவஹாரவதீ இத்யர்த்த: । வாாததை யால் வயவஹாிக்கும பொருட்டு மண பிணடததால பெயரும ரூபமும தொடபபடுகின் றன , அதாவது-மண பிணடமே வேறு நாமரூபஙகளை அடைகினறது எனறு சொன்ன தாயிறறு. ‘ஸூர ஹ்யதே’ எனபதறகு ‘ஸ்ப்ருஶ்யதே’ ‘தொடபபடுகினறது’ எனறு அாததம.

விஜ்ஞாநமேவைஷ—பெயரும ரூபமும மாறினால வேறொரு தரவயம் உண டாகினறது எனறு வைசேஷிக மதஸதாகள சொலலுகிறாாகள. அபபடி இலலை; பெயரும் ரூபமும மாறின போதிலும வஸது ஒனறே என்று சொல்லுகிறாா நம ஸ்ரீ பாஷ்யகாரா.

ஒனறின ஜஞானததால் மறறவைகளின ஜ்ஞானம் ஏறபடுகினறது என்பது பரகரணம. ‘காரணாவஸதையும காரயாவஸதையும வேறு எனறாலும, வஸது ஒன்றே’ எனறு சொலவதால, ஒரு அவஸதையிலுளள வஸதுவின ஜஞானததால மற்றொரு அவஸ்தையி லுளள அதே வஸதுவின ஜஞானம ஏறபடடதாகினறது எனபது ஸிததிககிறது. ஆகை யால, இநத அாததமே பரகரணததிறகு ஒததது இநத அாததததில பேத நிஷேத மொனறும ஏறபடவிலலை யாகையால, இநத வாகயததிறகு பேத நிராஸ பரத்வம இலலை எனபது ஸிததிககினறது

அவிஅ—பேத நிராஸ பரதவம இலலை எனபதற்கு மற்றொரு காரணம சொலலுகிறாா.

அந்ருதஜ்ஞானேநாந்ருத ஜ்ஞாநஸம்பந்தோ நிரூபித: । நாத்ர கிஞ்சிதஸத்ய நிர்திஷ்யத இதி பூர்வமேவாயமர்த்த: ப்ரபஞ்சித: ।

அபி ச "யேநாச்ருதம் ச்ருதம் பவதி" இத்யாதிநா ப்ரஹ்மவ்யதிரிக்தஸ்ய ஸர்வஸ்ய மித்யாத்வம் ப்ரதிஜ்ஞாதம் சேத், "யதா ஸோம்யைகேந ம்ருத்பிண்டேந" இத்யாதி த்ருஷ்டாந்தா: ஸாத்யவிகலா: ஸ்யு:, ரஜ்ஜுஸர்பாதிவத் ம்ருத்திகாவிகாரஸ்ய கடசராவாதே: அஸத்யத்வம் ச்வேதகேதோ: சுச்ரூஷோ: ப்ரமாணாந்தரேண யுக்த்யா வா அஸித்தேரிதி । ததபி ஸாதயிஷிதமிதி சேத் யதேதி த்ருஷ்டாந்ததயா உபாதாநம் ந கடதே ।

"ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம்" இத்யத்ர "ஸதேவ" "ஏகமேவ" இத்யவதாரணத்வயேந "அத்விதீயம்" இத்ய

---

விசேஷமும் நிஷேதிக்கப்படவில்லை என்னும் அர்த்தம் ஏற்கெனவே விஸ்தாரமாக உபபாதனம் செய்யப்பட்டிருக்கின்றது.

அபி ச.........கடதே—தவிரவும், "யேநாச்ருதம் ச்ருதம் பவதி" என்பது முதலான வாக்யங்களால், 'ப்ரஹ்மத்தைத் தவிர மற்ற எல்லாம் பொய்' என்பது ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டிருக்கின்றது என்னில், "யதா ஸோம்யைகேந ம்ருத்பிண்டேந" என்பது முதலான த்ருஷ்டாந்தங்கள் நிஷ்ப்ரயோஜனமாகிவிடும். ஏனென்றால், உபதேசம் செய்யப்படும் ச்வேதகேதுவுக்கு, ப்ரத்யக்ஷமாகிற ப்ரமாணத்தாலாவது யுக்தியினாலாவது, மண்ணின் விகாரமாகிற குடம் மடக்கு முதலியவைகள், கயிற்றில் தோன்றும் ஸர்ப்பம்போல, அஸத்யங்கள் என்று ஒருபொழுதும் ஏற்படவில்லை. அப்படி ஏற்படுவதே இவ்விடத்தில் செய்யப்படும் உபதேசத்தின் தாத்பர்யம் என்றால், "யதா" என்று த்ருஷ்டாந்தமாக எடுத்துக் காட்டுவது ஒவ்வாது.

ஸதேவ.........பரிஹரதி—ஒருகால் "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம்" என்னும் வாக்யத்தில் காணப்படும் 'ஸதேவ' 'ஏக

---

ஸதேவ—ஒருகால் இந்த வாக்யம் பேதத்தை நிராகரிக்கின்றதோ என்று சங்கித்துப் பரிஹரிக்கிறார்.

அவதாரண—'ஏவ' என்பதற்கு அவதாரணம் என்று பெயர்.

தேந ச ஸந்மாத்ராதிரேகி ஸஜாதீய விஜாதீய ஸ்வகத விசேஷா நிஷித்தா இதி ப்ரதீயத இதி சேத் நைததேவம் । கார்யகாரணபாவாவஸ்தாத்வயாவஸ்திதஸ்ய ஸர்வஸ்ய வஸ்துநஃ காரணாவஸ்தாவஸ்திதஸ்ய ஜ்ஞாநேந கார்யாவஸ்தாவஸ்திதஸ்யாபி ஸர்வஸ்ய ஜ்ஞாததாம் ப்ரதிஜ்ஞாய ததுபபாதயிஷ்யந் ச்வேதகேதோ ப்ரஜ்ஞாதம் ஸர்வஸ்ய ப்ரஹ்மகாரணத்வம் ச வக்தும் "ஸதேவ ஸோம்யேதமக்ர" இத்யாரப்யதே । "இதம்" "அக்ரே" "ஸதேவ" "ஆஸீத்" இதி । "அக்ரே" இதி காலவிசேஷஃ । "இதம்" சப்தவாச்யஸ்ய ப்ரபஞ்சஸ்ய ஸதாபத்திரூபாம் க்ரியாம் ஸத்ரவ்யதாம் ச வததி । "ஏகமேவ" இதி அஸ்ய நாநாநாமரூபவ

---

ஏவ' ஆகிய இந்த இரண்டு அவதாரணங்களாலும், 'அத்விதீயம்' என்னும் பதத்தாலும், கேவலம் ஸத்தாகமாத்ரம் இருக்கும் வஸ்துவில் ஸஜாதீயம் விஜாதீயம் முதலான பேதங்களெல்லாம் நிஷேதிக்கப்படுவனவாகத் தோன்றுகின்றது என்னில், அதுவும் உபபந்நமாக மாட்டாது. ஏனென்றால், இந்த வாக்யம், 'ப்ரபஞ்சத்தில் தென்படும் ஸகல வஸ்துக்களுக்கும் ப்ரஹ்மமே காரணம்' என்று விளக்குவதற்கன்றோ ஆரம்பிக்கப்பட்டது? கார்யாவஸ்தையிலும் காரணாவஸ்தையிலும் இருக்கிற ஒரு வஸ்துவின் விஷயத்தில், ஒரு அவஸ்தையில் இருப்பதை அறிந்து விட்டால், வஸ்து ஒன்றாக இருக்கிறபடியால் மற்றொரு அவஸ்தையில் இருப்பதும் அறியப் பட்டதாகி விடுகின்றது என்பதை, த்ருஷ்டாந்தத்தைக் கொண்டு உபபாதித்து விட்டு, பிறகு, ச்வேதகேதுவுக்குத் தெரியாமல் இருக்கும் ப்ரஹ்ம காரணத்தன்மையைச் சொல்லப் பிதா ஆரம்பிக்கிறார். இந்த வாக்யத்தில் காணப்படும் "இதம்", "அக்ரே", "ஸதேவ" "ஆஸீத்" என்னும் பதங்களைக் கவனிக்க வேண்டும். "அக்ரே" என்னும் பதத்தால் கால விசேஷம் ஒன்று குறிக்கப் படுகின்றது, "இதம்" சப்தத்தால் சொல்லப்படும் ப்ரபஞ்சத்திற்கு ஸதாபத்தி ரூபமான ஒரு க்ரியா விசேஷத்தை "ஆஸீத்" என்னும் சப்தம் குறிக்கின்றது, அந்த ப்ரபஞ்சம் ஸத்தான த்ரவ்யமே என்பதை "ஸதேவ" என்பது சொல்லுகின்றது; அந்தக் கால விசேஷத்தில் இந்த ப்ரபஞ்சம்

---

'இதம்' 'அக்ரே' 'ஸதேவ' 'ஆஸீத்' இந்தச் சப்தங்களுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விசேஷத்தைக் குறிக்கின்றது என்பதைக் காண்பிக்க இவைகள் இவ்விடத்தில் க்ரஹிக்கப்படுகின்றன.

விகார வ்யாஹரணாநி । ஸதவிபாகாவஸ்தே அஸ்ய ஜகத:, ஸ ஏவோ-பாதாநதா வ்யக்தீக்ருதா பவதி । அந்யதா உபாதாநகாரணஸ்ய ஸ்வஸ்ய நிமித்தாதிஷ்டாத்ரபேக்ஷோபாதாநேபி, ஸர்வ விலக்ஷண ஸ்வபாவஸ்ய ஸர்வஜ்ஞஸ்ய ப்ரஹ்மண: ஸர்வசக்தியோகாந்ந விருத்யத இதி அத்விதீய

---

பல விதங்களான பெயர் ரூபம் இன்றிக்கே இருந்தது என்பது "ஸதேவ" என்பதால் ஏற்படுகிறது இப்படி அர்த்தம் ப்ரதிபாதிதமாகி விட்டால், 'இந்த ஜகத் முழுமைக்கும் அந்த ஸத்தே உபாதான காரணம்' என்பது விளக்கினதாக ஆகிவிடுகின்றது. 'அத்விதீயம்' என்னும் சப்தம், 'இந்த ஜகத்துக்கு அந்த ஸத்தைத் தவிர்த்து வேறு நிமித்த காரணம் இல்லை' என்பதைச் சொல்லுகின்றது. லோகத்தில் காணப்படும் கார்யங்களுக்கு உபாதான காரணம் ஒன்றாகவும் நிமித்தகாரணம் மற்றொன்றாகவும் தென்பட்ட போதிலும், ஸத் என்னும் ஸர்வஜ்ஞமான ப்ரஹ்மம், மற்றை எல்லா வஸ்துக்களைக் காட்டிலும், விலக்ஷணமான ஸ்வாமியாக இருக்கிறபடியால், விலக்ஷணமான ஸ்வாமமாகிற ஸர்வசக்தியின் சேர்க்கையும் அதற்கு விருத்தமாக மாட்டா

---

ஸதவிபாகாவஸ்தே—ஒரே வஸ்துவே பூர்வத்தில் அவிபக்தங்களான நாம ரூபங்களை உடைத்தாயிருக்கின்றதென்றும், பிறகு விபக்தங்களான நாம ரூபங்களை உடைத்தாயிருக்கின்றதென்றும் உபபாதிக்கப்பட்டால்

உபாதாநதா—உபாதான காரணமாக இருக்கும் தன்மையானது ஒரு வஸ்துவுக்குப் புதிய அவஸ்தை ஒன்று ஸம்பவிக்கப்போகின்றது என்றிருக்கையில், அந்த வஸ்துவுக்கு இருக்கும் பழைய அவஸ்தையின் சேர்க்கையே உபாதான காரணமாக இருக்கும் தன்மையாகும். மண்ணுக்குப் பிண்டமாகிற அவஸ்தை பூர்வாவஸ்தை, குடம் மடக்கான அவஸ்தைகள் உத்தராவஸ்தைகள், ஆகையால் குடம் மடக்கு முதலியவைகளைக் குறித்து மண் உபாதான காரணம். "ஸாவஸ்தவஸ்துநோ விஶேஷவத: ப்ராகவஸ்தா யோகம் உபாதாநத்வம்"

ஸர்வ விலக்ஷணஸ்வாபஸ்ய—குடத்திற்கு மண் உபாதான காரணமாகவும் குயவன் நிமித்தகாரணமாகவும் இருப்பது போல, ஜகத்துக்கும் உபாதானகாரணம் ஒன்றாகவும் நிமித்தகாரணம் மற்றொன்றாகவும் இருக்க வேண்டாவோ? என்னில், வேண்டுவதில்லை என்று உத்தரம் சொல்லுகிறார். ஜகத்காரணமாக இருக்கும் ப்ரஹ்மம், லோகத்தில் தென்படும் வஸ்துக்கள் எல்லாவற்றையும் காட்டிலும் விலக்ஷணமாக இருப்பதால், அதன் ஸ்வாமமும் விலக்ஷணமாக இருக்கக்கூடும், அதற்கு ஸ்வாபாவிகமான சக்தியும் உபபந்நமே. ஆகையால், அதுவே தன்னுடைய ஸ்வசக்தியைக் கொண்டு உபாதான காரணமாகவும் நிமித்த காரணமாகவும் இருக்கக்கூடுமன்றோ? "விலக்ஷணஸ்வபாவஸ்ய விலக்ஷண ஶக்தியோகம் உபபந்நம்".

வத³த்³விதீயாதி⁴ஷ்டா²தாரம் வாரயதி । ஸர்வஶக்தியுக்தஸ்யைவ ப்³ரஹ்மண: கார்யத்வம் ச்ருதய: ப்ரத²மமுபாதா³நகாரணத்வம் ப்ரதிபாத்³ய நிமித்தகாரணத்வமபி ததை³வேதி ப்ரதிபாத³யந்தி, யதே²யம் ச்ருதி: ।

---

தன்றே? அப்படி ப்ரஹ்மத்திற்கு ஸர்வசக்தியின் சேர்க்கை இருக்கிறபடியாலேயே, சில ச்ருதிகள் அந்த ப்ரஹ்மம் உபாதான காரணம் என்பதை முதலில் ப்ரதிபாதித்துவிட்டு, பிறகு அதுவே நிமித்தகாரணமாகவும் இருக்கின்றது என்பதை ப்ரதிபாதிக்கின்றன. இந்த ச்ருதி அவைகளுள் ஒன்று. மற்றும் சில ச்ருதிகள், ப்ரஹ்மம் நிமித்தகாரணம் என்பதை ஒத்துக்கொண்டு, 'அதற்கே உபாதான காரணத்வம் எப்படி ஸங்கதமாகும்?'

---

அதிஷ்டாதாரம்—மற்றொரு நிமித்த காரணத்தை. "அத்விதீயம்" என்பதற்கு 'இரண்டாவது இல்லாதது' என்பது பொருள். அதாவது, வேறொரு நிமித்த காரணம் இல்லை என்று அர்த்தம்.

ஸர்வசக்தியுக்தஸ்யைவ— இவ்விடத்தில் வேறொரு சங்கை செய்து கொண்டு அதற்கு ஸமாதானம் சொல்லுகிறார் ப்ரஹ்மம் என்பது சேதந வஸ்து வானதால், அது ஒரு கார்யத்திற்குக் காரணம் என்று சொல்லும் இடத்தில், முதலில் அதன் நிமித்த காரணத்வத்தைச் சொல்லிவிட்டுப் பிறகு உபாதான காரணத்வத்தைச் சொல்வதன்றே யுக்தமாகும்? இவ்விடத்தில் முதலில் உபாதான காரணத்வத்தையும் பிறகு நிமித்த காரணத்வத்தையும் இந்த ச்ருதி வாக்யம் சொல்லுகின்றது என்று சொன்னால், அது அயுக்தமாகின்ற தாதலால் அந்த அர்த்தம் இந்த ச்ருதியின் அர்த்தமாகமாட்டாது என்பது தான் இவ்விடத்திற் செய்யப் படும் சங்கை.

இதற்கு ஸமாதானம் என்னவென்றால்—ப்ரஹ்மம் ஜகத்திற்கு உபாதான காரணம் என்பதை முதலில் ப்ரஸ்தாவிப்பதில் எவ்வித தோஷமுமில்லை என்பதே. ப்ரஹ்மத்தை ப்ரதிபாதிக்கும் ச்ருதி வாக்யங்களைப் பரிசீலநம் செய்து பார்த்தால், அவை ஜகத்தைக் கொண்டு ப்ரஹ்மத்தை ப்ரதிபாதிக்கிறவைகளென்றும் ப்ரஹ்மத்தைக்கொண்டே ப்ரஹ்மத்தை ப்ரதிபாதிக்கிறவைகளென்றும் இரு வகைப்படுகின்றன வென்பது ஏற்படும். இவைகளுள் முதல் வகையைச் சேர்ந்தவை, ப்ரஹ்மத்தின் உபாதான காரணத் தன்மையை முதலில் ப்ரஸ்தாவித்து, பிறகு நிமித்த காரணத் தன்மையைப் பற்றிப் பேசும்; இரண்டாவது வகையைச் சேர்ந்தவை, முதலில் நிமித்த காரணத் தன்மையைச் சொல்லி பிறகு உபாதான காரணத் தன்மையை விளக்கும் "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்" இத்யாதியான ஸத்வித்யா வாக்யம் இரண்டாவது வகையைச் சேர்ந்தது, "கிம் ஸ்வித்வநம்" இத்யாதியாக மேல் உதாஹரிக்கப்படும் வாக்யம் முதல் வகையைச் சேர்ந்தது இப்படி இரண்டு விதமாகவும் ச்ருதி வாக்யங்கள் காணப்படுகிறபடியால்

அத்ராபி ச்ருதயோ ப்ரஹ்மணோ நிமித்தகாரணத்வ மநுஜ்ஞாய, அஸ்யைவ உபாதாநதாமபி கதமிதி பரிசோத்ய, ஸர்வசக்தியுக்தஸ்ய உபாதாநகாரணம் ததிதராசேஷோபகரணம் ச ப்ரஹ்மைவேதி பரிஹரந்தி । "கிம் ஸ்வித் வநம் க உ ஸ வ்ருக்ஷ ஆஸீத்யதோ த்யாவாப்ருதிவீ நிஷ்டதக்ஷு: । மநீஷிணோ மநஸா ப்ருச்சதேது தத்யதத்யதிஷ்டத்புவநாநி தாரயந் । ப்ரஹ்ம வநம் ப்ரஹ்ம ஸ வ்ருக்ஷ ஆஸீத்யதோ த்யாவாப்ருதிவீ நிஷ்டதக்ஷு: । மநீஷிணோ மநஸா விப்ரவீமி வோ ப்ரஹ்மாத்யதிஷ்டத்புவநாநி தாரயந்" இதி ஸாமாந்யதோ த்ருஷ்டேந விரோதமாசங்க்ய ப்ரஹ்மண: ஸர்வவிலக்ஷணத்வேந பரிஹார உக்த: । அத:, "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்" இத்யத்ராபி 'அக்ர' இத்யாத்யநேக

---

என்பதைச் சங்கித்து, 'ஸர்வ சக்தியுடன் கூடிக்கொண்டிருக்கிறபடியால் உபாதான காரணமாகவும் மற்றை வேறு ஸகல உபகரணமாகவும் அதுவே இருக்கக்கூடும்' என்று அந்தச் சங்கையைப் பரிஹரிக்கின்றன. "கிம்ஸ்வித் வநம்" இத்யாதியான ச்ருதி வாக்யம் இவைகளுக்கு உதாஹரணம். ஸாமாந்யமாகக் காணப்படும் விரோதத்தைச் சங்கித்துக்கொண்டு, 'ப்ரஹ்மம் மற்றை எல்லா வஸ்துக்களைக்காட்டிலும் விலக்ஷணமாக இருக்கிறபடியால், அது விரோதமாகமாட்டாது' என்று, இந்த சருதி வாக்யங்கள் அந்தச் சங்கையைப் பரிஹரிக்கின்றன. ஆகையால், "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்" என்னும் வாக்யத்திற்குக் கீழ்ச் சொல்லப்பட்டிருப்பதே உபபந்நமான அர்த்தம். "அக்ர" என்பது முதலான அநேக பதங்கள், ப்ரஹ்மத்திற்கு அநேக விசேஷங்களை ப்ரதிபாதித்துக்கொண்டு

---

ப்ரக்ருத ச்ருதிக்குக் கீழ் விவரிக்கப்பட்டுள்ள அர்த்தத்தை அநுபபந்நமென்று சொல்வது யுக்தமாகமாட்டாது.

"கிம் ஸ்வித்வநம்" இத்யாதி சருதி வாக்யங்களின் பொருள் என்னவென்றால். "ஹே மநீஷிகளே! த்யாவா ப்ருதிவீ அடங்கியுள்ள இந்த ப்ரபஞ்சமாகிற கட்டிடத்தை எந்த மரத்தைக்கொண்டு ஈச்வரன் நிர்மாணம் செய்தான்? எந்தக் காட்டிலிருந்து அந்த மரம் கொண்டு வரப்பட்டது? இந்த லோகங்களெல்லாவற்றையும் தரித்துக்கொண்டு அவன் அவைகளுக்கு அதிஷ்டாதாவாக இருக்கிறானன்றோ?" இவ்விதமாகவா நீங்கள் ப்ரச்நம் செய்கிறீர்கள்? 'இந்த ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டிக்கு ப்ரஹ்மமே மரம். ப்ரஹ்மமென்கிற காடே அந்த மரத்திற்கு ஆதாரம். இம்மாதிரியே புவநங்களைத் தரித்துக்கொண்டு அந்த ஈச்வரன் அவைகளை அதிஷ்டித்து வருகிறான்' என்று நான் உங்களுக்குப் ப்ரத்யுத்தரம் சொல்லுகிறேன்."

விஶேஷா ப்³ரஹ்மண: ஶ்ருதிவாதி³தா: । ஸர்வஶப்³தை³ விஶேஷ நிஷேத⁴வாதி³
கோடிஷ்வபி ஶப்³தோ³ ந த்³ருஶ்யதே, ப்ரத்யுத ஜக³த்³ப்³ரஹ்மணோ: கார்யகா
ரண பா⁴வஜ்ஞாபநாய, 'அக்³ரே' இதி காலவிஶேஷ ஶப்³த³:, 'ஆஸீத்'
இதி க்ரியாவிஶேஷ:, ஜக³து³பாதா³நதா ஜக³ந்நிமித்ததா ச, நிமித்தோபாதா³
நயோரைக்யம் ப்³ரஹ்மணைவேதி தத்³வேத்³ய ப்³ரஹ்மண ஸர்வஶக்தி யோக³ஶ்ச
இத்யவிஜ்ஞாதா ஸஹஸ்ரஶோ விஶேஷா அத்ர ஶ்ருதிவாதி³தா: ।

---

காணப்படுகின்றன. 'ஸர்வ சப்தங்களும் விசேஷங்களை நிஷேதிக்கின்றன' என்று நீங்கள் சொல்வது போல ஒரு சப்தம்கூட காணப்படவில்லை, ப்ரத்யுத, 'ப்ரஹ்மம் என்பது காரணம் ஜகத் அதன் கார்யம்' என்பதை ஜ்ஞாபிக்கும் பொருட்டு கால விசேஷத்தைக் குறிக்கும் "அக்³ரே" (முதலில்) என்னும் சப்தமும், க்ரியா விசேஷத்தைக் குறிக்கும் "ஆஸீத்" (இருந்தது) என்னும் சப்தமும் காணப்படுவதுடன், ப்ரஹ்மம் ஜகத்திற்கு உபாதான காரணமாகவும் நிமித்த காரணமாகவும் இருக்கும் தன்மையும், அப்படி ஒரே ப்ரஹ்மமே நிமித்த காரணமாகவும் உபாதான காரணமாகவும் இருக்கின்றது என்பதைக் காண்பிப்பதால் ஏற்படும் ப்ரஹ்மத்தினுடைய ஸர்வ சக்தித்வமும், இன்னும் அறியப்படாமல் இருக்கும் இவை போன்ற ஆயிரக் கணக்கான மற்றை விசேஷங்களும் இந்த ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கின்றன

---

இவ்விடத்தில் 'வ்ருக்ஷ:' (மரம்) என்பது உபாதான காரணத்தைக் குறிக்கின்றது. 'எப்படி மரத்தைக்கொண்டு ஜனங்கள் வீட்டைக் கட்டுகிறார்களோ, அப்படி எந்த மரத்தை (அதாவது—உபாதான காரணத்தை)க்கொண்டு ப்ரஹ்மம் ஜகத்தைச் செய்தது?' என்பது ப்ரச்னம். அப்படி உபாதான காரணமாக இருக்கும் வ்ருக்ஷத்திற்கு ஆதாரமாக இருப்பது 'வநம்' (காடு), இந்த ஜகத்தின் ஸ்ருஷ்டியில் அந்த ஆதாரம் எது? என்பதும் ப்ரச்னம். இவையெல்லாம் ப்ரஹ்மமே என்பது ப்ரத்யுத்தரம். 'த்³யாவாப்ருதி²வீ' என்பது ஜகத் முழுவதையும் குறிக்கின்றது. 'நிஷ்டதக்ஷு:' என்பதற்கு 'நிர்மாணம் செய்தான்' என்பது பொருள். ஒருமையாக ப்ரயோகம் செய்யாமல் பன்மையாகச் செய்திருப்பது வேதத்தின் ஸ்வாதந்த்ரயம் இந்த ஜகத் ஸ்ருஷ்டியில், அதிகரணம், உபாதானம், அவைகளைத் தவிர்த்த மற்றை ஸகலமான காரக வாக்கம் எல்லாம் ப்ரஹ்மமே என்று சொன்னதாயிற்று.

யதோ வாஸ்து வகாய-காரண ஹாவாதி ஜ்ஞாவநே ஶ்ருவ்யதிதம்,

---

யத: ..... ....பொருள்:—இந்த ஸத் வித்யா ப்ரகரணமானது, ஜகத்துக்கும

---

யதோ வாஸ்து காய-காரண ஹாவாதி ஜ்ஞாவநே—ஸத்வித்யா ப்ர கரணத்தில், சருதி, "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்" (பரமார்த்தமாக இருக்கும் இதுவே முன்காலத்தில ஒன்றாகவே இருந்தது) என்று சொல்லிவிட்டு, அடுத்த வாக்யத்தில பின வருமாறு வேறொரு மதத்தை ப்ரஸ்தாவித்து அதை ப்ரதிக்ஷேபிக்கின்றது தத்தைக ஆஹு: "அஸதேவேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம் தஸ்மாதஸத: ஸஜ்ஜாயத" | "குதஸ்து கலு ஸோம்யைவம் ஸ்யாத் ?" இதி ஹோவாச, "கதமஸத: ஸஜ்ஜாயேத ?" | ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத் | 'முன காலத்தில இது அஸத்தாகவே இருந்தது, அதிலிருந்தே ஸத் உண்டாயிற்று' என்று சிலா சொல்லுகிறார்கள். அது எப்படி உபபன்னமாகும்? அபாரமார்த்திகமான த்ரவ்யத்திலருந்து பாரமார்த்திகமான த்ரவ்யம் எப்படி உண்டாகும்? என்பது இதன பொருள். இந்த வாக்யங்களுக்கு இதற்குமுன வ்யாக்யானம் செய்யப்படவில்லை யாதலால, இவ்விடத்தில, ஸ்ரீபாஷ்யகாரா அவைகளுக்கு வ்யாக்யானம் செய்யவேணடுமென்று திருவுள்ளம் பற்றி வ்யாக்யானம் செய்கிறா

இவ்விடத்திற் செய்யப்படும் உபபாதனத்தை நன்றாக அறிவதன பொருட்டு, அந்த உபபாதன ஸம்பந்தங்களான சில அம்சங்களை நாம பூர்வம தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம். கார்ய காரண வஸ்துக்களின தத்வத்தை விசாரிக்குமவாகள், ஸத் கார்ய வாதிகளென்றும அஸத்கார்ய வாதிகளென்றும இருவகைப்படுவார்கள் காரண வஸ்துவை ஸத்யமென்று (அதாவது—பரமார்த்தமென்று) ஒத்துக கொள்பவர்கள் ஸத்கார்ய வாதிகள், அதை அஸத்தென்றும ஸகலமான கார்ய வஸ்துக்களும பூர்வம இல்லாமலே புதிதாக உத்பத்தியை அடைகின்றன வென்றும சொல்பவர்கள் அஸத்கார்ய வாதிகள். அத்வைதிகளும விசிஷ்டாத்வைதிகளும காரண வஸ்துவைப் பரமார்த்தமென்று ஒத்துக்கொள்ளுகிற படியால அவர்களிருவரும ஸத்கார்ய வாதிகள் தாம், ஆனால், விசிஷ்டாத்வைதிகள் கார்ய வஸ்துவான ப்ரபஞ்சமும பரமார்த்த மென்று சொல்லுகிறார்கள், அத்வைதிகள் 'அது கேவலம ப்ரமத்தால ஏற்படுகின்றது, ஆகையால அது அபரமார்த்தமே' என்று சொல்வார்கள். இவர்கள் இருவருக்கும இம்மாதிரி கொள்கைகளைக் கொள்ள, சருதியே ப்ரமாணம். சருதி ப்ரமாணயத்தை அநாதரித்து, கேவலம அநுமானத்தையே பலமான ப்ரமாணமாகக் கொண்டு தத்வ வாதம செய்பவர்கள் சிலருண்டு; ஸாங்க்யர்கள்,

அத ஏவ 'ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்' இத்யாரப்ய அஸத்கார்யவாத நிஷேதஸ்ச க்ரியதே। "குதஸ்து கலு ஸோம்யைவம் ஸ்யாத்?"

---

ப்ரஹ்மத்துக்கு முன்னால் கார்ய காரண பாவம் முதலான தன் பரமார்த்தத் தன்மையை ஜ்ஞாபிக்க ப்ரவ்ருத்திக்கிறபடியால், இந்த ப்ரகரணத்தில் கார்ய காரண பாவத்தின் அஸத்யத் தன்மையை விவரிக்கும் அஸத் கார்ய வாதம், "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்" (ஸ்ருஷ்டிக்கு முன் காலத்தில் அபரமார்த்தமாக இருந்தது) என்னும் வாக்யத்தால் ப்ரஸ்தாவிக்கப்பட்டு நிஷேதிக்கப்படுகின்றது. "குதஸ்து கலு ஸோம்யைவம் ஸ்யாத்?" (இது எப்படி?), அதாவது—'முன் அபரமார்த்தமாக

---

வைசேஷிகர்கள், பௌத்தர்கள் முதலான தத்வ வாதிகள் இந்த வகுப்பைச் சேர்ந்த வர்கள். இவர்களுள் ஸாங்க்யர்கள், 'அசேதநமான ப்ரதாநம் என்று சொல்லப்படும் வஸ் துவே ஜகத்காரணம்' என்று சொல்வார்கள், ஈச்வரன் ஒருவன் உண்டு என்று அவர்கள் ஒத்துக் கொள்ளுகிறார்களில்லை ஆனாலும், அவர்களால் ஒத்துக்கொள்ளப்படும் ப்ரதாநம் என்னும் காரண வஸ்துவைப் பரமார்த்த மென்றே அவர்கள் சொல்லுகிறபடியால், அவர்களும் ஸத் கார்ய வாதிகளாகத் தட்டில்லை வைசேஷிகர்கள், தர்க்கபலத்தைக் கொண்டு ஈச்வரன் என்று ஒருவனை ஒத்துக் கொண்ட போதிலும், 'ப்ரபஞ்சம் முழுவ தும் பூர்வம் இல்லாமலே பிறகு புதிதாக உத்பந்நமாகி இருக்கின்றது' என்று வாதிக்கிற படியால், அவர்கள் அஸத் கார்யவாதிகளைச் சேர்ந்தவராகிறார்கள். பௌத்தர்களும், அம் மாதிரியே, 'காரணம் என்பது அபரமார்த்தம்' என்று சொல்லுகிறபடியால், அஸத்கார்ய வாதிகளே, ஆனால், இவர்கள் 'கார்ய வஸ்துவும் அபரமார்த்தம்' என்று வாதிக்கிறபடி யால், இவர்களுக்கும் வைசேஷிகர்களுக்கும் வாசி உண்டு

இவ்விடத்தில் ப்ரதிக்ஷேபிக்கப்படும் மதம் வைசேஷிகர்களைக் குறிக்கின் றது என்று ஸ்ரீராமாநுஜாசார்யரும், பௌத்தர்களுள் ஸர்வ சூந்ய வாதிகளான மாத்யமி கர்களைக் குறிக்கின்றது என்று ஸ்ரீ சங்கராசார்யரும் சொல்லுகிறார்கள். வைசேஷி கர்கள் மாத்யமிகர்கள் இந்த இருவர்களுடைய மதங்களின் கண்டநமும் அத்வைதிகள் விசிஷ்டாத்வைதிகள் இருவர்களுக்கும் இஷ்டம்; ஆனால் எவர்களுடைய கண்டநம் ப்ரகரணத்திற்கு ஒத்திருக்கின்றது என்பதைப் பார்த்தால், விசிஷ்டாத்வைதிகள் சொல் வது போல், வைசேஷிகர்களுடைய கண்டநமே ஸங்கதமாகத் தோன்றும் என்பது தான் இவ்விடத்திற் செய்யப்படும் உபபாதநம்.

இதி। 'அபரமார்த்தாத் உத்பத்திர்நிர்ஹேதுகா' இத்யர்த்த:। தத்ரைவோபபாதயதி "கத²மஸத: ஸஜ்ஜாயேத" இதி। 'ஸத உத்பந்நஸ்ஸாத்மகைவ ஹவதி' இத்யர்த்த:, யதா² தந்தூத்பந்நம் படாதிகம் தந்தூநாத்மகம் ஸத உத்பத்திர்நாம வ்யவஹார விஶேஷஹேதோ: கஸ்யசித் அவஸ்தாவிஶேஷ யோக:।

---

இருந்த ஒன்றிலிருந்து மற்றொன்று உத்பன்னமாகின்றது என்றால், அந்த உத்பத்தி ஆச்ரய மற்றதாக வன்றோ ப்ரஸங்கிக்கும்?" என்று சொன்னதாயிற்று இந்த அர்த்தமே "கத²மஸத: ஸஜ்ஜாயேத" (எப்படி அபரமார்த்தமான ஒன்றிலிருந்து பரமார்த்தமான மற்றொன்று உண்டாகும்?) என்பதால் உபபாதிக்கப்படுகின்றது. அதாவது—'அபரமார்த்தமாக இருக்கு மொன்றிலிருந்து உத்பன்னமாகும் மற்றொன்று, அபரமார்த்தமாகவேயன்றோ இருக்கவேண்டும்? மண்ணிலிருந்து உத்பன்னமாகும் குடம் முதலானவை மண்ணாகவே இருப்பன போல' என்று சொன்னதாயிற்று 'பரமார்த்தமாக இருக்கு மொன்றிலிருந்து மற்றொன்று உத்பன்னமாகின்றது' என்று வ்யவஹரிக்குமிடத்தில் சொல்லப்படும் 'உத்பத்தி' என்பதற்கு, 'வ்யவஹார விசேஷத்திற்குக் காரணமாயிருக்கும் ஒரு அவஸ்தா விசேஷத்தின் சேர்க்கை' என்பது பொருள்.

---

ஸத்த்வ—இந்த ஸத்வித்யையில ஸத்கார்ய வாதமே ப்ரஸக்தமாயிருக்கிற படியால் அஸத் கார்யவாத நிரஸனம் இவ்விடத்திற்செய்யப்படவேண்டும் என்பது குறிப்பு.

உத்பத்திர்ஹேதுகா—உத்பத்தி என்பது ஆச்ரயமற்றதாகிவிடும் இவ்விடத்தில 'ஹேது' என்பதற்கு 'ஆச்ரயம்' என்பது பொருள். பரமார்த்தமான ஒரு த்ரவ்யத்துக்கு வேறு ஒரு அவஸ்தையின் சேர்க்கை உண்டாவதே உத்பத்தி என்று சொல்லப்படுகிறபடியால் உத்பத்தி நிராச்ரயமாக இருப்பது அஸங்கதமாகும் என்பது தாத்பர்யம்.

கத²மஸத: ஸஜ்ஜாயேத?—அஸத்திலிருந்து எப்படி ஸத் உண்டாகும்? அதாவது—அஸத் எப்படி ஸத்தாக மாறும்? என்பது கருத்து. மண்ணே குடமாக மாறுவதை, 'மண்ணிலிருந்து குடம் உண்டாகின்றது' என்று சொல்வது போல் இவ்விடத்தில ப்ரயோகம்

ஸத உத்பந்நஸ்ஸாத்மகைவ ஹவதி—காரணத்தில இருக்கும் குணமே காரியத்திலும் இருத்தல் வேண்டும் என்பது வைசேஷிகர்களின் மதம். நூலில் இருக்கும் வெண்மை வஸ்த்ரத்திலும் இருப்பது போல

ஸாதகமுக்தம் ஹவதி—ஏகமேவ காரணபூதம் த்ரவ்யமவஸ்தாந்தர யோகேந கார்யமித்யுச்யத இதி। ஏக விஜ்ஞாநேந ஸர்வ விஜ்ஞாநம் ப்ரதிபிபாதயிஷிதம், ததஸத்கார்யவாதே ந ஸேத்ஸ்யதி, ததா ஹி—நிமித்த ஸமவாய்யஸமவாயி ப்ரப்ருதிபி: காரணைரவயவ்யாக்யம் கார்யம் த்ரவ்யாந்தரமேவோத்பத்யத இதி காரணபூதாத் தந்தோ: கார்யஸ்ய வஸ்த்வந்தரத்வாத், தஜ்ஜ்ஞாநேநாஸ்ய ஜ்ஞாததா கதமபி ந ஸம்பவதீதி। 'கதமவயவி த்ரவ்யாந்தரம் நிரஸ்யதே?' இதி சேத், 'காரண ததாவஸ்தாந்தர யோகஸ்ய த்ரவ்யாந்தரோத்பத்திவாதிந: ஸம்ப்ரதிபந்ந

---

ஸாதக் ............ இத்யுக்தம்—இதனால் சொல்லப்படுவதென்னவென்றால், 'ஒரே த்ரவ்யம் முதலில் காரணமாக இருந்துகொண்டு, பிறகு வேறொரு அவஸ்தையுடன் சேர்க்கையை அடைந்தால், அப்பொழுது அந்த த்ரவ்யமே கார்யம் என்று சொல்லப்படுகின்றது' என்பது தான் 'ஒரு த்ரவ்யத்தின் ஜ்ஞானத்தால் மற்றை எல்லா த்ரவ்யங்களின் ஜ்ஞானமும் ஏற்படுகின்றது' என்பது இந்த ப்ரகரணத்தில் ப்ரதிபாதிக்கப்படும் விஷயம், அது அஸத்கார்ய வாதத்தில் ஸித்திக்கமாட்டாது ஏனென்றால், 'நிமித்தம் ஸமவாயி அஸமவாயி என்னும் இவை முதலான காரணங்களினால், அவயவி என்று சொல்லப்படும் கார்யம், காரணமாயிருந்த த்ரவ்யத்தைக் காட்டிலும் வேறுபட்ட மற்றொரு த்ரவ்யமாகவே உத்பாதனம் செய்யப்படுகின்றது' என்பது அஸத்கார்ய வாதிகளின் கொள்கை; காரணமான வஸ்துவைக் காட்டிலும் கார்யமான வஸ்து வேறுபட்டதென்று சொல்லும்பக்ஷத்தில், காரணத்தின் ஜ்ஞானத்தினால் கார்யத்தின் ஜ்ஞானம் ஒரு பொழுதும் ஸம்பவிக்கமாட்டாதன்றோ? ஆனால், 'அவயவி என்று சொல்லப்படும் கார்யமான வஸ்து தனது காரணமான வஸ்துவைக் காட்டிலும் வேறுபட்ட த்ரவ்யம்' என்பதை எப

---

ஏக விஜ்ஞாநேந—இவ்விடத்திற் சொல்லப்படுகிறது என்னவென்றால்—'ஒன்றை அறிந்தால் எல்லாம் அறியப்பட்டதாகி விடும் என்பது ஸத் வித்யையில் செய்யப்பட்டிருக்கும் ப்ரதிஜ்ஞை அது வைசேஷிக மதத்திற்கு அநுகுணமன்று காரண வஸ்துவைக் காட்டிலும் கார்ய வஸ்து வேறு பட்டதென்பதன்றோ அவர்களுடைய கொள்கை? அப்பொழுது காரண வஸ்துவை அறிந்தால் கார்ய வஸ்துவும் அதனாலேயே அறியப்படுகின்றது என்பது அநுபபந்நம் ஆகையால் ப்ரதிஜ்ஞாதமான அர்த்தத்திற்கு வைசேஷிக மதத்தின் நிராஸம் அவச்யம் அபேக்ஷிதம்' என்பதே.

நிமித்தஸமவாய்யஸமவாயி ப்ரப்ருதிபி:—வைசேஷிகர்களுடைய மத ப்ரகாரம், காரணங்கள் மூன்று வகைப்படும். அவை நிமித்த காரணம், ஸமவாயி காரணம், அஸமவாயி காரணம் இவைகளின் லக்ஷணங்கள் இவ்விடத்தில் அபேக்ஷிதங்களாகையால் அவைகளை விவரிக்காமல் விட்டு விடுகிறோம்.

ஏகஸ்யைவ வஸ்துந: நாநாஸம்ஜ்ஞா வ்யவஹாராஸ்பதத்வ உபபாதகத்வாத், த்ரவ்யாந்தராநுபலப்தேஶ்ச' இதி காரணமேவாவஸ்தாந்தராபந்நம் கார்ய-மித்யயமர்த்த உக்த: |

நநு—'நிர்விஶேஷ ப்ரஹ்மைவ ஜ்ஞாபநாய அஸத்கார்யவாத நிராஸ: க்ரியதே ; ததாஹி—ஸகலம் இதம் ஸத்யமேவ ஸவிஶேஷா

---

படி மறுக்கக்கூடும்? என்னில், இரண்டு காரணங்களால் மறுக்கக்கூடும் என்று நாம் சொல்வோம்.—(1) 'உன்னால் வேறொரு த்ரவ்யம் என்று அங்கீகரிக்கப்படும் த்ரவ்யம் காரணத்ரவ்யமே. இரண்டுமொன்று, காரணத்ரவ்யமே வேறொரு அவஸ்தையை அடைந்து மற்றொரு பெயர் மற்றொரு வ்யவஹாரம் இவைகளை அடைகின்றது' என்று உபபாதிக்கக்கூடும், (2) நீ சொல்வது போல் வேறொரு த்ரவ்யம் புதிதாகத் தென்படவுமில்லை. ஆகையால், காரண த்ரவ்யமே மற்றொரு அவஸ்தையுடன் கூடியதாகக் கொண்டு கார்யத்ரவ்யமென்று சொல்லப்படுகின்றது என்பதே ஸித்தாந்தம்

நநு........உக்த—இவ்விடத்தில் சிலர் ஒரு ஆக்ஷேபம் செய்யலாம் அதாவது—'ஸர்வமும் அபரமார்த்திகம் என்று வாதிப்பவர்களின் மதத்தைக் கண்டிக்கும் பொருட்டே இந்த "ஸதேவ" இத்யாதி வாக்யங்கள் ப்ரவர்த்திக்கின்றன. பரஹ

---

உபபாதகத்வாத் த்ரவ்யாந்தராநுபலப்தே:—இந்த இரண்டு பதங்களுக்குப் பிறகு 'த்ரவ்யாந்தரம் நிரஸ்யதே' (வேறுபட்ட த்ரவ்யம் என்பது மறுக்கப்படுகின்றது) என்பதை அந்வயத்திற்காகச் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

நநு—'ஸஸ்ஸா ஊ௫உரு க்ஷவிக' இத்யாதியால், கார்ய த்ரவ்யங்களெல்லாம் அபரமார்த்தங்களென்றும், கார்ய த்ரவ்யங்கள் காரண த்ரவ்யங்களைக் காட்டிலும் வேறு பட்டவைகளென்றும் சொல்லும் வைசேஷிகர்களின் மதம் நிரஸனம் செய்யப்படுகிறதென்பது ஸ்ரீ பாஷ்யகாரருடைய நிர்வாஹம் ஸத் வித்யையில் உபக்ரமத்தில் காணப்படும் வாக்யங்களுடைய ஸ்வாரஸ்யத்தின் ஆநுகுண்யமே இந்த நிர்வாஹத்திற்கு முக்யமான காரணம், ப்ரதிஜ்ஞாதமாயுள்ள 'ஒன்றின் விஜ்ஞானத்தால் ஸர்வத்தின் விஜ்ஞானம் ஏற்படுகின்றது' என்னும் அர்த்தத்தின் உபபாதநத்திற்கு அந்தரங்கமாகவும் இந்த நிர்வாஹமே அபேக்ஷிதமாக இருக்கின்றது இப்படி இருக்க ஸ்ரீ சங்கராசார்யர், இந்த அஸத்கார்ய வாதத்தால் சூந்ய வாதிகளாகிற மாத்யமிகர்களுடைய மதமே நிரஸனம் செய்யப்படுகின்றதென்று வ்யாக்யானம் செய்திருக்கிறார். அந்த வ்யாக்யானம் ஸங்கதமன்று என்பதை ஸ்ரீ பாஷ்யகாரர் இவ்விடத்தில் உபபாதிக்கிறார்.

ஸ்ரீ சங்கராசார்யருடைய விவரணமாவது—'சித் ரூபமான வஸ்து ஒன்றே உண்டு என்பதும், அந்த வஸ்து அவித்யையால் மறைக்கப்பட்டு ஜகத் ரூபமாகத் தோன்றுகின்றது என்பதும், அந்த வஸ்துவைத் தவிர்த்து வேறு வஸ்து ஒன்றும்

ரோஹிதம் ஜகத்ரூபேண விவர்த்தத இதி சாவித்யாஶ்ரயத்வாய மூலகாரணம் ஸத்யமித்யப்யுபகந்தவ்யம்' இத்யஸத்கார்ய வாத நிராஸ:। த்வைத

---

ம்ம என்பது அவித்தையால் மறைக்கப்பட்டதாய்க் கொண்டு ஜகத் ரூபமாகக் காணப்படுகின்றது என்று சொல்வது உபபந்நமாவதற்கு, அவித்தையால் ஆச்ரயிக்கப்படும் மூலகாரணம் பரமார்த்தமான வஸ்துவாகவே இருத்தல் வேண்டும், அப்படிக் கில்லாவிட்டால், நிரதிஷ்டாந ப்ரம்ம ஸம்பவிக்கும். அது ஸம்பவிக்கக் கூடாதன்றோ? ஸாவமும் அபார மார்த்திகம் என்று சொல்பவர் மதத்தில் அது நேர்கின்றதாதலால் இவ்விடத்தில் அந்த அஸத்கார்ய வாதம் நிரஸிக்கப்படுகின்றது'. இதுதான் ஆக்ஷேபம், இது நில்லா பெறாது. ஸா

---

இல்லை என்பதும் ச்ருதியின் தாத்பர்யம். அந்தத் தாத்பர்யத்தையே இந்த ஸத் வித்யா வாக்யங்கள் வெளியிடுகின்றன. மாத்யமிகர்களுடைய மதம், காரண வஸ்து உள்பட எல்லாம் க்ஷணிகம் என்பதாதலால், அந்த மதத்தை சுருதி வாக்யம் இவ்விடத்தில் நிரஸிக்கப் ப்ரவருத்திக்கின்றது எப்படி நிரஸிக்கின்றதென்றால்—அவித்தை என்பது பரமார்த்தமான ஒரு வஸ்துவை ஆச்ரயித்தே ப்ரபஞ்ச மாகிற இந்த ப்ரமத்தைத் தோற்றுவிக்க வேண்டுமாதலால், அப்படிப் பரமார்த்தமான ஒரு வித வஸ்துவையும் ஒத்துக்கொள்ளாத மாத்யமிகர்களுடைய மதம் ஆதரிக்கத்தக்கதன்று என்பதே. அதாவது—மாத்யமிகர்களுடைய மதத்தில் கார்ய வஸ்து போல அதிஷ்டாநமும் அபரமார்த்தமாக இருக்கிறபடியால் ப்ரம்ம என்பதே ஸம்பவிக்கமாட்டாது என்று சொன்னதாயிற்று. இப்படிப்பட்ட நிரதிஷ்டாந ப்ரமத்தின் அஸம்பவத்தை ஜ்ஞாபிப்பதற்காகவே இந்த அஸத் கார்ய வாதம் இவ்விடத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்டு நிரஸிக்கப்படுகின்றது.' இதுதான் ஸ்ரீ சங்கராசார்யருடைய வ்யாக்யாநம்.

த்வைத த்வேவ—மாத்யமிகர்களுடைய மதத்தின் நிரஸநம் ஸ்ரீபாஷ்யகாரருக்கு இஷ்டமேயானாலும், அது ப்ரகரணத்திற்கு அஸங்கதமென்பதே அவருடைய அபிப்ராயம். 'ஒன்றை அறிந்தால் எல்லாம் அறியப்பட்டதாகின்றது' என்பது ஸத் வித்யையில் ப்ரதிஜ்ஞாதமான அர்த்தம். 'முதலில் அஸத்தாகவே இந்த ப்ரபஞ்சம் இருந்தது, பிறகுதான் ப்ரபஞ்சத்திற்கு உத்பத்தி ஏற்பட்டது' என்று சொல்லும் வைசேஷிகர்களுடைய மதத்தில் இந்த ப்ரதிஜ்ஞை அந்வயிக்கமாட்டாதாகையால், இந்த ப்ரதிஜ்ஞையின் ஸமர்த்தநத்திற்கு அந்த வைசேஷிக மத நிராஸம் அவச்யம் அபேக்ஷிதம், ஆகையால் அந்த மதமே இந்த ப்ரகரணத்தில் நிரஸிக்கப்பட வேண்டும். மாத்யமிகர்களோவென்றால், 'முதலிலும் எல்லாம் சூந்யம், பிறகும் எல்லாம் சூந்யம்' என்று சொல்லுகிறபடியால், அவர்களுடைய மதத்தில் இந்த ப்ரதிஜ்ஞை அந்வயிக்கமாட்டாது என்பது இல்லை, ஆகையால் அவர்களுடைய மதத்தின் நிராஸம் இந்த ப்ரதிஜ்ஞையின் ஸமர்த்தநத்திற்கு அநபேக்ஷிதம். 'மாத்யமிகர்களுடைய மதமே இவ்விடத்தில் நிரஸிக்கப்படுகின்றது' என்று சொல்லும் அத்வைதிகளுடைய வ்யாக்யாநம் அஸங்கதம் என்று சொல்வதற்கு இது முக்ய ஹேது. இன்னும் ஒரு ஹேது உண்டு. ஸத் வித்யையில், இந்த ப்ரதிஜ்ஞையை உபபாதிக்கும் பொருட்டு உதாஹரிக்கப்பட்டுள்ள "யதா ஸோம்யைகேந ம்ருத்பிண்டேந

ஜெவழ ।  ஊக விஜ்ஞாநெந ஸவ-ுவிஜ்ஞா,ந ௳, திஜ்ஞா ஃ௺ஷாஞ ஃ·வெ,ந ஸ,க்ஷாய-ுவாஃஸெஷ்யவ ௳,ஸக்துக்வாஷித்ய்-க்தூழ ।  ஹவஷ்டுக்ஷெ ,நிரயிஷா,ந ௷ஊரஸ௦ஹவஸ்ய ஃ-ஈ-வ வாஃக்வாஷ்டு ।  யஸ்ய ஹி ஜெதந,மத ஜொஷ:

---

வமும அபாரமாாதத்கம என று வாதிபபவாகளுக்கு இவவிடததில பாஸகதியே இல்லே ஒனறை அறிநதால எலலாம அறியபபடடதாகும எனனும பரதிஜ்ஞையும மருத பிணடம முதலான தருஷடாநதஙகளும ஸதகாரய வாத ஸ௱பததமாகவே பாஸதுதமா யிருககிறபடி யால, அதறகு உபயோகியாக வைசேஷிகாகளின அஸதகாரயவாதம நிரஸநம செய யபபட வேணடுமே தவிர, அபாஸகதமான மறறொரு வாததகின நிரஸநம செயயபபடு

---

ஸவ-ுஂ ஃஜ்ஞயஂ விஜ்ஞாதஂ ஸ்யாத்'' (மணபிணடததை அறிநதால, அதன விகாரமா யுளள குடம் முதலானது அறியப படுவதுபோல) எனனும தருஷடாநதம, காாயம பர மாாத்தமாயிருபபதுடன காரணமும பரமாாதகம எனபதைக குறிக்கினறது காாயததைப பாமாாதத மெனறு ஒததுககொணடு காரணததை அபரமாாதத மெனறு சொலலும வை சேஷிகர்களுடைய மததகிறகு இநத தருஷ்டாநதம அநநவிதம ஆகையால அநத த்ருஷ டாநதததின ஸமாதத்நததிறகும இவாகளுடைய மத நிரஸநம் அவசயம அபேக்ஷிதம. 'காாயம காரணம இவை இரணடும அபரமாாததம' எனறு சொலலும மாத்யமிகாக ளுடைய மததகிறகு இநத தருஷடாநதம பொருநதுமா பொருநதாதா எனறு விசாரிகக பாஸகதியே இலலே யாகையால அவாகளுடைய மத நிராஸம இவவிடததில அநபேக்ஷி தமே. இநத இரணடு ஹேதுககளும, '' ஊகவிஜ்ஞாநெந ஸவ-ுவிஜ்ஞா,ந ௳,திஜ்ஞா ஃ௺ஷாஞ ஃ-வெ,ந ஸக்ஷாய-ு வாஃஸெஷ்யவ ௳,ஸக்துக்வாக் '' எனனும வாகயததால சொலலப்படுகினறன.

ஹவஷ்டுக்ஷெ ,நிரயிஷா,ந ௷ஊரஸ௦ஹவஸ்ய ஃ-ஈ-வவாஃக்வாஷ்டு— 'மாத்யமிக மத நிராஸம செயயபபடுகினறது' எனபதறகு அதவைதிகளாற சொலலப படும ஹேது, 'ப்ரமம ஏறபடுவதறகு, அதிஷடாநம பரமாாதநமாக இருககவேணடும; மாத்யமிகாகளுடைய மததகில அதிஷடாநம அபரமாாததமாகையால, அவாகளுடைய மத பரகாரம நிரதிஷடாந பாமம பாஸஙகிககினறது, அது அநிஷடம' எனப தனறே? முதலில, இநத வாதம யுகதியுகதமாக இருககினறது எனபதை ஒததுக கொணடாலும, அது பரகரணததிறகு ஒததநனறு எனறே சொலலவேணடும இரணடாவது, 'தரஷடா (பாாககிறவன) பொய, தோஷம பொய, தாசநம பொய; இவை யெலலாம பொயயாக இருநதபோதிலும ப்ரமம ஸமபவிககககூடும எனறு அதவைதிகள ஒததுக்கொளளுகையில, ஆசரயமும பொயயாக இருநதால ப்ரமம ஸமபவிககமாடடாதோ எனறு பயபபடுவதறகுக காரணமொனறு மிலலே. ப்ரம ஹேதுககளான ஸாமகரிகளுள சில பொயயாக இருககலாம, அதிஷடாநம மாத ரம ஸதயமாக இருகக வேணடும எனறு சொலவதறகு விநிகமகம ஒனறுமிலலே. இதுதான ஃ-ஈ-வவாஃக்வாக் எனபதன தாதபாயம. ஆகையால, மாத்யமிகா களுடைய மதமே இவவிடததில நிரஸிககபபடுகினறது என்பதறகு நீஙகள சொலவது ஹேதுவாகமாடடாது எனபது தான. இநத ஆததததைத தான

பாரமார்த்திகோ தோஷாஶ்ரயத்வம் ச பாரமார்த்திகம், தஸ்ய பாரமார்த்திக தோஷேண ப்ரதீதஸ்ய அபாரமார்த்திக கந்தர்வநகராதி உபபந்ந ஏவ வஸ்து; யஸ்ய து தோஷஶ்சாபாரமார்த்திகோ தோஷாஶ்ரயத்வம் அபார

---

கின்றது என்று சொல்வது உபபந்நமாகாது. (நிரதிஷ்டாந ப்ரமம் ஸம்பவிக்கமாட்டாது என்பதை ஜ்ஞாபிப்பது இவ்விடத்தில் அஸங்கதம்). தவிரவும், அதிஷ்டாநம் அபரமார்த்தமாக இருந்தால் உங்களுடைய மதத்தின்படி அந்த ப்ரமத்தின் அஸம்பவத்தை உபபாதிப்பது சரமம் (அதாவது, அந்த ப்ரமம் ஸம்பவியாமற் போய்விடும்) என்பதும் இல்லை. ஏனென்றால், எவனுடைய மதத்தில், சேதநனிடத்தில் இருக்கும்

---

"யஸ்ய ஹி.........நிரதிஷ்டாந ப்ரமாஸம்பவ:" என்னும் வாக்யங்களால் உபபாதிக்கிறார்

கந்தர்வநகரம்—அஸத் வஸ்து விஷயகமான ப்ரமம். இல்லாத வஸ்து இருப்பது போலத் தோன்றினால் அந்தத் தோற்றத்தைக் கந்தர்வ நகரமென்று சொல்வார்கள்.

ஶோதகவாக்யேஷ்வபி—இப்படி ஸத் வித்யா வாக்யங்களில், விசேஷங்களை நிஷேதிக்கும் சப்தமொன்றும் காணப்படவில்லை என்பதை நிரூபித்து விட்டு, இன்னும் வேறு எந்த ச்ருதி வாக்யங்களை விசேஷ நிஷேத பரங்களென்று அத்வைதிகள் சொல்லுகிறார்களோ அவைகளுக்கும் பேத நிஷேத பரத்வம் இல்லை என்பதை உபபாதிப்பதற்காக ச்ருதியில் காணப்படும் சோதக வாக்யங்களைப் பற்றி ப்ரஸ்தாவிக்கிறார். 'ஶோதகவாக்யம்' என்பதன் பொருளை 29, 66-வது பக்கங்களில் காண்க

ஸாமாநாதிகரண்ய வ்யுத்பத்தி......... ஸகார்யார்த்தவ்யோபநம்—ஸாமாநாதிகரண்யம் என்றால் என்ன என்பதை 80, 81-வது பக்கங்களில் காண்க.

ஸத்வித்யா வாக்யங்கள் முதலான காரண வாக்யங்களிலும், ஸத்யம் ஜ்ஞாநம் முதலான சோதக வாக்யங்களிலும் ஒன்றிலும் விசேஷ நிஷேத பரமான சப்தமொன்றும் காணப்படவில்லை என்பதை நிரூபித்த பிறகு, ஒருகால் அத்வைதிகள் 'ஸத்வித்யா முதலானவைகளில் பேத நிஷேத பரத்வம் வ்யக்தமாகத் தெரியவில்லை. பேத நிஷேதத்தை வ்யக்தமாகச் சொல்லும் வேறு ச்ருதி வாக்யங்கள் இருக்கின்றன' என்று சொல்வார்களோ வென்று சங்கித்து, அப்படி பேத நிஷேதத்தை வ்யக்தமாகச் சொல்வது போலக் காணப்படும் சில ச்ருதி வாக்யங்களை எடுத்துக் கொண்டு அவைகளின் அர்த்தத்தைப் பரிசோதிக்கிறார். அப்படி இரண்டு வாக்யங்களே இவ்விடத்தில் விசாரிக்கப் படுகின்றன.

"அதாத ஆதேஶோ நேதி நேதி"—இந்த வாக்யம் ப்ருஹதாரண்யகோபநிஷத்தில் நாலாவது அத்யாயத்தில் மூன்றாவது ப்ராஹ்மணத்தில் காணப்படுகின்றது. அதன் ப்ரகரணத்தை முதலில் தெரிந்துகொள்வோம். அவ்விடத்தில் ச்ருதி,

ர்த்திகம், தஸ்யாபாரமார்த்திகத்வாப்யுபகமேந ததுபயவாதிநோ: ஸர்வ
த்ரைக்ஷ ந நிர்விசேஷப்ரஹ்மஸம்பவ: । ஸத்யஜ்ஞாநாதிவாக்யேஷ்வபி
'ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம' 'ஆநந்தோ ப்ரஹ்ம' இத்யாதிஷு ஸாமா

---

தோஷ ஸம்பந்தமும் தோஷம் ஆசரயித்திருப்பதும் பாரமார்த்திகமோ, அவனுடைய மதத்தில், பாரமார்த்திகமான தோஷத்துடன் கூடினவனுக்கு அபாரமார்த்திகங்களா யுள்ள கர்த்தாவ நகரம் முதலிய பரமங்களின் தர்சநம் உபபந்நமாகும், எவனுடைய மதத்தில் தோஷ ஸம்பந்தமும் அபாரமார்த்திகமோ தோஷம் ஆசரயித்திருப்பதும் அபார மார்த்திகமோ அவனுடைய மதத்திலும் ஆசரயம் அபாரமார்த்திகமா யிருந்தபோதிலும் அம் மாதிரியான பரம தர்சநம் உபபந்நமாகக் கூடுமாகையால், உங்களுடைய மதத்தில் நிரதிஷ

---

" த்வே வாவ ப்ரஹ்மணோ ரூபே மூர்த்தம் சாமூர்த்தம் ச "

(ப்ரஹ்மத்திற்கு இரண்டு சரீரங்கள், அவைகளுள் ஒன்று கடிநம், மற்றொன்று கடிந மல்லாதது) என்று ஆரம்பித்து,

" ததேதந்மூர்த்தம்"

(கடிநமான ரூபமாவது) என்று மூர்த்த ரூபத்தின் லக்ஷணத்தையும்,

" அமூர்த்தம் "

(அகடிநமான ரூபமாவது) என்று அமூர்த்தத்தின் லக்ஷணத்தையும் விஸ்தாரமாக உபபா தித்து விட்டு, மற்றும் சில வாக்யங்களால் மூர்த்தா மூர்த்த ரஸோபாஸந சிந்தா ப்ரகாரத் தைப் பற்றிப் பேசின பிறகு,

" அதாத ஆதேசோ நேதி நேதி "

என்னும் வாக்யத்தைச் சொல்லுகின்றது. இதன் பொருள் —இவ்விடத்தில் செய் யப்படும் உபதேசம் என்னவென்றால், இப்படிப்பட்டதன்று இப்படிப்பட்டதன்று என்பது தான் அதாவது—மூர்த்தா மூர்த்தாத்மகமான இரண்டு சரீரங்கள்ப்ரஹ்மத்திற்கு உண்டு என்று சொல்வதால் 'இவ்வளவு' என்னும் ஒருவித பரிச்சேதம் ப்ரஹ்மத்திற் குச் சொல்லப்பட்டது போல ஆயிற்று, அப்படிப்பட்ட எவ்வித பரிச்சேதத்தையும் அது உடையதன்று என்பது தாத்பர்யம் அம்மாதிரியான சரீரங்களுடன் கூடி யிருப் பதால் உண்டாகக்கூடிய எவ்வித பரிச்சேதமும் ப்ரஹ்மத்திற்கு ஸம்பவிக்க மாட்டாது என்பது கருத்து. இந்த அர்த்தமே ப்ரகரணத்திற்கு ஒத்தது அத்வைதிகள் சொல் வது போல, 'நேதி நேதி' (இப்படிப் பட்டதன்று இப்படிப் பட்டதன்று) என்னும் வாக்யத்திற்கு, 'ப்ரபஞ்சமே இல்லை' என்று அர்த்தம் கொள்வது ப்ரகரணத்திற்கு அநு குணமன்று. தவிரவும், இந்த வாக்யத்திற்குப் பிறகு அந்த ச்ருதியிலேயே,

நாயிகரணஸ்ய வ்ருத்தி விஹாநேகுமணவிபிஷ்டைகாயதாவபோயந உவிரூகூதிதி ஸவதமண விபிஷ்டம் ப்ரஹ்மாபிதீயத இதி வ்ருவதெ வொக்தழ ।

---

டாந ப்ரமதத்தின அஸமபவம துருபபாதமே. "ஸத்யம்ஜ்ஞாநம்" "ஆநந்தோ ப்ரஹ்ம" எனபவை முதலான சோதக வாக்யஙகளாலும ஸமஸத கலயாண குண விசிஷடமாகவே பரஹமம பரதிபாதிககபபடடிருககினறது எனபதைக கீழே விவரிததிருககிறோம. ஸாமா நாதிகரணயத்தின சரியான அரததம எனனவெனறும, அதைச சரிவரத தெரிநது

---

"ந ஹ்யேதஸ்மாதிதி நேத்யந்யத்பரமஸ்தி"

எனனும வாகயமும காணப்படுகினறது இதன பொருள.—இதி 'நேதி' (யதூஹ ப்ரதிவாதிதம், தஸ்மாத்) ஏதஸ்மாதந்யத் (வஸ்து) பரம் ந ஹ்யஸ்தி—கீழச சொலலியிருககிறபடி 'இபபடிப பட்டதனறு' எனறு யாதொரு பரஹ்மம ப்ரதிபாதிககபபடடிருககினறதோ அதைககாடடிலும வேறொரு உதகருஷட மான வஸது இலலை 'அந்யத் பரம் நாஸ்தி' (வேறொரு உதக்ருஷடமான வஸது இல்லை) என்று சொல்வதறகுப பதிலாக 'அந்யத் நாஸ்தி' வேறொரு வஸது இலலை) எனறு மாதரம சொலலியிருககும பக்ஷததில பரஹமததைக காடடிலும பிந்நமான மறறைப பொருளெலலாம நிஷேதம செயயபபடுகினறது எனறு சொலலககூடும. அப படிச் சொலலவிலலையே இநத வாகயததின பிறகும,

"அத நாமதேயம் ஸத்யஸ்ய ஸத்யம்—ப்ராணா வை

ஸத்யம், தேஷாமேஷ ஸத்யம்"

எனறொரு வாகயததைச சொலலி அநத பரகரணம முடிகின்றது இதன் பொருள —ப்ராணா வை ஸத்யம்—பராணனகள எனறு சொலலபபடும ஜீவன் கள பரகருதியைபபோல எவவித ஸவரூப விகார மறறவை யானதால ஸதயம, என்று சொலலப்படுகினறன, தேஷாமேஷ ஸத்யம்—பரமாதமா, அநத ஜீவன களைபபோல ஜஞாநததின ஸஙகோச ரூபமான விகாரமறற தாதலால, அவைகளைக காட் டிலும ஸதயம எனறு சொலலபபடுகினறது, அத ஸத்யஸ்ய ஸத்யம் (இத்யஸ்ய) நாமதேயம்—ஆகையால இநதப பரமாதமாவுககு 'ஸதயததுககும ஸதயம' என்று பெயா வழஙகுகினறது. இநத வாகயததால ப்ரஹ்மததிறகு ஸதயதவம முதலிய குணங களும பரதிபாதிககப படுகினறன. இபபடி இருககையில "நேதி நேதி" எனபதால ஸமஸத பேதஙகளும நிஷேதிககப படுகினறன எனறு எபபடிச சொலலககூடும ?

ப்ரஹ்மணோ ரூபத்வயம் ப்ரக்ருதம் ஸர்வம் ரூபத்வயம் ப்ரபஞ்சம்—இநத சருதி, முதலில, 'மூர்த்தாமூர்த்தமான ப்ரபஞசம முழுவதும ப்ரஹமத

"அதாத ஆதேஶோ நேதி நேதி" இதி பஹுதா நிஷேதோ ப்ரதிபாத்யத இதி சேத், கிமத்ர நிஷித்யத இதி வக்தவ்யம் । "த்வே வாவ ப்ரஹ்மணோ ரூபே மூர்த்தம் சாமூர்த்தம் ச" இதி மூர்த்தாமூர்த்தாத்மக: ப்ரபஞ்ச: ஸர்வோऽபி நிஷித்யத இதி சேத் ப்ரஹ்மணோ ரூபதயா அப்ரஜ்ஞாதம் ஸர்வம் ரூபதயோபதிஶ்ய புநஸ்தஸ்யைவ நிஷேதாயுக்தே:, "ப்ரக்ஷாளநாத்தி பங்கஸ்ய தூராதஸ்பர்ஶநம் வரம்"

---

கொண்டால் ஒரே வஸ்துக்கு அநேக குணங்களுடன் கூடியிருக்கும் தன்மை விருத்தமென்றென்றும் இவ்விடத்தில் விலக்கப்பட்டிருக்கின்றது.

"அத"........"ப்ரதிபாத்யதே—"அதாத ஆதேஶோ நேதி நேதி" (உபதேசம் செய்யப்படுகின்றது, அது என்னவென்றால், இவ்விதம் இல்லை இவ்விதம் இல்லை என்பதுதான்) என்னும் வாக்யத்தில் பஹுவாக நிஷேதம் காணப்படுகின்றதே என்னில், இவ்விடத்தில் நிஷேதிக்கப்படுவது என்ன? என்பதைச் சொல்ல வேண்டும். "த்வே வாவ ப்ரஹ்மணோ ரூபே மூர்த்தம் சாமூர்த்தம் ச" (ப்ரஹ்மத்துக்கு இரண்டு சரீரங்கள் ப்ரஸித்தங்கள், கடினமாயிருப்பதொன்று, கடினமில்லாமல் இருப்பதொன்று) என்னும் வாக்யத்தால் கடினமான பொருள்கள் கடினமில்லாத பொருள்கள் ஆகிய இவைகளை ஸ்வரூபமாகவுடைய ப்ரபஞ்சம் முழுவதுமே நிஷேதிக்கப்படுகின்றது என்னில், அது யுக்தமாக மாட்டாது ஏனென்றால், இது வரையில் அறியப்படாமல் இருந்த 'ப்ரபஞ்சம் முழுவதும் ப்ரஹ்மத்தின் ரூபம்' என்னும் விஷயத்தை முதலில் உபதேசித்துவிட்டு, மறுபடியும் அதை நிஷேதிப்பது என்பது எப்படி யுக்தமாகும்? சேற்றைப் பூசிக்கொண்டு பிறகு அதை அலம்புவதைக்காட்டிலும் சேற்றைத்

---

திற்குச் சரீரம்' என்று உபதேசித்துவிட்டு, உடனே அந்த ப்ரபஞ்சத்தையே அது நிஷேதிக்கின்றது என்று சொல்வது யுக்தமாகமாட்டாது. அப்படி நிஷேதித்தால் ச்ருதியின் வார்த்தை நம்பிக்கைக்குப் பாத்ரமாகாமல் போகப் ப்ரஸங்கிக்கும், நிஷேத வாக்யமும் அப்ரமாணமாகப் ப்ரஸங்கிக்கும். அது அநிஷ்டமன்றோ? ப்ரபஞ்சம் எல்லாருக்கும் தெரிந்த வஸ்துவானாலும், 'அந்த ப்ரபஞ்சம் ப்ரஹ்மத்திற்குச் சரீரம்' என்னும் விஷயம், எல்லாருக்கும் தெரிந்ததன்று, அப்படி அறியப்படாமல் இருக்கும் விஷயத்தையே இவ்விடத்தில் ச்ருதி உபதேசிக்கின்றது என்பதை 'அப்ரஜ்ஞாதம்' என்னும் சப்தம் விளக்குகின்றது. அப்படி உபதேசிக்கப்படும் விஷயம் நிஷேதார்ஹமாகக் கூடாது என்பது குறிப்பு.

"ப்ரக்ஷாளநாத்தி பங்கஸ்ய......"—இப்படி முதலில் உபதேசித்துப் பிறகு நிஷேதிப்பதன் அநுபபத்தியைக் காண்பிக்க இந்தப் புராண வசநம் இவ்விடத்தில் சொல்லப்படுகின்றது. இதன் பொருள்—'சேற்றைப் பூசிக்கொண்டு அலம்புவதைக் காட்டிலும், சேற்றைத் தொடாமல் இருப்பது ச்லாக்யமன்றோ?' என்பது.

இதி ந்யாயாத் । கஸ்தர்ஹி நிஷேத வாக்யார்த்த: ? ஸூத்ரகார: ஸ்வயமேவ வததி " ப்ரக்ருதைதாவத்த்வம் ஹி ப்ரதிஷேததி ததோ ப்ரவீதி ச பூய: " இதி । உத்தரத்ர " அத நாமதேயம் ஸத்யஸ்ய ஸத்யம் ப்ராணா வை ஸத்யம் தேஷாமேஷ ஸத்யம் " இதி ஸத்யாதிகுணகணஸ்ய ப்ரதிபாதிதத்வாத் ' வஸ்து ப்ரக்ருதைதாவன்மாத்ரம் ந பவதி ப்ரஹ்ம ' இதி ப்ரஹ்மண ஏதாவன்மாத்ரதா ப்ரதிஷித்யத இதி ஸூத்ரார்த்த: । " நேஹ நாநாஸ்தி கிஞ்சந " இத்யாதிநா நாநாத்வப்ரதிஷேத ஏவ க்ரியத இதி சேத், அத்ராப்யுத்தரத்ர " ஸர்வஸ்ய வஶீ ஸர்வஸ்யேஶாந: "

---

தொடாமலிருப்பதே சலாக்யம். அதுபோல புதிதாக ஒன்றை உபதேசம் செய்துவிட்டு, பிறகு அது பொய் என்று நிஷேதிப்பதைக் காட்டிலும் உபதேசம் செய்யாமலிருப்பதே ச்லாக்யமாகு மன்றே ? ஆனால் இவ்விடத்தில் சொன்னப்படும் நிஷேத வாக்யத்தின் அர்த்தமென்ன ? என்றுகேட்டால், அதற்கு ஸமாதானத்தை ஸூத்ரகாரரே " ப்ரக்ருதைதாவத்த்வம் ஹி ப்ரதிஷேததி ததோ ப்ரவீதி ச பூய: " (ப்ரஹ்மம் என்பது கீழ்ச் சொல்லப்பட்டுள்ள அளவுடன் கூடியது அன்று என்று அந்த அளவு மாத்ரத்தை சுருதி நிஷேதிக்கின்றது) என்று சொல்லி இருக்கிறார். ஏனென்றால், இந்த நிஷேதம் செய்த பிறகும், சுருதி, " அத நாமதேயம் " இத்யாதியான வாக்யத்தால் ப்ரஹ்மத்திற்கு ஸத்யம் முதலான அநேக குண கணங்களைச் சொல்லுகின்றதன்றே ? " நேஹ நாநாஸ்தி கிஞ்சந " என்பது முதலான வாக்யத்தால் ப்ரஹ்மத்திற்கு நாநாவாக (பல வகைப் பட்டதாக) இருக்கும் தன்மை நிஷேதிக்கப் படுகின்றதே என்னில், இவ்விடத்திலும்

---

ஸூத்ரகார:—ப்ரஹ்ம ஸூத்ரகாரர். ப்ரக்ருதைதாவத்த்வம் ஹி ப்ரதிஷேததி ததோ ப்ரவீதி ச பூய:" என்பது ப்ரஹ்ம ஸூத்ரத்தில் 3-வது அத்யாயம் 2-வது பாதம் 21-வது ஸூத்ரம். இதன் பொருள் — ப்ரக்ருதை:— 'ப்ரஹ்மத்திற்கு இரண்டு ரூபங்கள்' என்பது முதலான வாக்யத்தால் ப்ரதிபாதிதங்களாயுள்ள ரூபங்களால், ஏதாவத்த்வம்—யாதொரு பரிச்சின்னத்வ லக்ஷணமான ப்ரகாரம் ப்ரஹ்மத்திற்கு ப்ரஸங்கிக்குமோ அந்த ப்ரகாரத்தையன்றே, ப்ரதிஷேததி ஹி— 'இப்படிப்பட்டதன்று இப்படிப்பட்டதன்று' என்னும் வாக்யம் நிஷேதிக்கின்றது? தத:—அந்தக் காரணத்தினாலேயே, பூயோ ப்ரவீதி ச—அப்படி நிஷேதித்த பிறகும், மறுபடியும் ப்ரஹ்மத்திற்கு ஸத்யத்வம் முதலான குணத்தைச் சொல்லுகின்றது. ஆகையால் 'நேதி நேதி' என்பது ப்ரஹ்மத்தினுடைய ஸவிசேஷத் தன்மையை நிஷேதிக்கவில்லை, ப்ரஸக்தமான பரிச்சேதத்தை மாத்ரம் நிஷேதிக்கின்றது என்று சொல்லவேண்டும்.

𑌇𑌤𑌿 𑌸𑌤𑍍𑌯𑌸𑌂𑌕𑌲𑍍𑌪 𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑌨𑌾𑌤𑍍 𑌚𑍇𑌤𑌨𑌾𑌚𑍇𑌤𑌨 𑌸𑌰𑍍𑌵𑌵𑌸𑍍𑌤𑍁𑌶𑌰𑍀𑌰 𑌶𑌰𑍀𑌰𑍀 𑌇𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 𑌸 𑌏𑌕 𑌏𑌵𑍇𑌤𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑌾𑌦𑍇𑌕𑌨𑌾𑌨𑌾𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌦𑍍𑌧𑌂,

---

அந்த நிஷேதம் உங்களுக்கு அபிமதமானதைப் பற்றியதன்று, ஏனென்றால் மேல காணப்படும் “𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌵𑌶𑍀” என்பது முதலான வாக்யத்தில ‘ப்ரஹ்மம் என்பது ஸத்ய ஸங்கல்பமான வஸ்து, அது ஸர்வத்துக்கும் ஈச்வரன்’ என்று சொல்லப்பட்டிருக்கின்றதன்றோ? அதாவது, சேதந அசேதந வஸ்துக்களெல்லாவற்றையும் அந்த ஈச்வரன் ஒருவனே சாஸநம் செய்து கொண்டும் தரித்துக் கொண்டும் நியமநம் செய்து கொண்டும் இம்மாதிரி ஸர்வ ப்ரகாரங்களாலும் அவைகளைத் தனது சரீரமாக உடைத்தாயிருக்கிறான் என்று சொன்னதாயிற்று. ஆகையால், இவ்விடத்தில நிஷேதிக்கப்படும்

---

“𑌨𑍇𑌹 𑌨𑌾𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌕𑌿𑌞𑍍𑌚𑌨”—இந்த வாக்யமும் ப்ருஹதாரண்யகோபநிஷத்தில 6-வது அத்யாயத்தில காணப்படுகின்றது. இதன் பொருள்.—𑌇𑌹—இந்த ப்ரஹ்மத்தில [அதாவது—“𑌮𑌨𑌸𑍈𑌵𑌾𑌨𑍁𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌂” என்று ஸாக்ஷாத்காரத்திற்குத் துல்யமான த்யானத்தால பார்க்கப்பட வேண்டிய வஸ்து என்று நிர்தேசிக்கப்பட்டுள்ள ப்ரஹ்மத்தினிடத்தில], 𑌕𑌿𑌞𑍍𑌚𑌨 𑌨𑌾𑌨𑌾—ஸ்வல்ப நாநாத்வம் கூட [நாநாத்வம் என்பதற்கு பேதம் என்பது பொருள்], 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿—இல்லை இந்த வாக்யத்தால் பேதம் நிஷேதிக்கப் படுகின்றதோ என்று சங்கிக்கிறார்.

𑌅𑌤𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑍁𑌤𑍍𑌤𑌰𑌤𑍍𑌰—“𑌨𑍇𑌤𑌿 𑌨𑍇𑌤𑌿” என்னும் விஷயத்திற் போல, இவ்விடத்திலும், இதற்கு மேல வரும் வாக்யம், இந்த வாக்யத்தால என்ன நிஷேதிக்கப் படுகின்றது என்பதை விளக்குகின்றது. மேலவரும் வாக்யம் என்னவென்றால்:

“𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌵𑌶𑍀 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑍇𑌶𑌾𑌨𑌃 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌧𑌿𑌪𑌤𑌿𑌃”

என்பதுதான். இந்த வாக்யம் முமுக்ஷுவினால உபாஸிக்கத் தகுந்த ப்ரஹ்மத்தை விளக்குகின்றது. இதன் பொருள்.—𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌵𑌶𑍀—மற்ற எல்லாரையும் தன் வசத்தில் உடையவன் (𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌸𑍍𑌯 𑌵𑌶𑍇 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌸 𑌵𑌶𑍀), 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑍇𑌶𑌾𑌨𑌃—எல்லாரையும் நியமிக்கிறவன், 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌧𑌿𑌪𑌤𑌿𑌃—எல்லாருக்கும் சேஷியாக இருக்கிறவன். இப்படிச் சொல்வது ஸத்ய காமத்வம் முதலான அபஹத பாப்மத்வம் பர்யந்தமான ஸகல ஸத்குணங்களுக்கும் உபலக்ஷணம். இப்படி ப்ரஹ்மத்திற்கு ஸர்வேச்வரத்வம் சொல்லப்படுகிறபடியால, ‘ஈச்வரன் சேதநாசேதந ரூபங்

ந ஹ்யவக்³ருஹீதம் । ஸர்வாஸ்வேவம் வ்யாகாராஸு ஶ்ருதிஷு உபலப்⁴யதே வ்யுத்பத்தி: ந க்வாபி ப்³ரஹ்மண: ஸவிஶேஷத்வநிஷேதக: கோऽபி ஶப்³தோ³ த்³ருஶ்யதே ।

॥ இதி ப்³ரஹ்மாஜ்ஞாநபக்ஷஸ்ய ஶ்ருத்யபேதத்வம் ॥

---

ஸ்ரீ:

॥ ப்³ரஹ்மாஜ்ஞாநபக்ஷஸ்ய ந்யாயாபேதத்வம் ॥

அபி ச ‘ நிர்விஶேஷ ஜ்ஞாநமாத்ரம் ப்³ரஹ்ம, தச்ச அவித்³யாதிரோ

---

விஷயமானது, ப்ரஹ்மத்திற்குச் சரீரமாக இல்லாமல்இருப்பதன நாநாத்வமே(அதாவது, ஒரு வஸ்துவும ப்ரஹ்மத்தை ஆத்மாவாக உடைத்தா யிராமல இல்லை என்று சொன்ன தாயிற்று). இம்மாதிரியான சருதிக ளெல்லாவற்றிலும இந்த அர்த்தமே சொல்லப படு கின்றதே தவிர, ஒரிடத்திலாவது ‘ப்ரஹ்மம் விசேஷங்களுடன கூடியது’ என்ற நிஷேதிக்கும் சப்தமொன்றும காணப்படவில்லை. ப்ரஹ்மாஜ்ஞாந பக்ஷத்தின ச்ருதி விரோத தாசகம முற்றிற்று

---

அபி ச......... ...அநிர்வசநீய ஸர்வ—‘ப்ரஹ்மம, எவ்வித விசேஷமு மற்ற கேவலம ஜ்ஞாந மாத்ரம , அது, அவித்யையினால திரோதாநம செய்யப்பட்ட ஸ்வ ரூபத்தை உடையதாய, தன்னிடத்திலேயே பலவகைப்பட்ட வஸ்துககளைப் பார்க்கின்றது’

---

களான ஸர்வ வஸ்துககளையும் சரீரமாக உடையவன, அவனை ஆத்மாவாக உடைத்தாயிரா மல் இருக்கும வஸ்துவே இல்லை’ என்று சொன்னதாயிற்று. ஆகையால, “ நேஹ நாநாஸ்தி கிஞ்சந’’ என்பதால் நிஷேதிக்கப்படும நாநாத்வம, ப்ரஹ்மாத்மக மல்லாத நாநாத்வத்தையே குறிக்கின்றது என்று நாம ப்ரகரணத்தைக கொண்டு தாத்பர்யத்தை நிச்சயிக்க வேணடும. அதனைத்தவிர சொல்லப்படும விசேஷ நிஷேதத்தை அர்த்தமாகச் சொல்வது உத்தர வாக்யமாகிற “ ஸர்வஸ்ய வஶீ ” இத்யாதியான வாக்யத்திற்கு அநுகுணமன்று.

அபி ச—க்ரந்தாரம்பத்தில, “ பரம் ப்³ரஹ்மைவாஜ்ஞம் ” என்னும் ச்லோகத்தில, “ ஶ்ருதிந்யாயாபேதம் ” என்னும பதத்தால், பர பக்ஷங்களெல்லாம

ஹிதஸ்வஸ்வரூபம் ஸ்வமதநாதநாசம் வஸ்யதி' இத்யுக்தம் ந யுஜ்யதே।

---

என்று சொல்வது ந்யாயத்திற்கும் ஒத்ததன்று. 'திரோதாநம் செய்வது' என்பதற்கு 'ப்ரகாசத்தை மறைப்பது' என்பது பொருள். நீங்கள், 'ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம் ஒன்று,

---

ச்ருதிக்கும் ந்யாயத்திற்கும் விருத்தங்கள் என்பது ஸூசிப்பிக்கப்பட்டது. அம்மாதிரி அவ்விடத்தில் ஸூசிப்பித்துவிட்டு, ஸ்ரீ பாஷ்யகாரர், முதலில் அந்தப் பர பக்ஷங்களுள் சாங்கர பக்ஷத்தை எடுத்துக்கொண்டு, அதன் சருத்யபேதத்வத்தை, "தத்ர ப்ரத்யவஸ்தீயதே" என்பது முதல் "ஸர்வோ ப்ரத்யுச்யதே" என்பது வரையிலான க்ரந்தத்தால் நிரூபித்தார். இப்போது, அந்தப் பக்ஷத்தின் ந்யாயாபேதத்வத்தை நிரூபிக்க உபக்ரமிக்கிறார்.

இவ்விடத்திற் சொல்லப்படும் ந்யாய விரோதமென்னவென்றால், அந்தச் சாங்கர பக்ஷத்தில் வ்யாஹதார்த்தம் சொல்லப்படுகின்றது என்பதுதான். அதாவது, முன்னுக்குப் பின் விரோதம் தென்படுகின்றது என்று சொன்னதாயிற்று. ப்ரஹ்மத்தை ஜ்ஞாந ஸ்வரூபமென்றும் அந்த ஜ்ஞாநம் ஸ்வயம் ப்ரகாசமென்றும் அது நித்யமென்றும் முதலிற் சொல்லிவிட்டு, பிறகு, அதற்கு அவித்யையால் திரோதாநம் ஏற்படுகின்றதென்றும் அவர்கள் சொல்லுகிறார்கள். ப்ரகாசத்திற்குத் திரோதாநம் ஏற்பட்டால் அது அம்மாதிரி திரோதாநத்தை அடையுங்காலத்தில் ஸ்வயம் ப்ரகாசமில்லாமல் ஆகிவிடுமானதால், அதை எப்பொழுதும் ஸ்வயம் ப்ரகாசமென்று சொல்வது ஸாத்யமில்லாமல் போய்விடும். ஆகையால் அவர்கள் சொல்வது வ்யாஹதார்த்தமாகின்றது. "விஜ்ஞாநமாநந்தம், நித்யம் விபும்" இத்யாதியான ச்ருதி வாக்யங்கள் ப்ரஹ்மத்தை ஜ்ஞாந ஸ்வரூபமென்றும் நித்யமான வஸ்துவென்றும் சொல்லுகின்றன, "அந்ருதேந ஹி ப்ரத்யூடா:" இத்யாதியான வாக்யங்கள் அதற்குத் திரோதாநத்தைச் சொல்லுகின்றன; இரண்டும் ச்ருதியிலேயே சொல்லப்பட்டிருக்கிறபடியால், அது வ்யாஹதி ஆகமாட்டாது' என்னில், 'ச்ருதியாக இருந்தபோதிலும் வ்யாஹதார்த்தத்தைச் சொல்வதற்கு அது அநர்ஹமே, ச்ருதி ஒருபொழுதும் வ்யாஹதார்த்தத்தைப் போதிப்பிக்கமாட்டாது. அப்படி வ்யாஹதார்த்தத்தை அது சொல்லும் பக்ஷத்தில் அது அப்ரமாணமே ஆகவேண்டும்' என்று ஆக்ஷேபிக்கக்கூடும். "ந ஹி வசநவிரோதே ந்யாய: ப்ரவர்த்ததே" (ச்ருதி வசநம் ஸ்பஷ்டமாக இருக்கும் பக்ஷத்தில், அவ்விடத்தில் ந்யாயம் ப்ரவ்ருத்திக்கமாட்டாது) என்னில், 'ச்ருதிக்கு விருத்தமான ந்யாயம் அவ்யாபாதகம்' என்பது உண்மையே. ஆனால், அது வசநாந்தர விரோதம் வராமல் இருக்கும் பொழுது மாத்ரம் ஒத்துக்கொள்ளத் தக்கது. வசநாந்தர விரோதம் வந்தால் ந்யாயம் அவ்யாபாதகமாக மாட்டாது. ப்ரக்ருதத்தில், "அந்ருதேந ஹி ப்ரத்யூடா:" என்னும் வாக்ய பலத்தைக்கொண்டு ப்ரஹ்மத்திற்குத் திரோதாநத்தைச் சொல்லும் பக்ஷத்தில் "நித்யம் விபும்" என்று ஸ்வயம் ப்ரகாசமான ப்ரஹ்மத்திற்கு நித்யத்தன்மையைச் சொல்லும் வசநாந்தரங்கள் பாதிக்கப்படுகிறபடியால், கீழ்க் கூறப்பட்டுள்ள வ்யா

திரோதாநம் நாம ப்ரகாஶநிவாரணம் | ஸ்வரூபாதிரேகிப்ரகாஶ-தர்மாநப்யுபகமேந ப்ரகாஶஸ்யைவ ஸ்வரூபத்வாத் ஸ்வரூபநாஶ ஏவ ஸ்யாத் | 'ப்ரகாஶபர்யாயம் ஜ்ஞாநம் நித்யம், ஸ ச ப்ரகாஶோ(அ)வித்யாநிவாரித:' இதி பாலிஶபாஷிதமிதம் | அவித்யயா ப்ரகாஶதிரோ

---

அதற்கு ப்ரகாசம் என்பது அந்த ஸ்வரூபத்தைக் காட்டிலும் வேறுபட்ட ஒரு தர்மம்' என்று ஒத்துக் கொள்ளுகிறதில்லையாதலால், ப்ரகாசமே ஸ்வரூபமென்று சொன்னதாயிற்று, அப்படிப்பட்ட ப்ரகாசத்திற்குத் தடை ஏற்பட்டால் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபமே நஷ்டமாகி விடுமன்றோ ? 'ப்ரகாசமென்று நாங்கள் சொல்லும் வஸ்து, நித்யமான ஜ்ஞானமே, அந்த ப்ரகாசம் அவித்யையால் நிவாரிதமாகின்றது என்று மாத்ரம் நாங்கள் சொல்லுகிறோம்' என்னில், அது அறியாதவர்கள் சொல்லும் வார்த்தையே ஆகும். 'ப்ரகாசம் அவித்யையால் மறைக்கப்படுகின்றது' என்பதற்கு, ப்ரகாசம் உத்பத்திவை

---

ஹாநி என்னும் தோஷம் அவச்யம் ப்ரஸங்கிக்கிறது' என்று ப்ரதி வசநம் சொல்லப்படுகின்றது. 'நீங்களும் அந்த ச்ருதி வாக்யங்களெல்லாவற்றையும் ஒத்துக்கொள்ளுகிறபடியால், உங்கள் பக்ஷத்திலும் அந்தத் தோஷம் ப்ரஸங்கிக்கின்றதன்றோ?' என்று ப்ரச்நம் செய்தால், 'எங்களுடைய கொள்கைகள் வேறு, அந்த ச்ருதி வாக்யங்களுக்கு நாங்கள் சொல்லும் அர்த்தமும் வேறு, ஆகையால் அந்தத் தோஷம் எங்கள் பக்ஷத்தில் ப்ரஸங்கிக்கமாட்டாது' என்று ஸமாதாநம் சொல்லப்படும். எங்கள் பக்ஷத்தில் பரஹ்மம் வேறு, ஜீவாத்மா வேறு. பரஹ்மம் என்பது ஹேய குணங்களற்றது, கல்யாண குணங்களால் பரிபூர்ணமானது; கண்ணுக்குத் தென்படும் இந்த ப்ரபஞ்சம் முழுவதும் பரமார்த்தமான வஸ்து, அவனுடைய விபூதி, இந்த ப்ரஹ்மத்திற்கு நாங்கள் எவ்வித திரோதாநத்தையும் ஒத்துக் கொள்ளாமல், ஜீவாத்மாக்களுக்கு மாத்ரம் அதை ஒத்துக்கொள்ளுகிறோமானதால் வ்யாஹதி என்பது எங்கள் பக்ஷத்தில் ப்ரஸங்கிக்க மாட்டாது. "அநாதிநா ஹி ப்ரத்யாயா:" என்பது எங்கள் பக்ஷத்தில் ஜீவாத்ம விஷயம். ஜீவாத்மாவைப் பரமாத்ம பிரமமாக நீங்கள் ஒத்துக்கொள்ளாமல் இருப்பதால், உங்கள் பக்ஷத்தில் அது பரமாத்ம விஷயமே ஆகின்றது, ஆகையால் வ்யாஹதியும் நேர்கின்றது' என்பது இவ்விடத்திற் சொல்லப்படும் விஷயம்.

ஸ்வரூபாதிரேகிப்ரகாஶதர்மாநப்யுபகமேந— 'பரஹ்மத்தின் ஸ்வரூபத்தைக் காட்டிலும் ப்ரகாசம் என்பது வேறுபட்டது, ஆகையால், அந்த ப்ரகாசத்திற்குத் திரோதாநம் வரும்பொழுது, ஸ்வரூபத்திற்கு எவ்வித ஹாநியும் வரவில்லை' என்று நீங்கள் சொன்னால், அப்பொழுது இந்தத் தோஷம் ப்ரஸங்கிக்கமாட்டாது தான். அப்படி நீங்கள் சொல்லவில்லையன்றோ? என்பது தாத்பர்யம்.

பாலிஶபாஷிதம்— நிரூபஞ்சகர்கள் சொல்லும் வார்த்தை. அதாவது வ்யாஹதார்த்தம் என்று சொன்னதாயிற்று.

𑌹𑌿𑌤 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌨𑍍𑌧𑍋 𑌵𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌸𑍍𑌯 𑌵𑌿𑌨𑌾𑌶𑍋 𑌵𑌾 । 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌸𑍍𑌯𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑍍𑌯𑌨𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌮𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌨𑌾𑌶 𑌏𑌵 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑍋 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌕𑌾𑌰 𑌸𑍍𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍀𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍, 𑌸𑌤𑍍𑌯𑌾𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌨 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍𑌤𑌿𑌰𑍋𑌹𑌿𑌤𑌮𑌿𑌤𑌿 𑌨𑌾𑌨𑌾𑌕𑌾𑌰𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑍀𑌤𑌿 𑌭𑌵𑌤𑌾𑌂 𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌃 𑌸𑍍𑌵𑌸𑍍𑌥𑍈𑌰𑌨𑌾𑌦𑌰𑌣𑍀𑌯 𑌏𑌵 ।

‘𑌨𑌨𑍁 𑌚 𑌭𑌵𑌤𑌾𑌪𑌿 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌵𑌰𑍂𑌪 𑌆𑌤𑍍𑌮𑌾𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌃, 𑌸 𑌚 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌃 । 𑌤𑌸𑍍𑌯 𑌚 𑌦𑍇𑌵𑌾𑌦𑌿𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌤𑍍𑌮𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑍇 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪

---

அடையவொட்டாமல் தடுக்கப்படுகின்றது என்றாவது, ஏற்கெனவே இருக்கும் ப்ரகாசம் விநாசத்தை அடைகின்றது என்றாவது பொருள் கொள்ள வேண்டும். ப்ரகாசம் உத்பத்தி செய்யக்கூடிய வஸ்து அன்றாகையால் முதல் அர்த்தம் உபபந்நமாக மாட்டாது; ‘அது விநாசம் அடைகின்றது’ என்னும் இரண்டாவது அர்த்தமே உபபந்நமாக வேண்டும். இந்த அர்த்தம் ‘ப்ரகாசம் நித்யமாகவும் நிர்விகாரமாகவும் இருக்கின்றது’ என்று சொல்வதற்கு விருத்தம். ‘ப்ரகாசம் நித்யமாகவும் நிர்விகாரமாகவும் இருக்கின்றது’ என்று சொல்லும் பக்ஷத்தில், ‘அவித்யையால் அந்த ப்ரகாசம் மறைக்கப்படுகின்றது’ என்று சொல்வதை அது பாதிக்குமன்றோ? ஆகையால், ‘ப்ரகாசம் நித்யம்; அது அவித்யையால் மறைக்கவும் படுகின்றது’ என்னும் அர்த்தம் வித்வத் ஸந்நிதியில் சொல்லிக் கொள்ளத் தகுந்ததன்று.

𑌨𑌨𑍁 𑌚............𑌹𑍂𑌤 𑌸𑌂𑌵𑌾𑌦𑌾𑌃—‘நீங்களும், ஆத்மா ஜ்ஞாந ஸ்வ

---

𑌦𑍇𑌵𑌾𑌦𑌿𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌤𑍍𑌮𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑍇—தேவன் மநுஷ்யன் திர்யக் ஸ்தாவரம் என்னும் விபாகமெல்லாம் தேஹத்தைப் பற்றியதே தவிர, ஆத்மாவைப் பற்றியதன்று. ஆனால் நாம் அநாதி கர்மாதீநமான ப்ரக்ருதி ஸம்பந்தத்தால் விபரீத ஜ்ஞாநத்திற்குப் பாத்ரமாகி, ‘நான் தேவன், நான் மநுஷ்யன்’ இத்யாதியான ப்ரமத்தைக் கொள்ளுகிறோம். இந்த ப்ரமம் நமக்கு இயற்கையாயுள்ள ஜ்ஞாநத்தின் திரோதாநத்தால் ஏற்படுகிறபடியால் நாம் திரோதாநத்தை ஒத்துக்கொள்ள வேண்டியது அவச்யமென்றும் அப்படி அதை ஒத்துக்கொண்டால் ஜ்ஞாந ஸ்வரூபமாயுள்ள இந்த ஜீவன்களுக்கு ஸ்வரூப நாசம் ப்ரஸங்கிக்குமாதலால் நமது பக்ஷத்திலும் வ்யாஹதார்த்த ரூபமான தோஷம் துல்யமென்றும் அவர்கள் ப்ரதிபந்தி சொல்லுகிறார்கள். இந்த ஆக்ஷேபத்திற்கு நாம் எவ்விதப் பரிஹாரம் சொல்லுகிறோமோ, அந்தப் பரிஹாரம் அவர்களுக்கும் துல்யமாகும் என்பதே அவர்களுடைய தாத்பர்யம். ஒருவன் நம்மைத் திருடன் என்று சொன்னால், நீயும் திருடன் என்று அவனைப் பார்த்து ப்ரதிபந்தி சொல்லுமிடங்கள் எல்லாவற்றிலும்

வப்ரகாஶதிரோதாநம் ஜீவஸ்யாஶ்ரயணீயம், ஸ்வரூபப்ரகாஶே ஸதி ஸ்வாத்மந்யாகாராந்தராத்யாஸாயோகாத் । அதோ பவத ஏவாயம் ஸமாநோ தோஷ: । கிம் த்வாத்மைகத்வவாதிந: பவத்ப்ரதிபாதிதம் தூஷணமேகஸ்மிந், பவதாமாத்மாநந்த்யாப்யுபகமாத் ஸர்வேஷ்வயம் தோஷ: பரிஹரணீய: '

அத்ரோச்யதே । ஸ்வபாவதோ நிகிலப்ரத்யநீகாநந்தஜ்ஞாநாநந்தைகஸ்வரூபம் ஸ்வாபாவிகாநவதிகாதிஶயாஸங்க்யேய கல்யாண

---

ரூபமென்றும் அந்த ஜ்ஞானம் ஸ்வயம் ப்ரகாசமென்றும் ஒத்துக் கொள்ளுகிறீர்கள். அப்படிப்பட்ட ஆத்மாவுக்குத் தான் தேவன் மநுஷ்யன் இத்யாதியான அபிமானம் ஜநிக்கும் பொழுது, அவனுடைய ஸ்வயம் ப்ரகாசமான ஸ்வரூபத்திற்குத் திரோதானம் ஏற்படுகின்றது என்று நீங்களும் ஒத்துக்கொள்ள வேண்டும். ஏனென்றால், ஸ்வரூப ப்ரகாசம் மறைக்கப்படாமல் இருக்கும் பக்ஷத்தில், தான் தேவன் மநுஷ்யன் இத்யாதியான விபரீத அபிமானம் அவனுக்கு ஜநிக்கமாட்டாதன்றோ? ஆகையால் எங்கள் மீது எந்த வ்யாஹதி ரூபமான தோஷத்தைச் சொல்லுகிறீர்களோ அது உங்களுக்கும் ஸமானம். தவிரவும், நாங்கள் ஒரே ஆத்மாவை ஒத்துக்கொண்டிருக்கிறபடியால் நீங்கள் சொல்லும் தோஷம் அந்த ஒரு ஆத்மா ஸம்பந்தப்பட்டவரையில் மாத்ரம் ஏற்படலாம், நீங்கள் அநந்தங்களான ஆத்மாக்களை ஒத்துக்கொண்டிருக்கிறீர்கள், அவ்வளவு ஆத்மாக்கள் விஷயத்திலும் இந்தத் தோஷத்தை

---

பரிஹார துல்யத்வமே தாத்பர்யமென்று பெரியோர்கள் ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். அம்மாதிரியே சாங்கரர்கள் இவ்விடத்தில் ப்ரதிபந்தி சொல்வதாக நாம் அறியவேண்டும்.

**கிம் து**—சாங்கரர்கள், 'உங்களுக்கும் அந்தத் தோஷம் ப்ரஸங்கிக்கின்றதே' என்று சொல்லும் பொழுது, நம்முடைய பக்ஷத்தில் தோஷாதிக்யம் ப்ரஸங்கிக்கின்றது என்றும் சொல்லுகிறார்கள். தாங்கள் ஒரே ஆத்மாவை ஒத்துக்கொண்டிருக்கிற படியால் தங்கள் பக்ஷத்தில் ஒரு வ்யவஸ்தையின் பங்கம் மாத்ரமே வருகின்றதென்றும், நாம் அநேக ஆத்மாக்களை ஒத்துக்கொண்டிருக்கிறபடியால் நம்முடைய பக்ஷத்தில் அநேக வ்யவஸ்தா பங்கங்கள் வருகின்றனவென்றும் அவர்கள் அபிப்ராயப்பட்டு தோஷாதிக்யத்தைச் சொல்லுகிறார்கள்.

**ஸ்வபாவத:**—இவ்விடத்தில் ஸ்ரீ பாஷ்யகாரர், தாம் ஒத்துக்கொண்டிருக்கும் கொள்கைகளையும், அவைகளுக்கு உள்ள ச்ருதி ஸ்ம்ருதி முதலான ப்ரமாணங்களையும் சொல்லுகிறார். "ஸ்வபாவத:" என்பது முதல் "க்ஷீஞ வெஸத்ஸ்யதி" என்பது வரையிலான வாக்யத்தால் கொள்கை சொல்லப்படுகிறது. 'நாங்கள் ஒத்துக்கொள்ளும் ப்ரமேயமான வஸ்து பரமார்த்தமானது, ப்ரமாணமும் பரமார்த்தமானது' என்பது முக்ய கொள்கை. 'ஹேயகுண ரஹிதமாயும் கல்யாண குண ஆகரமாயும் இருக்கும் பரப்ரஹ்ம

அபி ச ஜ்ஞாத்ருரூபப்ரஹ்மவ்யதிரிக்தக்ருத்ஸ்நநிஷேதவிஷயஜ்ஞாநஸ்ய கோऽயம் ஜ்ஞாதா? அத்யாஸ ஏவ இதி சேந், தஸ்ய நிஷேத்யதயா நிவர்த்தகஜ்ஞாநகர்த்ருத்வாநுபபத்தே: | ப்ரஹ்மஸ்வரூபமேவ

---

டாது. அத்யாஸம் என்பது நிவருத்திப்பிக்கப்பட வேண்டியது, ஆகையால், அது நிவருத்திக்கும் ஜ்ஞாநத்திற்குக் கர்மாவாகின்றது, அதற்குக் கர்த்ருத்வம் சொல்வது (அதுவே அத்யாஸத்தை நிவருத்திக்கின்றது என்று சொல்வது) ந்யாயத்திற்கு ஒத்ததாக மாட்டாது. அந்த ஜ்ஞாதா அத்யாஸ ரூபனன்று, ப்ரஹ்ம ரூபமே என்று சொல்லும் பக்ஷத்தில், 'அந்த ப்ரஹ்மத்தின் நிவர்த்தக ஜ்ஞாநத்தைக் குறித்து ஏற்படும் ஜ்ஞாத்ருத்வம் ப்ரஹ்ம ஸ்வரூபமா? இல்லாவிட்டால் அத்யஸ்தமா?' என்று ப்ரச்நம் செய்யக்கூடும். அத்யஸ்தமென்று சொல்லும் பக்ஷத்தில், அந்த அத்யாஸமும் அதற்கு மூலமாக இருக்கும் மற்றொரு அவித்யையும் நிவர்த்தக ஜ்ஞாநத்திற்கு விஷயமாகாமல்

---

அபி ச — இப்படி நிவருத்தி நிவர்த்தக அநுபபத்திகளை நிரூபித்துவிட்டு, இப்பொழுது ஜ்ஞாதாவின் அநுபபத்தியை நிரூபிக்கிறார் ஸர்வமும் ப்ரஹ்மமே என்னும் ஜ்ஞாநம் ஏற்பட்டவுடன் அவித்யை நிவருத்தியாகின்றது என்றன்றோ அத்வைதிகள் சொல்லுகிறார்கள்? அந்த ஜ்ஞாநம் யாருக்கு ஏற்படுகின்றது என்னும் அம்சத்தை விசாரிக்கப் புகுந்தால், இன்னாருக்கு ஏற்படுகின்றது என்று சொல்வது ஸாத்யமில்லை என்கிறார். அதாவது, அந்த ஜ்ஞாநம் ஏற்படுகிறவனை (ஜ்ஞாதாவை) ப்ரஹ்மமே என்றும் சொல்ல முடியாது, ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறுபட்டவனென்றும் சொல்ல முடியாது என்று சொன்னதாயிற்று. அத்வைதிகள் மதத்தில் ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறுபட்ட பரமார்த்த வஸ்து இல்லையாதலால் இந்த ஜ்ஞாதாவை ப்ரஹ்ம பிந்நன் என்று ஒத்துக் கொள்ளும் பக்ஷத்தில், அவன் அவித்யையால் ஏற்பட்ட அத்யஸ்த சேதநனென்றே சொல்ல வேண்டும். அவனுடைய ஜ்ஞாநத்தினாலேயே அவித்யை நிவருத்தியாகவேண்டுமாதலால், அவன் அம்மாதிரி அத்யஸ்த சேதநனாக இருப்பது ந்யாய விருத்தமாகும் ஒரே வஸ்து ஒரு க்ரியைக்கு கர்மாவாகவும் கர்த்தாவாகவும் இருப்பது ஸாத்யமில்லை ஆகையால் அவன் ப்ரஹ்மமே என்று சொல்லவேண்டி வருகின்றது. அதாவது, ப்ரஹ்ம ஸ்வரூபத்தால் ஜ்ஞாநமாக இருப்பதுடன் இந்த அவித்யா நிவர்த்தக ஜ்ஞாநத்தையும் உடைத்தாயிருக்கிறான் என்று சொன்னதாயிற்று. இப்படி ப்ரஹ்மத்திற்குச் சொல்லப்படும் அவித்யா நிவர்த்தக ஜ்ஞாந ப்ரயுக்த ஜ்ஞாத்ருத்வம் ப்ரஹ்ம ஸ்வரூபமேயா? இல்லாவிட்டால் அத்யஸ்தமா? என்று ப்ரச்நம் செய்யக்கூடும். ப்ரஹ்ம ஸ்வரூபமே என்னில், அது நம்முடைய ஸித்தாந்தமாகையால் அது நமக்கு இஷ்டமே 'ப்ரஹ்மம் ஜ்ஞாந ஸ்வரூபம், ஜ்ஞாத்ருத்வமும் அதற்கு உண்டு' என்பது நமது ஸித்தாந்தம் அன்றோ? ஆனால் அது அத்வைதிகளுக்கு அபஸித்தாந்தமாகுமாதலால் அதை அவர்கள் ஒத்துக்கொள்ள மாட்டார்கள். அந்த ஜ்ஞாத்ருத்வம் அத்யஸ்தமென்று ஒத்துக் கொள்வதும் அவர்களுக்கு விருத்தமாகும். ஏனென்றால் அந்த அத்யாஸமும் அதற்கு மூலமாயுள்ள அவித்யையும் மற்றுமொரு நிவர்த்தக ஜ்ஞாநத்தாலேயே நிவருத்திப்பிக்கப்பட வேண்டும் அந்த நிவர்த்தக ஜ்ஞாநமும் ஒரு ஜ்ஞாதாவை ஆச்ரயித்தே இருக்கவேண்டுமாதலால், அந்த ஜ்ஞாதாவின்

ஸைவேதி சேத், ப்ரஹ்மணோ நிவர்த்தகஜ்ஞாநம் வ்யதி ஜ்ஞாத்ருகம் கிம் ப்ரஹ்மைவ? உத ஸ்வயம்? ஸ்வயம் சேத், ஸ்வஸ்யாத்யாஸரூபாவித்யாஜ்ஞாநம் ச நிவர்த்தகஜ்ஞாநவிஷயதயா திஷ்டத்யேவ । தந்நிவர்த்தகாந்தராப்யுபகமே தஸ்யாபி த்ரிரூபத்வாதநவஸ்தைவ। ஸர்வஸ்ய ஹி ஜ்ஞாநஸ்ய த்ரிரூபத்வவிரஹே ஜ்ஞாநத்வமேவ ஹீயேத; கஸ்யசித்

---

நிற்கிறபடியால், அவைகள் நிவ்ருத்தி யாகாமலே நிற்கும்படி ப்ரஸங்கிக்கும். அதற்கு வேறொரு நிவர்த்தக ஜ்ஞாநத்தை ஒத்துக்கொண்டால், அதுவும் மூன்று அம்சங்களை யுடையதாக இருக்க வேண்டுமாதலால், அநவஸ்தையே நேரும். (ப்ரமாண ஜந்ய) ஜ்ஞாந மெல்லாம், மூன்று அம்சங்களையும் உடைத்தா யிராமல், இருக்கும் பக்ஷத்தில் அவைகளுக்கு ஜ்ஞாநத் தன்மையே இராமல் போய் விடும். ஜ்ஞாநம் என்பது ஒருவனுக்கு ஒரு அர்த்த விசேஷத்தை ப்ரகாசிக்கின்றதன்றோ? அதற்கு மூன்று அம்சங்களில்லா விட்டால், உங்களுடைய ஸித்தாந்தத்தில் ப்ரஹ்ம ஸ்வரூப ஜ்ஞாநத்தை அவித்

---

ஜ்ஞாத்ருவத்தைப் பற்றி விசாரிக்கப் புகுகையில் இதேமாதிரி ஸங்கடம் ஸம்பவித்து அநவஸ்தா ரூபமான தோஷத்தை உண்டுபண்ணும். ஆகையால் ப்ரக்ருத ஜ்ஞாதா எப்படிப்பட்டவனென்று உபபாதிப்பது ஸாத்யமில்லாமல் இருக்கின்றது.

ஸ்வாத்யாஸரூப: — இதன் பொருளை பக்கத்தில் காண்க.

நிஷேத்யதயா — நிவர்த்யதயா। தந்நிவர்த்தகாந்தரே — அத்யாஸமானது நிவர்த்தக ஜ்ஞாநத்தால் நிவ்ருத்திப்பிக்கப்பட வேண்டியது. அந்த நிவர்த்தக ஜ்ஞாநத்தையுடைய ஜ்ஞாதா அத்யாஸரூபன் என்று சொல்வது எப்படி ந்யாயத்திற்கு ஒக்கும்? 'வெளிச்சத்தால் இருள் நிவ்ருத்திக்கப் படுகின்றது' என்னும் வாக்யத்தில் நிவ்ருத்தி ரூபமான க்ரியைக்கு ப்ரகாசம் கர்த்தா, இருள் கர்மம். நிவ்ருத்திக்கின்ற ப்ரகாசம், நிவ்ருத்திக்கப்படும் இருளாக இருக்கக்கூடுமோ? கர்மத்வம் இருக்குமிடத்தில் கர்த்ருத்வம் அநுபபந்நம்.

தஸ்யாபி த்ரிரூபத்வாத் — நிவர்த்தக ஜ்ஞாநம் (அறிவு) ஜ்ஞாதா (அறிகிறவன்) ஜ்ஞேயம் (அறியப்படும் வஸ்து) ஆக அம்சங்கள் மூன்று. ஸகலமான ப்ரமாண ஜந்ய ஜ்ஞாநத்திற்கும் இந்த மூன்று அம்சங்களை அத்வைதிகளும் ஒத்துக் கொண்டிருக்கிறார்கள். ப்ரஹ்மத்தின் ஸ்வரூப பூதமான ஜ்ஞாநத்திற்கு மாத்ரம் அவர்கள் ஒரே அம்சத்தைச் சொல்லுகிறார்கள்.

ஸர்வஸ்ய ஹி ஜ்ஞாநஸ்ய — ப்ரமாண ஜந்யமான ஜ்ஞாநமெல்லாவற்றிற்கும் என்பது தாத்பர்யம். இந்த வாக்யம் ஆரம்பித்து "அநிவர்த்யம் ஸ்யாத்" என்னும் வரையில் ஜ்ஞாநத்தின் த்ரி ரூபத்வம் விவரிக்கப்படுகின்றது.

கம் அநாத்யவித்யாவிஶேஷம் ப்ரதி விஷயப்ரகாஶத்வாத் ஜ்ஞாநஸ்ய த்ர்யம்ஶத்வ விரஹே ஸம்பவதாம் ஸ்வரூபஸ்ய தஜ்ஜ்ஞாநஸ்ய நிவர்தகஜ்ஞாநஸ்யாபி ஸ்வநிவர்த்ய கம் ஸ்யாத். ப்ரஹ்மஸ்வரூபஸ்யைவ ஜ்ஞாத்ருத்வாப்யுபகமே ஸ்வகீய ஏவ பக்ஷ: பரித்யக்த: ஸ்யாத். நிவர்தகஜ்ஞாந ஸ்வரூப ஜ்ஞாத்ரு

---

யாநிவருததிக்கு யோகயதை யறறது என்று ஒததுக்கொணடிருபபது போல இநத ஜஞாநததையும நிவாததகமாக இருககு அநாஹம என்று சொலலவேணடி வரும். 'பரஹம ஸவருபததிறகே ஜஞாதருதவததை அஙகீகரிககிரோம' என்று சொலலும் பக்ஷததில, எஙகள பக்ஷததை நீஙகளும பரிகாஹிததததாகி விடும. 'நிவாததக ஜஞாநத்தைக் குறிதது ஏறபடும ஜஞாதருதவம, அநத நிவாததக ஜஞாநததால நிவருததிககப்

---

ஜ்ஞாநஸ்யைவ ஹி யேத—இநத மூன்று அமசஙகளை ஒததுக் கொளளாவிட்டால ஜஞாநததிறகு ஜஞாநததனமையே நஷடமாகிவிடும.

விஷயப்ரகாஶத்வாத்—ப்ரகாஶத்வாத். ஜஞானம் எனபது ப்ரகாச ரூபம. அதாவது, ஒருவனுக்கு ஒரு அாசந விசேஷததை பரகாசிப்பதே ஜ்ஞானம என்று சொனன தாயிறறு ஆகையால், மூன்று அமசஙகளும அதில இருக்கினறன.

த்ர்யம்ஶத்வவிரஹே—அநதத் மூன்று அம்சஙகள இலலாவிட்டால. ஸ்வ ரூப பூத ஜஞாநததிற்கு மூன்று அம்சஙகளிலலை யாதலால அதற்கு அவிதயையை நிவ ருததிபபிகக யோகயதை இலலை என்று நீஙகள சொலவது போல, ப்ரமாண ஜநய ஜஞா நததிறகும மூன்று அமசஙகள இலலை யென்று சொலலும பக்ஷததில அவிதயையை நிவ ருததிபபிககும யோகயதை அதறகும இராமல போகும்படி ஸமபவிககும. அது அநிஷ டம ஆகையால பரமாண ஜநய ஜஞாநம எலலாவறறிறகும தரி ரூபதவம உணடு என்று ஏறபடுகிறது.

ஸ்வகீய: பக்ஷ:—நமமுடைய பக்ஷம. பரஹம ஸவருபததிறகே ஜஞாத ருதவமும உணடு எனபது விசிஷடாதவைதிகளின மதம.

ஸ்வநிவர்த்யாந்தர்கதம்—தனனால நிவாததிப்பிககத் தகுநதவைகளுள இநத ஜஞாதருதவமும உளளடஙகியது அதாவது, அவிதயை முதலானவை அநத நிவாததக ஜஞாநததால நிவாததிககபபடுவது போல, நிவாததக ஜஞாநததைக குறிதது ஏற்படும ஜஞாதருதவமும அநத நிவாததக ஜஞாநததாலேயே நிவாததிககப்படுகினறது என்று சொன்னதாயிறறு.

[illegible]

[illegible]

---

படிம பதார்த்தங்களுள் அந்தாபூதம்' என்று சொல்வதானது, 'பூதலத்தைத் தவிர மற்றை ஸகல பதார்த்தங்களும் தேவதத்தனால் வெட்டப்பட்டது' என்று சொல்லும் பொழுது வெட்டும் வ்யாபாரமும் வெட்டுகிறவனுடைய வெட்டும் தன்மையும், வெட்டுதலுக்குத் தகுந்த மற்றை பதார்த்தங்கள் போல வெட்டும் வ்யாபாரத்தில் அடங்கியுள்ளன' என்று சொல்வது போல உபஹஸிக்கத் தகுந்ததே.

ஸவி அ......... வாக்யங்க—ஸகல பேதங்களையும் போக்கடிக்கக்கூடிய 'எல்லாம் ஒன்றே' என்னும் ஜ்ஞானம் எதனால் உண்டாகின்றது? என்பதை விசாரிக்க

---

[illegible]—'பூ ப்ரதேசம் நீங்கலாக மற்றை ஸகலமும் வெட்டுப்பட்டுப்போய் விட்டது' என்றும் சொல்லும்பொழுது, 'மற்றை ஸகலமும்' என்பதால் மற்றை ஸகலமான வெட்டப்படக்கூடிய பதார்த்தங்களன்றோ க்ரஹிக்கக் கூடியவை? அப்படி க்ரஹிக்காமல், 'ஸகலமும்' என்னும் சப்த பலத்தால் தேவதத்த வ்யதிரிக்தமான சேதருத்வம் (வெட்டுகிறவனுடைய வெட்டும் தன்மை) சேதந க்ரியை (வெட்டும் வ்யாபாரம்) இவைகளையும் க்ரஹிப்பது உபஹாஸ்யமாகாதோ? அம்மாதிரியே, நிவர்த்தக ஜ்ஞானத்தில் நிவர்த்தகத்வம் இருக்கின்றது என்னும் பலத்தை அவலம்பித்து, அந்த நிவர்த்தக ஜ்ஞான ஸ்வரூப ஜ்ஞாத்ருத்வமும் அந்த ஜ்ஞானத்தால் நிவருத்திக்கப்படுகின்றது என்று சொல்வது உபஹாஸ்யமாகும் என்பது தாத்பர்யம்.

ஸவி அ—இதுவரையில் ஜ்ஞாத்ரநுபபத்தி நிரூபிக்கப்பட்டது. இப்பொழுது ஸாமக்ரீ அநுபபத்தி என்னும் அநுபபத்தியை நிரூபிக்கிறார். 'எல்லாம் ஒன்றே, நம்மால் காணப்படும் பேதமெல்லாம் பொய்' என்பதன்றோ அத்வைதிகளின் முக்ய கொள்கை. 'இந்த ஜ்ஞானம் எதனால் ஏற்படுகின்றது?' என்பதை விசாரிக்கப் புகுந்தால், 'இதனால் ஏற்படுகின்றது' என்று சொல்வது ஸாத்யமில்லை என்பது தான் இவ்விடத்திற் சொல்லப்படும் ஸாமக்ரீ அநுபபத்தி. இந்த ஜ்ஞானம் எதனால் உண்டாகின்றதோ, அது அந்த ஜ்ஞானத்திற்கு ஸாமக்ரீ ஆகிறபடியால், இதை ஸாமக்ரீ அநுபபத்தி என்று வ்யவஹரிக்கிறார்கள். 'தத்த்வமஸி' போன்ற ச்ருதி வாக்யங்கள் இந்த ஜ்ஞானத்தை உண்டுபண்ணுகின்றன, இந்த ஜ்ஞானம் பேத ஜ்ஞானத்தைப் போக்கடிக்கின்றது' என்பது அத்வைதிகளின் வாதம். 'அந்த ச்ருதி வாக்யங்கள் அவித்யா பரிகல்பிதங்களாகையால், அவைகளால் ஏற்படும் ஜ்ஞானம் ப்ரமாணமாக மாட்டாது, அதற்கு மற்றொரு தவறுதலான ஜ்ஞானத்தைப் போக்கடிக்க யோக்யதை இல்லை என்பது இவ்விடத்திற் செய்யப்படும் ஆக்ஷேபம்.

*𑌇𑌤𑌿 𑌵𑌿𑌵𑍇𑌚𑌨𑍀𑌯𑌮𑍍 । '𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌰𑍇𑌵' 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍 । 𑌤𑌸𑍍𑌯𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌾𑌯𑌾 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌪𑌰𑌿𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌭𑍍𑌰𑌮𑌬𑌾𑌧𑌕𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌤𑍍𑌪𑌾𑌦𑌕𑌤𑍍𑌵𑌂 𑌨 𑌸𑌂𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌥𑌾 𑌹𑌿, 𑌦𑍁𑌷𑍍𑌟𑌕𑌾𑌰𑌣𑌜𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌰𑌜𑍍𑌜𑍁𑌸𑌰𑍍𑌪𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌨*

---

வேண்டும். 'வேதத்தினாலேயே அந்த ஜ்ஞானம் உண்டாகின்றது' என்று சொல்வது பொருந்தமாட்டாது. வேதம் என்பது ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறுபட்ட வஸ்து; ஆகையால் அவித்யையினால் அது கல்பிதம், அந்தக் காரணத்தால் அது, 'ப்ரபஞ்சம் ஸத்யம்' என்னும் ப்ரமத்தை நிவ்ருத்திப்பிக்கத்தகுந்த ஒரு ஜ்ஞான விசேஷத்தை உண்டு பண்ணுவதற்கு அநர்ஹமே. அப்படியே த்ருஷ்டாந்தத்தாலும் நிரூபிக்கலாம். ஏதோ

---

*𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑍍𑌯 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌕𑌯𑍋𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌃*—'எல்லாம் ஒன்றே, எல்லாம் ப்ரஹ்மமே' என்னும் ஜ்ஞானம் ஏற்பட்டால், ப்ரபஞ்சத்தில் வெவ்வேறாகத் தென்படும் பதார்த்தங்களுடைய பேத ஜ்ஞானம் போய் விடும். ஆகையால், ஐக்ய ஜ்ஞானம் பேதத்தை (அதாவது—பேத ஜ்ஞானத்தை) நிவ்ருத்திப்பிக்கின்றது என்று சொல்லப்படுகின்றது. நிவ்ருத்திப்பிக்குமது 'நிவர்த்தகம்' என்றும், நிவ்ருத்திப்பிக்கப்படுவது 'நிவர்த்யம்' என்றும் வ்யவஹரிக்கப்படும். இவைகளை 'பாதகம்' 'பாத்யம்' என்று வ்யவஹரிப்பதுமுண்டு.

*𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌾𑌯𑌾 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌪𑌰𑌿𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍*—அத்வைதிகள் சொல்லுகிறபடி 'ப்ரஹ்மம் ஒன்றுதான் உண்டு; ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறுபட்டவை போல் தோன்றுமவையெல்லாம் அவித்யையால் கல்பிதங்கள். ஆகையால் அவை அபரமார்த்தங்கள்' என்பது உண்மையானால், ச்ருதி, ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறுபட்டதாகையால், அது அபரமார்த்தமென்று ஆகும். அப்படி ஸ்வயமே அபரமார்த்தமாயிருப்பது, எப்படி மற்றொரு ப்ரமத்தை நிவ்ருத்திப்பிக்கும்? என்பதுதான் இவ்விடத்தில் கேட்கப்படும் கேள்வி.

*𑌦𑍁𑌷𑍍𑌟𑌕𑌾𑌰𑌣𑌜𑌨𑍍𑌯𑌸𑍍𑌯*—தோஷத்தால் ஏற்படும் ஜ்ஞானத்தை துஷ்ட காரண ஜந்யமென்று சொல்வார்கள். காமாலையால் வஸ்துக்கள் மஞ்சள் வர்ணமுள்ளவை போலத் தோன்றும் பொழுது 'வஸ்துக்கள் மஞ்சள் வர்ணமுள்ளவை' என்று காமாலைக் காரனுக்குத் தோன்றும் ஜ்ஞானம் துஷ்ட காரண ஜந்யம். அவித்யையால் நமக்கு ப்ரபஞ்சத்தில் பேதம் தென்பட்டால் அந்தப் பேத ஜ்ஞானம் துஷ்டகாரண ஜந்யம். இம்மாதிரி துஷ்ட காரண ஜந்யமாயிருக்கும் ஜ்ஞானம் அப்படி துஷ்ட காரண ஜந்ய மல்லாத ஜ்ஞானத்தால் பாதிக்கப்படுமே தவிர, மற்றொரு துஷ்ட காரண ஜந்யமான ஜ்ஞானத்தால் பாதிக்கப்படமாட்டாதன்றோ?

துஷ்டகாரணஜந்யஸ்ய 'ரஜ்ஜுரியம், ந ஸர்ப:' இதி ஜ்ஞாநேந பாத்யத்வே, ரஜ்ஜுஸர்பஜ்ஞாநபயே வர்த்தமாநே கேநசித் ப்ராந்தேந புருஷேண 'ரஜ்ஜுரியம், ந ஸர்ப:' இத்யுக்தேபி 'அயம் ப்ராந்த:' இதி ஜ்ஞாதே ஸதி தத்வசநம் ரஜ்ஜுஸர்பஜ்ஞாநஸ்ய பாதகம் ந பவதி, பயம் ச ந நிவர்த்ததே; ப்ரயோஜகஜ்ஞாநவத: ஶ்ரவணவேலாயாமேவ ஹி ப்ரஹ்மவ்யதிரிக்தஸ்ய ஶ்ருதேரபி ப்ராந்திமூலத்வம் ஜ்ஞாதமிதி । நிவர்த்தகஜ்ஞாநஸ்ய ஜ்ஞாது: தத்ஸாதநஶாஸ்த்ரஸ்ய ச ப்ரஹ்மவ்யதிரிக்ததயா யதி பாத்யத்வமுபபத்யதே, ஹந்த! தர்ஹி ப்ரபஞ்சநிவ்ருத்தேர் மித்யாத்வா

---

ஒரு தோஷதுஷ்ட காரணமடியாக ஒருவனுக்கு ஒரு கயிற்றில் 'இது பாம்பு' என்னும் ப்ரமம் ஏற்பட்டிருந்தால், அம்மாதிரியான தோஷ துஷ்ட காரணமடியாகவே 'இது பாம்பன்று, கயிறே' என்னும் ஒரு எண்ணம் பிறகு அவனுக்கு ஏற்பட்டபோதிலும், இந்த எண்ணத்தால் முதல் ப்ரமம் நிவ்ருத்தியாக மாட்டாதன்றோ? கயிற்றைப் பார்த்து பாம்பென்று ப்ரமித்து பயந்திருக்கும் ஒருவனுக்கு, 'இது பாம்பன்று, கயிறே' என்று மற்றொருவன் போதித்த போதிலும், 'அவனும் ப்ரமத்தால் அவ்விதம் போதிக்கின்றான்' என்னும் எண்ணம் அவனுக்கு இருக்கும் பக்ஷத்தில், அந்தப் போதநம் அவனுடைய ப்ரமத்தையும் நிவ்ருத்திப்பிக்கமாட்டாது, பயத்தையும் போக்கடிக்க மாட்டாது. அம்மாதிரியே ப்ரக்ருதத்திலும். வேதம் போதிப்பதை நாம் கேட்கும் காலத்திலேயே, 'வேதம் ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறுபட்டது. ஆகையால், அவித்யையால் கல்பிதம், பொய்யே' என்னும் ஜ்ஞாநம் இருக்கின்றதாகையால், வேதம் போதிப்பது நம்முடைய ப்ரமத்தை நிவ்ருத்திக்கமாட்டாது. ஒருகால், 'வேதம், அதனால் ஏற்படும் ஜ்ஞாநம், அந்த ஜ்ஞாநத்தைப் பெறுகிறவன் இவையெல்லாம் ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறுபட்டவை' என்னும் காரணத்தைக்கொண்டு, 'அவைகள் ப்ரமாணங்களல்ல, மற்றொன்றால் பாதிக

---

ப்ரயோஜகஜ்ஞாநவத:—'இந்த வஸ்து ப்ராஹ்மத்தைக் காட்டிலும் வேறுபட்டது? ஆகையால் இது பொய்' என்னுமிடத்தில், 'இது பொய்' என்பதற்கு ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறுபட்டதாயிருக்கும் தன்மை ப்ரயோஜகமாகின்றது. அப்படி 'அதற்கு இது ப்ரயோஜகம்' என்னும் ஜ்ஞாநம் ஒருவனுக்கு இருந்தால், அவன், ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறுபட்டதாயிருக்கும் ச்ருதி சொல்வதை நம்ப மாட்டான். அவன் விஷயத்தில் ச்ருதி போதிக்கும் ஐக்ய ஜ்ஞாநம் எப்படி 'ப்ரபஞ்சம் பின்னம்' என்னும் ஜ்ஞாநத்தைப் பாதிக்கும்?

ஶாஸ்த்ரஸ்ய யதி பாத்யத்வமுபபத்யதே—அத்வைதிகள் ப்ரபஞ்சத்தைப் பாத்யமென்றும் சாஸ்த்ரத்தைப் பாதகமென்றும் சொல்லி வந்தார்கள். அப்படிச் சாஸ்த்ரத்திற்குப் பாதகத்வம் சொல்வது அநுபபந்நம் என்பது இதுவரையில் நிரூபிக்க

வததீதி ப்ரபஞ்சஸ்ய ஸத்யதா ஸ்யாத் ; ஸ்வப்நத்ருஷ்டபுருஷவாக்யாவஸிதபித்ராதிமரணஸ்ய மித்யாத்வேந பித்ராதிஸத்யதாவத் । தத்த்வமஸ்யாதிவாக்யம் ந ப்ரபஞ்சஸ்ய பாதகம், ப்ராந்திமூலத்வாத், ப்ராந்தப்ரயுக்த ரஜ்ஜுஸர்ப்பபாதகவாக்யவத் ।

---

கத தகுந்தவைகளோ' என்று நீங்கள் சொல்லும் பக்ஷத்தில், அப்பொழுது ப்ரபஞ்ச நிவ்ருத்தியே பொய்யாகி விடுமானதால் 'ப்ரபஞ்சம் ஸத்யமே' என்று ஒத்துக் கொள்ளும்படி நேரும். ஸ்வப்நத்தில் தனது பிதா மரித்துவிட்டதாகக் கேட்ட ஒருவனுக்கு, பிறகு 'நான் கண்டது ஸ்வப்நம், ஆகையால் அது பொய்' என்னும் ஜ்ஞானம் ஸம்பவித்தால், அதனாலே அவனுக்கு 'பிதா ஸத்யமே' என்னும் உறுதி ஏற்படுகின்றதன்றோ? ஆகையால், தத்த்வமஸி (நீ அதுவே) என்பது முதலான ச்ருதி வாக்யங்கள், 'ப்ரபஞ்சம் ஸத்யம்' என்பதைப் பாதிக்கமாட்டா, ச்ருதி வாக்யங்கள் ப்ராந்தி மூலங்களல்லவோ? 'இது பாம்பன்று கயிறே' என்னும் ப்ராந்தனுடைய வார்த்தை இதற்கு நிதர்சநம்

---

பட்டது. இப்பொழுது, ஒருகால் சாஸ்த்ரத்திற்குப் பாத்யத்வத்தை அத்வைதிகள் சொல்வார்களோ என்று சங்கித்து, அப்படி அவர்கள் சொன்னால் அவர்களுக்குப் பெருத்த அநிஷ்டம் நேரும் என்று சொல்லுகிறார். 'ப்ரபஞ்சம் பொய்' என்று சாஸ்த்ரம் சொல்லுகிறதாகையால், அந்தச் சாஸ்த்ரம் பாத்யமாகப் போய்விடும் பக்ஷத்தில், 'ப்ரபஞ்சம் பொய்' என்பது பொய்யாகிவிடும், அதாவது 'ப்ரபஞ்சம் ஸத்யம்' என்று சொன்னதாகி விடும். அது அத்வைதிகளுக்கு அநிஷ்டமே. பித்ரு மரணம், பிதா ஜீவித்திருப்பது இரண்டும் பரஸ்பரம் விருத்தம், பித்ரு மரணம் ஸ்வப்ந ஜ்ஞானமாக இருந்து அந்தக் காரணத்தால் பாத்யமாகி விட்டால், பிதா ஜீவித்திருக்கிறான் என்னும் ஜ்ஞானம் ஏற்படுகின்றதன்றோ? இது இவ்விடத்தில் த்ருஷ்டாந்தம்.

பித்ராதிஸத்யதாவத்—'பிதா மரித்துவிட்டார்' என்பது ஸ்வப்நத்தில் ஏற்பட்ட ஜ்ஞானமாகவிருந்தால் அது பாத்யமாகி விடுகின்றது. அப்படி அது பாத்யம் என்று அறிந்தவுடன், 'பிதா மரிக்கவில்லை, அதாவது இருக்கிறார்' என்னும் ஜ்ஞானம் ஸம்பவிக்குமே தவிர, 'பிதா ஸத்யம்' என்னும் ஜ்ஞானம் எப்படி ஏற்படும்? 'பிதா முதலியவர்களின் ஸத்யத்தன்மை போல' என்று எப்படி இவ்விடத்தில் சொல்லப்பட்டிருக்கிறது? இவ்வாறு இவ்விடத்தில் ஒரு சோத்யம் செய்யக்கூடும். 'பிதா இருக்கிறார்' என்னும் ஜ்ஞானம் மற்றொன்றால் பாதிக்கப்படாமலிருக்கும் வரையில், 'பிதா ஸத்யம்' என்று சொல்வதற்கு ஆக்ஷேபமென்ன? என்பது ஸமாதாநம்.

नन्वच स्वप्ने कस्मिंश्चिद् [illegible] स्वप्नदशायामेव 'अयं स्वप्नः' इति ज्ञाते सति पूर्वभयनिवृत्तिर्दृष्टा, तद्वदत्रापि संभवतीति । नैवम् । स्वप्नवेलायामेव 'सोऽपि स्वप्नः' इति ज्ञाते सति पूर्वभयानिवृत्तिरेव दृष्टेति न कश्चि

---

நநு ச ..........உக்தம்—'ப்ராந்தி மூலமாயிருந்த போதிலும், சில ஜ்ஞானங்கள் பூர்வம் அனுபவித்திருந்த ப்ரமத்தைத் நிவ்ருத்திக்கின்றன. ஸ்வப்நத்தில் ஒருவன் ஏதாவதொரு பயஹேதுவைக் கண்டு பயந்திருக்கும் பொழுது, அந்த ஸ்வப்ந காலத்திலேயே 'இது ஸ்வப்நம்' என்னும் ஜ்ஞானம் அவனுக்கு ஜநிக்கும் பக்ஷத்தில், முன் ஏற்பட்டிருந்த பயம் நிவ்ருத்தியாவதை நாம் பார்த்திருக்கிறோமே. அது போல ப்ராந்தி மூலமாயிருக்கும் சருதியினால் ஏற்படும் ஜ்ஞாநமும், 'ப்ரபஞ்சம் அஸத்யம்' என்னும் ப்ரமத்தைப் போக்கடிக்கக்கூடும்' என்றால், அது யுக்திக்குப் பொருந்தமாட்டாது. அந்த ஸ்வப்ந காலத்திலேயே 'இதுவும் ஸ்வப்நம்' என்று பிறகு அறியப்படும் பக்ஷத்தில்' மறுபடியும் பயம் திரும்பி வருவதையும் நாம் பார்க்கிறோமன்றோ? ஆகையால், பாதிக்கும்

---

நநு—'ப்ராந்தி மூலமாக ஏற்படும் ஜ்ஞாநமும், சிலவிடங்களில் நிவர்த்தகமாவதை நாம் பார்த்திருக்கிறோமே' என்று த்ருஷ்டாந்தத்தைக் கொண்டு ஒரு ஆக்ஷேபம் இவ்விடத்தில் செய்யப்படுகின்றது. ஒருவன் ஸ்வப்நத்தில் ஒரு பயஹேதுவைக் காண்கிறான், அந்த ஸ்வப்நத்திற்குள்ளேயே 'தான் கண்டது ஸ்வப்நம்' என்று அவனுக்கு ஜ்ஞாநம் ஜநித்தால், அந்தப் பயம் நிவ்ருத்தியாகி விடுவதை நாம் அறிவோம். முதல் ஸ்வப்நத்திற்கு இரண்டாவது ஸ்வப்நம் பாதகமாகி விடுகின்றது. இப்படி இரண்டாவது ஸ்வப்நம் ஸ்வப்நமாக இருக்கையிலும், அதாவது ப்ராந்தி மூலமாக இருக்கையிலும், அதற்கு நிவர்த்தகத் தன்மை ஏற்படுவது போல, சருதி ப்ராந்தி மூலமாக இருந்தாலும், அதற்கு ப்ரபஞ்ச பேத நிவர்த்தகத்வம் உண்டாகக்கூடும் என்பதுதான் ஆக்ஷேபம். 'அதற்கு ஏற்படும் நிவர்த்தகத்வம் சரியான நிவர்த்தகத்வமன்று; ஏனென்றால், அதுவும் நிவர்த்யமாகி விடும்' என்பது அதற்குச் சொல்லப்படும் ஸமாதாநம். எப்படியென்றால், அதே ஸ்வப்நத்திற்குள், 'இது ஸ்வப்நம் என்று அவனால் காணப்பட்ட இரண்டாவது ஸ்வப்நமும் ஸ்வப்நமே' என்று ஜ்ஞாநம் ஏற்படும் பக்ஷத்தில், பூர்வம் நிவர்த்தகமாயிருந்த இரண்டாவது ஸ்வப்நம் இப்பொழுது நிவர்த்யமாயும், மூன்றாவது ஸ்வப்நம் அதற்கு நிவர்த்தகமாயும் ஆகிவிடுமன்றோ? ஆகையால், இவ்விடத்தில் சொல்லப்படும் நிவர்த்யம் நிவர்த்தகம் (அதாவது—பாத்யம் பாதகம்) இவை இரண்டுக்கும் ஒருவித வாசியுமில்லை. 'ந கஶ்சித் விஶேஷ:'

விஶேஷ꞉ । ஶ்ரவணவேலாயாமேவ 'ஸர்வமபி மித்யா' இதி ஜ்ஞாதமேவேத்யர்த꞉ ।

யதபி சோதிதம் 'ப்ராந்தி பரிகல்பிதத்வேந மித்யார்தமபி ஶாஸ்த்ரம் ஸதத்விதீயம் ப்ரஹ்மேதி போதயதி; தஸ்ய ஸதோ ப்ரஹ்மணோ விஷயஸ்ய பஶ்சாத்தநபாதாதர்ஶநாத் ப்ரஹ்ம ஸத்யமேவ' இதி ததயுக்தம் । 'ஶூந்யமேவ தத்த்வம்' இதி வாக்யேந தஸ்யாபி பாதிதத்வாத் । 'இதம் ப்ராந்திமூலவாக்யம்' இதி சேத் 'ஸதத்விதீயம் ப்ரஹ்ம' இதி வாக்யமபி ப்ராந்திமூலமிதி த்வயைவோக்தம் । பஶ்சாத்தநபாதாதர்ஶநம் ஸர்வஶூந்யவாக்யஸ்யைவேதி விஶேஷ꞉ । ஸர்வஶூந்யவாதிநோ

---

ஸ்வப்நத்திற்கும் பாதிக்கப்படும் ஸ்வப்நத்திற்கும் எவ்வித வாசியுமில்லை ப்ரக்ருதத்திலும், சுருதி வாக்யங்களைக் கேட்கும் காலத்திலேயே 'அவை ஸ்வப்நங்கள் போல ப்ராந்தி மூலங்கள்' என்பது அறியப்பட்டது என்றே சொல்லப்பட்டிருக்கின்றது.

யதபி...... ...ஶூந்யவாதிந இதி—'ச்ருதியாகிற சாஸ்த்ரமானது ப்ராந்தியினால் ஏற்பட்டு அந்தக் காரணத்தால் அது பொய்யென்று சொல்லத் தகுந்ததாக இருந்தபோதிலும், 'அது போதிக்கும் ப்ரஹ்மம் நிர்விசேஷ வஸ்து' என்னும் விஷயம் உறுதியே என்று சொல்லக்கூடும், ஏனென்றால், அப்படி அது போதிக்கும் விஷயம் பிறகு ஒன்றாலும் பாதிக்கப்படவில்லையன்றோ? ஆகையால் ப்ரஹ்மம் ஸத் என்றும் அது நிர்விசேஷமென்றும் சுருதி சொல்வது நம்பத் தகுந்ததே' என்று வாதிப்பதும் அயுக்தமேயாகும். 'தத்வம் சூந்யமே' என்னும் ஸர்வ சூந்யவாதிகளின் வாக்யம் அதைப் பாதிக்கின்றதன்றோ? 'அது ப்ராந்தி மூலமான வாக்யம்' என்னில், 'ப்ரஹ்மம் ஸத், அது நிர்விசேஷம்' என்னும் வாக்யமும் ப்ராந்தி மூலமென்று உன்னாலேயே சொல்லப்பட்டிருக்கின்றது. பிறகு ஒன்றாலும் பாதிக்கப்படாமலிருப்பதானது ஸர்வம் சூந்யம் என்பதைச் சொல்லும் வாக்யத்துக்கு மாத்ரம் என்பதுதான் இரண்டு வாக்யங்களுக்குமுள்ள வாசி. ஸர்வம் சூந்யம் என்று வாதிப்பவர்களும் ப்ரஹ்மத்தைத் தவிர்த்த மற்ற வஸ்துவெல்லாம் பொய்யென்று வாதிப்பவர்களும், இரண்டு வாதிகளும் 'தங்களுடைய வாதத்தை ஸாதித்துக் கொடுக்கும் ப்ரமாணம் பரமார்த்தமன்று,

---

ஶூந்யமேவ தத்த்வம்—'எல்லாம் சூந்யம்' என்று சொல்வார் பௌத்தர்கள்; 'ப்ரஹ்மத்தைத் தவிர்த்த மற்றவையெல்லாம் பொய்' என்று சொல்வார் அத்வைதிகள். 'ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறுபட்டதான சுருதி பொய்' என்னும் அம்சத்தில் இரண்டு பேர்களுக்கும் விசேஷமில்லை,

ஸ்வஹ்ருதிஸித்தவஸ்து—ஸாதகாஸ்வாதிநஸ்ய ஸ்வபக்ஷஸாதகபூதாணவாத ஸாதநஸ்ய வசநை ரஷிதை வாதாதிகாரா ஸ்வ வ்யதிவாதிந: ।

" ஸ்வ ஸாத ஸதநாபாநாம் வாதாமந: வ்யவஸ்தித்தை ।
அதிகாரோசநாபாயாஸா ந வாதே ஸர்வவாதிந: ॥ "

இதி ।

---

அது பொய்யே' என்று ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். அப்படி தங்களுடைய அபிமதார்த்தத்தை ஸாதித்துக்கொடுக்கும் ப்ரமாணம் அப்ரமாணத்மென்று ஒத்துக்கொள்பவர்களாற் செய்யப்படும் வாதம் நிஷ்ப்ரயோஜநமே என்று பெரியோர்கள் அநுகரஹித்திருக்கிறார்கள். "ப்ரமாணத்தைப் ப்ரமாணத்தென்று ஒத்துக்கொள்பவர்களே வாதத்திற்கு அதிகாரிகள், ப்ரமாணத்தை அப்ரமாணத்மென்று சொல்பவர்களுக்கு ஒரு பொழுதும் வாதத்தில் அதிகாரமில்லை."

---

ஸ்வபக்ஷஸாதகபூதாணவாதஸாதநஸ்ய வசநை—இந்த இரண்டு பெயர்களும், தங்கள் தங்கள் பக்ஷத்தை ஸ்தாபிப்பதற்கு, சருதியையே ப்ரமாணமாகக் கோருகிறார்கள், அந்த சருதியை ப்ரமாணமன்றென்றும் சொல்லுகிறார்கள். அப்ரமாணமானதை ப்ரமாணமாகக் கொண்டு தங்கள் பக்ஷியை ஸ்தாபிக்க ப்ரயத்நப்படுமவர்களுடைய வாதம் நிஷ்ப்ரயோஜநமே.

அஹியுக்தை:—பூர்வாசார்யர்கள் இவ்விதம் சொல்லியிருக்கிறார்கள்.

ஸ்வஸாத—இந்தக் காரிகையின் அர்த்தமாவது:— ஸாதநாபாநாம்—ப்ரமாணமாயுள்ள ப்ரமாணத்தை உடையவர்களுக்கே, ஸ்வஸாத வாதாமந: வ்யவஸ்தித்தை—எப்பொழுதும் வாதத்தில் அதிகாரமுண்டு ஸர்வவாதிந:—'ஸர்வம் சூந்யம்' என்று சொல்பவருக்கோ வென்றால், அதநாபாயஸாக்—ப்ரமாணம் அப்ரமாணமாகிறபடியால், ந வாதே஽திகார:—வாதத்தில் அதிகாரமில்லை, அதாவது—அவர்களுடைய வாதம் நிஷ்ப்ரயோஜநமென்று சொன்னதாயிற்று இவ்விடத்தில் 'ஸர்வவாதிந:' என்று ஸர்வசூந்யவாதிகள் ப்ரஸ்தாவிக்கப்பட்டிருந்த போதிலும், 'ப்ரஹ்மத்தைத் தவிர்த்த மற்றவை யெல்லாம் பொய்' என்று சொல்லும் அத்வைதிகளும் க்ரஹிக்கப்படுகிறார்கள், ந்யாயம் இரண்டு பெயருக்கும் துல்யமே.

அபி ச ப்ரத்யக்ஷத்ருஷ்டப்ரபஞ்சஸ்ய மித்யாத்வம் கேந ப்ரமாணேந ஸாத்யதே? 'ப்ரத்யக்ஷஸ்ய தோஷமூலத்வேநாந்யதாஸித்திஸம்பவாத் நிர்தோஷம் ஶாஸ்த்ரமநந்யதாஸித்தம் ப்ரத்யக்ஷஸ்ய பாதகம்' இதி சேத் 'கேந தோஷேண ஜாதம் ப்ரத்யக்ஷம் அநந்தபேதவிஷயம்?' இதி வக்தவ்யம். 'அநாதிபேதவாஸநாக்யதோஷஜாதம் ப்ரத்யக்ஷம்' இதி சேத், 'ஹந்த! தர்ஹ்யநேநைவ தோஷேண ஜாதம் ஶாஸ்த்ரமபி'

---

அபி ச..............உபபாத்யதே—தவிரவும், ப்ரத்யக்ஷமாக நம்மால் பார்க்கப்படும் ப்ரபஞ்சமானது பொய்யென்று சொல்வதற்கு ப்ரமாணம் என்ன? 'ப்ரத்யக்ஷம் என்பது தோஷத்தால் ஏற்படுகின்றது. அதற்கு வேறுவிதமாக ஸித்தி சொல்லக் கூடுமாகையால் எவ்வித தோஷ ஸம்பந்தமில்லாததும் வேறுவிதமாக ஸாதிக்கக் கூடாததுமான சாஸ்த்ரமானது அந்த ப்ரத்யக்ஷத்தைப் பாதிக்கும்' என்னில், 'அந்த தோஷமாவது என்ன? எந்த தோஷத்தால் ஆக்ரமிக்கப்பட்டதாய் இந்த ப்ரத்யக்ஷம் இப்படி கணக்கற்ற பேதங்களைக் காட்டுகின்றது?' என்பதற்கு ஸமாதானம் சொல்லவேண்டும். 'அநாதிகாலமாக நமக்குக் கிடைத்திருக்கும் பேத வாஸனையே தோஷம், அந்த தோஷத்தாலேயே ப்ரத்யக்ஷம் இம்மாதிரி தென்படுகின்றது' என்று சொல்லும் பக்ஷத்தில் அந்த

---

வஸ்தாத்ந பாத்யாநுபபத்தேஸ்ச ஸர்வஶூந்ய வாக்யமேவ— இவ்விடத்தில் 'வஸ்தாத்' என்பதற்குப் 'பிந்தி வரும்' என்பது பொருள் அன்று; 'பிந்தித் தோன்றும்' என்பதே அதன் கருத்து. ஒரு வஸ்துவை 'இது இன்னது' என்று முன்னதாகத் தெரிந்துகொண்டால்தான் 'அது இல்லை' என்று பின்னதாகச் சொல்லக் கூடும். ஆகையால், வஸ்து ஜ்ஞானம் முந்தியது; 'அது இல்லை' என்னும் ஜ்ஞானம் பிந்தியது. இதை 'அபாவ ஜ்ஞானத்தைக் குறித்து ப்ரதியோகி ஜ்ஞானம் காரணம்' என்று பெரியோர்கள் வ்யவஹரிப்பார்கள். இதனால், இல்லையென்று சொல்லும் நிஷேத வாக்யமே ப்ரபலம் என்று சொன்னதாயிற்று. இந்த ந்யாய ப்ரகாரம் 'ஒன்றும் இல்லை' என்னும் ஸர்வ ஶூந்ய வாதம் எல்லாவற்றையும் காட்டிலும் பிந்தியது ('வஸ்தாத்') அதாவது ப்ரபலம் என்று சொல்லப்படுகின்றது. இப்படி எல்லாவற்றையும் காட்டிலும் பிந்தியதாயும் ப்ரபலமாயுமுள்ள ஸர்வ ஶூந்ய வாதத்திற்கு, அதைக் காட்டிலும் பிந்தியதாகவும் ப்ரபலமாகவும் வேறொன்றுமில்லையாதலால், அதற்கு மற்றை ஒன்றாலும் பாதம் ஸம்பவிக்கமாட்டாதன்றோ? ஆகவே 'வஸ்தாத்ந பாத்யாநுபபத்தே:' என்பதற்கு இதுதான் தாத்பர்யம். இந்த தாத்பர்யத்தை ஸ்ரீபாஷ்யத்தில் ஸ்ரீபாஷ்யகாரர், 'ஸர்வஶூந்யவாதிநோ ப்ரஹ்மவ்யதிரிக்த நிஷேதவாதிநஶ்ச தத்ரைவ வஸ்தாத்ந பாத்யாநுபபத்தே:' என்று ஆரம்பண அதிகரணத்தில் அநுக்ரஹித்திருக்கிறார்.

அபி ச—'அத்வைதிகள், ப்ரத்யக்ஷத்தைத் துர்பலமாகவும் சாஸ்த்ரத்தைப் பலீயஸ்ஸாகவும் சொல்லுகிறார்களே, அது ஏன்?' என்பதை விசாரித்து, 'அப்படி அவைகளுக்குத் தௌர்பல்ய ப்ராபல்யங்கள் இல்லை' என்பதை நிரூபிக்கிறார்.

ஏகதோஷமூலத்வாத் ப்ரத்யக்ஷஶாஸ்த்ரயோ: பாத்யபாதகபாவ ஸித்தி: | ஆகாஶவாய்வாதிபூத ததாரப்தஶப்தஸ்பர்ஶாதியுக்தமநுஷ்யத்வாதிஸம்ஸ்தாநஸம்ஸ்தித பதார்த்தக்ராஹி ப்ரத்யக்ஷம்; ஶாஸ்த்ரம் து ப்ரத்யக்ஷாத்யவிஷய ஸர்வாந்தராத்மத்வஸத்யத்வாத்யநந்தவிஶேஷண விஶிஷ்டப்ரஹ்மஸ்வரூப ததுபாஸநாத்யாராதந ப்ரகார தத்ப்ராப்தி பூர்வக தத்ப்ரஸாதலப்யபலவிஶேஷ தந்நிக்ரஹகாரண கர்மாநுஷ்டாந ஜநிதாநர்த்த விஶேஷவிஷயமிதி ஶாஸ்த்ரப்ரத்யக்ஷயோர் ந விரோத: | கதாசித்யதா

---

தோஷம் சாஸ்த்ரத்துக்கும் உண்டன்றோ? இப்படி ப்ரத்யக்ஷம் சாஸ்த்ரம் இரண்டும் ஒரே தோஷத்தால் கல்பிதங்களாக இருக்கிறபடியால், ஒன்றைப் பாதிக்கப்பட்ட தகுந்ததென்றும் (துர்ப்பலமென்றும்), மற்றொன்றைப் பாதிக்கத் தகுந்ததென்றும் (ப்ரபலமென்றும்) எப்படி நாம் சொல்லக்கூடும்? தவிரவும், ப்ரத்யக்ஷத்திற்கு விஷயம் வேறு, சாஸ்த்ரத்துக்கு விஷயம் வேறு. ப்ரத்யக்ஷமானது, ஆகாசம் வாயு முதலிய ஐந்துவித பூதங்களையும், அந்தப் பூதங்களுடைய சேர்க்கையால் உண்டானதாயும் சப்தம் ஸ்பர்சம் முதலிய குணங்களுடன் கூடியதாயுமிருக்கும் மனுஷ்யத்தன்மை முதலிய அமைப்புகளுடன் காணப்படும் பதார்த்தங்களையுமே க்ரஹிக்கின்றது; சாஸ்த்ரமோவென்றால், ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணங்களுக்கு எட்டாததாயும் ஸர்வாந்தராத்மத்வம் ஸத்யத்வம் முதலிய கணக்கற்ற விசேஷணங்களை யுடையதாயுமிருக்கும் ப்ரஹ்ம ஸ்வரூபத்தையும், அந்த ப்ரஹ்மத்தை உபாஸிப்பது முதலான ஆராதிக்கும் ப்ரகாரங்களையும், அந்த ப்ரஹ்மத்தின் அநுக்ரஹத்தால் அடையக்கூடிய ப்ரஹ்ம ப்ராப்தி முதலான பல விசேஷங்களையும், அந்த ப்ரஹ்மத்தின் ஆஜ்ஞையை அதிலங்கனம் செய்வதால் ஸம்பவிக்கும் கெடுதல்களையும் பற்றியே பேசுகின்றது. ஆகையால் சாஸ்த்ரத்திற்கும் ப்ரத்யக்ஷத்திற்கும் விரோதம் என்பதே ஸம்பவிக்கமாட்டாது. தவிரவும், சாஸ்த்ரத்திற்கு ப்ராபல்யம் சொல்லும் நீ, 'ப்ரத்யக்ஷம் ப்ரமாணம்' என்று அவசியம் ஒத்துக் கொள்ளவேண்டும். சாஸ்த்ரமானது ப்ரத்யக்ஷத்தையே ஆதாரமாக உடைத்தா யிருக்கின்றதன்றோ? ஆரம்பம்

---

ஆகாஶவாய்வாதி—இவ்விதம் ப்ரத்யக்ஷ சாஸ்த்ரங்களுக்குப் பரஸ்பரம் பாத்ய பாதக பாவமில்லை என்பதை நிரூபித்துவிட்டு, அவை யிரண்டுக்கும் விஷயங்கள் வெவ்வேறானதால் அவைகளுக்குப் பரஸ்பரம் விரோதமே இல்லை என்று சொல்லுகிறார். விரோதம் இருந்தாலன்றோ அவைகளுக்குப் பரஸ்பரம் பாத்ய பாதக பாவம் ஸித்திக்கும் என்பது குறிப்பு.

விச்சிந்நபாடஸம்ப்ரதாயதாऽநேககுணவிஶிஷ்டஸ்ய ஶாகஸ்ய ஸர்வ
ஶாகம் ஸஹஸ்ர ப்ரத்யக்ஷவாக்யபரம்பராயுக்தஸ்யாநந்தஸ்ய வேதஸ்ய । இத்யநேந ஶ்ருதிப்ரதிபாதிதவிஶேஷவாதபலாஹதகுதர்க்கதூலராஶய: ஜாது
தம்ருதிரஸநைதத்யாவயதே ।

---

த்விதீயே து பக்ஷே உபாதிப்ரஹ்மவ்யதிரிக்தவஸ்த்வநப்யுபகமாத் ப்ரஹ்மண்யேவோபாதிஸம்ஸர்கஸ்தத்ப்ரயுக்தாஶ்ச ஸர்வே தோஷா:

---

முடிவு ஒன்றுமில்லாமல அவிச்சிநமான பாட ஸம்ப்ரதாயம் முதலிய அநேக குணங்களை சாஸ்த்ரத்திறகு உணடென்று நீஙகளே ஒததுக் கொள்ளவில்லையா? குதருஷ்டிகள சொல்லும வேறு யுகதிகளும இம்மாதிரி தோஷ துஷடஙகளே அநேக வாக்ய பரமபரைகளை அடக்கியுள்ள அநேக சாகைகளை யுடைத்தாயிருக்கும கணக்கற்ற ச்ருதிகளாகிற ப்ரபலமான பெருங் காற்றின முன இம்மாதிரியான குதர்க்க ஜாலங்க ளெல்லாம் இலவம் பஞ்சாகப் பறக்கின்றன வென்று நாம இவ்வளவில் விரதராகிறோம்.

———— :0: ————

த்விதீயே........ஸர்வே தோஷா:—இரண்டாவது மததிலும், உபாதிப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறுபட்ட ஒரு வஸ்து ஒததுககொள்ளபபடவில்லை யாதலால, உபாதியின ஸம்ஸர்க்கம் ப்ரஹ்மததிற்கு ஏறபடுகிற தென்று சொல்ல வேணடும்; அப்பொ

---

த்விதீயே பக்ஷே — இரணடாவதாகிற பாஸகர மததில. "வரம் ப்ரஹ்மைவாஜ்ஞம்" இதயாதியான ச்லோகத்தில், முதலில அத்வைதிகளின மததனதயும, பிறகு பாஸ்கர மதத்தையும் பற்றி ப்ரஸ்தாவித்திருககிறபடியால், இது வரையில அத்வைத மதத்தைக கண்டித்துவிட்டு, இப்பொழுது பாஸகர மதததை இரண்டாவது பக்ஷமென்று வயவஹரித்து அதைக கணடிகக உபகரமிக்கிறார்.

உபாதி ப்ரஹ்ம—உபாதியுடன ஸமபநதம் பெறறிருக்கும பரஹ்மம. ப்ரஹ்மமே, தேஹம் முதலிய உபாதிகளுடன் ஸம்பநதம் பெற்று ஜீவன முதலிய ரூபததை அடைகின்றது எனபது பாஸகர மதஸதர்களுடைய கொளகை. அத்வைதிகள மதததிற்போல 'பொய்' என்னும கொளகையால ஏற்படும் அநுபபததிகள பாஸகர மதததில ஏறபடாவிடினும், 'ஜீவனுககும ப்ரஹ்மததிறகும ஸவரூபம ஒன்றே' என்று சொலவதால ஏறபடும் தோஷஙகள இருககின்றன என்று நிரூபிக்கிறார்.

ஸ்வரூபேணைவ ஸர்வே யத: । தத்ஸ்வபாவஸ்வதயாபி நிமித்தபாதகா: ச்ருதய: ஸர்வா விஹந்யேரந் । யதா கடாகாசாதே: பரிச்சிந்நதயா

---

முது உபாதிஸம்பந்தங்களான ஸகல தோஷங்களும் ப்ரஹ்மத்திற்கும் ஏற்படும். அப்படி ஏற்பட்டால், 'ப்ரஹ்மம் எவ்வித தோஷமுமற்றது, அது அபஹத பாபம்' என்று சொல்லும் ச்ருதிகளெல்லாம் பாதிதங்களாகிவிடும். 'அப்படி பாத ப்ரஸங்கம் வரமாட்டாது. எப்படியானால் கடத்தில் இருக்கும் ஆகாசம் முதலியவைகள், ஆகாரத்தில் அள

---

ஔபாதிகா: ஸர்வே தோஷா:—உபாதியால் ஏற்படும் தோஷங்களெல்லாம்.

யதா கடாகாசாதே:—பாஸ்கர மதஸ்தர்கள், ஆகாசமாகிற த்ருஷ்டாந்தத்தை அவலம்பித்துத் தமது கொள்கையைப் பின்வருமாறு நிரூபிக்கிறார்கள். ஆகாசம் என்னும் பதார்த்தம் ஒன்றே, அது ஸர்வ வ்யாபி. அப்படி இருக்கையிலும், அது, ஒரு குடம் முதலியவைகள் இருக்குமிடங்களில் அந்தக் குடம் முதலியவைகளின் அளவுடனும் ஆகாரத்துடனும் கூடினதாகவே தென்படுகின்றது, ஒன்றைக் குடத்தின் ஆகாசமென்றும், மற்றொன்றைக் கலசத்தின் ஆகாசமென்றும், இம்மாதிரி பரஸ்பர பின்னங்களாகவும் மஹாகாசத்தினின்று வேறுபட்டவைகளாகவுமே நாம் அவைகளை வ்யவஹரிக்கின்றோம். இவைகளில் நாம் பார்க்கும் ஆகாரச் சிறுமை பெருமை முதலிய குணதோஷங்கள் மஹாகாசத்தில் எவ்வித ஸம்பந்தப் படாதவைகளாகவே இருக்கின்றன. இந்த மஹாகாசம் போலவே ப்ரஹ்மமும். எப்படியானால் இந்த ஆகாசம், குடத்தின் ஸம்பந்தத்தைப் பெறுமிடத்தில் குடத்தின் ஆகாசமாகவும் கலசத்தின் ஸம்பந்தத்தைப் பெறுமிடத்தில் கலசத்தின் ஆகாசமாகவும் மாறுகையிலும் அந்தக் குட கலசங்களுடைய குண தோஷங்களால் ஸம்பந்தப்படாமல் இருக்கின்றதோ, அம்மாதிரியே ப்ரஹ்மமும், தேஹம் முதலிய உபாதிகளின் ஸம்பந்தத்தைப் பெறும்பொழுது—ஜீவன்களாக மாறின போதிலும் அந்த ஜீவன்களுடைய குண தோஷங்களால் ஸம்பந்தப்படாமலே இருக்கின்றது. இதுதான் அவர்கள் சொல்லும் த்ருஷ்டாந்தம். இந்த - த்ருஷ்டாந்தத்தில் அவர்களால் சொல்லப்படும் விஷயமே இல்லை என்பது இதற்குச் சொல்லப்படும் ஸமாதானம். ஆகாசம் என்னும் வஸ்து அவயவங்களுடன் கூடியதாகவும் பாகம் பாகமாகப் பிரிக்கக் கூடியதாகவும் இருக்கும் பக்ஷத்தில், பாஸ்கரர் சொல்வதுபோல குடத்துடன் ஸம்பந்தம் பெற்றிருக்கும் பாகம் குடத்தின் குணதோஷங்களால் துஷ்டங்களாகின்றது என்றும், மஹாகாசம் அப்படி துஷ்டமாகாமலே இருக்கின்றது என்றும் ஒரு வ்யவஸ்தை சொல்லக்கூடும். அப்படி பாகம் பாகமாக ஆகாசம் பிரிக்கக்கூடாததாதலால், எவ்விடத்திலாவது தோஷ ஸம்பந்தம் ஏற்பட்டபோதிலும் அந்த தோஷம் - எவ்வித - வ்யவஸ்தை

உஹாகாஶாதெஶ்சக்ஷுஂ வாஷ்பாஹெஃஷு உஜஸாஞெ, தஸூ மஹா வா தொஷா வா சுதவஸ்திஷு உஹாகாஶெ ந ஸஂபஷ்யூஞெ, ஸாவஉவாயி கூதஹெஃவ்யவஷ்டிதஜீவமதா தொஷா சுதவஹிதெ வரெ ப்ரஹ்மணி ந ஸஂபஷ்யூஞெ' உதி செதெநதஃவவஜூதெ। நிராவயவஷ்டா காஶஷ்டாநவஜெஃஷ்டு வடாஜிஹிஷ்ஹாஸஂஹவாதெநெவாகாஶெந வடாஃயஃ ஸஂயுக்தா உதி ப்ரஹ்மணாஉவ்யஜெஃஷ்கா உஷெஹ்மவொவாயி

---

வுக குடபட்டவைகளாக இருந்துகொணடு, மஹாகாசத்தைக காட்டிலும் விலக்ஷணஙகளாகவும் பரஸ்பரம வேறு'ட்டவைகளாகவும காணப்படுகின்றனவோ, அவைக ளில் தென்படும் குணங்களாவது தோஷஙகளாவது எவவித அளவுககும் உட்படாமல் இருககும மஹாகாசததில ஸம்பநதிக்கவுமல்லையோ, அம்மாதிரியே உபாதியால் ஏறபடும் பரஸ்பர பேதமடியாக வரும் குணதோஷ'வயவஸதையுடன் கூடிககொண்டிருக்கும் ஜீவன களுடைய தோஷஙகள் பரப்ரஹ்மத்தினிடததில் ஸம்பநதிககமாட்டா' என்னில், இது உபபந்நமாக மாட்டாது, ஆகாசமானது அவயவமற்றது. ஆகையால் சேதிக்கத்தகாதது; கடம முதலியவைகள் அதைச் சேதிககமாட்டாவாதலால், அவைகள அந்த ஆகா சததுடன் ஸம்பநதப்பட்டே இருக்கின்றன. அதுபோல, ப்ரஹ்மமும் சேதிககத் தகா தாதலால், உபாதிகள் ப்ரஹமததுடன் ஸம்பநதப்பட்டே இருக்கின்றனவென்று

---

யுமின்றிக்கே ஆகாசம் முழுவதிலும் பரவுகினறது என்றே சொல்ல வேணடு மன்றோ? ஆகையால், மஹாகாசம் ஒருபொழுதும் தோஷ துஷ்டமாகிறதில்லை என்று சொல்வது உபபந்ந மாகமாட்டாது. அநத மாதிரியே உபாதிப்ரஹ்மத்திற்குத் தோஷ ஸ்பாசம் ஏறபடுகையில் உபாதி ஸமபநதம் பெறாத பரப்ரஹ்மமும் தோஷ துஷ்டமாகின றது எனறே சொல்லவேணடும்.

உவாயிகூத ஹெஃவ்யவஷ்டிதஜீவமதா தொஷாஃ—உபாதி ஸம்பநதத தால் ஏற்படுமது ஜீவன்களுள் தென்படும் பாஸ்பர பேதம். அநதப் பேதததால் ஜீவன்களுக்குக குண தோஷஙகள் வயவஸ்திதஙகளாக இருக்கின்றன. அப்படிப்பட்ட ஜீவன்களிடத்தில் இருக்கும் தோஷஙகள் என்பது இநதப் பதத்தின் அர்ததம்.

சுதவஹிதெ வரெ ப்ரஹ்மணி—உபாதி ஸம்பநதம பெறாத பர ப்ரஹ் மத்தினிடததில்.

संयुक्तं स्यात् । 'घटसंयुक्ताकाशप्रदेशादघटसंयुक्ताकाशप्रदेशोऽन्य एवेति' इति चेत्, आकाशस्यैकत्वेऽपि प्रदेश

---

சொல்லவேண்டும். 'குடத்திலுள்ள ஆகாச ப்ரதேசம் மற்றை ஆகாச ப்ரதேசங்களைக் காட்டிலும் வேறுபட்டதே' என்னில், அதிலும் எவ்வித நியமமும் இல்லை. ஆகாசம் என்பது ஒரே வஸ்து, அதற்கு ப்ரதேச பேதத்தால் குடம் முதலியவைகளுடன் சேர்க்கை நேர்கின்றது ஆகையால், ஒரு குடம், ஒரு இடம் விட்டு மற்றோரிடத்திற்கு நகருகையில் அந்த ப்ரதேசத்திற்கு எவ்வித வ்யவஸ்தையும் இல்லை. அம்மாதிரியே ப்ரஹ்மத்தின் விஷயத்திலும் ப்ரதேச பேதத்திற்கு அவ்யவஸ்தை ஸம்பவிக்கிறபடியால் ப்ரஹ்மத்திற்கு உபாத்யின ஸம்ஸர்க்கம் நிச்சயம் ப்ரஸங்கிக்கும். தவிரவும், உபாதி ஓரிடம்விட்டு மற்றோரிடம் போகையில், உபாதி

---

**घटसंयुक्ताकाशप्रदेशः**—மறுபடியும் பாஸ்கர மதஸ்தர்கள், வேறொரு ஹேதுவை அவலம்பித்துக் குண தோஷங்களுடைய வ்யவஸ்தையைச் சொல்லுகிறார்கள் குடத்துடன் சேர்ந்திருக்கும் ஆகாச ப்ரதேசம் ஒன்று, அதனுடன் சேராமலிருக்கும் ப்ரதேசம் மற்றொன்று, இப்படி ப்ரதேசம் வேறுபடுகிறபடியால், ஒரு ப்ரதேசத்தில் ஒரு குடத்தின் ஸம்பந்தத்தால் ஏற்படும் தோஷம் அந்த ப்ரதேசத்திலேயே வ்யவஸ்திதமாக நிற்கவேண்டுமே தவிர வேறு ப்ரதேசங்களுக்கும் அவ்யவஸ்திதமாக அது போகமாட்டாது. இதுதான் அவர்கள் சொல்லும் வ்யவஸ்தை. இந்த வ்யவஸ்தையும் நிலைபெற மாட்டாது. ஏனென்றால், உபாதிகள் ஒரே ப்ரதேசத்தில் நிலையாக நிற்கவில்லையன்றோ? குடம் என்பது ஒரு இடம் விட்டு மற்றொரு இடத்திற்குச் சலிக்கிறதில்லை என்று ஒரு நியமம் இருக்கும் பக்ஷத்தில், அவர்கள் சொல்லும் வ்யவஸ்தை ஸம்பவிக்கக்கூடும். அப்படி நியமம் இல்லை. ஒரு ப்ரதேசத்திலிருந்து வேறொரு ப்ரதேசத்திற்கு ஒரு குடம் கொண்டுபோகப்படும்பொழுது, அந்தக் குடத்துடன் ஸம்பந்தப்பட்ட ப்ரதேசமும் மாறுகின்றது, அந்தக் காரணத்தாலேயே குடத்தின் ஸம்பந்தத்தால் ஏற்படும் தோஷம் ஒரு வ்யவஸ்தை இல்லாமல் ஆகாசம் முழுவதற்குமே ஏற்படுகின்றதென்று சொல்லவேண்டும். தவிரவும், ஆகாசம் என்பது ஒரே வஸ்து; அநேக வ்யக்திகள் அடங்கியுள்ளது அன்று. ஆகையால், 'இதற்கு மாத்ரம் தோஷ ஸ்பர்சம் உண்டு, மற்றொன்றுக்கு இல்லை' என்று சொல்வதும் ஸாத்யமில்லை,

ஸஹைவ கடாதிஸம்யோகாத் கடாதௌ கச்சதி தஸ்ய ச ப்ரதேசஸ்யா நியம இதி, தத்வத் ப்ரஹ்மண்யேவ ப்ரதேசபேதாநியமே உபாதிஸம் ஸஞ்சரத்யுபாதௌ கச்சதி ஸம்யுக்த வியுக்த ப்ரஹ்ம ப்ரதேசபேதாத், ப்ரஹ்மண்யேவோபாதி ஸஞ்சாரம், க்ஷணே க்ஷணே பந்தமோக்ஷௌ ச ஸ்யாதாமிதி ஸந்த: பரிஹஸந்தி ।

'நிரவயவஸ்யைவாகாசஸ்ய ச்ரோத்ரேந்த்ரியத்வேபி ஜந்த்ரிய

---

யுடன் சேர்ந்திருந்த ப்ரஹ்ம ப்ரதேச மொன்று, பிரிந்திருக்கும்படியான ப்ரஹ்ம ப்ரதேசம் மற்றொன்று. ஆக இரண்டு ப்ரஹ்ம ப்ரதேசங்களுக்கும் பரஸ்பர பேதம் ஏற்படுகிற படியால் ஒரு க்ஷணத்தில ப்ரஹ்மத்திற்குப் பந்தமும் மற்றொரு க்ஷணத்தில அதற்கு மோக்ஷமும் ஸம்பவிக்கின்றன என்று சொல்லவேண்டிவரும். அப்படிச் சொல்வதை அபிஜ்ஞர்கள் பரிஹஸிப்பார்களன்றோ ?

நிரவயவஸ்ய.........ந் பஹுஷ்வேகஸ்யைவ —' எப்படியானால நிரவயவமாயும் அந்தக் காரணத்தால பிந்ந பிந்ந பாகங்களாகப் பிரிக்கக்கூடாமலு மிருக்கும் ஆகா

---

தத்வத் ப்ரஹ்மண்யேவ — அம்மாதிரியே பரஹ்மத்தின் விஷயத்திலும். ப்ரஹ்மம் என்பது ஒன்றே, தேஹம் முதலிய உபாதிகள் ஒரே இடத்தில இருக்கின்றன என்னும் நியமமும் இலலை ஆகையால, உபாதிஸம்ஸர்க்கத்திற்கு வ்யவஸ்தை சொல்வது ஸாத்ய மிலலை. பரப்ரஹ்மத்திற்கே உபாதி ஸம்ஸர்க்கம் சொல்லப்பட வேண்டும்.

" ப்ரதேசபேதாநியமேநோபாதி ஸம்ஸர்காத் " என்னும் ஹேதுவுக்கு " ப்ரஹ்மண்யேவோபாதிஸம்ஸர்க: " என்பது ஸாத்யம், "உபாதௌ கச்சதி ஸம்யுக்த வியுக்த ப்ரஹ்ம ப்ரதேசபேதாத் " என்னும் ஹேதுவுக்கு " க்ஷணே க்ஷணே பந்தமோக்ஷௌ ஸ்யாதாம் " என்பது ஸாத்யம். அதாவது—ஒரு பொழுது ஒரு ப்ரஹ்ம ப்ரதேசத்திற்கு உபாதி ஸம்பந்தம் ஏற்பட்டால், அப்பொழுது அது ஜீவனாக மாறி அதற்குப் பந்தம் ஸம்பவிக்கின்றது, அடுத்த க்ஷணத்தில் அந்த உபாதி சலித்து மற்றொரு ப்ரஹ்ம ப்ரதேசத்தில அது ஸம்பந்தப்பட்டால், பூர்வம் பந்தம் ஏற்பட்ட ப்ரஹ்ம ப்ரதேசத்திற்கு மோக்ஷமும் பூர்வம் பந்தமற்றிருந்த மற்றொரு ப்ரஹ்ம ப்ரதேசத்திற்கு பந்தமும் ப்ரஸங்கிக்கு மன்றோ ? இதை அபிஜ்ஞர்கள் ஒத்துக் கொள்வார்களா ?

நிரவயஸ்யைவ ஆகாசஸ்ய ச்ரோத்ரேந்த்ரியத்வேபி — மறுபடியும் வேறொரு த்ருஷ்டாந்தத்தை அவலம்பித்துப் பாஸ்கர மதஸ்தர்கள் இந்த தோஷஸம்பந்

வ்யவஸ்தாவகல்பநாநுபபத்தே வ்யவஸ்தா ஸங்கரஸ்ய உக்த த்வாத் । வாயு விசேஷ ஸம்ஸ்க்ருத கர்ண ப்ரதேச ஸம்ஸ்கார ஸ்ய சக்தி ஸம்ஸ்கார ப்ரதேச ஸ்ய ச ஸத்பாவ ப்ரதேசாநாம் ப்ரத்யக்ஷாநாம் தத் த்வ அ ப்ரதேசாந்தரே ஷ்வாபி

---

சமே காதாகிற இந்தரியமாக இருக்கையிலும, 'இது காதாகிற இந்தரியம் இது, அந்த இந்தரியமன்று' என்று ஒரு வயவஸ்தை ஏற்படுகின்றதோ, அம்மாதிரியே ப்ரஹ்மத்தினிடத்திலும் வயவஸதை உபபந்நமாகக்கூடும்' என்னில், அப்படி உபபத்தி ஸம்பவிக்க மாட்டாது என்று நாம சொலவோம. கேவலம ஆகாசமே காது இந்த்ரியமன்று , ஒருவித

---

த்தத்திற்கு ஒரு வயவஸ்தையைச் செ லலுகிறாகள குடத்தின் ஆகாசம் என்னும் தருஷ்டாந்தம இருக்கட்டும். ச்ரோத்ரேந்தரியம எனபது ஆகாசமே. அந்த ஆகாசம தேஹத்தில மற்றைப் பாகங்களில ஸம்பந்தபபட்டபோதிலும, ஒருவித உபாதி ஸமபந்தத்தால் ச்ரோத்ரத்திற்கு மாத்ரம் ஒருவித இந்தரிய வயவஸ்தை ஏற்படவிலலையா? அதுபோல ஜீவத்தன்மை ஏன் வயவஸதிதமாக இருக்கக்கூடாது? எனபது தான் அவாகளுடைய கக்ஷி இதறகு ஸமாதானம் இந்தரிய வயவஸதை ஏற்பட்டபோதிலும், உபாதி ஸம்பந்திக்கும் பரதேசத்திறகு எவவித வயவஸதையும இலலை என பதுதான். ஒரு ப்ரதேசத்தில் உபாதி ஸமபந்தித்ததால, அந்த ஸமபந்தம் அவ்யவஸ்தித மாக ப்ரதேசாந்தரஙகளுக்கும ஏற்படுகின்றது என்பது அனறோ நமது ஆக்ஷேபம்? அந்த ஆக்ஷேபம நிவ்ருத்தமாகாமலே நிற்கின்றது. தருஷ்டாந்தத்தில், ஆகாசம எல்லாருடைய சரீரஙகளிலும் எவவித நியமமுமின்றிக்கே ஸாவ பரதேசஙகளிலும் ஸம்பந்திக்கின்றது என்பதை ஒத்துக் கொணடதாலேயே உபாதி ஸமயோகிக்கும் ப்ரதேசத்தின அநியமம் ஒத்துக்கொணடதாகிறது. அது போல ஒரு பரஹ்ம பரதேசத்திறகு உபாதி ஸமபந்தம வருமபொழுது பர ப்ரஹ்மம முழுவதும உபாதியால் ஸமபந்தப்பட்டதாகினறது என பதை ஒததுககொணடால, அப்பொழுது, உபாதியுடன் ஸமபந்திக்கும் ப்ரஹ்ம பரதேசத்திறகு அநியமம ஏறபடும,ப்ரஹ்மத்திறகுததோஷமறறிருக்கும தனமையைச சொலலும சருதி வாக்யஙகளும பாதிதஙகளாகி விடுமன்றோ? தருஷ்டாந்தத்தில் இந்தரிய வயவஸதை ஏற்படுகினறது எனபதை நாம ஒததுகசொள்ளுகிறோம. அதுவும ஸகல ஆகாசத்திறகும இல்லை, நாம ஒரு ப்ரயத்நம் செயது, அதனுல் ஒருவிதமான காறறு உணடாகி, அந்தக காற்றின ஸமயோகத்தால காதுககுள இருக்கும ஒரு பாகத்திற்கு ஒருவித ஸமஸ்காரம் ஏற்பட்டு, அப்படி ஸம்ஸ்க்ருதமான அந்தக காதின பாகத்துடன் ஆகாசம ஸம்பந்தப்பட்டால, அந்த ஆகாசத்திறகு மாத்ரம் இந்த்ரிய வயவஸ்தை ஏறபடும. இது உபாதி ஸம்யோக ப்ரதேசத்தின் வ்யவஸ்தையை அபேக்ஷிக்கவில்லை யாதலால் இது அகார்யகரம்.

யத்யபி இந்த்ரியவ்யவஸ்தாவசநாத் ; ஆகாஶஸ்ய து ஸர்வேஷாம் ஶரீரேஷு கர்ணச்சித்ரேஷு அநியமேந ஸர்வப்ரதேஶ ஸம்யோக இதி ப்ரஹ்மண்யபி உபாதிஸம்யோக ப்ரதேஶநியம: ஏவ । ஆகாஶஸ்ய ஸர்வ கர்ணேநைவ ஶ்ரோத்ரேந்த்ரியஸ்ய உபாதிபேதாத் இந்த்ரியவ்யவஸ்தா உக்தா ; ஸாத்விகாஹங்காரகார்யம் ஆகாஶோ ந ஶ்ரோத்ரேந்த்ரியம், வைகாரிகாஹங்கார

---

மான காற்றினுல ஸமஸகாரததை அடையும் காது ப்ரதேசததுடன் கூடிக்கொணடிருக் கும ஆகாசமே அநத இநதரியம். அநத ப்ரதேசததிறகும மற்றை ப்ரதேசஙகளுக்கும எவ வித பேத வயவஸதை இராமலிருநதபோதிலும இநதரிய வயவஸதை உபபநநமாகும. கேவல ஆகாசததிறகோவெனருல், அது, எல்லாருடைய சரீரஙகளும் ஓரிடம விட்டு மற் ருேரிடததிற்குப் போகுமபொழுது, எவவித நியமமுமினறிககே ஸகலமான ப்ரதேசதது டன ஸம்பநததைப் பெறுகின்றது. அமமாதிரியே, பரஹ்மததின விஷயததில் ப்ரதேச பேதததின் அநியமம இருககிறபடியால், உபாதியின் ஸமயோகம அநத ப்ரஹமததிற்கு நிச சயம் ஸமபவிகக வேணடும். தவிரவும், ஐநது வித பூதஙகளுள ஒன்ருகிய ஆகாசத்தையே காது எனனும் இநதரியமாக நீஙகள சொல்லுகிறீாகள. அது சாஸதர விருத்தம. நீங கள சொல்வதை ஒததுககொண்டே நாமும இதுவரையில ஸமாதாநம் சொன்னேம. இப்பொழுது அதன் உணமையைச சொல்லுகிருேம ஆகாசம் சரோத்ரேநதரியமாக

---

ஆகாஶஸ்ய ஸர்வேணைவ ஶ்ரோத்ரேந்த்ரிய உபாதிபேதாத் இந்த்ரிய வ்யவஸ்தோக்தா—இநதரியம எனபது கேவல ஆகாசம அனறு. அப்படி அதை ஆகாசமெனறு ஒததுககொணடே இப்பொழுது நாம ஸமாதாநம சொனனேம. உணமையை விசாரித்தால இநதரியம ஆகாசமனறு எனபது விளஙகும. அப்பொழுது பாஸ்கராகளால சொலலப்படும தருஷடாநதம ஸாவதா அநுபபநநமாகி விடும.

வைகாரிகாஹங்காரகார்யாணீந்த்ரியாணி—வைதிக பரக்ரியை பினவருமாறு நிறகும. பரக்ருதி மஹத முதலான ததவஙகளுள அஹங்காரம் எனனும் பெயருடைய தத்வம ஒன்று. அது, ஸாதவிகம ராஜஸம தாமஸம எனறு மூனறு வகைப் படும். ஸாதவிகாஹஙகாரததை வைகாரிகமெனறும், ராஜஸததைத தைஜஸமென றும, தாமஸததைப பூதாதியெனறும் சொல்வாாகள. ப்ருதிவீ அப்பு தேஜஸ வாயு ஆகா சம எனனும ஐநது வகைபட்ட பூதஙகளும தாமஸாஹஙகாரததிலிருநது உண்டாகின றன; ஜ்ஞாநேநதரியஙகள ஐநது, காமேநதரியஙகள் ஐநது, மநஸ ஒனறு, ஆகப பதினெரு இநதரியஙகளும் ஸதவிகாஹஙகாரததிலிருநது உணடாகின்றன. இது வைதிகாகளுடைய மதம் இது இப்படி இருநதால, ச்ரோதரேநதரியத்தை ஆகாசமென்று எவவிதம் சொல்லக் கூடும் ?

22

காராதேகாதஶேந்த்ரியாணி ஜாயந்த இதி ஹி வைதிகா:। யதோக்தம் பகவதா பராஶரேண,

"தைஜஸாநீந்த்ரியாண்யாஹு: தேவா வைகாரிகா தஶ।
ஏகாதஶம் மநஶ்சாத்ர தேவா வைகாரிகா: ஸ்ம்ருதா:॥"

இதி। அயமர்த்த:— "வைகாரிகஸ்தைஜஸஶ்ச பூதாதிரிதி த்ரிவிதோऽஹங்கார:। ஸ ச க்ரமாத் ஸாத்த்விகோ ராஜஸஸ்தாமஸஶ்ச। தத்ர தாமஸாத் பூதாதேராகாஶாதீநி பூதாநி ஜாயந்த இதி ஸ்ருஷ்டிக்ரமமுக்த்வா, தைஜஸாத் ராஜஸாதஹங்காராதேகாதஶேந்த்ரியாணி ஜாயந்த இதி பரமதமநுவதந்ஸ்வ, ஸாத்த்விகாஹங்காராத்வைகாரிகாதேகாதஶேந்த்ரியாணி ஜாயந்த இதி ஸ்வமதம் ஸமர்த்யதே "தேவா வைகாரிகா: ஸ்ம்ருதா:" இதி।

---

மாட்டாது. வேதம் அறிந்தவர்கள், பதினொரு இந்திரியங்களும் வைகாரிகமாகிற அஹங்காரத்திலிருந்து உண்டாகின்றனவென்று சொல்லுகிறார்கள். பகவான் பராசரர் பின்வருமாறு சொல்லியிருக்கிறார் —

"இந்திரியங்களைத் தைஜஸங்களென்று சிலர் சொல்வார்கள். ஆனால் நாம், அவைகளை வைகாரிகங்களென்றே சொல்வோம்".

இதன் அர்த்தம் என்னவென்றால்—'வைகாரிகமென்றும் தைஜஸமென்றும் பூதாதி என்றும் அஹங்கார தத்வம் மூன்று வகைப்படும் அவைகளுள் வைகாரிகமென்பது ஸாத்விக அஹங்காரம், தைஜஸமென்பது ராஜஸம், பூதாதி என்பது தாமஸம். இவைகளுள் மூன்றாவதாகிற தாமஸ பூதாதியிலிருந்து ஆகாசம் முதலிய ஐந்து பூதங்கள் உண்டாகின்றனவென்று முதலில் ஸ்ருஷ்டி க்ரமத்தைச் சொல்லிவிட்டு, பிறகு, ராஜஸ தைஜஸத்திலிருந்து பதினொரு இந்திரியங்கள் உண்டாகின்றனவென்று சிலர் சொல்வதாகச் சிலருடைய மதத்தைச் சொல்லி, அதற்குப் பிறகு "தேவா வைகாரிகா:

---

தைஜஸாநீந்த்ரியாண்யாஹு:— இந்திரியங்களைத் தைஜஸங்களென்று சொல்லுகிறார்கள். இது பராசர மஹர்ஷியின் வாக்யம். இந்திரியங்கள் தைஜஸங்களானால், அவை ராஜஸாஹங்காரத்திலிருந்து உண்டாகிறவையாக இருக்க வேண்டும். அது தமது மதம் அன்று என்பதை ". ஆஹு:" (சொல்லுகிறார்கள்) என்பதால் ஸூசிப்பித்தார்.

"தேவா வைகாரிகா: ஸ்ம்ருதா:— இந்திரியங்களெல்லாம் வைகாரிகங்களென்று ஸ்மரிக்கப்பட்டிருக்கின்றன இதனால், இப்படிச் சொல்வதுதான் தமது மதம் என்பது ஸூசிதமாகின்றது.

ஷைவாஃ—ஐந்த்ரியாணி । ஸாவஸீம் இந்த்ரியாணாமாஹங்காரிகத்வம் தத் ஹேதுத்வாவகாரணம் ஸ்ருதி ஆஹ்யதே । ஸாத்விகஷ்வேஷ்மிந்த்ரியாணா மாகாமுரான்று ஹேத விகாரகஷஷ்ஷவாகாமுரான் ஹேதவமிணா விமெஷாஃ

---

ஷ்ருதாஃ' என்பதால் ஸாத்விக வைகாரிகங்களிலிருந்தே இந்த்ரியங்கள் உண்டாகின்றன வென்று தமது மதத்தைப் பராசரர் ஸூசிப்பிக்கிறார். "ஷைவாஃ" என்பதற்கு "இந்த்ரியங்கள்" என்பது பொருள். இப்படி வைகாரிகங்களாயுள்ள இந்த்ரியங்களுக்கு ஆகாசம் முதலிய பூதங்களால் போஷணம் கிடைக்கின்றது என்று மகா பாரதத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது 'இந்த்ரியங்கள் பூதங்களுடைய பரிணாமங்கள்' என்று சொல்லும் பக்ஷத்தில், அப்பொழுதும் நாம் சொல்லும் அவயவஸ்தை ப்ரஸங்கிக்கின்றது. ஆகாசம் முதலிய பூதங்களின் பரிணாமங்களெல்லாம், ஆகாசம் முதலிய பூதங்களின் விகாரங்கள் என்னும் காரணத்தாலேயே, சரீரம்போல, ஒரு வயவஸ்தையுடன் கூடினவைகளாக இருந்து

---

"ஷைவாஃ—ஐந்த்ரியாணி"—"ஷைவாஃ" என்னும் பதத்திற்கு "இந்த்ரியங்கள்" என்பது பொருள். இந்த்ரியங்களை "ஷைவாஃ" என்று சொல்வது வேத ப்ரயோகத்தை ஒத்தது. "ந அக்ஷ்ஷா ம்ருஷ்யதே நாவி வாஆ நாநெஷு ஷைவெஃ" என்பது வேத ப்ரயோகம்.

ஸாவழ—முதலில், 'ஐந்து வித பூதங்களே இந்த்ரியங்கள்' என்று பாஸ்கரர்கள் சொல்வதை ஒத்துக்கொண்டு கண்டனம் செய்யப்பட்டது. பிறகு 'பூதங்கள் இந்த்ரியங்கள் அல்ல' என்பது நிரூபிக்கப்பட்டது. இப்பொழுது 'பூதங்களின் விகாரங்களோ இந்த்ரியங்கள்' என்னும் மதம் கண்டிக்கப்படுகிறது.

ஹேதெஷ்வாவஷ்யாயநழ—பூதங்களால் போஷணம். அதாவது, 'இந்த்ரியங்கள் பூதங்கள் அல்ல, ஆனால் இந்த ஐந்து பூதங்களால் அவைகளுக்கு ஒருவித போஷணம் ஏற்படுகின்றது' என்று சொன்னதாயிற்று. இதை இவ்விடத்திற் சொல்வானேன் என்றால்,சில க்ரந்தங்களில் இந்த்ரியங்களைப் பௌதிகங்களென்று க்ரந்த கர்த்தாக்கள் சொல்லியிருக்கிறார்கள் ; அப்படிச் சொல்லியிருக்கு மிடங்களெல்லாவற்றிலும் 'இந்த்ரியங்கள் பூதங்களால் போஷணம் செய்யப்படுகின்றன' என்று மாத்ரம் நாம் அர்த்தம் கொள்ள வேண்டுமே தவிர, 'இந்த்ரியங்கள் பூதங்களின் பரிணாமங்கள்' என்று நாம அர்த்தம் கொள்ளக்கூடாது என்பதை விளக்கும் பொருட்டே.

ஸாத்விகஷ்வேஷம் இந்த்ரியாணாழ—இந்த்ரியங்களைப் பூதங்களின் பரிணாமங்களென்று சொல்வது ஸாத்யமன்று, ஆகையால் கீழ்ச் சொல்லப்பட்ட அநியமம் நிற்கின

[illegible] ।

---

கொண்டு, ஜந்துக்களுக்கு இந்த்ரியங்களாக ஆகின்றன. ப்ரஹ்மமோ அவயவமற்றது, விகாரமற்றது, இந்தக் காரணங்களால் சேதிக்கத்தகாதது ஆகையால் ஜீவனை ப்ரஹ்மத்தின் பரிணாமமென்று சொல்வது ஸாத்யமில்லை. ஆகையால், 'இது உபாதியுடன் ஸம்பந்தம் பெற்ற ப்ரஹ்மம், இது அப்படி ஸம்பந்தப்படாதது' என்று ஒரு வ்யவஸ்தை அநுபபந்நமே. வ்யவஸ்தை அநுபபந்நமாகிறபடியால் உபாதியின் சேர்க்கையால் ஜீவனுக்கு ஸம்பவிக்கும் கணக்கற்ற தோஷங்களெல்லாம் ப்ரஹ்மத்திற்கும் ப்ரஸங்கிக்கும். அந்த ப்ரஸங்கம் பரிஹரிக்கக்கூடாததே. ஆகையால் இந்தப் பக்ஷத்தை அவலம்பித்திருப்பவர்கள் கேவலம் உபதேசமாத்ரத்தால் த்ருப்தியடைகிறவர்களென்றே சொல்ல வேண்டும். அப்படி த்ருப்தியடைகிறவர்களைச் சாஸ்த்ரம் அறிந்தவர்கள் பஹுமதிக்க மாட்டார்கள்.

---

றதே தவிர விலக்கவில்லை. உபாதியின் சேர்க்கையால் பரப்ரஹ்மத்திற்கு எவ்வித தோஷமும் ஸம்பவிக்கமாட்டாது என்பது பாஸ்கரர்களின் கக்ஷி, அதற்கு அவர்கள் சொல்லும் ஹேது, 'உபாதியுடன் சேரும் ப்ரஹ்மம் வ்யவஸ்திதமாக இருக்கின்றதாகையால் அதனுடன் சேராமலிருக்கும் சுத்த ப்ரஹ்மம் சுத்தமே' என்பதுதான். 'அப்படி வ்யவஸ்தை இருந்தால் நீங்கள் சொல்வது உபபந்நமாகும், அப்படிப்பட்ட நியமம் ஒன்றுமில்லையே' என்பதுதான் நம்முடைய ஆக்ஷேபம்.

ஶரீரவத் — 'சரீரம் போல'. சரீரமானது பூதங்களின் விகாரம். அந்தக் காரணத்தால் அதற்குச் சரீரத்தன்மை வ்யவஸ்திதம். ஜீவன் ப்ரஹ்மத்தின் விகாரமன்று, ஆகையால் அதற்கு வ்யவஸ்தை இல்லை. ஜீவனை ப்ரஹ்மத்தின் பரிணாமம் என்று சொன்னால், 'ஜீவன் நித்யன், பிறப்பற்றவன்', 'ப்ரஹ்மம் நிர்விகாரம்' என்று சொல்லும் ச்ருதி வாக்யங்கள் விரோதிக்கும்.

[illegible] — உபதேச மாத்ரத்தால் த்ருப்தி அடைபவர்களின் கக்ஷி இது. ந்யாய விசாரம் செய்து ஒருவித நிர்ணயம் ஏற்படுத்தச் சக்தியுள்ளவர்கள் இம்மாதிரி கக்ஷியை அவலம்பிக்க மாட்டார்கள் என்பது குறிப்பு.

ஸ்வரூபபரிணாமாப்யுபகமாத் அவிகாரத்வஶ்ருதிர் பாத்யதே। 'நிர்விகாரஸ்ய து ப்ரஹ்மண: ஶக்திபரிணாம:' இதி சேத், கேயம் ஶக்திருச்யதே? கிம் ப்ரஹ்மபரிணாமரூபா? உத ப்ரஹ்மணோऽநந்யா காऽபி? உபயபக்ஷேऽபி ஸ்வரூபபரிணாமோऽவர்ஜநீய ஏவ।



த்ருதீயேऽபி பக்ஷே ஜீவப்ரஹ்மணோ: பேதவதபேதஸ்யாऽபி

---

ஸ்வரூப... .......அவர்ஜநீய ஏவ—தவிரவும், ப்ரஹ்ம ஸ்வரூபமே அசேதந வஸ்துக்களாகப் பரிணமிக்கின்றது என்று நீங்கள் சொல்வதும் அநுபபந்நம். அப்படி ஸ்வரூப பரிணாமத்தை ஒத்துக்கொண்டால் 'ப்ரஹ்மம் எவ்வித விகாரமும் அற்றது' என்று சொல்லும் ச்ருதி வாக்யம் விரோதிக்குமன்றோ? 'ஸ்வரூபம் பரிணமிக்கின்றது என்று நாங்கள் சொல்லவில்லை, ஆனால் ப்ரஹ்மத்தின் சக்தியே அவ்விதம் பரிணமிக்கின்றது என்று மாத்ரம் சொல்லுகின்றோம். ஆகையால் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்திற்கு எவ்வித தோஷமும் ப்ரஸங்கிக்கமாட்டாது' என்னில், சக்தி என்று உங்களால் சொல்லப்படுவது எது? அது ப்ரஹ்மத்தின் பரிணாமமா? இல்லாவிட்டால் அது ப்ரஹ்மமேயா? இரண்டு கோடியிலும் ப்ரஹ்மம் பரிணமிக்கின்றது என்பதை நீங்கள் ஒத்துக்கொள்ளவே வேண்டும். அதிலிருந்து தப்பித்துக் கொள்ள வழியில்லை.



த்ருதீயேऽபி.............அப்யுபகமாத்—மூன்றாவது பக்ஷத்திலும், ஜீவனுக்கும் ப்ரஹ்மத்திற்கும் பேதம் ஒத்துக்கொள்ளப்படுவது போல் அபேதமும் ஒத்துக்கொள்

---

ஸ்வரூபபரிணாம:—இதுவரையில், 'ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்றே' என்று சொல்வது 'ப்ரஹ்மம் தோஷமற்றது' என்று சொல்லும் ச்ருதிவாக்யத்திற்கு விருத்தம் என்பது உபபாதிக்கப்பட்டது. இப்பொழுது 'ப்ரஹ்மமே அசேதந வஸ்துக்களாகப் பரிணமிக்கின்றது' என்று சொல்வதின் அநுபபத்தியை எடுத்துச் சொல்லுகிறார்.

உபயபக்ஷேऽபி—இரண்டு கோடியிலும். 'சக்தி என்பது ப்ரஹ்மத்தின் பரிணாமம்' என்றால் ப்ரஹ்மம் பரிணமிக்கின்றது என்பது ஒத்துக்கொள்ளப்பட்டதாகிறது. 'சக்தி என்பது ப்ரஹ்மத்தின் பரிணாமமன்று. அது ப்ரஹ்மமே' என்றால், அப்பொழுதும் 'சக்தி பரிணமிக்கின்றது' என்று சொல்லுகிறபடியால் ப்ரஹ்மமே பரிணமிக்கின்றது என்று சொன்னதாகிறது.



த்ருதீயேऽபி பக்ஷே—இதுவரையில் பாஸ்கர மதம் கண்டிக்கப்பட்டது. இனி யாதவ ப்ரகாச மதம் கண்டிக்கப்படுகின்றது. இவ்விடத்தில் இந்த இரண்டு மதஸ்தர்களுடைய கொள்கைகளைச் சற்றுப் பராமர்சிப்போம். இவர்கள் இருவரும் பர

ஹ்ரு-வமஶாக், தவஸ்ய அ தஹூாவாக், ஸௌஹரி ஹெஉவவு ஸூாவதாரஹெஉ வவு ஸவவஉவெஸ்யஸ்ஸூரஹெஉக்ஷாக், ஸவெஉ ஜீவமதா ஹொஷாஸூவெஸ்யவ

---

ளப்படுகிறபடியாலும், பரஹ்மத்திற்கே ஜீவத்தன்மை சொல்லப்படுகிறபடியாலும், ஸௌபரி மஹர்ஷி விஷயத்தில் இருந்த பேதம் போலவும், ஈச்வரனுடைய அவதார விஷயங்களில் இருக்கும் பேதம் போலவும், எல்லாவற்றிற்கும் ஈச்வரனுக்குமுள்ள பேதம் இருக

---

பஞ்சம் பரமார்த்தம் என்று ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். சங்கர மதத்தில் ப்ரபஞ்சம் என்பது பொய், இவர்கள் மதத்தில் அப்படி இல்லை இவர்கள் அவ்விதம் ஒத்துக்கொள்வதற்குக் காரணமென்ன வென்றால், தங்களுக்கு அபிமதமான அர்த்தத்தை ஸாதித்துக் கொடுக்கும் சருதியாகிற ப்ரமாணம் விதிக்கவேண்டும் என்பதும், பந்தம் மோக்ஷம் இவைகளுக்கு வ்யவஸ்தை விதிக்கவேண்டும் என்பதுமே. இவர்களுள் பாஸ்கர மதஸ்தர்கள், மோக்ஷம் வந்தபிறகு ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்றே என்று சொல்லும் சருதி வாக்ய பலத்தைக்கொண்டு 'ஜீவனுக்கும் பரஹ்மத்திற்கும் ஸ்வாபாவிக பேதமில்லை, ஆனால் உபாதி ஸம்பந்தத்தால் ஏற்படும் ஔபாதிக பேதம் மாத்ரம் உண்டு' என்றும், 'அசித் வஸ்துவுக்கும் பரஹ்மத்திற்கும் பேதமும் ஸ்வாபாவிகம், அபேதமும் ஸ்வாபாவிகம்' என்றும் சொல்லுகிறார்கள். இப்படி அசித்துக்கும் ப்ரஹ்மத்திற்கும் பேதம் அபேதம் இரண்டும் ஸ்வாபாவிகங்கள் என்று சொல்வதற்குக் காரணம், ஸகல பதார்த்தங்களும் பரஹ்மத்தை ஆத்மாவாக உடைத்தாயிருக்கின்றன என்றும், பரஹ்மம் எவ்வித மலமும் அற்றது என்றும் சொல்லும் சருதி வாக்ய பலமே. யாதவ ப்ரகாச மதஸ்தர்கள், 'மோக்ஷம் வந்த பிறகும் ஜீவனும் பரஹ்மமும் வெவ்வேறு' என்று சொல்லும் ச்ருதி வாக்ய பலத்தைக் கைப்பற்றி, 'ஜீவனுக்கும் பரஹ்மத்திற்கும் உள்ள பேதம் அபேதம் இரண்டும், அசித்துக்கும் பரஹ்மத்திற்குமுள்ள பேதாபேதங்கள் போல ஸ்வாபாவிகங்கள்' என்று சொல்லுகிறார்கள் இதுதான் இவர்களுக்குள்ள வ்யத்யாஸம். இவைகளைப் பற்றிய மற்றை அம்சங்கள் அவ்வவ்விடங்களில் உபபாதிக்கப்படும்.

தவஸ்ய அ தஹூாவாக்—ப்ரஹ்மத்திற்கு ஜீவத்தன்மை ஏற்படுகிறபடியால், முதல் 'தத்' சப்தம் பரஹ்மத்தையும், இரண்டாவது 'தத்' சப்தம் ஜீவனையும் குறிக்கின்றன.

ஸௌஹரிஹெஉவக்—ஸௌபரி என்பவர் ஏககாலத்தில் அநேக சரீரங்களை எடுத்துக்கொண்டதாகப் புராணகதை சொல்லுகின்றது. அப்படி சரீரபேதம் வந்தும் அந்தச் சரீரங்களுக்குள் இருந்த ஜீவன் ஒன்றாகவே இருந்தது என்பது இவ்விடத்தில் விஷயம்.

ஸூாவதாரஹெஉவக்—பகவான் பல அவதாரம் எடுக்கையிலும் எல்லா அவதாரங்களுக்கும் ஈச்வரத்வம் உண்டு என்பது விஷயம்.

ஸந்தீ: । ஸாதந்தம் பவதி—'ஸர்வம் ஸல்விதம் ப்ரஹ்மேத்யேவ ஸர்வப்ர
தியோகிஸ்வராதிஹேயதோஷாவஸ்தித இதி ஹி தத்ராத்மகத்வவர்ணநம் க்ரியதே ।
ததா ஸத்யேகத்வ ஜ்ஞாநஸ்வபாவப்ரஹ்மாதிமதாநி உபகாரஹாரணாதீநி
ஸர்வகார்யாணி யதா தஸ்யைவ பவந்தி, ததா ஸர்வஜீவகதாஸ்ச
தோஷா: ஸர்வஜீவஸம்ப்ராப்தேவ ஸ்யாத்' இதி । 'வ்யபதேசாதிஸம்ஸ்தா
நாநைகத்வ ப்ரத்யக்தத்வம் யதா கார்யாநுகாநந்த்வம், ததைவ ஸர்வ

---

கிறபடியாலும், ஜீவனிடத்தில தென்படும் தோஷங்களெல்லாம பரஹ்மத்திறகும பரஸங்கிக்கும எப்படியென்றால—'ஜகத் ஈச்வரனை ஆத்மாவாக உடைத்தாயிருக்கின்றது என்று அவர்கள் சொல்வது உண்மையேயாயினும், ஈச்வரன் தனது ஸ்வரூபத்தாலேயே தேவனாகவும மநுஷ்யனாகவும திர்யக்குககளாகவும ஸ்தாவரங்களாகவும பிந்ந பிந்நமாக நிற்கிறான் என்பதன்றோ அவர்கள் அப்படிச் சொல்வதன் கருத்து? அப்படி ஈச்வர ஸ்வரூபமே இவ்விதமாக நிற்கின்றது என்று சொல்லும பக்ஷத்தில், ஸகல ஜீவன்களாலும அநுபவிக்கப்படும ஸுக துக்கங்களெல்லாம ஈச்வரனாலேயே அநுபவிக்கப்படுகின்றது என்று ஒத்துக் கொள்ளவேண்டும. குடம் மடக்கு முதலியவைகள் எந்த மண் உருண்டையின ஸ்வரூபாவஸ்திதியோ அந்த மண் உருண்டைக்கே, அந்தக் குடம் மடக்கு முதலியவைகளைக்கொண்டு செய்யப்படும ஜலாஹரணம முதலிய கார்யங்கள அந்வயிப்பதை நாம் பார்க்கிறோமன்றோ? அதுபோல ஜீவனைப் பற்றி நிற்கும தோஷங்களெல்லாம ப்ரஹ்மத்திறகே அந்வயிக்க வேண்டாவோ'? 'குடம் மடக்கு முதலியவைகளாகச் செய்யப்படாமலிருக்கும மண் உருண்டைக்குக் கார்யமொன்றும எப்படி

---

ஸர்வம் ஸல்விதம் ப்ரஹ்மேத்யேவ ஸர்வஸ்ய அவஸ்தித இதி தத்ராத்மகத்வ வர்ணநம்—யாதவப்ரகாச மதஸ்தர்கள், நம்மைப் போல ஜகத்திற்கு ப்ரஹ்மாத்மகத்தன்மையை ஒத்துக்கொள்ளுகிறார்கள். ஆனால் நாம், 'ப்ரபஞ்சம் சரீரம், ப்ரஹ்மம் அதற்கு ஆத்மா' என்று ப்ரபஞ்சத்திற்கு ப்ரஹ்மாத்மகத்வம் சொல்லுகிறோம், அவர்கள், 'ப்ரஹ்மமே ப்ரபஞ்சமாக நிற்கிறது' என்று ப்ரஹ்மாத்மகத்வம் சொல்லுகிறார்கள் இப்படி ப்ரஹ்மாத்மகத்வம் சொல்வதைத்தான் 'ஸ்வல்விதம்' என்னும் சப்தம் குறிக்கின்றது

வ்யபதேசாதிஸம்ஸ்தாநாநைகத்வ ப்ரத்யக்தத்வம்—'ப்ரஹ்மத்தில் ஒரு அம்சமே ஜீவனாகிறது; அப்படி ஜீவனான அம்சத்திற்கு ஜீவன்களிடம் காணப்படும தோஷங்கள் ப்ரஸங்கித்தாலும், ஜீவனாகாமலிருக்கும் மற்றொரு அம்சத்துக்கு அவை ப்ரஸங்கிக்கமாட்டா' என்னும ஸமாதாநத்தைத் தூஷிக்கிறார். அம்சங்கள இரண்டானாலும் அம்சி ஒன்று தானே என்பதுதான் தூஷணம

வஸ்யாபி தத்ஜாதி ஜீவஸ்யாநவத்யத்வஸ்ய: ஸர்வஜ்ஞத்வ ஸத்யஸங்கல்பத்வாதி கல்யாணகுணாகர:' இதி சேத் ஸத்யம். 'ஸ ஏவேஶ்வர ஏகேநாம்ஶேந கல்யாணகுணாகர:, ஸ ஏவாந்யேநாம்ஶேந ஹேயகுணாகர:' இத்யுக்தம், அநயோரம்ஶயோரீஶ்வரத்வாவிஶேஷாத். 'அம்ஶௌ வ்யவஸ்திதௌ' இதி சேத், கோ(அ)த்ர லாப:? ஏகஸ்யைவைகேநாம்ஶேந நித்யது:கித்வாத் அம்ஶாந்தரேண ஸுகித்வேऽபி நேஶ்வரத்வாய கல்பதே. யதா தேவதத்தஸ்யைகஸ்மிந் ஹஸ்தே சந்தநபங்காநுலேப: கேயூரகடகாங்குலீயாலங்காரா:, தஸ்யைவாந்யஸ்மிந் ஹஸ்தே முத்கராபிகாத: காலாநலஜ்வாலாநுப்ரவேஶஶ்ச, தத்வதேவேஶ்வரஸ்ய ஸ்யா

---

அநவயிக்க வில்லேயோ, அப்படியே தேவனுகவும் மநுஷ்யனுகவும பசுவாகவும ஸதாவர மாகவும இல்லாமல இருககும் ஈசவராம்சத்திற்கு ஒரு தோஷமும் அநவயிககமாட்டாது; அநத ஈச்வராமசம், ஸர்வஜ்ஞதவம ஸத்ய ஸஙகலபதவம முதலிய கல்யாண குணங் களுக்கெல்லாம இருப்பிடமாகவும இருககககூடுமே' எனனில, அது உண்மையே. இபபடிச் சொலவதன் அாததமெனன வெனறல, 'ஒரே ஈச்வரன ஒரு அமசத் தில் கலயாண குணுகரன், மறறெரு அமசததில ஹேயகுணுகரன' என்பது தான். இரண்டு அம்சஙகளுககும ஈச்வரததனமை இருககினறதனறே? 'அப்படி இலலை; இரணடு அமசஙகளும் வெவவேறுக வயவஸ்திதங்களாக இருககினறன' என்னில, அபபடிபபட்ட வயவஸதையால லாபமெனன? எப்படிப்பட்ட வயவஸதை இருநதபோதிலும, ஒருவனுககே ஒரு பககததில் எபபொழுதும துக்காநுபவ மும் மற்றெரு பக்கத்தில எப்பொழுதும ஸுகாநுபவமும இருநதால, அவனை ஈசவர னென்று எப்படிச சொலலக்கூடும்? இது, ஒருவனுககு, ஒரு கையில் உததமமான சநதனப் பூச்சும் தோள்வளை கஙகணம மோதிரம முதலிய ஆபரணஙகளால அலஙகாரமும, மற் றெரு கையில் உலககையால அடியும பெருதத தீயின ஜவாலையில ப்ரவேசமும் செயவதற் குத் துலயமன்றே? 'பரஹ்மததிறகு அஜ்ஞாநம சேர்கின்றது' என்று சொல்லும

---

'சந்தநபங்காநுலேப:' என்பது ஐஹிக அலப ஸுகததிறகு தருஷ்டாநதம; 'கேயூராத்யலங்காரா:' எனபது மோக்ஷ ஸுகத்திற்கு தருஷ்டாநதம. இபபடியே 'முத்கராபிகாத:' என்பது ஐஹிக அலப துககத்தையும 'காலாநலஜ்வாலாநுப்ரவேஶ:' என்பது நரக ஸம்பநதமாயும அநந்தமாயுமுள்ள துக்கத்தையும குறிககினறது

ஸ்தாய-காரணாவஸ்தாவிஶிஷ்டஸ்ய ஸ ஏவ இதி கார்யகாரணயோரநந்யத்வே, ஸர்வ-ஶ்ருத்யவிரோதஶ்ச பவதி। ததேவம் நாமரூபவிபாகாநர்ஹஸூக்ஷ்மதஶாபந்நப்ரக்ருதிபுருஷஶரீரம் ப்ரஹ்ம காரணாவஸ்தம், ஜகதஸ்ததாபத்திரேவ ச ஸ்ருஷ்டி:; நாமரூபவிபாகவிபக்தஸ்தூலசிதசித்வஸ்து-

---

களைப் பிரகாரமாகக்கொண்டு ஜகத்தாயிருக்கும் கார்யமாயுமிருக்கிறான் என்று ஓதுகொண்டால் மாத்ரம் காரணமும் கார்யமும் ஒன்றே என்று சொல்வது உபபந்நமாகும், ச்ருதி விரோதங்களும் ஏற்படமாட்டா. [ஜகத்தின் ஸ்ருஷ்டி ப்ரளயங்களும் உபபந்நங்களாகும்.] 'ப்ரக்ருதி ஜீவன் இவை இரண்டுக்கும், இதுபெயர் இது ரூபம் என்று விவேசித்துச் சொல்லக்கூடாமலிருக்கும் ஒரு ஸூக்ஷ்மதசையும், இதுதான் பெயர் இதுதான் ரூபம் என்று விவேசித்துச் சொல்லக்கூடிய ஒரு ஸ்தூல தசையும் ஆக இரண்டு தசைகள் உண்டு. அவைகள் முதல் தசையில் இருந்துகொண்டு ஈச்வரனுக்குச் சரீரமாகும் பொழுது ஈச்வரனைக் காரணாவஸ்தையில் இருக்கும் ப்ரஹ்மமென்றும், இரண்டாவது தசையில் இருந்து

---

ஸர்வச்ருத்யவிரோத:—ஈச்வரன் ஜகத்துக்கு உபாதாந காரணம் என்பதை ஓதுக்கொண்டால், 'ஈச்வரன் நிர்விகாரன்' என்று சொல்லும் சருதி விரோதிக்கும் போல் தோன்றும். 'ஈச்வரன் நிர்விகாரன்' என்னும் சருதியை ஓதுக்கொண்டால், 'அவன் உபாதாந காரணம்' என்று சொல்லும் சருதி விரோதிக்கும் போல் தோன்றும். இப்பொழுது, 'உபாதாநத்வ சருதி விசிஷ்ட ப்ரஹ்ம விஷயம் நிர்விகாரத்வ சருதி விசேஷ்யமாத்ர விஷயம்' என்று கீழ் விவரித்திருப்பது போல் நாம் ஓதுக்கொள்ளும் பக்ஷத்தில் ஒருவித விரோதமும் வரமாட்டாது என்பது ஸ்பஷ்டம்.

ததேவம்—இவ்விடத்தில் வேறொரு சங்கை நிவ்ருத்தி செய்யப்படுகிறது. அது என்னவென்றால், 'சிதசித் விசிஷ்டமான ப்ரஹ்மம் நித்யமாகையால் அதற்கு ஸ்ருஷ்டி ப்ரளயங்கள் எப்படி ஸம்பவிக்கும்?' என்பதுதான். த்ரவ்யம் நித்யமாக இருந்தாலும் அவஸ்தா பேதத்தால் ஸ்ருஷ்டி ப்ரளயங்கள் உபபந்நங்களாகும் என்பது ஸமாதாநம்.

ஸூக்ஷ்மதசாபந்ந—சேதந வஸ்துக்கள் அசேதந வஸ்துக்கள் ஆகிய இவை இரண்டும் ஸ்ருஷ்டிக்கு முன் நாம ரூபங்கள் மறைந்தவைகளாய் இருக்கும். அப்பொழுது சேதந வஸ்துக்களெல்லாம் அசேதந வஸ்து ப்ராயங்களாகவே சொல்லப்படும். அப்படி இருக்கும் அவஸ்தையை ஸூக்ஷ்மாவஸ்தை என்று சொல்வார்கள்.

ததாபத்தி:—தஸ்யா ஆபத்தி:. அதாவது, அந்த ஸூக்ஷ்ம தசையின் ஆபத்தி என்று சொன்னதாயிற்று

ஶரீரம் ஸ்தூலம் கார்யாவஸ்தம், ஸூக்ஷ்மமனபிவ்யக்தநாமரூபாவஸ்தம் தயோ ஜன்மதஃ ப்ரஸித்திரித்யுச்யதே । யதோக்தம் பகவதா பராஶரேண

“ ப்ரதானபும்ஸோரஜயோஃ காரணம் கார்யபூதயோஃ ”

இதி । தஸ்மாத் ஸர்வப்ரகாரகார்யபூதஸர்வாவஸ்தப்ரக்ருதி புருஷ ஶப்தாஃ தத்ப்ரகாரவிஶிஷ்டதயாவஸ்திதே பரமாத்மனி முக்யதயா வர்தந்தே, ஜீவாத்மவாசிதேவமனுஷ்யாதிஶப்தவத்; யதா தேவமனுஷ்யாதிஶப்தா தேவமனுஷ்யாதிப்ரக்ருதிபரிணாமவிஶேஷாணாம் ஜீவாத்ம

---

கொண்டு சரீரமாகும்பொழுது ஈச்வரனைக் காரியாவஸ்தையில் இருக்கும் ப்ரஹ்மமென்றும் நாம் சொல்லுகிறோம். அவைகள் ஸூக்ஷ்ம தசையை அடைவதுதான் ஜகத்தின் ப்ரளயம், அவைகள் ஸ்தூல தசையை அடைவதுதான் ஜகத்தின் ஸ்ருஷ்டி என்பதே உபபத்தி. பகவான் பராசர மஹர்ஷியும் இம்மாதிரியே சொல்லியிருக்கிறார். [ப்ரதான புருஷன் இரண்டும் பிறப்பற்றவை அவைகளே காரியாவஸ்தையிலிருக்கும் ப்ரதான புருஷர்களுக்குக் காரணங்கள்] ஆகையால், ப்ரக்ருதி புருஷர்களைச் சொல்லும் சப்தங்களெல்லாம், அந்த ப்ரக்ருதி புருஷர்கள் எந்த அவஸ்தையில் இருந்தபோதிலும், பரமாத்மாவையே முக்யமாகக் குறிக்கின்றன, ப்ரகாரமாயிருக்கும் வஸ்துக்களைச் சொல்லும் சப்தங்களெல்லாம் அந்த ப்ரகாரத்துடன் இருக்கும் ப்ரகாரியையே முக்யமாகக் குறிக்கவேண்டுமன்றோ? இந்த நியமத்தை நாம் ஜீவாத்ம விஷயத்தில் பார்க்கலாம். ஜீவாத்மாக்களைக் குறித்து, அவைகளுடைய சரீரங்களாகிற தேவரூப மனுஷ்யரூப ப்ரக்ருதி பரிணாமங்களெல்லாம் ப்ரகாரங்கள், ஜீவாத்மா ப்ரகாரி இந்தக் காரணத்தால், ப்ரகாரமாக இருக்கும் தேவ மனுஷ்ய ரூபங்களைச் சொல்லும் சப்தங்களெல்லாம் ப்ரகாரியாயிருக்கும் ஜீவாத்மாவையே முக்யமாகக் குறிக்கின்றன.

---

**ப்ரதாந பும்ஸோ:**—இந்த ச்லோகம், வஸ்து ஸ்வரூபம் நித்யமாக இருந்த போதிலும், அவஸ்தா பேதத்தால் அவைகளுக்குக் காரணத்வமும் கார்யத்வமும் உபபந்நமாகும் என்பதற்கு ப்ரமாணமாக இவ்விடத்தில் சொல்லப்படுகின்றது 'அஜயோ:' (பிறப்பற்றவை) என்பதால் அவைகளின் நித்யத்வம் விளங்குகின்றது, 'கார்யபூதயோ:' என்பதால் அவஸ்தா பேதமுண்டு என்பது சொல்லப்படுகின்றது.

**தஸ்மாத்**—இப்படி, காரணம் கார்யம் இரண்டும் வெவ்வேறல்ல என்பது ஏற்பட்டால், அப்பொழுது கார்யத்தைச் சொல்லும் சப்தங்களெல்லாம் அந்தக் கார்யத்தின் வழியாகக் காரணத்தையே முக்யமாகக் குறிக்க வேண்டுமன்றோ? ஒரு சப்தமானது எந்த அர்த்தத்தில் முடிந்து நிற்கின்றதோ அதை முக்யார்த்தமென்று சொல்வார்கள். எல்லா சப்தங்களும் பரமாத்மாவினிடத்திலேயே முடிந்து நிற்கிறபடியால் அவனே அவைகளுக்கு முக்யார்த்தமாகிறான்.

ப்ரகாரதயைவ பதார்த்தத்வாத் ப்ரகாரிணி ஜீவாத்மநி பர்யவஸ்யந்தி வ்ருத்தய:। தத்வத் ஸர்வஸ்ய சிதசித்வஸ்துந: பரமாத்மஶரீரதயா தத்ப்ரகாரத்வாத் பரமாத்மநி பர்யவஸ்யந்தி வ்ருத்தய: ஸர்வே தத்வாசகா: ஶப்தா:। அயமேவ ஆத்மஶரீரபாவ:—ப்ருதக்ஸித்த்யநர்ஹாதாராதேயபாவோ நியந்த்ருநியாம்யபாவ: ஶேஷஶேஷிபாவஶ்ச। ஸர்வாத்மநா ஆதாரதயா

---

அது போலவே ஸகல சேதநாசேதந வஸ்துக்களும் பரமாத்மாவுக்குச் சரீரமாயிருந்து கொண்டு ப்ரகாரங்களாகிறபடியால், அந்தச் சேதநாசேதந வஸ்துக்களைச் சொல்லும் சப்தங்களெல்லாம் பரமாத்மாவி னிடத்திலேயே முக்யமாக வர்த்திக்கின்றன. ஆத்ம சரீர பாவம் என்பது இதுவே; ஒரு த்ரவ்யம் மற்றொரு த்ரவ்யத்தால் எப்பொழுதும் தரிக்கப்படுவதாயும் எப்பொழுதும் நியமிக்கப்படுவதாயும் எப்பொழுதும் அந்த மற்றொரு த்ரவ்யத்திற்குச் சேஷமாயும் இருந்தால், அந்த த்ரவ்யத்தைச் சரீரமென்றும் மற

---

ஆத்மசரீரபாவ:—'ஈச்வரனே ஆத்மா, அவனைத் தவிர்த்த சேதநாசேதந வஸ்துக்களெல்லாம் அவனுக்குச் சரீரம்' என்பது நமது அஸாதாரணமான கொள்கை. 'லோகத்தில் சரீரம் என்று சொல்லப்படும் பொருளானது இந்த்ரியங்களுக்கு இருப்பிடமாகவும் சலநம் முதலான சேஷ்டைகளுக்கு ஆச்ரயமாகவும் காணப்படுகின்றது. அப்படி இந்தச் சேதநாசேதநங்கள் ஈச்வரனுக்கு இந்த்ரியாச்ரயமாகவும் சேஷ்டாச்ரய மாகவும் இருந்தாலன்றோ நாம் அவைகளை ஈச்வரனுடைய சரீரமென்று சொல்லக்கூடும்? அவை அப்படி இல்லையாகையால் அவைகளைச் சரீர மென்று எவ்விதத்தில் சொல்லலாம்?" என்று ஒரு ஆக்ஷேபத்தைச் சங்கித்துக் கொண்டு அதற்கு ஸமாதாநம் சொல்லுகிறார். 'சேஷ்டை இந்த்ரியங்கள் இவைகளுக்கு ஆச்ரயமாயிருப்பது சரீரம்' என்று சரீரத்திற்கு லக்ஷணம் சொல்வது தோஷ துஷ்டம் 'எந்த த்ரவ்யமானது தனது ஸத்தையுள்ள காலமெல்லாம் மற்றொன்றால் தரிக்கப்படுவதாயும் நியமிக்கப்படுவதாயும் சேஷமாயும் இருக்கின்றதோ அந்த த்ரவ்யமே சரீரம், மற்றொன்று அதற்கு ஆத்மா' என்னும் லக்ஷணமே நிர்துஷ்டம் என்று நமது ஆசார்யர்கள் நிர்வஹித்திருக்கிறார்கள். தவிரவும், இவ்விதமான லக்ஷணத்தை அங்கீகரியாவிடில், "யஸ்யாத்மா ஶரீரம்" "யஸ்ய ப்ருதிவீ ஶரீரம்" இத்யாதியான ச்ருதி வாக்யங்களில் காணப்படும் சரீர சப்தத்திற்கு முக்யார்த்தத்தைப் பரித்யஜித்து லக்ஷணை கல்பிக்கும்படி ப்ரஸங்கிக்கும். அது ஸ்வரஸ மன்று.

ப்ருதக்ஸித்த்யநர்ஹ—ஆத்மா சரீரத்தைத் தரிப்பது நியமிப்பது முதலானவை அந்தச் சரீரம் உள்ள காலமெல்லாம் இருக்கின்றன என்பதை இந்தப் பதம் காண்பிக்கின்றது ஆகையால் ஸங்கல்பகாலம் மாத்ரம் ஆதேயமாயும் நியாம்யமாயும் சேஷமாயும் இருக்கும் கருஹ க்ஷேத்ரம் முதலானவை யஜமாநனுக்குச் சரீரமாகமாட்டா. ஆத்மா

நியந்த்ருதயா சேஷிதயா ச ஸ்வேநாதீதி 'ஸ்தூல', ஸவர்தா ஸ்வேயதயா நியாம்யதயா சேஷதயா ச ஸர்வரூபேண ஸர்வ ப்ரகாரகமாக 'ஸ்காரா:' 'ஷரீரமிதி'।

---

ஒன்றை ஆத்மாவென்றும் சொல்வார்கள் ஆத்ம சப்தத்தின் அவயவார்த்தமும் இதையே குறிக்கின்றது. அடைகிறான் (ஸ்வேநாதி) ஆகையால் ஆத்மா. அதாவது அந்த த்ரவ்யம் இருக்கும் வரையில் அதை இது ஆதாரமாகவும் நியந்தாவாகவும் சேஷியாகவும் அடைகிறபடியால் இது ஆத்மாவாகின்றது என்று சொன்னதாயிற்று. அம் மாதிரியே அந்த த்ரவ்யமும் தான் உள்ளவரையில் மற்றொன்றால் தரிக்கப்படுவதாயும் நியமிக்கப்படுவதாயும் அந்த மற்றொன்றுக்கு சேஷமாயும் இருந்துகொண்டு, அந்த மற்றொரு த்ரவ்யத்தை விட்டுத் தனித்து நிற்க அநர்ஹமான ப்ரகாரமாய் இருக்கிறபடியால்,

---

சரீரத்தைத் தரிக்கின்றது என்னுமிடத்தில் சொல்லப்படும் தாரணமும், தொன்னை நெய்யைத் தரிப்பது போலன்று, ஒரு வ்யாப்ய வஸ்துவினுள் ஒரு வ்யாபக வஸ்து ப்ரவேசித்து அப்படிப்பட்ட வ்யாப்தியால் ஏற்படும் தாரணத்தையே சொல்லுகின்றது.

சேஷசேஷிபாவ:—எந்த வஸ்துவின் ஸத்தை ஸ்திதி ப்ரவ்ருத்திகளெல்லாம் மற்றொரு வஸ்துவின் அதிசயத்தின் பொருட்டே ஆகின்றதோ, அந்த வஸ்துவைச் சேஷமென்றும் மற்றொரு வஸ்துவைச் சேஷியென்றும் சொல்வார்கள். வஸ்த்ர பூஷணம் முதலியவை நமது தேஹத்திற்குச் சேஷ பூதங்கள்; தோச்சீலை தேருக்குச் சேஷ பூதம். இம்மாதிரியே சேதநாசேதந வஸ்துக்களெல்லாம் ஈச்வரனுக்குச் சேஷ பூதங்கள் என்பது இவ்விடத்திற் சொல்லப்படுகிறது. அசேதநங்கள் மாத்ரம் இம்மாதிரி சேஷங்களாக இருக்கத் தகுந்தவை என்னும் நியமமில்லை. அசேதநங்கள் போலவே சேதந வஸ்துக்களும் பரார்த்தங்களே என்பது கருத்து. நாம் இருப்பதும் அநுபவிப்பதும் நம்முடைய அதிசயத்தின் பொருட்டு ஆகவில்லையோ? என்று ஒரு சங்கை ஜநிக்கலாம் 'இல்லை, நமது அதிசயம் அதற்கு முடிவன்று. ஈச்வரனுடைய த்ருப்தியே எல்லாவற்றிற்கும் பர்யவஸாநம்' என்பது ஸமாதானம். இதைப்பற்றி மேலே விவரணம் செய்யப்படப் போகின்றது.

ஸர்வாத்மநா—இதற்கு 'அந்த த்ரவ்யம் இருக்கும் காலமெல்லாம்' என்பது பொருள்

ஸ்வேநாதீதி ஸ்தூலா—இந்த அவயவார்த்தம் கீழ்ச் சொல்லப்பட்டுள்ள சரீர சரீரி லக்ஷணத்தைக் காண்பிக்கின்றது.

ஸ்காரா: ஷரீரமிதி ச—கோ (பசு) வுக்குக் கோத்வமாகிற ஜாதியும் ஜலத்திற்குச் சைத்யமாகிற குணமும் அப்ருதக்ஸித்த ப்ரகாரங்களானதால் 'ஆகாரங்கள்'

யதைவ ஹி ஜீவாத்மந: ஸ்வசரீரஸம்பந்த: ததைவ பரமாத்மந: ஸர்வசரீரத்வேந ஸர்வசப்தவாச்யத்வம்। ததாஹ ச்ருதிகண:

"ஸர்வே வேதா யத்பதமாமநந்தி
ஸர்வே வேதா யத்ரைகம் பவந்தி"

இதி। ததேதத் ஸர்வஸ்ய வாச்யஸ்யைகார்த்தவாசிநோ பவந்தீத்யர்த்த:।

---

அது ஆகாரமென்றும் சரீரமென்றும் சொல்லப்படுகிறது ஜீவாத்மாவுக்கும் தனது சரீரத்துக்கும் உள்ள ஸம்பந்தம் இப்படிப்பட்டதே. ஸர்வ வஸ்துக்களையும் சரீரமாயுடைய பரமாத்மாவுக்கும், ஸமஸ்த சப்தங்களாலும் முக்யமாய்க் குறிக்கப்படும் தன்மை இவ்வி தமே ஸம்பவிக்கின்றது இதையே அநேக ச்ருதிகள் சொல்லுகின்றன. முதலில் "ஸர்வே வேதா:" இத்யாதியான ச்ருதி வாக்யம் இதற்கு ப்ரமாணம். இந்த வாக்யத்திலுள்ள "ஸர்வே வேதா யத்ரைகம் பவந்தி" என்பதன் அர்த்தம் என்னவென்றால்; சொல்லத் தகுந்த வஸ்து ஒன்றாகவே இருக்கிறபடியால் எல்லா வேதங்களும் ஒரே

---

என்று சொல்லப்படும், அதே மாதிரி சரீரத்தையும் சரீரிக்கு ஆகாரமென்று சொல்லலாம். ஆனால், இந்தச் சரீரம் அப்ருதக் ஸித்த ப்ரகாரமாயிருப்பதுடன் ஜாதி குணமின்றிக்கே த்ரவ்யமாக இருக்கிறபடியால் இதற்குச் சரீரமென்றும வ்யவஹாரம் ஏற்படுகின்றது. அதாவது, எது அப்ருதக்ஸித்த ப்ரகாரமாயிருப்பதுடன் த்ரவ்யமாகவும் இருக்கின்றதோ அது சரீரம் என்று சொன்னதாயிற்று.

யதைவ ஹி—கீழ்ச் சொல்லப்பட்டுள்ள சரீர லக்ஷணத்திற்கு இந்த வாக்யத்தினால் வ்யாப்தி காண்பிக்கப்படுகிறது

ததைவ—இப்படி ஜகத்துக்கும் பரஹ்மத்திற்கும் சரீர சரீரி பாவம் இருக்கிறபடியால், ஜகத்திலுள்ள வஸ்துக்களைச் சொல்லும் ஸகல சப்தங்களும் பரஹ்ம பர்யந்தம் முக்யமான அர்த்தமுள்ளவையாக இருக்கின்றன என்பது ஏற்படுகின்றது. இவ்வளவால் ப்ரஹ்மத்திற்கு ஸர்வ சப்த வாச்யத்வம் ஸ்தாபிக்கப்பட்டது. இனி இதற்கு ச்ருதி ஸ்ம்ருதி ப்ரமாணங்களைச் சொல்லுகிறார்.

"ஸர்வே வேதா யத்பதமாமநந்தி"—எல்லா வேதங்களும் எந்த ப்ராப்ய வஸ்துவை ப்ரதிபாதிக்கின்றனவோ 'பத்யத இதி பதம்' என்னும் வ்யுத்பத்தியால 'ப்ராப்யம்' (அதாவது, நம்மால் அடையத் தகுந்த வஸ்து) என்னும் அர்த்தம் கிடைக்கின்றது. "ஸர்வே வேதா யத்ரைகம் பவந்தி" எல்லா வேதங்களாலும்

"ஸகொ தெவொ பஹுதா ஸந்நிவிஷ்ட:"

"ஸஹைவ ஸந்தம் ந விஜாநந்தி தெவா:"

இத்யாதி । தெவா:—இந்த்ரியாணி । தெவஶப்தஶ்ரோத்ராதீந்த்ரியபரத்வத்யா ஶ்ருதிவிஷயம் நிர்விஶேஷ ஸஹைவ ஸந்தம் தேஷாமிந்த்ரியாணி ஊர்த்வமபி ந விஜாநந்தீத்யர்த: । ததா ச ஸர்வாணி காநி வசாம்ஸி,

"நதா: ஸ்ம: ஸர்வவசஸாம் ப்ரதிஷ்டா யத்ர ஶாஶ்வதீ"

வாச்யோ ஹி வசஸ: ப்ரதிஷ்டா ।

---

அர்த்தத்தைச் சொல்லுகின்றன' என்பது தான். "ஸகொ தெவ:" இத்யாதியான ச்ருதியும், 'ஸர்வ சப்தங்களாலும் ஈச்வரன் ஒருவனே சொல்லப்படுகிறான்' என்பதற்கு ஹேதுவை ப்ரதிபாதிக்கின்றது. இதில 'தெவா:' என்னும் பதத்திற்கு 'இந்த்ரியங்கள்' என்பது பொருள் 'ஸர்வத்திற்கும் அந்தர்யாமியாக இருந்துகொண்டு ஸர்வத்தையும் ப்ரகாரமாக உடைத்தாயத் தங்களுடன் கூடவே இருக்கும் ஈச்வரனை, அந்த ஸர்வ வஸ்துக்களுடைய இந்த்ரியங்களொன்றும் மனஸ் உள்பட அறிகின்றன வில்லை' என்பது இந்த ச்ருதி வாக்யத்தின் அர்த்தம் புராண வசனங்களும் இப்படியே சொல்லுகின்றன. "நதா: ஸ்ம" இத்யாதியான வாக்யம் அவைகளுள் ஒன்று ['ஸகல வார்த்தைகளுக்கும் எதில் ப்ரதிஷ்டையோ' என்பதற்கு 'ஸகல வார்த்தைகளாலும் எது சொல்லப்படுகின்றதோ' என்பது அர்த்தம் ] வார்த்தைகளெல்லாம் வாச்யமான அர்த்தத்தையே ப்ரதிஷ்டையாக உடைத்தாயிருக்கின்றன வன்றோ? இம்மாதிரியே "காரணார்த்த"

---

ப்ரஹ்மமொன்றே ப்ரதானமாக ப்ரதிபாதிக்கப்படுகிறபடியால் எல்லா வேதங்களும் ஒரே வாக்யமாகின்றன வென்று சொல்லக்கூடும் [அதாவது ஒரே அர்த்தத்தைச் சொல்லுகின்றனவென்று சொல்லக்கூடும்]

"ஸகொ தெவ:... ....." இந்த ச்ருதி வாக்யம், 'ப்ரஹ்மம் ஸர்வ சப்த வாச்யம்' என்பதற்கு வேண்டுவதான ஹேதுவை ப்ரதிபாதிக்கின்றது இதன் அர்த்தம் 'ஒரே ஈச்வரன் அநேக விதமான தேவ மநுஷ்யாதிகளுக்கு அந்தர்யாமியாக இருந்து கொண்டு அவைகளுக்கெல்லாம் ஆத்மாவாக இருக்கிறான் அப்படி இருக்கிறவனை அந்தத் தேவ மநுஷ்யாதிகளின் இந்த்ரியங்கள் அறிகின்றன வில்லை.' என்பது

"நதா: ஸ்ம........." 'எந்த வஸ்துவினிடத்தில் ஸகல சப்தங்களும் சாச்வதமான ப்ரதிஷ்டையை அடைகின்றனவோ அந்த வஸ்துவுக்கு ப்ரணாமத்தைச் செய்கிறோம்.' 'ப்ரதிஷ்டை' என்பதற்குப் 'பர்யவஸானம்' ('முடிவு') என்பது பொருள். 'எவன் ஸர்வ சப்த வாச்யனோ அவனை நமஸ்கரிக்கிறோம்' என்பது தாத்பர்யம்.

"கார்யாணாம் காரணம் பூர்வம் வசஸாம் வாச்யமுத்தமம்"

"வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:"

இத்யாதீநி ஸர்வாணி ஹி வசாம்ஸி ஸஶரீராத்மவிஶிஷ்டம் அந்தர்யாமிணமேவாசக்ஷதே; "ஹந்தாஹம் திஸ்ரோ தேவதா அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி" இதி ஹி ஶ்ருதி:। ததா ச மாநவம் வச:,

"ப்ரஶாஸிதாரம் ஸர்வேஷாமணீயாம்ஸமணீயஸாம்।

---

இத்யாதியான வாக்யமும் "வேதைஶ்ச" இத்யாதியான வாக்யமும் இன்னும் இவை போன்ற மற்றை வாக்யங்களும், சரீரங்களுடன் கூடிய ஆத்மாக்களை ப்ரகாரமாக உடைய அந்தர்யாமியையே சொல்லுகின்றன. 'ஹந்தாஹம்' இத்யாதியான ச்ருதி, ப்ரஹ்மம் ஜீவ சரீரகமாகவே அநுப்ரவேசித்துத் தேவாதி விசித்ர ஸ்ருஷ்டியையும் அவைகளின் நாமதேயங்களையும் செய்கிறது என்று சொல்லுகிறதன்றோ?

மநு ஸ்ம்ருதியும் "ப்ரஶாஸிதாரம்" இத்யாதியான ச்லோகத்தால் ப்ரஹ்மத்துக்கு ஸர்வ சப்த வாச்யத்வத்தை ஸாதிக்கும் ஹேதுவையே சொல்லுகிறது. 'ப்ரஶா

---

"கார்யாணாம்........."—'ஜகத்தில் தென்படும் ஸகல கார்யங்களான வஸ்துக்களுக்கும் முதல் காரணமாய் இருந்துகொண்டு எது ஸர்வ சப்தங்களுக்கும் ப்ரதானமான வாச்யமாகின்றதோ' கார்யங்களுக்கெல்லாம் காரணமாயிருப்பதானது, ஸர்வ சப்தங்களுக்கும் வாச்யமாவதற்கு ஹேது.

"வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:"—'எல்லா வேதங்களாலும் அறியத் தகுந்தவன் நானே' எல்லா வேதங்களும் ஈச்வரனையே ப்ரதிபாதிக்கின்றன என்பது தாத்பர்யம்.

இந்த ச்ருதி வாக்யங்களெல்லாம், ஈச்வரன், சரீரங்களுடன் கூடியிருக்கும் ஆத்மாக்களைத் தனது சரீரமாக வைத்துக்கொண்டு அவையெல்லாவற்றுக்கும் அந்தர்யாமியாக இருக்கிறான் என்னும் அர்த்தத்தைச் சொல்லுகின்றன. அப்படி ஜீவ சரீரகனாகவே ஈச்வரன் ஸகலத்தினுள்ளும் அந்தர்யாமியாக அநுப்ரவேசிக்கிறான் என்பதற்கு ப்ரமாணம் 'ஹந்தாஹம்' இத்யாதியான ச்ருதி.

'அநேந ஜீவேநாத்மநா' என்பதற்கு 'ஜீவனைச் சரீரமாக உடைய என்னாலே' என்பது பொருள்.

"ப்ரஶாஸிதாரம்........." இவ்விடத்தில் 'ப்ரஶாஸிதா' என்னும் பதத்திற்கு 'ஸகலத்தினுள்ளும் அந்தர்யாமியாக ப்ரவேசித்து நியமனம் செய்து வருகிற

ருக்மாபம் ஸ்வப்நதீகம்யம் வித்யாத்தம் புருஷம் பரம் ”

ப்ரஶாஸிதாரம்—அந்த: ப்ரவிஶ்ய அந்தர்யாமிதயா ஸர்வேஷாம் நியந்தாரம் । அணீயாம்ஸ:—ஸூக்ஷ்மா:, க்ருத்ஸ்நஸ்யாசேதநஸ்ய வ்யாபகதயா ஸூக்ஷ்மாத்மாந: ; தேஷாமபி வ்யாபகத்வாத் தேப்யோ(அ)பி

---

ஸிதாரம்' என்பதற்கு 'உள் ப்ரவேசித்து அந்தர்யாமியாக இருந்து கொண்டு ஸகலத்தையும் நியமிக்கிறவனை' என்பது பொருள். 'அணீயஸாம்' என்பதிலுள்ள அணீயஸ் சப்தத்தால் ஆத்மாக்கள் குறிக்கப்படுகின்றன. ஆத்மாக்கள் ஸகல அசேதந வஸ்துக்களையும் வ்யாபித்து நிற்கிறபடியால், அவை அசேதந வஸ்துக்களைக் காட்டிலும் மிக ஸூக்ஷ்மங்கள், ஆகையால் அவைகள் 'அணீயாம்ஸ:' என்று சொல்லப்படுகின்றன. 'அணீயஸாமணீயாம்ஸம்' என்பதற்கு, 'அப்படி ஸூக்ஷ்மங்களாயிருக்கும் ஆத்மாக்களையும் வ்யாபிக்கிறபடியால் அவைகளைக் காட்டிலும் இன்னும் அதிக ஸூக்ஷ்மமாயிருக்கும்' என்பது தாத்பர்யம். 'ருக்மாபம்' என்பதற்கு 'ஸூர்யனுடைய வர்ணத்தைப்

---

என்பது அர்த்தம். இந்த அர்த்தம் எப்படிக் கிடைக்கின்றதென்னில் வேறொரு ச்ருதியில் 'அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம்' என்று ஈச்வரனுடைய ப்ரசாஸநம் முழுவதும் உள்ளில் ப்ரவேசித்துச் செய்யப்படுகிறதென்று சொல்லப்பட்டிருக்கின்றதன்றோ? 'அணீயஸாமணீயாம்ஸம்' 'ஸூக்ஷ்மமாயிருக்கும் ஆத்மாக்களைக் காட்டிலும் ஈச்வரன் அதிக ஸூக்ஷ்மன்'. இது அவன் உட்ப்ரவேசித்து ப்ரசாஸநம் செய்வதற்கு ஹேது. இந்த ச்லோகத்தாலும் ஈச்வரனுடைய ஸர்வ சப்த வாச்யத்வத்தின் ஹேது சொல்லப்பட்டது.

இந்த ச்லோகத்தில் தென்படும் 'ருக்மாபம்' என்பதற்கு 'ஸூர்யனுக்கு ஸமானமான வர்ணத்தை உடைய' என்று வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்கின்றது. இது "யதா பஶ்ய: பஶ்யதே ருக்மவர்ணம் கர்த்தாரமீஶம் புருஷம்" என்னும் ச்ருதியில் சொல்லப்பட்டுள்ளதை அநுஸரித்திருக்கின்றது. "ய ஏஷோ(அ)ந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருஶ்யதே" என்னும் ச்ருதியில், 'ஸூர்யனுக்குள் ஸ்வர்ணமயமாக ஈச்வரன் தென்படுகிறான்' என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இந்த இரண்டு ச்ருதிகளையும் பார்த்தால், ஈச்வரன் அஸாதாரணமான ஔஜ்ஜ்வல்யத்துடன் இருக்கையில் ஸ்வர்ணம் போல அதி போக்யமான வர்ணத்துடன் கூடியிருக்கிறான் என்பது ஏற்படுகிறது. ஆனால் 'ஈச்வரனுக்கு நீலமான நீருண்ட மேகத்தின் ஸாம்யம் சொல்லப்படுகின்றதே அது எப்படி?' என்று கேட்கலாம். 'அந்த நீலமேக வர்ணத்திற்கே ஒரு ஹேது விசேஷத்தால் ஸ்வர்ண வர்ணத் தன்மையானது உபபந்நமாகக் கூடும்' என்பது பெரியோர்களின் நிர்வாஹம். அப்படி இருப்பதால்தான், பகவானுடைய விக்ரஹம் இளம் வெய்யிலால் பூசப்பட்டுள்ள மரகத மலை போல இருக்கின்றது என்று அதை அறிந்தவர்கள் வர்ணித்திருக்கிறார்கள். ஸ்ரீமத் ராமாயணத்

ஸம்யக்த்வேந இத்யர்த²: | ருக்மாப⁴: — ருசிரவர்ண: | ஸ்வப்நதீ⁴க³ம்ய: — ஸ்வப்நகல்பபு³த்³தி⁴ப்ராப்ய:; விஶுத்³த⁴ப்ரத்யக்ஷதாபந்நாநுத்⁴யாநைகலப்⁴ய இத்யர்த²: |

" ஏதமேகே வத³ந்த்யக்³நிம் மநுமந்யே ப்ரஜாபதிம் |
இந்த்³ரமேகே பரே ப்ராணமபரே ப்³ரஹ்ம ஶாஶ்வதம் || "

இதி | ஏகே — ஏகே வேதா³ இத்யர்த²: | உக்தரீத்யா ஸர்வஸ்ய ப்³ரஹ்மண: ஸர்வஶரீரகத்வேந ஸர்வஶப்³த³வாச்யதயா ப்ரஸித்³த⁴த்வாத் அக்³ந்யாத³ய: ஶப்³தா³ அபி ஶாஶ்வதப்³ரஹ்மஶப்³த³வத் தஸ்யைவ வாசகா ப⁴வந்தீத்யர்த²: | ததா² ச ஸ்ம்ருத்யந்தரே

---

போன்ற வாணமுள்ளவர்' என்பது பொருள். 'ஸ்வப்நதீ⁴க³ம்ய:' என்பதற்கு 'ஸ்வப்நம் போன்ற புத்தியால் அறியத்தகுந்த' என்பது அர்த்தம். அதாவது, 'தெளிந்த பாத்யக்ஷத்தை அடைந்திருக்கும் அநுத்யானம் ஒன்றாலேயே அறியத் தகுந்த' என்று சொன்னதாயிற்று.

"ஏதமேகே" இத்யாதியான ச்லோகமும் கீழ்ச் சொல்லப்பட்டுள்ள பரஹ்மத்தின் ஸர்வ சப்த வாச்யத் தன்மையையே வெளிப்படுத்துகின்றது. 'ஏகே' என்பதற்கு, 'சில வேதங்கள்' என்பது பொருள். முன் ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிற பரகாரம், பரஹ்மம் எல்லா வஸ்துக்களினுள்ளும் அநுப்ரவேசித்து அவைகளை நியமித்துக்கொண்டு அந்தக் காரணத்தால் எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருக்கிறபடியால் இந்த ச்லோகத்தில் உதாஹரிக்கப்பட்டுள்ள அக்நி முதலிய சப்தங்களும் 'சாச்வத பரஹ்ம' சப்தம் போல ப்ரஹ்மத்தையே குறிக்கின்றன என்பது தான் இந்த ச்லோகத்தின் கருத்து.

---

திலும், " க்ஷிஷ் தப்தஜாம்பூநதவர்ணம் தஸ்யாநநம் " என்று நீலமேக ச்யாமளருடைய ஸ்ரீராமனுடைய திருமேனி ஸ்வர்ண ஸமான வர்ணமென்று சொல்லப்பட்டிருக்கின்றது.

"ஏதமேகே......" 'சில வேதங்கள் ஈச்வரனைச் சாச்வதமான பரஹ்மமென்று சொல்வதுபோல், வேறு சில வேதங்கள் இவனை அக்நி என்றும், வேறு சில மருத்துக்கள் என்றும், வேறு சில ப்ரஹ்மாவென்றும், இன்னும் சில இந்த்ரனென்றும், இன்னும் சில ப்ராணனென்றும் சொல்லுகின்றன' ஈச்வரன் ஸர்வ சப்த வாச்யனாகிறபடியால், அக்நி முதலிய சப்தங்களும், சாச்வத ப்ரஹ்ம சப்தம் போல அந்த ஈச்வரனையே குறிக்கின்றன என்பது இந்த ச்லோகத்தின் குறிப்பு. ஆகையால் இந்த ச்லோகமும் ஸர்வ சப்த வாச்யத்வத்தையே விவரிக்கின்றது. இதில் உள்ள 'ஏகே' என்பதற்கு 'சில வேதங்கள்' என்று பொருள் கொள்ளவேண்டும்.

“யே யஜந்தி பித்ரூந் தேவாந் ப்ராஹ்மணாந் ஸஹுதாஸநாந் ।
ஸர்வபூதாந்தராத்மாநம் விஷ்ணுமேவ யஜந்தி தே ॥”

இதி । பித்ருதேவப்ராஹ்மணஹுதாஸநாதிஸப்தாஸ்தேஷ்வவஸ்திதஸ்ய ஸர்வபூதாந்தராத்மபூதஸ்ய விஷ்ணோரேவ வாசகா இத்யுக்தம் பவதி ।

அநேந ஸர்வஸப்தஸ்ய பரமாத்மபர்யந்தத்வம் ... ஜீவாத்மந ஸ்வரூபம் ...

---

மற்றுமொரு ஸ்ம்ருதியும “யே யஜந்தி” இத்யாதியான ச்லோகத்தால இந்த அர்த்தத்தையே விவரிக்கின்றது இந்த ச்லோகத்திலுள்ள ‘பித்ரு’ ‘தேவ’ ‘ப்ராஹ்மண’ ‘ஹுதாஸந’ முதலான சப்தங்களெல்லாம், அந்தப் பித்ருக்கள் தேவதைகள் ப்ராஹ்மணர்கள் அக்நி இவர்கள் வழியாக அவை யெல்லாவற்றிற்கும் அந்தராத்மாவாக இருக்கும் விஷ்ணுவையே குறிக்கின்றன

அநேந... இதுவிஷயமான ஸகல சுருதி ஸ்ம்ருதி வாக்யங்களின் தாத்பர்யம் என்ன வென்றால்—‘ஜீவாத்மாக்களெல்லாம் கேவலம் ஜ்ஞானத்தையே ஸ்வரூபமாக உடையவை;

---

“யே யஜந்தி ... .....”—இது தக்ஷ வசநம் இதுவும் ஸர்வ சப்த வாச்ய பரமான ச்லோகம். கீழ் ச்லோகத்தில், அக்நி முதலிய சப்தங்கள் போல இந்த ச்லோகத்தில பித்ரு தேவ சப்தங்களும் ஈச்வரனையே சொல்லுகின்றன. சப்தங்களுட சில, ப்ரஹ்மம முதலிய சப்தம் போல நிரதிசய பெருந்தன்மை முதலிய குணங்களை உடைய ஈச்வரனை அதவாரகமாகவே சொல்லுகின்றன; அக்நி பித்ருக்கள் போன்ற மற்றும் சில சப்தங்கள் அந்த ப்ரஹ்மத்தையே ஸத்வாரகமாகச் சொல்லுகின்றன. இந்தக்காரணத்தால தான ஸகல சப்தங்களும ஈச்வரனையே சொல்லுகின்றன என்று வேதாந்திகள் நிர்வஹிக்கிறார்கள்.

பூர்வம ஸங்க்ரஹமாகச் சொல்லப்பட்ட ஸ்வ பக்ஷத்தை இப்பொழுது விஸ்தரித்துச் சொல்ல ஆரம்பித்து, இது வரையில் பேத சுருதி அபேத சுருதி கடக சுருதி இவைகளின அர்த்தத்தை உபபாதித்தார். இனி, பகவானை அடைவதற்கு வேண்டுவதான உபாயத்தைப பற்றிப் பேசும சுருதி வாக்யங்கள் முதலானவைகளை நிரூபிக்கப்போகிறவராய், முதலில், அந்த உபாயபர வாக்யங்களின தாத்பர்யத்தை விளக்குகிறார் இவ்விடத்தில மித்யா வாதிகள் ஒரு ஆக்ஷேபம செய்கிறார்கள் அது என்னவென்றால, ‘ப்ரஹ்மவிதாப்நோதி பரம்’ [ப்ரஹ்மத்தை அறிந்தவன மோக்ஷத்தை அடைகிறான] என்பது முதலான வாக்யங்களில ஜ்ஞானமே மோக்ஷத்தை அடைவதற்கு உபாயம என்று சொல்லப்பட்டிருக்கிறது , ஜ்ஞானம என்பது அஜ்ஞானத்தால ஏற்படும ப்ரமத்தை மாத்ரம நிவ்ருத்திக்கக்கூடியது; ஆகையால் அஜ்ஞானத்தால் ஏற்படும ப்ரமத்தின் நிவ்ருத்தியே

ஊஜ்ஞாநஸ்வபாவ: ஸங்கோசாபாவ:, ஸர்வகத: ...

அந்த ஜ்ஞானம் ஸ்வபாவத்தாலேயே எவ்வித ஸங்கோசமும் மற்றது, ஸகல தேசங்களிலும் ஸகல காலங்களிலும் வ்யாபிக்கக்கூடியது, ராகம் த்வேஷம் முதலிய தோஷங்களில்லாதது; ஆனால், அந்த ஜீவாத்மாக்கள் ஜன்மாந்தர கர்மமாகிற அவித்யையால் ஆக்ரமிக்கப்பட்டவை

---

மோக்ஷமாக வேண்டும். அதாவது, ப்ரஹ்மத்தைத் தவிர்த்த மற்றைப் பதார்த்தங்களும் ஸத்யங்கள் என்னும் ப்ரமம் நிவ்ருத்தியானதே மோக்ஷமென்று சொன்னதாயிற்று. ஆகையால், பரஹ்மத்தைத் தவிர்த்த மற்றை பதார்த்தங்களெல்லாம் பொய் என்பதே அம்மாதிரியான சருதி வாக்யங்களின் தாத்பர்யம்' என்பது தான். இதற்கு, இம்மாதிரி சருதிகளில் ப்ரயோகம் செய்யப்பட்டுள்ள 'வெகுநே' முதலிய சப்தங்களுக்குக் கேவலம் ஜ்ஞானம் என்பது பொருள் அன்று, ஆனால் 'உபாஸநம்' என்பதே பொருள் என்பது தான் ஸமாதானம். இந்த ஸமாதானத்தைச் சொல்லப்போகிறவராய், முதலில் சாஸ்த்ரங்கள் ப்ரதிபாதிக்கும் ஆத்மா யாது என்பதை ஒருவித ஆத்ம க்ரமத்தை அநுஸரித்து விவரிக்கிறார்.

ஸர்வசாஸ்த்ர ஹ்ருதயம்- ஸகல ச்ருதி ஸ்ம்ருதி வாக்யங்களின் அந்தரங்கமான அபிப்ராயம். அதாவது பேதத்தைச் சொல்லும் வாக்யங்கள் பேதத்தை நிஷேதிக்கும் வாக்யங்கள் உபாயத்தைச் சொல்லும் வாக்யங்கள் நிவ்ருத்திக்கப்பட வேண்டியது யாது என்பதைச் சொல்லும் நிவர்த்ய பர வாக்யங்கள் இவை எல்லாவற்றையும் பர்யாலோசித்துப் பார்க்குமளவில் நாம் சொல்லும் ஆத்மாவே ஏற்படுகின்றது என்று சொன்னதாயிற்று. சிற்சில வாக்யங்களை மாத்ரம் ஆதாரமாகக்கொண்டு இம்மாதிரி விஷயங்களில் தாத்பர்யத்தை நிஷ்கர்ஷிப்பது சலாக்யமாக மாட்டாது என்பது குறிப்பு.

'ஸ்வபாவஸங்கோசித' என்பதற்கு 'ஸ்வபாவத்தால் எவ்வித குறைவுமற்றது' என்பது பொருள், 'அபரிச்சிந்ந' என்பதற்கு 'எவ்வித அளவுக்கும் உட்படாதது' என்பது பொருள். அதாவது, ஈச்வரனுக்கு இந்த ஜ்ஞானம் விபுவாக இருப்பது போல ஜீவனுக்கும் ஸ்வபாவத்தால் இது விபுவே என்று சொன்னதாயிற்று. ஆனால், இது ஈச்வரனுக்கும் நித்யர்களுக்கும் எப்பொழுதும் விபுவாக இருக்கும்; மற்றுள்ளாருக்கு ஸம்ஸாராவஸ்தையில் கர்மாநுரூபமாகப் பலவித ஸங்கோச விகாஸங்களை உடைத்தாய், முக்தாவஸ்தையில் ஏக ஸ்வரூப விகாஸத்தால் பின்பு யாவத் காலம் விபுவாக இருக்கும். இம்மாதிரியான தாரதம்யத்திற்குக் கர்மமே நிபந்தநம்

'நிர்மல'—மலமற்றது. ஜ்ஞானத்திற்கு மலமாவது ராகம் த்வேஷம் முதலியவைகள், ஆகையால் அவையற்றது என்பது பொருள். ஸகல வஸ்துக்களின் உள்ளி

ஜெஷு— வுவிஷூாஷுத்ஜெஹொஅிதஜுலுஜ்ஞாநவுஸாஷுத்ஜெஷாதாஷி

---

களாய, அந்தந்தக் காமங்களின் தாரதம்யத்திற்கு அநுரூபமாகத் தமது ஜ்ஞாநத்தில் ஒருவித ஸங்கோசத்தை அடைகின்றன, அவை, சதுர்முக ப்ரஹ்மா முதலாக அநிமாத

---

லும் பகவான் ஆத்மாவாக இருக்கிறான் என்பது யதார்த்த ஜ்ஞாநம். அந்த ஜ்ஞாநம் இருக்கும்பொழுது ராகத்வேஷங்கள் ஏற்படமாட்டா. அப்படி யதார்த்தமல்லாத க்ரஹ ணம் இருக்கும்பொழுது மாத்ரம் இவை ஏற்படுமாகையால் இவை ஜ்ஞாநத்திற்கு மல மாகச் சொல்லப்படுகின்றன. காம ஸம்பந்தமற்றிருக்கும் ஜீவன் விஷயத்தில் இந்த ஜ்ஞாநம் நிர்மலமே

'ஜ்ஞாநஸ்வரூபா:'—ஜ்ஞாநத்தைத் தர்மமாக உடைத்தானவை. 'ஸ்வரூபம்' என்பதற்கு இவ்விடத்தில் 'தர்மம்' என்று பொருள் கொள்ளவேண்டும். ஜீவன்க ளுடைய ஸ்வரூபமானது, ஜட பதார்த்தங்களான தேஹம் முதலியவைகளின் ஸ்வரூபம் போலன்றிக்கே தனக்குத் தானே ப்ரகாசித்துக்கொள்ளும் யோக்யதை உடையது. இதைத் தான் ஸ்வரூபமாகிற ஜ்ஞாநமென்று சொல்லுவார்கள் இந்த ஸ்வரூபமாகிற ஜ்ஞா நத்திற்கு ஒரு பொழுதும் ஸங்கோசம் என்பதே இல்லை ஈச்வரன் விஷயத்தில் இந்த ஸ்வரூப ஜ்ஞாநம் விபு, ஜீவன் விஷயத்தில் இது அணு இந்த ஸ்வரூப ஜ்ஞாநத்தை ஆதாரமாகக் கொண்டு வேறொரு ஜ்ஞாநம் ஜீவன்களை ஆச்ரயித்து நிற்கின்றது. ஸ்வ ரூபமாகிற ஜ்ஞாநத்தைக் காட்டிலும் இப்படி ஆச்ரயித்து நிற்கும் ஜ்ஞாநத்தைப் பிரித்துப் பேசும் பொருட்டு ஸ்வரூப ஜ்ஞாநத்தைத் தர்மி ஜ்ஞாந மென்றும் மற்றொன்றைத் தர்ம பூத ஜ்ஞாந மென்றும் வ்யவஹரிப்பார்கள். இந்தத் தர்ம பூத ஜ்ஞாநம் ஸர்வபர்வத் தால் விபு, ஆனால் காம பரவசமாய் ஸம்ஸரிக்கும் பொழுது இதற்கு ஸங்கோசம் ஏற்படு கின்றது இந்தத் தர்மபூத ஜ்ஞாநமே இவ்விடத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்டிருக்கின்றது.

கமஹுவாவிஷூாவெஷிதா:—காமமாகிற அவித்யையால் சூழப்பட்டவை களாய காமத்தால் 'தேஹமே ஆத்மா' என்பது முதலான ப்ரமம் ஜீவன்களுக்கு உண் டாகின்றது, இந்த ப்ரமம் அவித்யை என்று சொல்லப்படும் இந்த ப்ரமத்தால் ஒரு வாஸனையும், அந்த வாஸனையால் ஒரு ருசியும், அந்த ருசியால் ப்ரக்ருதி ஸம்பந்தமும், அந்த ப்ரக்ருதி ஸம்பந்தத்தால் மறுபடியும் காமமும், இம்மாதிரி அநாதி சித்த பரம் பரையை உடைத்தாயிருக்கின்றது ஸம்ஸார மென்னும் சக்ரம். அதில் அகப்பட்டுக் கொண்டிருப்பதை 'கமஹுவாவிஷூாவெஷிதா:' என்னும் பதம் குறிக்கின்றது,

தத்துஹுாந—வஜ்ஞாநஸம்கொசஉாவஹா:—ஜ்ஞாநமானது ஸங்கோ சத்தை அடைவதற்குக் காமமே காரணம் என்பதை இது விளக்குகின்றது. அந்த ஸங் கோசமும் அந்தந்தக் காமங்களின் தாரதம்யத்தைச் சார்ந்திருக்கிறபடியால், காமமு பலவகு

சாரிணஸ்ததுசிதகர்மாணி குர்வாணாஸ்ததநுகுணஸுகது:கோப போகரூபஸம்ஸாரப்ரவாஹம் ப்ரதிபத்யந்தே; தேஷாம் ஸம்ஸா ரமோசநம் பகவத்ப்ரபத்திமந்தரேண நோபபத்யத இதி ததர்த்தம் ப்ரதம

---

ரம் அல்பமாயுள்ள ஸ்தம்ப பர்யந்தமான பலவித விசித்ர தேஹங்களுள் புகுந்தவைக ளாய், அந்தந்த தேஹத்திற்குத் தகுந்தபடி ஸ்வல்பம் ஸ்வல்பமான ஜ்ஞாந விளக்கத்தைப் பெற்றும், அந்தந்த தேஹமே ஆத்மாவென்னும் அபிமானத்தைச் செய்துகொண்டும், அதற்கு யோக்யங்களான வ்யாபாரங்களில் ப்ரவ்ருத்தித்தும், அந்தந்த வ்யாபாரங்களால் ஏற்படும் ஸுக துக்கங்களை அநுபவித்துக்கொண்டும், இம்மாதிரி தொடர்ந்து வரும் ஸம்ஸாரமாகிற ப்ரவாஹத்தில் அகப்பட்டு நிற்கின்றன; இவைகளுக்கு இந்த ஸம்ஸார ப்ரவாஹத்திலிருந்து விமோசநம், பகவானிடத்தில் செய்யப்படும் ப்ரபத்தி ஒன்றாலேயே நேரக்கூடியதாதலால், சாஸ்த்ரங்களெல்லாம், முதலில் தேவ மநுஷ்யாதி ரூபங்களான

---

தாக இருக்குமிடங்களில் அதிக ஸங்கோசமும் அவ்வளவு பலமில்லாமல் இருக்குமிடங் களில் கொஞ்சம் குறைந்த ஸங்கோசமும் இப்படி நிரவதிகமான ஸங்கோச தாரதம்யம் இந்த ப்ரபஞ்சத்தில் தென்படுகின்றது.

ப்ரஹ்மாதிஸ்தம்பபர்யந்தவிவிதவிசித்ரதேஹவிசேஷா:—சதுர்முக ப்ரஹ் மாவும் காம பந்தத்திற்கு உட்பட்டவரே 'ஸ்தம்ப' என்னும் பதம் அத்யல்பமான ஸ்தாவர விசேஷத்தைக் குறிக்கும். 'விவித' என்பது தேவன் மநுஷ்யன் திர்யக் ஸ்தாவரம் முதலிய பேதங்களைக் குறிக்கின்றது; 'விசித்ர' என்பது ஒவ்வொன்றிலும் அவாந்தர பேதங்களைக் குறிக்கின்றது தத்தத்தேஹோசிதஜ்ஞாந ப்ரஸரா:—அந்தந்த தேஹத்திற்குத் தகுந்தபடி ஜ்ஞானத்தின் ப்ரஸரத்தைப் பெற்ற வர்களாய். ப்ராணிகளல்லாமல் இருக்கும் ஸ்தாவரங்களில் இந்த ஜ்ஞான ப்ரஸரம் அதி மாத்ரம் ஸ்வல்பம் என்று அறியவேண்டும்

ஸுகது:கோபபோகரூபஸம்ஸாரப்ரவாஹம்—ஸுகத்திற் கும் துக்கத்திற்கும் தேஹாத்மாபிமானமே ஹேது. எது ஆத்மாபிமானத்திற்கு அநு கூலமோ அது ஸுகம், எது அதற்கு ப்ரதிகூலமோ அது துக்கம்.

தேஷாம்—இதனால் ஸம்ஸார மோசநத்திற்கு உபாயம் சொல்லப்படுகின் றது. ப்ரபத்தி ஒன்றே அதற்கு உபாயம் நம்முடைய வேறு கதியற்றிருக்கும் தன்மை யையும் வேறு புகலற்றிருப்பதையும் உணர்ந்து பகவானிடத்தில் பூர்ண விச்வாஸத்து டன் நாம் நம்மையும் நமது ரக்ஷணத்தின் பாரத்தையும் அவனிடத்தில் ஒப்புவிப்பதை ப்ர

ஶேஷம் தேவாதிபேதரஹிதஜ்ஞாநைகாகாரதயா ஸர்வேஷாம் ஸாம்யம் ப்ரதிபாத்ய, தஸ்யாபி ஸ்வரூபஸ்ய ஸர்வதா பகவச்சேஷைகரஸதயா ஸர்வ

---

பேதமின்றும் தேஹத்தைப் பற்றியவை யென்றும், அந்த தேஹங்களிலிருக்கும் ஆத்மாக்கள் ஜ்ஞானமொன்றையே ஆகாரமாக உடையவை யாகையால் அவைகளுக்குப் பரஸ்பரம் ஒருவித பேதமும் இல்லை என்றும் அந்த ஆத்மாக்கள் ஸர்வ தேச ஸர்வ காலங்களிலும் பகவானுக்கே சேஷமாயிருக்கிறபடியால் அவை எப்பொழுதும் பகவானையே ஆத்மாவாக உடைத்தாயிருக்கின்றன வென்றும் ப்ரதிபாதித்து விட்டு, பிறகு பகவானுடைய

---

பத்தி என்று சொல்வார்கள். இப்படி ப்ரபத்தி செய்து நாம் பக்தி யோகத்தின் நிஷ்பத்தியைத் தேடிக்கொண்டு அது வழியாக மோக்ஷத்தை அடையலாம். இதை ஸத்வாரக ப்ரபத்தி என்று சொல்லுவார்கள் இந்த மார்க்கத்தில் செல்பவர்கள் பக்தியோக நிஷ்டராவர். ப்ரபத்தியானது ஸாக்ஷாத்தாகவும் மோக்ஷத்தை ஸாதித்துக் கொடுக்கு மென்றும் சாஸ்த்ரங்கள் சொல்லுகின்றன. அப்படி மோக்ஷத்தைத் தேடுபவர்கள் அத்வாரக ப்ரபத்தி நிஷ்டராவார்கள். இந்த இரண்டு மார்க்கங்களிலும் ப்ரபத்தி அவசியம் அபேக்ஷித மாகையால் 'ப்ரபத்தியின்றிக்கு ஸம்ஸார விமோசனம் ஸம்பவிக்கமாட்டாது' என்று இவ்விடத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது

ஸ்வயம்ஜ்ஞம்—தேஹத்தைக் காட்டிலும் ஆத்மா வேறுபட்டது என்னும் ஜ்ஞானம் ஏற்பட்டவர்களே மோக்ஷத்தை ஸாதித்துக் கொடுக்கும் உபாயத்தைத் தேடுவார்கள், அந்த ஜ்ஞானம் ஏற்படாமலிருக்கும் பக்ஷத்தில் மோக்ஷோபாயத்தின் அபேக்ஷை ஜனிக்க மாட்டாதன்றோ ? ஆகையால் 'ஆத்ம ஸ்வரூபம் தேஹத்தைக் காட்டிலும் வேறுபட்டது; அது கேவலம் ஜ்ஞான ஸ்வரூபமே, அந்தக் காரணத்தால் ஸகல ஆத்மாக்களும் ஸமம்' என்பது முதலில் விளக்கப்படவேண்டும். இம்மாதிரியே, 'பகவானுக்கே நாம் எப்பொழுதும் சேஷபூதர்கள்' என்னும் ரஸம் ஸித்தித்த பிறகு தான் மோக்ஷத்தை அடைவதில் இச்சை பிறக்கு மாகையால், ஆத்மாவுக்கு இயற்கையாயுள்ள சேஷத்தன்மையும் முதலில் விளக்கப்படவேண்டும். இந்த அர்த்த க்ரமத்தை அநுஸரித்தே, இவ்விடத்தில் சாஸ்த்ரங்கள் ப்ரதிபாதிக்கும் விஷயங்களை ஒன்றின் பின் ஒன்றாகச் சொல்லுகிறார்.

ஶேஷம்—முதலில், ஜீவாத்ம ஸ்வரூபம் ப்ரஸ்தாவிக்கப்படுகின்றது சரீரங்களில் காணப்படும் வேறுபாடு ஆத்மாக்களுக்கு இல்லை, எல்லா ஆத்மாக்களும் ஜ்ஞான ஸ்வரூபம், ஆகையால் எல்லாம் ஸமம், எல்லாம் பகவானுக்குச் சேஷ பூதங்கள், ஆகையால் எல்லாம் பகவானையே ஆத்மாவாக உடைத்தாயிருக்கின்றன. இதுதான் இவ்விடத்தில் சொல்லப்பட்டுள்ள விஷயம்

ஜ்ஞாத்ரேகாகாரதாம் ப்ரதிபாத்ய, த்விதீயேந ச ஹேயப்ரத்யநீககல்யாணைகதாநதயா ஸ்வேதரவிஸஜாதீயம் அநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாணகுணகணாச்ரயம் ஸ்வஸங்கல்பப்ரவ்ருத்தஸமஸ்தசிதசித்வஸ்துஜாததயா ஸர்வஸ்யாத்மபூதம் ப்ரதிபாத்ய, உபாஸநம் ஸாங்கம் தத்ப்ராபகம் ப்ரதிபாதயந்தி ப்ரமாணாநீதி । யதோக்தம்

---

ஸ்வரூபத்தை விளக்க ஆரம்பித்து, அது எவ்விதஹேய ஸம்பந்தமுமற்ற சுத்த ஆநந்த ரூபமென்றும், அந்தக் காரணத்தாலேயே அது மற்றை வஸ்துக்களெல்லாவற்றையும் காட்டிலும் வேறுபட்டதென்றும், அது அளவற்றதும் மேன்மையானதும் கணக்கில்லாததுமான கல்யாண குணங்களுக்கு இருப்பிடமென்றும், தனது ஸங்கல்ப மாத்ரத்தால் சேதநாசேதந ரூபங்களான ஸகல வஸ்துக்களையும் ப்ரவ்ருத்திப்பித்துக்கொண்டிருக்கிறபடியால் ஸகல வஸ்துக்களுக்கும் அது ஆத்மாவாக இருக்கின்றதென்றும் சொல்லிவிட்டு, பிறகு ஸகல அங்கங்களுடனும் அந்தப் பகவானிடத்தில் பக்தி செய்வதே

---

த்விதீயேந—இரண்டாவது, பகவானுடைய ஸ்வரூபம் ப்ரஸ்தாவிக்கப்படுகின்றது. அது, எவ்வித ஹேய ஸம்பந்தமுமில்லாத கேவல ஆநந்த ஸ்வரூபம்; ஆகையால் மற்ற எல்லா வஸ்துக்களைக் காட்டிலும் அத்யந்த விலக்ஷணம், கணக்கற்ற கல்யாண குணங்களுக்கெல்லாம் இருப்பிடம், ஸமஸ்த சேதநாசேதந வஸ்துக்களெல்லாவற்றையும் அது தனது ஸங்கல்பத்தால் நியமித்துக்கொண்டிருக்கிறது, ஆகையால் எல்லாவற்றுக்கும் அது ஆத்மாவாகின்றது.

உபாஸநம்—இப்படி ஜீவாத்ம பரமாத்ம ஸ்வரூபங்கள் இரண்டையும் ப்ரஸ்தாவித்துவிட்டு, இப்பொழுது ஜீவாத்மாவுக்குப் பரமாத்ம ப்ராப்தி எப்படிக் கிடைக்கும் என்பதை ப்ரஸ்தாவிக்கிறார். பகவானை உபாஸிப்பதே அதற்கு உபாயம். கீழ் ‘பகவத் ப்ரபத்தி ஒன்றாலேயே ஸம்ஸார மோக்ஷம் ஸாதிக்கத் தகுந்தது’ என்று சொல்லிவிட்டு, இவ்விடத்தில் பகவதுபாஸதியை உபாயமாகச் சொல்வதன் கருத்து, ‘பரமாத்ம ப்ராப்திக்கு பகவதுபாஸநம் உபாயம், அந்த உபாஸநத்திற்கு ப்ரபத்தி அங்கம்’ என்பதுதான். ‘ப்ரஹ்மவிதாப்நோதி பரம்’ என்னும் வாக்யத்திலுள்ள ‘வேதந’ சப்தத்திற்கு ‘ஜ்ஞாநம்’ என்று பொருள் கொண்டு மித்யாவாதிகள் செய்த சங்கைக்கு, ‘வேதநம்’ என்பதற்கு ‘உபாஸநம்’ என்பது பொருளே தவிர ‘கேவல ஜ்ஞாநம்’ பொருள் ஆகமாட்டாது என்பது தான் ஸமாதாநம். அதுவே இவ்விடத்தில் ஸூசிக்கப்படுகின்றது

யதோக்தம்—கீழ்ச் சொல்லப்பட்டுள்ள விஷயங்களுக்கெல்லாம் க்ரமப்படி ப்ரமாணங்கள் சொல்லப்படுகின்றன. முதலில், “நிர்வாணமய ஏவாயம்” இத்யாதி

“நிர்வாணமய ஏவாயமாத்மா ஜ்ஞானமயோऽமல: ।
து:காஜ்ஞானமலா தர்மா: ப்ரக்ருதேஸ்தே ந சாத்மந: ॥”

இதி । ப்ரக்ருதிஸம்ஸர்க்ககர்மமூலத்வாந்நாத்மஸ்வரூபப்ரயுக்தா ஏதே

---

அவனை அடைவதற்கு உபாய மென்று ப்ரதிபாதிக்கின்றன'. “நிர்வாணமய:” என்று ஆரம்பிக்கும் வாக்யம், ஆத்மா வென்னும் வஸ்து கேவலம் ஆநந்தமயம் ஜ்ஞான மயம் நிர்மல மென்றும், துக்கம் அஜ்ஞானம் மலம் இவை யெல்லாம் ப்ரக்ருதியின் தர்மங் களே தவிர ஆத்மாவின் தர்மங்களல்ல வென்றும் சொல்லுகின்றது அதாவது: துக்கம் முதலியவை, ப்ரக்ருதியின் ஸம்பந்தத்தால் ஏற்படும் கர்மங்களைக் காரணமாக உடையவை யாதலால் அவை ஆத்ம ஸ்வரூபத்திற்கு உரியவையல்ல என்று சொன்னதாயிற்று.

---

வாக்யம் ‘ஆத்ம வஸ்துக்களெல்லாம் ஜ்ஞான மொன்றையே ஆகாரமாக உடையவை' என்பதற்கு ப்ரமாணம் ‘வித்யாவிநயஸம்பந்நே' இத்யாதியானது, ‘சரீரத்தில் பேதம் இருந்தபோதிலும் உபாதி வியுக்தங்களான ஆத்மாக்களுக்குப் பரஸ்பரம் எவ்வித பேத மும் இல்லை' என்பதற்கு ப்ரமாணம். “இஹைவ தைர் ஜித: ஸர்க்க:” என்பது, இந்த அர்த்தத்தையே ஸ்பஷ்டமாகச் சொல்லுகின்றது. “தைவீ ஹ்யேஷா” என்பது, ‘ப்ரபத்தியின்றிக்கு மோக்ஷம் ஸித்திக்க மாட்டாது' என்பதற்கு ப்ரமாணம். ‘மயா ததம்' என்பது ‘ப்ரபஞ்சம் முழுவதும் பகவானாலேயே நியமிக்கப்பட்டு வருகின் றது' என்பதைச் சொல்லுகின்றது; ‘ந ச மத்ஸ்தானி பூதானி' என்னும் வாக்யத்தால் ‘பகவானுடைய ஸர்வாத்மகத்வம் மித்யை' என்று சொல்லப்படுகின்றதோ என்று உதிக் கும் சங்கையும் இந்த ஸந்தர்ப்பத்தில் பரிஹரிக்கப் படுகின்றது.

‘நிர்வாணமய: ...... .'—இதன் பொருள் ‘ஆத்ம வஸ்துவானது கேவலம் ஆநந்த ஸ்வரூபம், கேவலம் ஜ்ஞானமே ஆகையால் அதற்கு எவ்வித மலமும் இல்லை; துக் கம் அஜ்ஞானம் இவையாகிற மலங்களை உடைய தர்மங்கள் ப்ரக்ருதியின் தர்மங்களே தவிர ஆத்மாவைச் சேர்ந்தவையல்ல' என்பது தான் இந்த ச்லோகத்தில் ‘மலம்'என்னும் சப்தம் ‘ராகம்' ‘த்வேஷம்' இவைகளைக் குறிக்கின்றன. இவைகளைத்தான் ‘துக்கம்' ‘அஜ்ஞா னம்' என்று இவ்விடத்தில் சொல்லுகிறார். ‘இந்தத் துக்காஜ்ஞானங்கள் எப்படி அசேதன மான ப்ரக்ருதியின் தர்மங்களாகும்? சேதன வஸ்துவுக்கன்றோ அவைகள் உண்டாவன கள?' என்று ஒரு சங்கை ஜனிக்கலாம். இந்தச் சங்கையை “ப்ரக்ருதிஸம்ஸர்க்க” இத்யாதியான வாக்யத்தால் பரிஹரிக்கிறார் ‘ப்ரக்ருதியின் ஸம்பந்தம் எப்பொழுது ஆத் மாவுக்கு இருக்கின்றதோ அப்பொழுது மாத்ரம் இந்தத் துக்கம் முதலானவை ஆத்மா வுக்கு ஏற்படுகின்றன, ப்ரக்ருதி ஸம்பந்தம் விலகினால் அவைகளும் விலகி விடுகின்றன' என்பதுதான் பரிஹாரம். அதாவது: துக்கம் முதலானவை ஆத்மாவுக்கே நேரக்கூடியவை

ஜந்தயஃ। ப்ராப்தாப்ராப்தவிவேகேந ப்ரக்ருதேரேவ யோக்யா ஜந்த்வர்த்தஃ।

"வித்யாவிநயஸம்பந்நே ப்ராஹ்மணே கவி ஹஸ்திநி।
ஶுநி சைவ ஶ்வபாகே ச பண்டிதாஃ ஸமதர்ஶிநஃ॥"

[கீ. 5–18]

---

ப்ரக்ருதியின் ஸம்பந்தம் ஏற்பட்டால் து:க்கம் முதலியவை ஏற்படும், அது இராவிட்டால் இவையுமில்லை யாகையால் இவைகள் ப்ரக்ருதியின் தர்மங்களென்று சொல்லப்பட்டிருக்கின்றன.

"வித்யாவிநயஸம்பந்நே" இத்யாதி ப்ராமாண வாக்யம், 'உபாதியின் ஸம்பந்தமற்றிருக்கும் ஆத்மாவின் சுத்த ஸ்வரூபம் என்பது ஸகல ஆத்ம வஸ்துக்களுக்கும் ஸமம்' என்பதைச் சொல்லுகின்றது. தேவ ரூபமாகவும் திர்யக் ரூபமாகவும் மநுஷ்ய ரூபமாகவும் ஸ்தாவர ரூபமாகவும் இருக்கும் ப்ரக்ருதியுடன் கலந்து நிற்கும் ஆத்மாவின் சுத்த ஸ்வரூபத்தை விவேசித்து அறியக்கூடிய புத்தியை உடையவர்களே இவ்விடத்தில் 'பண்டிதர்கள்' என்று சொல்லப்படுகிறார்கள். அப்படி அந்தந்த ப்ரக்ருதி விசேஷத்தைக்

---

என்பது உண்மையானாலும், அவை ஆத்ம ஸ்வரூப ப்ரயுக்தங்களல்லவென்று சொன்னதாயிற்று. துக்காதிகள் ப்ரக்ருதியின் தர்மங்களாக இருந்தால் என்ன பலம் உண்டாகுமோ, அதுவே அவை ப்ரக்ருதி தர்மங்களாக இராமலிருக்கையிலும் உண்டாகிறபடியால் 'அவைகள் ப்ரக்ருதி தர்மங்கள்' என்று சொல்லப்படுகின்றன என்பது அபிப்ராயம். ப்ராப்தாப்ராப்தவிவேகேந—'ப்ரக்ருதி ஸம்பந்தம் இருந்தால் துக்காதிகள் ப்ராப்தங்களாகின்றன; அது இராவிட்டால் இவை அப்ராப்தங்களே' என்னும் விவேகத்தால்

'வித்யாவிநய...... ...' இதன் பொருள். 'ஜ்ஞானம் சம தமாதிகள் இவைகளுடன் கூடிய ப்ராஹ்மணன், கேவலம் ஜந்மத்தால் மாத்ரம் ப்ராஹ்மணயத்தை உடைய ப்ராஹ்மணன், இவர்கள் இருவரிடத்திலும் ஜ்ஞான ப்ரயுக்தமான வைஷம்யம் இருக்கையிலும், அந்த வைஷம்யம் கேவலம் உபாதியால் ஏற்படுகின்றதே தவிர அது ஆத்ம ஸ்வரூபத்தை ஸ்பர்சிக்கவில்லை என்பதை ஆத்ம ஸ்வரூபத்தின் உண்மையை அறிந்தவர்கள் அறிவார்கள்; அதே மாதிரி பசுவுக்கும் யானைக்குமுள்ள ஆகார ப்ரயுக்த வைஷம்யமும், நாய்க்கும் நாய் மாம்ஸத்தைப் புஜிக்கும் சவபாகர்களுக்குமுள்ள வ்ருத்தி ப்ரயுக்த வைஷம்யமும் ப்ரக்ருதி ஸம்பந்தத்தால் ஏற்படுகின்றன என்பது அவர்களுக்கு விளங்கும்' இதனால் உபாதி வியுக்த ஆத்ம ஸ்வரூபம் ஸமமே என்பது சொல்லப்பட்டது. சிலர், இந்த ச்லோகத்தால் சரீர கதமான வைஷம்யமே நிஷேதிக்கப்படுகின்

இதி । தேவதிர்யங்மநுஷ்யஸ்தாவரரூபப்ரக்ருதிஸம்ஸ்ருஷ்டஸ்யாத்மந: ஸ்வரூபவிவேசநீ புத்திர் யேஷாம் தே 'பண்டிதா:' । தத்தத்ப்ரக்ருதிவிசேஷவியுக்தாத்மயாதாத்ம்யஜ்ஞாநவந்த: தத்ர தத்ர அத்யந்தவிஷமாகாரே வர்தமாநாநாம் ஆத்மநாம் ஜ்ஞாநைகாகாரதயா ஸாம்யம் பச்யந்தீதி 'ஸமதர்சிந:' இத்யுக்தம் । ததிதமாஹ

"இஹைவ தைர்ஜித: ஸர்கோ யேஷாம் ஸாம்யே ஸ்திதம் மந: ।

---

காட்டிலும் விலக்ஷணமான ஆத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்தவர்கள், 'ஆத்ம வஸ்துக்கள் அதிமாத்ரம் விஷமமான ஆகாரத்தையுடைய ப்ரக்ருதி விசேஷத்துடன் கலந்து இருந்தபோதிலும், அவைகளெல்லாம் ஒரே விதமான ஆகாரத்தை உடையவைகளே' என்பதை நன்றாக அறிவார்களன்றோ? இந்த அர்த்தத்தைத் தான் இவ்விடத்திலுள்ள 'ஸமதர்சிந:' என்னும் பதம் சொல்லுகின்றது. "இஹைவ தைர்ஜித:" இத்யாதியான வாக்யம் இதை ஸ்பஷ்டமாக விளக்குகின்றது. 'நிர்தோஷம்' என்ப

---

றது என்று அபிப்ராயப்படுவார்கள். அது ப்ரத்யக்ஷத்திற்கு விருத்தம். சரீர கதமான வைஷம்யமே இவ்விடத்தில் ப்ரதிபாதிக்கப்படுகின்றது, ஆனால் அந்த வைஷம்யம் உபாதியால் ஏற்படுகின்றது என்பதும் அது உபாதி வியுக்த ஆத்ம ஸ்வரூபத்தை ஸ்பர்சிக்கவில்லை என்பதுமே இவ்விடத்தில் விவக்ஷிதம். இது இவ்விடத்தில் செய்யப்பட்டுள்ள 'பண்டித' 'ஸமதர்சி' சப்தங்களுடைய வ்யாக்யானத்திலிருந்து விளங்கும்.

" இஹைவ.........''—கீழ்க் கூறப்பட்டுள்ள ''வித்யாவிநய'' இத்யாதியான ச்லோகத்திற்கு அடுத்து வரும் ச்லோகம் இது 'ஸமதர்சிந:' என்பதால் சொல்லப்படும் ஸாம்யமானது உபாதியால் விடப்பட்ட ஆத்ம ஸ்வரூப விஷயமே என்னும் அர்த்தத்தை இது ஸ்பஷ்டமாக விளக்குகின்றது. இதன் பொருள் —'எந்த முமுக்ஷுக்கள், நிருபாதிக ஆத்ம ஸ்வரூபமானது ஜ்ஞாநைகாகாரமாயிருக்கிறபடியால் எவ்வித வைஷம்யமுமற்றது என்பதை நன்கு உணர்கிறார்களோ, அவர்கள் இன்னும் மோக்ஷத்தை அடையா விட்டாலும் முக்த ப்ராயர்களென்றே சொல்லப்படவேண்டும். ப்ரக்ருதி ஸம்ஸர்கமாகிற தோஷத்தால் விடப்பட்டுள்ள ஆத்ம வஸ்து எவ்வித வைஷம்யமுமற்றதாதலால் அது ப்ரஹ்மமென்றே சொல்லப்படக்கூடும், அப்படிப்பட்ட ப்ரஹ்மத்திலன்றோ அவர்கள் இருக்கிறார்கள்? ஆகையால் அவர்கள் முக்த ப்ராயர்களே என்பதுதான். 'ப்ரக்ருதி விகாரமாகிற தேஹாதிகளுடன் ஸம்பந்தப்பட்டிருப்பதானது தோஷம்; அந்தத் தோஷமில்லாமல் இருக்கும் ஆத்மாக்களெல்லாம் ஸமமானவைகளே' என்னும் அர்த்தம் 'நிர்தோஷம் ஹி ஸமம்' என்பதால் இந்த ச்லோகத்தில் சொல்லப்படுகிறபடியால்,

நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம தஸ்மாத் ப்ரஹ்மணி தே ஸ்திதா: ॥ ”

[கீ 5-19]

இதி । 'நிர்தோஷம்' — தேவாதிப்ரக்ருதிவிஶேஷஸம்ஸர்கரூபதோஷரஹிதம்; ஸ்வரூபேணாவஸ்திதம் ஸர்வமாத்மவஸ்து நிர்வாணரூபஜ்ஞாநைகாகாரதயா ஸமமித்யர்த: । ததேஷாம் ஸர்வேஷாமாத்மநாம் பகவச்சேஷைகரஸதா தந்நியாம்யதா ததேகாதாரதா ச தத்தச்சப்தை: ஸாமாநாதிகரண்யேந ச ஶ்ருதிஸ்ம்ருதீதிஹாஸபுராணேஷு வ்யவஹ்ருதா இதி ஸர்வமேவோபபந்நம் ।

---

தற்குத் 'தேவ'ரூபம் முதலான ப்ரக்ருதி விசேஷத்துடன் சேர்ந்திருப்பதாகிற தோஷமற்றிருக்கும் என்பது பொருள். 'சுத்த ஸ்வரூபத்துடன் இருக்கும் ஆத்ம வஸ்துக்களெல்லாம் (அதாவது ப்ரக்ருதி ஸம்பந்தமற்றிருக்கும் ஆத்ம வஸ்துக்களெல்லாம்) ஆனந்த ரூபமான ஒரே ஆகாரத்தை உடையவை, ஆகையால் அவையெல்லாம் ஸமமே' என்பது குறிப்பு. தவிரவும், ச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்களெல்லாம் பகவானுக்கும் அவனுடைய சரீரமாயுள்ள மற்றைப் பதார்த்தங்களுக்குமுள்ள ஸாமாநாதிகரண்யத்தை ஆதாரமாகக் கொண்டு அவனை அந்தப் பதார்த்தங்களைச் சொல்லும் சப்தங்களாலேயே வ்யவஹரிக்கின்றனவென்றும், அப்படி அவை வ்யவஹரிப்பதே 'அந்த ஆத்ம வஸ்துக்களெல்லாம் பகவானுக்குச் சேஷமாயிருப்பதையே ரஸமாக உடைத்தாயிருக்கின்றன, பகவானாலேயே நியமிக்கப்படுகின்றன; அவனையே ஆதாரமாக உடைத்தாயிருக்கின்றன' என்பதை நன்கு

---

இது ப்ரக்ருத விஷயத்திற்கு ஸ்பஷ்டமான ப்ரமாணமாக இவ்விடத்தில் கூறப்படுகின்றது. மோக்ஷமடையாமல் முமுக்ஷுதசையிலேயே இருக்கும் ஒருவனை, எவ்விதத்தில் ஸம்ஸாரத்தை ஜயித்துவிட்டான் (ஸர்கோ ஜித:) என்று சொல்லக்கூடும்? என்றால், அப்படிச் சொல்வதன் தாத்பர்யம் 'அவன் முக்தப்ராயன்' என்பது தான், 'அவன் முக்தனே' என்பதன்று என்று ஸமாதானம் சொல்ல வேண்டும். முன் ச்லோகத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஸமதர்சிகளின் ப்ரசம்ஸையே இந்த ச்லோகத்தின் தாத்பர்யம்.

ததேஷாம் ஸர்வேஷாம் — இது வரையில் ஆத்மா ஜ்ஞாநைகாகாரம் என்பதற்கும், அதன் உபாதி வியுக்த ஸ்வரூபம் எல்லா ஆத்மாக்களுக்கும் ஸமம் என்பதற்கும் ப்ரமாணங்கள் சொல்லப்பட்டன. இப்பொழுது, க்ரமப்படி, 'ஆத்மாக்களெல்லாம் பகவானை அந்தராத்மாவாக உடைத்தாயிருக்கின்றன' என்பதற்கு ப்ரமாணம் உபபாதிக்கப்படவேண்டும். இந்த உபபாதநம் ஏற்கனவே செய்யப்பட்டிருக்கிறபடியால், இங்கு அது சொல்லப்படவில்லை [ஸத் வித்யையின் ஸவிசேஷ பரத்வத்தைச் சொல்லி முடிக்கையில் எல்லாம் ப்ரஹ்மாத்மகம் என்பது விவரிக்கப்பட்டிருக்கின்றது. 53-65-ம் பக்கங்களைப் பார்க்க ]

“𑌦𑍈𑌵𑍀 𑌹𑍍𑌯𑍇𑌷𑌾 𑌗𑍁𑌣𑌮𑌯𑍀 𑌮𑌮 𑌮𑌾𑌯𑌾 𑌦𑍁𑌰𑌤𑍍𑌯𑌯𑌾 ।
𑌮𑌾𑌮𑍇𑌵 𑌯𑍇 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌮𑌾𑌯𑌾𑌮𑍇𑌤𑌾𑌂 𑌤𑌰𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 ॥”

[𑌭 𑌗𑍀. 7-14.]

𑌇𑌤𑌿 । 𑌦𑍇𑌵𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌰𑍂𑌪𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌰𑌗𑍁𑌣𑌮𑌯𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌰𑍂𑌪𑌾𑌤𑍍 𑌸𑌂𑌸𑌾𑌰𑌾𑌨𑍍𑌮𑍋𑌕𑍍𑌷𑍋 𑌭𑌗𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌪𑌤𑍍𑌤𑌿𑌮𑌨𑍍𑌤𑌰𑍇𑌣 𑌨𑍋𑌪𑌪𑌦𑍍𑌯𑌤 𑌇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌭𑌵𑌤𑌿,

---

விளக்குகின்றதென்றும் முன்பே சொல்லியிருக்கிறோம். “𑌦𑍈𑌵𑍀 𑌹𑍍𑌯𑍇𑌷𑌾 𑌗𑍁𑌣𑌮𑌯𑍀” இத்யாதியான பகவத் கீதா வாக்யமும், “𑌨𑌾𑌨𑍍𑌯𑌃 𑌪𑌨𑍍𑌥𑌾𑌃” இத்யாதியான ச்ருதி வாக்யங்களும், கர்மத்தால் ஏற்படும் விசித்ரமான குணமய ப்ரக்ருதி ஸம்பந்தமாகிற ஸம்ஸாரத்திலிருந்து ஆத்மாக்கள் மோக்ஷம் பெறுவது, அந்தப் பகவானை ப்ரபத்தி செய்வதைத் தவிர்த்து வேறொன்றாலும் ஸம்பவிக்கமாட்டாது என்பதைச் சொல்லு

---

“𑌦𑍈𑌵𑍀 𑌹𑍍𑌯𑍇𑌷𑌾.........”—இதன் பொருள் ‘ஸத்வ ரஜஸ் தமோ மயமாயிருக்கிற இந்த ப்ரக்ருதியானது ஸ்ருஷ்டி முதலான லீலையில் ப்ரவ்ருத்திக்கும் என்னாலேயே நிர்மிதமாயிருக்கிறபடியால் அது அநீச்வரர்களாக இருக்கும் ஒருவராலும் தாண்டக் கூடாதது. என்னைச் சரணமடைபவர்கள் மாத்ரம் அதைத் தாண்டச் சக்தராவார்கள்’, ப்ரக்ருதி என்பது அசேதந வஸ்து, அது நித்யமானது ஜீவன்களுடைய கர்மாநுகுணமாக இந்த ப்ரக்ருதி விசித்ரமான தேஹாதிகளாகப் பரிணமிக்கப்பட்டு, அவைகளின் ஸம்பந்தம் அந்த ஜீவன்களுக்கு ஸம்பவிக்கும்படி செய்யப்படுகின்றது இதுதான் ‘பகவான் ப்ரக்ருதியை நிர்மாணம் செய்கிறான்’ என்பதன் தாத்பர்யம் அப்படித் தேஹாதிகளாக நிர்மிக்கப்பட்டிருக்கும் ப்ரக்ருதியானது, பகவத் ஸ்வரூபத்தை அந்த ஜீவன்களுக்குத் தெரியவொட்டாமல் தடுப்பதையும் தனது ஸ்வரூபத்தில் போக்யதா புத்தியை உண்டுபண்ணுவதையும் தனது கார்யமாக உடைத்தாயிருக்கிறது இப்படி ப்ரக்ருதியால் மோஹிக்கப்பட்டதாய்க் கொண்டு ஜகத் முழுவதும் அளவற்ற அதிசயித ஆநந்த ஸ்வரூபமாயிருக்கும் பகவானை அறிகின்றதில்லை. இந்த மோஹம் நிவ்ருத்தமாக வேண்டுமானால் பகவானையே சரணமடையவேண்டும் இந்த ச்லோகத்திலுள்ள ‘மாயை’ என்னும் சப்தத்திற்கு ‘ப்ரக்ருதி’ என்பது பொருள் ப்ரக்ருதி, ஸத்வ ரஜஸ் தமோ குணமயமானதால் அது ‘𑌗𑍁𑌣𑌮𑌯𑍀’ என்று சொல்லப்படுகின்றது. ‘𑌮𑌾𑌯𑌾𑌂 𑌤𑌰𑌨𑍍𑌤𑌿’ [மாயையைத் தாண்டுகிறார்கள்] என்பதற்கு, ‘ப்ரக்ருதி ஸம்பந்தத்தால் ஏற்படும் மோஹத்திலிருந்து விடுவிக்கப்பட்டவர்களாய்ப் பகவானை உபாஸிக்கிறார்கள்’ என்பது தாத்பர்யம் பகவத் கீதையில் இந்த ச்லோகம் வரும் ஸ்தலம் உபாஸநா ப்ரகரணமானதால் இவ்விடத்தில் சொல்லப்படும் ப்ரபத்தி, உபாஸநத்திற்கு அங்கமாயுள்ள ப்ரபத்தியைச் சொல்லுகின்றதென்று அறிய வேண்டும்.

“ 𑌨𑌾𑌨𑍍𑌯𑌃 𑌪𑌨𑍍𑌥𑌾 𑌅𑌯𑌨𑌾𑌯 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ”

𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌭𑍍𑌯𑌃 ।

“ 𑌮𑌯𑌾 𑌤𑌤𑌮𑌿𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌜𑌗𑌦𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌨𑌾 ।
𑌮𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌨 𑌚𑌾𑌹𑌂 𑌤𑍇𑌷𑍍𑌵𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 ॥
𑌨 𑌚 𑌮𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌪𑌶𑍍𑌯 𑌮𑍇 𑌯𑍋𑌗𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ॥ ”

[𑌭. 𑌗𑍀 9-4, 5]

𑌇𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌶𑌕𑍍𑌤𑌿𑌯𑍋𑌗𑌾𑌤𑍍 𑌐𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌸𑍍𑌯𑍈𑌵 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍇𑌃 । 𑌤𑌦𑌾𑌹

---

கின்றன. “𑌮𑌯𑌾 𑌤𑌤𑌮𑌿𑌦𑌮𑍍’ இத்யாதியான வாக்யங்கள், பகவான் ஸர்வ சக்தனாயிருக்கிறபடியால் அதிமாத்ரம் ஆச்சர்யகரமான ஐச்வர்யத் தன்மையை உடைத்தாயிருக்க

---

“ 𑌨𑌾𑌨𑍍𑌯𑌃 𑌪𑌨𑍍𑌥𑌾.........”—‘பகவத் ப்ராப்திக்கு வேறு மார்க்கம் இல்லை’ இதற்கு முன் வாக்யம் ‘𑌤𑌮𑍇𑌵𑌂 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑌮𑍃𑌤 𑌇𑌹 𑌭𑌵𑌤𑌿’ [அவனை அறிகிறவனே மோக்ஷத்தை அடைகிறான்] என்று இருக்கிற படியால், இவ்விடத்தில் ‘வேறு மார்க்கம்’ என்பது ‘அவனை அறிவதைத் தவிர்த்து வேறு மார்க்கம்’ என்பதைக் குறிக்கின்றது. இந்த ச்ருதி வாக்யங்களில் சொல்லப்படும் ‘𑌵𑍇𑌦𑌨𑌮𑍍’ [அறிவது] என்பது உபாஸநத்தைக் குறிக்கின்றது, அந்த உபாஸநத்தின் நிஷ்பத்தி, ப்ரபத்தியை அபேக்ஷித்திருப்பதால், ‘ப்ரபத்தியின்றிக்கு மோக்ஷம் ஸித்திக்கமாட்டாது’ என்பதற்கு இந்த வாக்யம் ப்ரமாணமாகக் கூடும்.

‘𑌮𑌯𑌾 𑌤𑌤𑌮𑌿𑌦𑌮𑍍 ........’—ஜகத் முழுவதும் அந்தர்யாமியாயிருக்கும் பகவானால் தரிக்கப்பட்டும் நியமிக்கப்பட்டும் இருக்கின்றது என்பதற்கு இந்த வாக்யம் ப்ரமாணம். இதற்கு ப்ரமாணம் ஏற்கெனவே சொல்லப்பட்டிருக்கிறபடியால் இவ்விடத்தில் அதை உபபாதிக்கப்போகிறோமில்லை என்று சொல்லிவிட்டு, இப்பொழுது அதை உபபாதிக்க ப்ரயத்தனப்படுவதன் காரணம், இந்த ச்லோகத்தால் ப்ரக்ருத அர்த்தம் உபபாதிக்கப்படுகின்றது என்பதுடன் இது ஸம்பந்தமாக அத்வைதிகளால் செய்யப்படும் ஒரு சங்கையும் பரிஹ்ருதமாகின்றது என்பதுதான். ச்லோகத்தின் பொருள் — நான் என்னுடைய ஸ்வரூபத்தை வெளிப்படுத்தாமலே ஜகத் முழுவதிலும் அந்தர்யாமியாக இருந்து கொண்டு அதைத் தரிக்கும் பொருட்டும் நியமிக்கும் பொருட்டும் சேஷியாக வ்யாபித்திருக்கிறேன். ஆகையால் எல்லா பூதங்களுடைய ஸத்தியும் அந்தர்யாமியாக இருக்கும் என்னைச் சார்ந்தே இருக்கின்றது, என்னுடைய ஸத்தி ஒருசிறிதேனும் அவைகளைச் சார்ந்து நிற்கவில்லை. அவைகள் என்னிடத்தில் சார்ந்திருப்பதும் குடம் ஜலத்தைத் தாங்குவது போல ஸம்யோகத்தாலன்று, ஆனால் கேவலம் என்னுடைய ஸங்கல்ப மாத்ரத்தாலேயே அவைகள் தரிக்கப்படுகின்றன. நான் இச்சித்து அவைகளைத் தரிக்கிறேனே தவிர, பரதந்த்ரனாகத் தரிக்கவில்லை. இதுதான் என்னுடைய அஸாதாரண ஸ்வபாவம்’ இதனால் ‘பகவான் ஸர்வ சக்தன்; அவனுடைய ஐச்வர்யத் தன்மையும் அஸாதா

'விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்நமேகாம்சேந ஸ்திதோ ஜகத்"
இதி। அநந்தவிசித்ரமஹாஸ்வப்ரபாவம் ஜகந்நிர்மாதாம்சாம்சேநாத்மநா

---

கிறான் என்பதை விளக்குகின்றன "விஷ்டப்யாஹம்" இத்யாதியான வாக்யம் இந்த
ஆத்தத்தையே ஸ்பஷ்டமாகச் சொல்லுகின்றது இந்த வாக்யத்தின் பொருள் —' கணக்
கற்ற வைசித்ர்யத்தை உடைத்தாயிருக்கிறபடியால் மிகவும் ஆச்சர்யகரமான இந்த

---

ரணமே' என்பது விவரிக்கப்பட்டதாகின்றது ஸ்ரீ சங்கராசார்யர் செய்யும் அர்த்தம்
வேறு 'பகவான் மூர்த்தமான வஸ்து அன்று அவனுக்கு மூர்த்தங்களான வஸ்துக்களு
டன் ஸம்ஸர்க்கம் சொல்வது உபபந்நமாகமாட்டாது ஆகையால் இவ்விடத்தில்
'மத்ஸ்தாநி ஸர்வபூதாநி' [ஸர்வ பூதங்களும் என்னுல் தரிக்கப்பட்டிருக்கின்றன]
என்று தேஹாதி ஸங்காதம் விபஜித்துச் சொல்லப்பட்டிருப்பதை, லோக புத்தியை
அநுஸரித்து வ்யபதேசம் செய்ததாக எடுத்துக்கொள்ள வேண்டும் ந ச மத்ஸ்தாநி
பூதாநி [பூதங்கள் என்னிடத்தில் இல்லை] என்னும் வாக்யத்தால் அந்த வ்யபதேசம்
நிஷேதிக்கப் படுகின்றதன்றோ?" என்பதுதான் அவர் சொல்லும் அர்த்தம் இப்படி
முதலில் ஒன்றைச் சொல்லிவிட்டு உடனே அதை நிஷேதிக்கிறார் என்று சொல்வது
யுக்தியுக்தமாக மாட்டாதாகையால் 'ந ச மத்ஸ்தாநி பூதாநி' என்பது, ஜகத்திற்
கும் பகவானுக்குமுள்ள தார்ய தாரக பாவம், லோகத்தில் மூர்த்தங்களான வஸ்துக்
களில் தென்படும் தார்ய தாரக பாவம் போன்றதன்று' என்னும் அர்த்தத்தையே
சொல்லுகின்றது என்று விவரிப்பதே ஸங்கதமாகும் என்பது ஸ்ரீ பாஷ்யகாரருடைய
திருவுள்ளம் இப்படி அர்த்தம் சொல்லும் பக்ஷத்தில் பின் வரும் "பச்ய மே யோக
மைச்வரம்" [என்னுடைய அஸாதாரணமான ஈச்வரத்தன்மையைப் பார்] என்று
சொல்வதும் பொருந்தும் எவ்வித ஆயாஸமுமில்லாமல் கேவலம் ஸங்கல்ப மாத்ரத்தா
லன்றோ பகவான் ப்ரபஞ்சத்தைத் தரிக்கிறான்? இது அவனுக்கே அஸாதாரணம்
இந்த அர்த்தத்திற்கு மற்றுமொரு ஸ்பஷ்டமான ப்ரமாணம் சொல்லுகின்றார்

"விஷ்டப்யாஹம்" இதன் பொருள் — இந்த ஜகத் முழுவதும்
என்னுடைய ஸங்கல்பத்தை அதிக்ரமித்து வாத்திக்காமலிருக்கும்படி நான் என்னு
டைய மஹிமையின் ஒரு லேசத்தால் அதை வசீகரித்துக்கொண்டு அதிஷ்டாநம் செய்து
வருகிறேன்' 'ஏகாம்சேந' என்பதற்கு 'ஒரு அம்சத்தால்' என்பது பொருளன்று
பகவான் எவ்விடத்திலும் பரிபூர்ணன் ஆகையால் 'அவனுடைய நியமந ஸாமர்த்யத்
தின் ஒரு லேசத்தால்' என்பதே பொருள் இப்படி. 'ந ச மத்ஸ்தாநி பூதாநி'
என்னும் வாக்யம் மாயாவாத பக்ஷத்திற்கு ஒரு கால் அநுகுணமாகுமோ என்னும்
சங்கை பரிஹரிக்கப்பட்டது

ஒுவிஶ்ய ஸவ-ிம் உத்ஸங்கூஷ்ந விஷ்ஷ்யாநெந ரூபெணாநநஜஹா விஹ-ூதிரவரிஜெதாஜாரமணஸாமெரா நிரதிஶயாஶ்சய-ிஷூத ஃ ஷுதாஸஹஜித்யுயூ ஃ।

தஜிஹஜாஹ

" ஸாகொக ஸதி நாநாகும் நாநாகெ ஸதி லைகதா ।

---

பரபஞசம முழுவதிலும நான எனனுடைய மஹிமையின லேசததால ஆதமாவாக உட்புகுநது ஸகலததையும எனனுடைய ஸஙகலப மாதரததால தாஙகிககொணடு, அநத பரபஞசததின ரூபமான கணககறற உதகருஷட விபூதிகளை உடையவனுயும், அளவறற உதாரகுண விசேஷஙகளுடனும, எலலாருககும எலலையிலலாத ஆசசாயகரமான வஸதுவாகவும நிறகிறேன ' எனபதுதான

தஜிஹஜாஹ ' இபபடி ஸாவ சகதி யோகததால தனது ஸஙகலப எகதேசததாலேயே பரபஞசம முழுவதையும தரிககக கூடிய ஆசசாயகரமான ஈசவரத தனமையை உடையவன பகவான ' எனனும ஆததததையே " ஸாகொக ஸதி "

---

ஜீவாதம ஸவரூபம, பகவத ஸவரூபம பகவத பராபதிககு ஸாதநமாயுளள பகதி ஆக இமமூனறு விஷயஙகளையும பரஸதாவிததது. பிறகு அவைகளுககெலலாம கரமபபடி சாஸதர பரமாணஙகள இது வரை கூறபபடடன கடைசியாகக கூறபபடட பரமாண வாகயததில " நவஜிஶாநி ஹூதாநி வஶ்ய ஜெபொமஜெஶ்வரஃ " எனனும வாகயததை விவரிககுமபொழுது, 'பகவான ஸாவ சகதிகளுடனும கூடியவ ஞனதால பரபஞசம முழுவதையும தனது ஸஙகலப லேசததால மாதரம நிலைநிறுததுவதறகு அவன சகதன' எனனும விஷயம பரஸதுதமாயிறறு ' அபபடி இவன ஆசசாய பூதன ' எனபதறகு இவ்விடததில வேறு பரமாணஙகளைக கூறுகிருா

" ஸாகொக " இதன பொருள —'பகவான ஒனருக இருககையிலும பஹுவாக இருககிருன, பஹுவாக இருககையிலும ஒனருகவே இருககிருன அவனுடைய ரூபம சிநதிககத தகாதது, அதை உளளபடி அறிவதறகு யாா சகதராவாா ?' ஒனருகவும பஹுவாகவும இருபபது விருததமான தாமஙகள ஆகையால அநத உட்கருதது வெளியில தோனறும ஆததமாக மாடடாது " ப்ரஶாஸிதாரெகந ஸாக ஸாவ ஸநு " எனனும கரநத வாகயம, " ஸாகொக ஸதி " எனனும மூல வாகயததையும, " விவிதெ ஹஜெதெ " எனபது " நாநாகஃ " எனபதை யும, " ஸாவம் ஷுஷாஷாம்ஶெந கஸ்ஷுதாzஷி ஸநு " எனபது " நாநாகெஸதி " எனபதையும, " கநயிக கஷ்திஷ்ஜெத " எனபது

விலக்ஷணம் ப்ரஹ்மணோ ரூபம் ஜ்ஞேயமேவ ததாஹ்ருதி ॥ ”
இதி। ப்ரஸாஸித்ருத்வமேகமேவ வஸ்து விசித்ரவிவிதஸ்வபாவஞானாத்

---

இத்யாதியான வாக்யமும் சொல்லுகின்றது ஸகல சேதநாசேதந வஸ்துக்களும் பகவானாலேயே நியமிக்கப்பட்டு வருகிறபடியால், அப்படி நியமிக்கும் சக்தியை உடைய

---

“ஸகதா” என்பதையும், “ப்ரஹ்மவ்யதிரிக்தஸ்ய ந யதோக்தத்வயோஹ:” என்பது “ஸுவிதந்த்ரம் ஸஹதே” என்பதையும் விளக்குகின்றன இவற்றின் தாத்பர்யம் என்ன வென்றால்—ஸகல சேதநாசேதநங்களுக்கும் ஈச்வரன் நியமேந தாரகன், நியாமகன் சேஷி ஆகையால் அவனே ஆத்மாவென்றும் சேதநாசேதநங்களை அவனுடைய சரீரமென்றும் சொல்லுவார்கள் இப்படி ஈச்வரன் ப்ரகாரியாகவும் ப்ரபஞ்சம் ப்ரகாரமாகவும் இருக்கிறபடியால் ‘ஈச்வரன் ஒருவனே’ என்று சொல்லும்பொழுது ‘ப்ரகாரி ஒன்றே’ என்பது சொல்லப்படுகிறது என்றும், ‘அவன் பஹு’ என்று சொல்லும்பொழுது ‘ப்ரகாரங்கள் பல’ என்பது சொல்லப்படுகிறது என்றும் நாம் அர்த்தம் கொள்ள வேண்டும் என்பதுதான் இதனால் ‘ஸகமேவ ஸதி நாநாகவ:’ [ஒன்றாக இருக்கையிலும் பஹுவாக இருக்கிறான்] என்பது வ்யக்தம் ‘நாநாசேவ ஸதி ஏகதா’ [பஹுவாக இருக்கையிலும் ஒன்றாகவே இருக்கிறான்] என்பதற்கும் அதே கருத்தைச் சொல்லும் பக்ஷத்தில், இந்த இரண்டாவது வாக்யத்திற்கு ப்ரயோஜனம் இராமற் போய் விடுமாதலால் வேறு கருத்து சொல்லவேண்டும் அது என்ன வென்றால் ‘முதலில் லீலா விபூதியில் தென்படும் வைசித்ர்யத்தைப் பற்றி ப்ரஸ்தாவித்து ப்ரகாரங்களின் நாநாத்வம் சொல்லப்பட்டது; இந்த இரண்டாவது வாக்யத்தில், லீலா விபூதியில் ப்ரகார பேதங்களால் அவன் பஹுவாகத் தோன்றுகையிலும், அத்யாச்சர்யமான நித்ய விபூதியின் யோகம் அவனுக்கு இருப்பதால் அவன் ஒப்பு உயர்வு அற்றவனென்றும் ஆகையால் அவன் ஒருவனே என்றும் பொருள் சொல்லப்படுகின்றது என்பது தான் இந்த நித்ய விபூதி யோகத்தைக் குறிக்கும் பொருட்டே “ஸநவயி ஸாதிஸய ஸ்ரூதிவிஷய:” என்னும் விசேஷணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன

“விலக்ஷணம் ப்ரஹ்மணோ ரூபம்”—பரஹ்மம் மற்றை வஸ்துக்களைப் போன்றதன்று, அது விஸஜாதீயமானது ஆகையால் இதர வஸ்துக்களுக்கு இருக்கும் தாமங்களைக் காட்டிலும் விஜாதீயங்களாகவே அதன் தாமங்கள் இருத்தல் வேண்டும் ஆகையால் ஸகல சக்திகளும் ஸகல ஸ்வபாவங்களும் ஸகல ரூபங்களும் பரஹ்மத்தினிடம் இருக்கக்கூடும் ‘பரஸ்பரம் விருத்தங்களாயுள்ள தாமங்கள் எவ்விதம் ஒரே வஸ்துவினிடத்தில் இருக்கக்கூடும்” என்று நாம் பரஹ்மத்தின் விஷயத்தில் சிந்திப்பது யுக்தமாகமாட்டாது இது தான் ‘விலக்ஷணம்’ என்பதன் கருத்து

தயா ப்ரசாஸித்ருத்வேந தத்தச்சரீரதயா விசித்ரப்ரகாரோ விசித்ரம் கல்ப் காரயந் நாநாரூபேண ஸ்திதோ வர்த்ததே । ஸர்வா ஸ்வஸ்வாவஸ்தாஸு ஸர்வஶப்தாபிதேயதயா ஸர்வ நாநாரூபம் ஜகத்தத்தயா ப்ரசாஸ்ய விஷ்ணு நாநாநேக நாதஸ்ஸ்வேதரஸ்ய அநந்யாதிகாதிஶயாஸங்க்யேய கல்யாண குண கண: ஸர்வேஶ்வரேஶ்வர: பரப்ரஹ்மபூத: புருஷோத்தமோ நாராயணோ

---

ப்ரகாரி ஒருவனே. அப்படி அவன் ஒருவனுக்கு இருக்கையிலும், விசித்ரங்களாயுள்ள சேதநாசேதநங்களெல்லாவற்றினுள்ளும் அவன் அந்தராத்மாவாகப் ப்ரவேசித்து, அந்தச் சேதநாசேதநங்களைப் பற்பல விதமான காரியங்களில் நியமித்துக்கொண்டு, அவையெல்லாவற்றையும் தனது சரீரமாக உடைத்தாயிருக்கிறபடியால் அவன் கணக்கற்ற ப்ரகாரங்களுடன் கூடினவனாகிறான், ஆகையால் அவன் பல ரூபங்களை அடைகிறான் என்றும் சொல்லக்கூடும். இப்படி தனது ஸங்கல்ப லேசத்தால், ஸாவகாசமாயும் அதி விசித்ரமாயுமிருக்கும் இந்த லீலா விபூதி முழுவதிலும் அந்தராத்மாவாகப் ப்ரவேசித்து, அந்தக் காரணத்தால் அநேக ப்ரகாரங்களுடன் கூடினவனாக

---

ப்ரசாஸித்ருத்வேந:—சேதநாசேதந வஸ்துக்களுக்கெல்லாம் பகவான் நியாமகன், அவையெல்லாம் பகவானுக்கு நியாமயங்கள், ஆகையால் அவை அவனுக்குச் சரீரம், அவைகளுக்கு அவன் சரீரி, அதாவது அவன் ப்ரகாரி, மற்றவையெல்லாம் அவனுக்கு ப்ரகாரங்கள் என்று சொன்னதாயிற்று. ஆகையால் அந்த ப்ரகாரி ஒருவனே.

தத்தச்சரீரதயா விசித்ர ப்ரகார:—அவ்வவைகளைச் சரீரமாக உடைத்தாயிருக்கிறபடியால் அவன் விசித்ரங்களான ப்ரகாரங்களை உடையவனாகிறான். 'விசித்ரம் கல்ப் காரயந்' என்பதால் அவன் நியந்தா என்று சொல்லப்படுகிறது. அவனால் நியமிக்கப்படுகிறபடியால் அவையெல்லாம் அவனுக்குச் சரீரம் என்பது உபபாதிக்கப்பட்டதாகின்றது. நாநாரூபேண ஸ்திதோ—விசித்ரங்களான ப்ரகாரங்களை உடைத்தாயிருக்கும் தன்மையே இவ்விடத்தில் 'அவன் பஹுவாக இருக்கிறான்' என்பதால் சொல்லப்படுகிறது.

"அநந்யாதிகாதிஶய நிரதிஶயாஸங்க்யேய:"—இது 'அவன் நித்ய விபூதி நாதனாகிறபடியால் அவனுக்கு ஸமனாகவாவது அவனைக் காட்டிலும் அதிகனாகவாவது ஒருவரும் இல்லை' என்பதைக் குறிக்கின்றது. 'நீலதோயத' இத்யாதியான வாக்யம், 'அவனுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தைப் பார்த்தாலும் அவன் ஒப்பு உயர்வு அற்றவன்' என்பதைச் சொல்லுகின்றது.

நிரதிஶயாஶ்சர்யரூபதோ நீலதோயதஸங்காஶ: புண்டரீகதளாமலாயதேக்ஷண: ஸஹஸ்ராம்ஶுஸஹஸ்ரகிரண: பரமே வ்யோம்நி “யோ வேத நிஹிதம் குஹாயாம் பரமே வ்யோமந்” “ததக்ஷரே பரமே வ்யோமந்” இத்யாதிஶ்ருதிஸித்த ஏக ஏவாவதிஷ்டதே। ப்ரஹ்மவ்யதிரிக்தஸ்ய கஸ்யசிதபி வஸ்துந நைகஸ்வபாவஸ்யைககார்யஶக்தியுக்தஸ்யைகரூபஸ்ய ரூபாந்தரயோக: ஸ்வபாவாந்தரயோக: ஶக்த்யந்தரயோகஶ்ச ந கடதே, தஸ்யைவ தஸ்ய பரப்ரஹ்மண: ஸர்வவஸ்துவிஜாதீய

---

இருக்கையிலும், அவன் பரமமான நித்ய விபூதிக்கெல்லாம் நாதனாகவும் அத்யாச்சர்யகரமான விக்ரஹ விசிஷ்டனாகவும் அந்தக் காரணத்தால் ஒப்பு உயர்வு அற்றவனாகவும் இருக்கிறபடியால் அவன் ஒருவனாகவே இருக்கிறான். ‘யோ வேத நிஹிதம்’, ‘ததக்ஷரே’ இத்யாதியான சுருதி வாக்யங்களெல்லாம், அவனை அப்படியே ப்ரதிபாதிக்கின்றன. அவன், அளவற்ற மேன்மையுடனும் கணக்கற்ற கல்யாண குணகணங்களுடனும் கூடினவனென்றும் ஸகல ஈச்வரர்களுக்கும் ஈச்வரனென்றும், பரப்ரஹ்மமென்றும், புருஷோத்தமனான நாராயணனென்றும், ஆகையால் அளவற்ற ஆச்சர்ய பூதனென்றும் நீருண்ட மேகம் போன்றதும் தாமரைப் புஷ்ப தளம் போல் நிர்மலமாயும் நீண்டுமிருக்கும் கண்களை உடையதும் கோடி ஸூர்யன் போல் கணக்கற்ற கிரணங்களை உடையதுமான திவ்ய மங்கள விக்ரஹத்தை உடையவனென்றும் பரம ஆகாசமென்று சொல்லப்படும் நித்ய விபூதியில் வஸிப்பவனென்றும் சுருதிகள் ப்ரதிபாதிக்கின்றன வல்லவா? ‘விசித்ரமாகவும் பரஸ்பர விருத்தங்கள் போலத் தோன்றும் ஸ்வபாவம் சக்தி ரூபம் இவைகளுடன் கூடினதாகவும் ஒரு வஸ்து இருக்கக் கூடுமோ?’’ என்று விரோத சிந்தை செய்வது பகவான் விஷயத்தில் யுக்தமாகமாட்டாது பகவானைத் தவிர்த்த மற்றை வஸ்துக்களுக்கன்றோ தமக்கு இயற்கையாயுள்ள ஸ்வபாவத்தையும் சக்தியையும் ரூபத்தையும் காட்டிலும் வேறு ஸ்வபாவ சக்தி ரூபங்கள் அமைய மாட்டா வென்று ஒரு நியமம்

---

பரமே வ்யோம்நி—நித்ய விபூதியோகமே ‘அவன் ஒப்பு உயர்வு அற்றவன்’ என்பதற்கு ஹேது. சுருதி வாக்யங்களில் தென்படும் “பரமே வ்யோமந்” என்பது, “பரமே வ்யோமநி” என்னும் ஏழாம் வேற்றுமையைச் சொல்லுகின்றது.

ஸர்வவஸ்துவிஜாதீயதயா—‘லோகத்தில் தென்படும் வஸ்துக்களைக் காட்டிலும் பகவான் விஜாதீயன், ஆகையால் அவனிடம் காணப்படும் தர்மங்களும் லோக வஸ்துக்களின் தர்மங்களைக் காட்டிலும் விஜாதீயங்களாக இருக்கக்கூடும்’ என்பது கருத்து. விஜாதீய தர்மிக்கு விஜாதீய தர்மங்களின் யோகம் உபபந்நமன்றோ?

தயா ஸ்வாபாவிகம் ஸ்வாபாவிக ஶக்தியோகமேவ ஏகஸ்யைவ விசித்ர நானாப்ரகாரவத்தா ச நானாத்வம் நாநாவிதாஸ்ரயயோகேந நானாப்ரகாரவத்தா ச ந விருத்யதே இதி வஸ்துஜாதவைருத்யவிரோதம் ந பரிஹர்தவ்யம்।

யதோக்தம்

" ஶக்தய: ஸர்வபாவாநாமசிந்த்யஜ்ஞானகோசரா: ।

---

சொல்லக்கூடும்? ஸமஸ்த வஸ்துக்களைக் காட்டிலும் விலக்ஷணனாயுள்ள பகவான் விஷயத்தில ஸகல ஸ்வபாவங்களும் ஸகல சக்திகளும் சேர்ந்திருப்பது உபபந்ந மாகையால, அவனுக்கு, ஆச்சர்யகரங்களும் கணக்கற்றவையுமான பல ப்ரகாரங்களை உடைத்தாயிருக்கும் தன்மையும் அப்படியே கணக்கற்றதாயும் அளவற்ற ஆச்சர்யத்துக் கெல்லாம் இருப்பிடமாயுள்ள திவ்யாயுத பூஷணாதி யோகத்தால் ஒப்பு உயர்வு அற்று ப்ரகாரியாக இருக்கும் தன்மையும் அவனிடத்தில் விருத்தங்களாக மாட்டா கேவலம் 'அவனும் வஸ்து' என்னும் காரணத்தால் மாத்ரம் அவனிடத்தில மற்றை வஸ்துக்களிடத்தில தென்படும் விரோத சிந்தையைச் செய்வது யுக்தமாக மாட்டாது இது தான " ஸர்வகேஷ்வஸதி " இத்யாதியான ச்லோகத்தின் ஆசயம்

யதோக்தம் "ஶக்தய: ஸர்வபாவாநாம்" இத்யாதியான ச்லோகம் இதற்கு ப்ரமாணம் இந்த ச்லோகத்தின் பொருள் — அக்னி ஜலம் முதலான பதார்த்தங்களுள் ஒன்றில் தென்படும் சக்தியே அதைக்காட்டிலும் விலக்ஷணமான மற்றொரு

---

'அநந்தாஸ்ரிதாஸ்ரயயோகேந' என்பதற்கு 'அநந்தாஸ்ரிதாஸ்ரயாஸ்ரிதவஸ்துயோகேந' என்று ஆசயம் கொள்ளவேண்டும் பகவானுடைய திவ்ய பூஷணங்களும் அநந்தங்கள், அளவற்ற ஆச்சர்யத்திற்கு இருப்பிடங்கள், அவைகளின் யோகமே 'அவன் ஒப்பு உயர்வு அற்றவன்' என்பதைக் காட்டுகின்றது என்பது குறிப்பு 'அப்படி ஒப்பு உயர்வு அற்று இருப்பதால அவனுக்கு ஏக ரூபதை உண்டு, கீழ்ச் சொல்லியிருக்கிறபடி அவனுடைய ப்ரகாரங்கள் பலவானதால அவனுக்கு நானா ரூபதையும் உண்டு இவை அவனிடத்தில விரோதிக்க மாட்டா' என்பது விஷயம். 'இதுவும் வஸ்து, மற்றவைகளும் வஸ்து, ஆகையால மற்ற வஸ்துக்கள் விஷயத்தில எவை விருத்த தர்மங்களோ அவை இவன் விஷயத்திலும் விருத்தங்களாகவே இருக்கவேண்டும்' என்று சொல்வது அயுக்தம் என்பது 'வஸ்துஜாதவைருத்யவிரோதம் ந பரிஹர்தா' என்பதன் தாத்பர்யம்

யதோக்தம்— விஸஜாதீய தர்மிக்கு விஸஜாதீய தர்மங்கள் உபபந்நமாகும் என்பதற்கு ப்ரமாணம் சொல்லுகிறார் ச்லோகத்தின் ஆதரம் —யத: ஸர்வ

யதோऽதோ ப்ரஹ்மணஸ்தாஸ்து ஸர்காத்யா பாவஶக்தய: ।
பவந்தி தபதாம் ஶ்ரேஷ்ட பாவகஸ்ய யதோஷ்ணதா ॥ ”

ஸ சார்த்தோ பவதி — ‘ஸர்வேஷாம் பிந்நஜாதீநாம் பாவாநாமேகஸ்மிந் பாவே த்ருஷ்டைவ ஶக்திஸ்தத்விஜாதீயபாவாந்தரேऽபீதி ந நியந்தும் ஶக்யா, ஜலாதாவத்ருஷ்டாऽபி தத்விஜாதீயபாவகே பாஸ்வரோஷ்ணதாதிஶக்திர்த்ருஶ்யதே, ஏவமேவ ஸர்வவஸ்துவிஜாதீயே ப்ரஹ்மணி ஸர்வஸாத்ருஶ்யம் நாநுமாதும் ஶக்யம்’ இதி। அதோ விசித்ராநந்தஶக்தியுக்தம் ப்ரஹ்மைவேத்யர்த்த:। ததாஹ

---

பதார்த்தத்தில் தென்படவேண்டும் என்று எதிர்பார்ப்பது யுக்தமன்று. ஜலத்தில் காணப்படாமல் இருக்கும் ப்ரகாசம் உஷ்ணம் முதலிய சக்திகள், ஜலத்தைக் காட்டிலும் விலக்ஷணமான அக்நியில் காணப்படுகின்றனவல்லவா? இம்மாதிரியே மற்றைப் பதார்த்தங்கள் எல்லாவற்றையும் காட்டிலும் விலக்ஷணமான பகவானிடத்தில் மற்றெந்தப் பதார்த்தத்திலும் காணப்படாமலிருக்கும் சக்தி விசேஷம் காணப்படக் கூடும். அந்தப் பகவான் மற்றை வஸ்துக்கள் போலவே இருக்கவேண்டும் என்று சொல்வது யுக்தமான அநுமானமாக மாட்டாது’ ஆகையால் ப்ரஹ்மமானது விசித்ரமான அநந்த சக்தியுடன் கூடியதே என்பது ஸித்தம். இந்த அர்த்தத்தையே “அதோ ப்ரஹ்மண:” இத்யாதியான ச்லோகமும் சொல்லுகின்றது.

---

பாவாநாம் ஶக்தய: அசிந்த்யஜ்ஞாநகோசரா:—அக்நி ஜலம் முதலிய ஸகல பதார்த்தங்களுடைய சக்திகளும் எந்தக் காரணத்தால் அத்யாச்சர்ய கரங்களாக இருக்கின்றனவோ [ஒன்றுக்கு இருக்கும் சக்தி மற்றொன்றுக்கும் இருக்கவேண்டும் என்று சிந்திப்பது எப்படி யுக்தமாகமாட்டாதோ அதாவது ஒன்றுக்கு இருப்பதைக் காட்டிலும் மற்றொன்றுக்கு வேறு விஜாதீய சக்திகள் எப்படி ஸம்பவிக்கின்றனவோ என்றபடி] அதோ ப்ரஹ்மணஸ்தா: ஸர்காத்யா பாவஶக்தய: பவந்தி—அந்தக் காரணத்தாலேயே ப்ரஹ்மத்திற்கு விலக்ஷணங்களான ஸ்ருஷ்டி முதலிய விசித்ர சக்திகள் ஸம்பவிக்கக் கூடும். ஹே தபதாம் ஶ்ரேஷ்ட—ஹே தபஸ்வி ச்ரேஷ்டரே, பாவகஸ்ய உஷ்ணதா யதா—நெருப்புக்கு உஷ்ணத் தன்மைபோல. ஜலத்தில் தென்படாத உஷ்ணத் தன்மை நெருப்பில் தென்படுவதுபோல, ஸாமாந்ய வஸ்துக்களில் தென்படாத ஆச்சர்ய சக்திகள் விஜாதீயனான பகவானிடத்தில் ஸம்பவிக்கக்கூடும் என்பது தாத்பர்யம்.

“ ஜக³தே³தந்மஹாஶ்சர்யம் ரூபம் யஸ்ய மஹாத்மந: ।
தேநாஶ்சர்யவரேணாஹம் ப⁴வதா க்ருஷ்ண ஸங்க³த: ॥ ”

இதி ।

தத்ர தத்ர நாநாவிதா நந்தஶ்ருதிநிகரஸ்ய பரிக்³ருஹீத தத்³வ்யா
க்²யாநபரிஶோதி⁴தவ்யாஸித: । யதா²ஹி ஸர்வஶாகா²ப்ரத்யய ந்யாயவிஷ்டா

---

தத்ர தத்ர இந்த விஷயங்களெல்லாம் பற்பல அர்த்தத்தை உடையதும் எல்லையற்றதுமான சுருதி கணங்களையும் பெரியோர்களால் அங்கீகரிக்கப்பட்டுள்ள அந்த சுருதி வ்யாக்யானங்களையும் நன்கு அர்த்த விசார புரஸ்ஸரமாக அத்யயனம் செய்து அறியப்பட்டன முதலில் ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி ப்ரளய விஷயமாக ஸ்ருஷ்டி ப்ரளயங்கள் இவை யிரண்டும் தத்வங்களின் பரிணாமங்களால் ஏற்படுகின்றன, தத்வங்கள் அநேகங்கள், அவைகளின் பரிணாமங்களும் கணக்கற்றவை இவை யெல்லாவற்

---

ததா²ஹ—ப்ரஹ்மம், விசித்ரமாயும் அநந்தமாயுமுள்ள சக்தியுடன் கூடியது என்பதற்கு ப்ரமாணம் சொல்லுகிறார் அக்ரூரர் பகவானைப் பார்த்துச் சொல்லும் வாக்யம் இது க்ருஷ்ண—ஹே க்ருஷ்ணனே! ஏதந்மஹாஶ்சர்யம் ஜக³த் யஸ்ய மஹாத்மந: ரூபம்—இந்த ஆச்சர்யமான ஜகத்தானது எந்த மஹாத்மாவின் ரூபமோ, தேநாஶ்சர்யவரேண ப⁴வதா ஸஹ அஹம் ஸங்க³த:—அப்படிப்பட்ட ஆச்சர்யகரமாயிருக்கும் உன்னுடன் நான் சேர்ந்தேன்

தத்ர தத்ர—‘இது வரை அநேக விஷயங்கள் விவரிக்கப்பட்டன, அநேக அர்த்தங்கள் நிஷ்கர்ஷம் செய்யப்பட்டன இவை யெல்லாம் சுருதி வாக்யங்களையே ஆதாரமாக உடையவை சில சுருதிகளை மாத்ரம் பார்த்து இந்த நிஷ்கர்ஷங்கள் செய்யப் படவில்லை, சுருதிகளில் ஆபாதத் தோன்றும் அர்த்தத்தை மாத்ரம் பார்த்தும் இவை செய்யப்படவில்லை ஆனால், ஸகல சுருதிகளையும் தீர்க்கமாக விசாரித்து, நன்றாகப் பர்யாலோசனை செய்து இந்த நிர்ணயங்கள் செய்யப்பட்டிருக்கின்றன’ என்பதை இவ்விடத்தில் ஸங்க்ஷேபிக்கிறார் பேத சுருதிகளை மாத்ரம் அவலம்பித்து அபேத சுருதிகளை அநாதரித்தாவது அபேத சுருதிகளை மாத்ரம் அவலம்பித்து பேத சுருதிகளை அநாதரித்தாவது இந்த நிர்ணயங்கள் செய்யப்படவில்லை, ஆனால் ஸகல சுருதி வாக்யங்களையும் ஆதரித்து ஏற்கெனவே சிஷ்டர்கள் கண்பித்திருக்கும் வழியே போய், எல்லாவற்றுக்கும் ஸமஞ்ஜஸமான அர்த்தமே இவ்விடத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றது என்பது தாத்பர்யம் அதை வெளியிடும் பொருட்டு, இப்பொழுது, சுருதி வாக்யங்கள் ப்ரக்ருத விஷயமாக எப்படிப் பேதிக்கின்றனவென்பதைச் சொல்லுகிறார் முதலில், ஸ்ருஷ்டி ப்ரளய விஷயமான சுருதிகள் எப்படிப் பேதிக்கின்றன வென்பது ஸங்க்ஷேபிக்கப்படுகின்றது

பரிக்ஷதபரிணாமா:॥ அநேகத்வா நியதக்ரம விசிஷ்ட ஸ்ருஷ்டி ப்ரளய ப்ரதிபாதநாத் அநேகவிதா: ச்ருதயோ வதந்தி॥ “நிரவத்யம் நிரஞ்ஜநம் விஜ்ஞாந

---

*றையும் சுருதி ப்ரமாணத்தைத் தவிர்த்து வேறு ப்ரமாணமொன்றாலும் அறிவது ஸாத்யமில்லை அந்தத் தத்வங்களின் பரிணாம க்ரமமும் அந்த சுருதி ப்ரமாணத்தாலேயே அறி*

---

*ப்ரமாணாந்தராபரித்ருஷ்ட — தத்வங்கள் எவ்வளவு என்பதும் அவைகளின் பரிணாம க்ரமமும் சுருதிகளிலிருந்தே அறியக்கூடியவை அதீந்த்ரியமான விஷயங்களில் சாஸ்த்ர மொன்றே ப்ரமாணமாகக் கூடுமன்றோ?*

*அநேகவிதா: ச்ருதய: — சில சுருதிகள், தேஜஸ் அப் அந்நம் இவைகளைப் பற்றி மாத்ரம் பேசுகின்றன; மற்றும் சில ஐந்து விதங்களான பூதங்களைப் பற்றிப் பேசுகின்றன; வேறு சில மஹத் முதலானவைகளின் ஸ்ருஷ்டியைப் பற்றியும் பேசுகின்றன இவ்வாறு சுருதிகள் பிந்நங்களாயிருக்கின்றன வென்பதைக் கணிசித்து இவ்விடத்தில் ‘சுருதிகள் அநேக விதங்கள்’ என்று சொல்லப்பட்டிருக்கின்றது*

*கபரிக்ஷதபரிணாம — கணக்கற்ற மாறுதல்களை உடைய தத்வங்கள் மூன்று என்பது நமது கொள்கை அவை, சேதநம் அசேதநம் ஈச்வரன் இவைகளுள் சேதந தத்வமாகிற ஜீவனுக்கு ஸ்வரூப மாறுதல் இல்லை, ஜ்ஞாந ஸங்கோச விகாஸ ரூபமான மாறுதல் மாத்ரம் உண்டு. ஈச்வர தத்வத்திற்கு எவ்வித மாறுதலுமில்லை. அசேதந தத்வம் என்பது மூல ப்ரக்ருதியும் அதன் விகாரங்களுமே அந்த ப்ரக்ருதி விக்ருதத்து ‘மஹத்’ என்னும் தத்வமாக மாறுகிறதென்றும், அந்த மஹத்திலிருந்து ‘அஹங்கார’மும், பஞ்சபூதங்கள், மநஸ், ஐந்து ஜ்ஞாநேந்த்ரியங்கள், ஐந்து கர்மேந்த்ரியங்கள் ஆகிய இவை உண்டாகின்றனவென்றும் சாஸ்த்ரங்கள் சொல்லுகின்றன இவைகள் தாம் இவ்விடத்தில் ‘கணக்கற்ற மாறுதல்கள்’ என்பதால் குறிக்கப்படுகின்றன*

*அநியதக்ரம — ஜகத் ஸ்ருஷ்டியைப்பற்றி சுருதிகள் பல விடங்களில் பேசுகின்றன. சில விடங்களில் தேஜஸ் (அக்நி), அப் (ஜலம்), அந்நம் (ப்ருதிவீ) இவைகளின் ஸ்ருஷ்டி மாத்ரமும், மற்றும் சில விடங்களில் பஞ்ச பூதங்களின் ஸ்ருஷ்டி மாத்ரமும், இன்னும் சில விடங்களில் மஹத் முதலியவைகளின் ஸ்ருஷ்டியும், இம்மாதிரி அநியதமாகவே சுருதிகளில் க்ரமம் காணப்படுகின்றபடியால், இவ்விடத்தில் ‘க்ரமங்கள் அநியதங்கள்’ என்று சொல்லப்படுகின்றது நமது ஸித்தாந்தம், இந்த ஸ்ருஷ்டி ப்ரளய நிஷ்கர்ஷத்தைச் செய்யும்பொழுது ஓரொரு சுருதி வாக்யத்தை மாத்ரம் அவலம்பித்து*

ஜ்ஞானம் நிர்விகாரம் நிஷ்கலம் நிஷ்க்ரியம் சாந்தம் நிர்குணம்" இத்யாதிகா:, நிர்குணம் ஜ்ஞானஸ்வரூபம் ப்ரஹ்மேதி கேசன ச்ருதய: அபிதததி। "நேஹ நாநாஸ்தி கிஞ்சந। ம்ருத்யோ: ஸ ம்ருத்யுமாப்நோதி ய இஹ நாநேவ பச்யதி" [கட 4-10, ப்ரு [6-4-14], "யத்ர த்வஸ்ய ஸர்வமாத்மைவா பூத் தத்கேந கம் பச்யேத் தத்கேந கம் விஜாநீயாத்?"[ப்ரு 4-4-14] இத்யாதிகா நாநாத்வநிஷேதவாதிந்ய: காச்சந ச்ருதய:। "ய: ஸர்வஜ்ஞ:

---

யக் கூடியதாயிருக்கின்றது அப்படிப்பட்ட ஸ்ருஷ்டி ப்ரளயங்களை சுருதிகள் பலவிதமாக விவரிக்கின்றன இரண்டாவது, ப்ரஹ்மத்தை விவரிக்கும் இடங்களில், சில சுருதிகள், 'அது நிரவத்யம், நிரஞ்ஜனம், விஜ்ஞானம், ஆநந்தம், நிர்விகாரம், நிஷ்களம், நிஷ்க்ரியம், சாந்தம், நிர்குணம்' என்று ப்ரஹ்மத்தைக் கேவலம் ஜ்ஞான ஸ்வரூபமாகவும் குணமற்றதாகவும் சொல்லுகின்றன மற்றும் சில "நேஹ நாநாஸ்தி", "யத்ர த்வஸ்ய" இத்யாதியான சுருதிகள், ப்ரபஞ்சத்தில் தென்படும் பேதங்களை நிஷேதிக்குமவைகளாகக் காணப்படுகின்றன வேறு சில "ய: ஸர்வஜ்ஞ:", "ஸர்வாணி ரூபாணி", "ஸர்வே நிமேஷா:",

---

அதனுடன் தருப்தியடையாமல், ஸகல வாக்யங்களையும் பர்யாலோசித்தே நிஷ்கர்ஷம் செய்கின்றது என்பது குறிப்பு

நிரவத்யம்—ப்ரஹ்மம் எவ்வித தோஷமும் அற்றது, எவ்வித குணமும் அற்றது என்று சொல்லும் நிர்குண சுருதிகள் இவ்விடத்தில் உதாஹரிக்கப்படுகின்றன

நேஹ நாநாஸ்தி—இந்த ப்ரபஞ்சத்தில் காணப்படும் பொருள்களெல்லாம் பல வகைப்பட்டனவாக நமக்குத் தோன்றின போதிலும், 'இந்தப் பேதங்களெல்லாம் அபரமார்த்தங்களே' என்று பேதத்தை நிஷேதிக்கும் போல் காணப்படும் வாக்யங்கள் உதாஹரிக்கப்படுகின்றன. வாக்யங்களின் ஆபாதத் தோன்றும் அர்த்தம் —இஹ— இந்தப் பரமாத்மாவினிடத்தில், நாநா—பேதமானது, கிஞ்சந நாஸ்தி—ஸ்வல்பமேனும் இல்லை ய இஹ நாநேவ பச்யதி—எவன் இந்தப் பரமாத்மாவினிடத்தில் பேதத்தைப் பார்க்கிறானோ, ஸ ம்ருத்யோ: ம்ருத்யுமாப்நோதி—அவன் ஸம்ஸாரத்திலிருந்து ஸம்ஸாரத்தையே அடைகிறான் யத்ர த்வஸ்ய—எல்லாம் பரமாத்மாவாக இருக்கிறபடியால் பார்க்கிறவன் ஒருவன், பார்க்கப்படுகிறவன் மற்றொருவனென்றும், அறிகிறவன் ஒருவன், அறியப்படுவது மற்றொன்று என்றும் எவ்விதம் சொல்லக்கூடும்?

ஸர்வவித், யஸ்ய ஜ்ஞாநமயம் தப: " [முண்ட 1-1-10], "ஸர்வாணி ரூபாணி விசித்ய தீரோ நாமாநி க்ருத்வா அபிவதந் யதாஸ்தே " [தைத்தி ஆ ஸ], " ஸர்வே நிமேஷா ஜஜ்ஞிரே வித்யுத: புருஷாததி " [தைத்தி நா] " அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர் விசோகோ விஜிகத்ஸோऽபிபாஸ: ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப: " [சாந்தோ 8-1-5] இதி ஸர்வஸ்மிந் ஜகதி ஹேயதயாவகதம் ஸர்வகுணம் ப்ரதிஷித்ய, நிரதிசயகல்யாணகுணாநந்த்யம் ஸர்வஜ்ஞதாம் ஸர்வசக்தியோகம் ஸர்வநாமரூபவ்யாகரணம் ஸர்வஸ்யாதாரதாம் ச காச்சந ச்ருதயோ ப்ருவந்தி। " ஸர்வம்

---

"அபஹதபாப்மா" இத்யாதியான சுருதிகள் ஜகத்தில் ஹேயங்களாகக் காணப்படும் குணமொன்றும் ப்ரஹ்மத்திற்கு இல்லையென்றும், 'ப்ரஹ்மம் என்பது கணக்கற்ற சிறந்த கல்யாண குணங்களுடன் கூடியது; அது முழுவதும் கேவலம் ஜ்ஞாந ஸ்வரூபம்; அது, ஸகல சக்திகளும் பொருந்தியுள்ளது; அது ஸகல பதார்த்தங்களுடைய உள்ளிலும் ப்ரவேசித்து அவைகளுக்கு நாம ரூபங்களைக் கொடுக்கின்றது, அது ஸகலத்திற்கும் ஆதாரம்' என்றும் சொல்லுகின்றன இன்னும் சில " ஸர்வம் கலு ",

---

ய: ஸர்வஜ்ஞ:—இந்த வாக்யங்களெல்லாம், 'ப்ரஹ்மத்திற்குக் குணங்கள் உண்டு' என்று சொல்லுமவை ஸர்வஜ்ஞ:—ஸகல விஷய ஸம்பந்தமான ஜ்ஞாநத்தையும் உடையவன்; ஸர்வவித்—ஒவ்வொரு விஷயத்திலும் ஸகல ப்ரகாரமான ஜ்ஞாநத்தையும் உடையவன் 'ஸர்வஜ்ஞ:' என்பதற்கு 'முழுமையும் ஜ்ஞாநமாக இருக்கும் ஸ்வரூபத்தை உடையவன்' என்று பொருள் சொல்வது முண்டு யஸ்ய ஜ்ஞாநமயம் தப:—பகவானுக்கு, ஜகத் ஸ்ருஷ்டிக்கு உபயுக்தமான கர்மங்களெல்லாம் கேவலம் தனது ஸங்கல்ப ரூபமான ஜ்ஞாநமே அதாவது 'ஸங்கல்பத்தைத்தவிர்த்து ஸ்ருஷ்ட்யாதிகளுக்கு உபயுக்தமாக ஒரு கர்மமும் அவனுக்கு வேண்டுவதில்லை' என்று சொன்னதாயிற்று

ஸர்வாணி ரூபாணி ஸகல வஸ்துக்களுக்கும் நாம ரூபங்களைப் பகவானே கொடுக்கிறான் ஒவ்வொரு வஸ்துவும் தன் தனக்கு உரிய நாம ரூபங்களைப் பெறுவது முழுவதும் பகவத் ஸங்கல்பத்தாலேயே என்பது தாத்பர்யம் வித்யுத: புருஷாத்—இது பகவானைக் குறிக்கின்றது. அபஹதபாப்மா—இந்த வாக்யங்கள், 'பகவான் ஹேய குணமற்றவன், கல்யாணகுண ஸம்பூர்ணன்' என்பதைச் சொல்லுகின்றன

ஸர்வம் கல்விதம்—'ப்ரஹ்மம் ஒன்றே பரமார்த்தமான வஸ்து' என்பதைச் சொல்லுகின்ற சுருதிகள் உதாஹரிக்கப்படுகின்றன இவைகளுள் 'ஸர்வம் கலு' இத்யாதியான வாக்யம் ப்ரதானம் இதன் அர்த்தம் — தஜ்ஜலாநிதி—ப்ரஹ்மத்தி

விதம் ப்ரஹ்ம தஜ்ஜலாநிதி" [சா.3-14-1], "ஐததாத்ம்யமிதம் ஸர்வம்" [சா. 6-8-7] இத்யாதிகா ப்ரஹ்மஸ்ருஷ்டம் ஜகந்நாநாகாரம் ப்ரதிபாத்ய தத்ஐக்யம் ச ப்ரதிபாதயந்தி காஶ்சந ஶ்ருதய:। "ப்ருதகாத்மாநம் ப்ரேரிதாரம் ச மத்வா" [ஶ்வே. 1], "போக்தா போக்யம் ப்ரேரிதாரம் ச மத்வா" [ஶ்வே. 1] "ப்ரஜாபதிரகாமயத ப்ரஜா: ஸ்ருஜேயேதி" "பதிம் விஶ்வஸ்யாத்மேஶ்வரம் ஶாஶ்வதம் ஶிவமச்யுதம்" [தை. நா], "தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம் தம் தேவதாநாம் பரமம் ச தைவதம்" [ஶ்வே. 6], "ஸர்வஸ்ய வஶீ ஸர்வஸ்யேஶாந:" [ப்ரு. 6-4-22] இத்யாதிகா: ப்ரஹ்மண: ஸர்வஸ்மாதந்யத்வம், ஸர்வஸ்யேஶிதவ்யத்வம்,

---

"ஐததாத்ம்யம்" இத்யாதியான ச்ருதிகள், 'ப்ரஹ்மத்தால் ஸ்ருஷ்டிக்கப்பட்டுள்ள ஜகத் முழுவதும் பலவகைப்பட்டதாக இருக்கையிலும், எல்லாம் ப்ரஹ்மமே' என்று சொல்லுகின்றன. மற்றும் சில "ப்ருதகாத்மாநம்", "போக்தா" "ப்ரஜாபதி:" "பதிம் விஶ்வஸ்ய" "தமீஶ்வராணாம்" ஸர்வஸ்ய வஶீ" இத்யாதிகளான ச்ருதிகள், 'ப்ரஹ்மம் என்பது மற்றைப் பதார்த்தங்களெல்லாவற்றையும் காட்டிலும் விலக்ஷ

---

ணிடமிருந்து ஜநிக்கிறபடியாலும் ப்ரஹ்மத்தினிடத்திலேயே லயிக்கிறபடியாலும் ப்ரஹ்மத்தினாலேயே அநுப்ரவேசிக்கப்பட்டு ஜீவித்திருப்பதைப் பெறுகிறபடியாலும், இதம் ஸர்வம்—இந்த ப்ரபஞ்சம் முழுவதும். ப்ரஹ்ம கலு—ப்ரஹ்மமே யன்றோ? ஜாயதே இதி ஜம் [ஜநிக்கிறபடியால் 'ஜம்' என்று சொல்லப்படுகிறது]; லீயதே இதி லம் [லயிக்கிறபடியால் 'லம்']; அநிதீதி அந் [ஜீவித்திருக்கிறபடியால், 'அந்'] தஸ்ய ஜலாந் தஜ்ஜலாந் என்பது விக்ரஹம்

ஐததாத்ம்யமிதம் ஸர்வம்'—இந்த வாக்யமும் கீழ் வாக்யங்கள் போல 'ப்ரஹ்மம் ஒன்றே உண்டு' என்பதையே சொல்லுகின்றது

ப்ருதகாத்மாநம்—இவையெல்லாம் 'ப்ரஹ்மம் வேறு ப்ரபஞ்சம் வேறு என்பதை விளக்கும் வாக்யங்கள் 'ஜீவாத்மாவையும் அதற்கு நியந்தாவாயுள்ள ஈச்வரனையும் வெவ்வேறென்று அறிகிறவனே பகவத் ப்ரீதி பாத்ரமாகிறான்' என்பது. முதல் இரண்டு வாக்யங்களின் பொருள் 'ப்ரஜாபதிரகாமயத' இத்யாதியான வாக்யமும், பகவானிடமிருந்து ப்ரஜைகளின் ஸ்ருஷ்டியைப் போதிக்கிறபடியால், அவை இரண்டும் வெவ்வேறு என்பதைச் சொல்லுகின்றது. 'விஶ்வஸ்ய பதிம்'—விச்வத்திற்கு நாதன் என்பதும் பேதத்தை ஸூசிப்பிக்கின்றது இம்மாதிரியே 'தமீஶ்வராணாம்' இத்யாதி வாக்யங்களும்

ஶாஸகத்வம் ச ப்ரஹ்மண꞉, ஸர்வஸ்ய ஶேஷதாம், பதித்வம் சேஶ்வரஸ்ய கண்டத ஏவ வ்யபதிஶதி। "அந்த꞉ ப்ரவிஷ்ட꞉ ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா" [யஜுராரண்ய 3-20], "ஏஷ த ஆத்மாந்தர்யாம்யம்ருத꞉" [ப்ரு 5-7], "யஸ்ய ப்ருதிவீ ஶரீரம், யஸ்யாப꞉ ஶரீரம், யஸ்ய தேஜ꞉ ஶரீரம், யஸ்யாவ்யக்தம் ஶரீரம், யஸ்யாக்ஷரம் ஶரீரம், யஸ்ய ம்ருத்யு꞉ ஶரீரம், யஸ்யாத்மா ஶரீரம்" [ப்ரு. 5-7] இதி ப்ரஹ்மவ்யதிரிக்தஸ்ய ஸர்வஸ்ய வஸ்துநோ ப்ரஹ்மணஶ்ஶரீரத்வம் ச தர்ஶயதி கண்டத꞉।

இதி நாநாரூபாணாம் வாக்யாநாமவிரோதோ முக்யார்த்த பரித்யாகஶ்ச யதா ஸம்பவதி ததைவ வர்ணநீயா, வர்ணிதம் ச। கவி

---

ணம்; மற்றைப் பதார்த்தங்களெல்லாம் அதற்கு அடங்கினவை; அது எல்லாவற்றுக்கும் ப்ரபு, மற்றவை அதற்குச் சேஷ பூதங்கள், அது எல்லாவற்றுக்கும் சேஷி' என்பதை விளக்குகின்றன. இன்னும் சில "அந்த꞉ ப்ரவிஷ்ட꞉", "ஏஷ ஆத்மா", "யஸ்ய ப்ருதிவீ" இத்யாதிகளான ச்ருதிகள் 'ப்ரஹ்மத்தைத் தவிர்த்த மற்ற வஸ்துக்களெல்லாம் ப்ரஹ்மத்திற்குச் சரீரம்; ப்ரஹ்மம் அவைகளுக்கெல்லாம் ஆத்மா' என்று அவை இரண்டுக்குமுள்ள சரீராத்ம ஸம்பந்தத்தைப் போதிக்கின்றன.

இதி நாநாரூபாணாம் . . . இவ்வாறு பலவிதமாக இருக்கும் ச்ருதி வாக்யங்களெல்லாவற்றுக்கும் எப்படிப் பரஸ்பரம் விரோதம் வாமாட்டாதோ, எப்படி எல்லாவற்றுக்கும் முக்யமான பொருள் ஒத்து வருமோ, அப்படியே ஸமன்வயம் செய்யப்பட வேண்டும்; அப்படியே ஸமன்வயம் செய்யப்பட்டும் இருக்கின்றது. 'ப்ரஹ்மம் எவ்வித மாறுதலு மற்றது' என்று சொல்லும் வாக்யங்களெல்லாம், 'ப்ரஹ்மத்தின் ஸ்வ

---

"அந்த꞉ ப்ரவிஷ்ட꞉" இத்யாதியான வாக்யங்கள், ப்ரபஞ்சத்திற்கும் ப்ரஹ்மத்துக்குமுள்ள சரீராத்ம பாவத்தை விளக்குகின்றன. "யஸ்ய ப்ருதிவீ"—இந்த வாக்யங்களின் அர்த்தத்தை 182, 183 வது பக்கங்களில் காண்க.

இதி நாநாரூபாணாம்—இம்மாதிரி ச்ருதி வாக்யங்கள் பலவகைப்பட்டிருக்கின்றன. கேவலம் அபேதத்தை அவலம்பிக்கும் சாங்கர பக்ஷத்திலும் பேதாபேதத்தை அவலம்பிக்கும் இதர பக்ஷங்களிலும் இந்த ச்ருதிகள் பரஸ்பரம் விரோதிக்கின்றன என்பது ஸ்பஷ்டம்; 'தத் த்வமஸி' இத்யாதியான வாக்யங்களைத் தமது பக்ஷத்திற்கு ஒத்தவையாக அர்த்தம் செய்யும்பொழுது முக்யார்த்தத்தை த்யஜித்து லக்ஷணையை அவலம்பித்து அர்த்தம் சொல்லும்படிக்கும் நேர்கின்றது. விசிஷ்டாத்வைத பக்ஷத்திலோ வென்றால் விரோதமும் இல்லை; முக்யார்த்த பரித்யாகமும் இல்லை. அது எப்படி என்பதை 'அவிகாரஶ்ருதய꞉' இத்யாதியான வாக்யங்களால் விளக்குகிறா

𑌕𑌾𑌰𑌶𑍍𑌰𑍁𑌤𑌯𑌃 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑌾𑌦𑍇𑌵𑍋𑌦𑌾𑌹𑍃𑌤𑌾𑌃। 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌵𑌾𑌦𑌾𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌹𑍇𑌯𑌗𑍁𑌣𑌨𑌿𑌷𑍇𑌧𑌪𑌰𑌤𑌯𑌾 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃। 𑌨𑌾𑌨𑌾𑌤𑍍𑌵𑌨𑌿𑌷𑍇𑌧𑌵𑌾𑌦𑌾𑌶𑍍𑌚 𑌏𑌕𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃 𑌶𑌰𑍀𑌰𑌤𑌯𑌾 𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌭𑍂𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌚𑍇𑌤𑌨𑌾𑌚𑍇𑌤𑌨𑌂 𑌵𑌸𑍍𑌤𑍍𑌵𑌿𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌤𑌯𑌾 𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌂

---

ரூபத்திற்கு மாறுதல் இல்லை' என்பதை விவரிக்கின்றன என்று நாம் சொல்லுகிறபடியால் அவைகளுக்கு முக்ய அர்த்தமே சொல்லப்பட்டதாகின்றது. 'ப்ரஹ்மத்திற்குக் குணம் இல்லை' என்று சொல்லும் வாக்யங்களெல்லாம், 'இந்த ப்ராக்ருத லோகத்தில் காணப்படும் ஹேய குணங்களொன்றும் ப்ரஹ்மத்திற்கு இல்லை' என்று பொருள் கொள்ளப்படுகிறபடியால், அவைகளுக்கு எவ்வித குறைவும் ஸம்பவிக்கவில்லை. 'ப்ரபஞ்சம் பல வகைப்பட்டது' என்பதை நிஷேதிக்கும் வாக்யங்களெல்லாம், 'ப்ரஹ்மம் என்பது ஒன்று தான்; சேதநாசேதநங்களான மற்றை வஸ்துக்களெல்லாம் அந்த ப்ரஹ்மத்திற்குச் சரீரமாக இருந்து கொண்டு அதற்கு ப்ரகாரங்களாக இருக்கின்றன; இப்படி எல்லாவற்றுக்கும் ஆத்மாவாகவும் ஆகையால் ப்ரகாரியாகவும் ப்ரஹ்மம் இருக்கிறபடியால், அது ஒன்றே இருக்கின்றது' என்னும் அர்த்தத்தைச் சொல்லுகின்றன என்று நாம் ஒத்துக் கொள்ளுகிறபடியால் அவைகளுக்கும் ஹாநி இல்லை. 'ப்ரஹ்மம் மற்றவை

---

𑌅𑌵𑌿𑌕𑌾𑌰𑌶𑍍𑌰𑍁𑌤𑌯𑌃—'ப்ரஹ்மம் எவ்வித மாறுதலும் அற்றது' என்று சொல்லும் சுருதிகள் ப்ரஹ்மத்தின் தர்மி ஸ்வரூபத்திற்கு ஒருபொழுதும் எவ்வித மாறுதலும் இல்லை என்பதே நமது கொள்கை ஆகையால் '𑌅𑌵𑌿𑌕𑌾𑌰' என்பதற்கு நாம் முக்ய அர்த்தத்தையே சொல்லுகிறோம்.

𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌹𑍇𑌯𑌗𑍁𑌣𑌨𑌿𑌷𑍇𑌧𑌪𑌰𑌤𑌯𑌾—இந்த ப்ரபஞ்சத்தில் தென்படும் பொருள்களெல்லாம் 'ப்ரக்ருதி' என்னும் அசேதந வஸ்துவின் விகாரங்கள். அவைகளில் காணப்படும் குணங்களெல்லாம் ஹேயங்கள். அம்மாதிரி குணமொன்றும் பகவானிடத்தில் இல்லை என்பதே நமது கொள்கை. '𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌃' என்பதற்கு 'இம்மாதிரியான ஹேய குணங்கள் அற்றது' என்றே அர்த்தம் சொல்லுகிறபடியால் முக்யார்த்த பரித்யாகம் நமது ஸித்தாந்தத்தில் ப்ரஸங்கிக்கமாட்டாது.

𑌨𑌾𑌨𑌾𑌤𑍍𑌵𑌨𑌿𑌷𑍇𑌧𑌵𑌾𑌦𑌾𑌃—'ப்ரஹ்மம் என்பது ஆத்மா, சேதநாசேதந வஸ்துக்கள் என்பவை அதன் சரீரம்' என்பதன்றோ நமது கொள்கை? சரீரமாக இருக்கும் வஸ்துக்கள் பல வகைப்பட்டவையானாலும், சரீரியாக இருக்கும் ப்ரஹ்மத்தினிடத்தில் நாநாத்வத்தை நாம் ஒத்துக்கொள்ளவில்லையாதலால், நாநாத்வத்தை நிஷேதிக்கும் வாக்யங்கள் நம்முடைய பக்ஷத்தில் முக்யார்த்தத்தை உடையவைகளே.

ப்ரஹ்மைவாவஸ்திதமிதி ஸார்த்தகா:। ஸர்வவிலக்ஷணத்வஸர்வேச்வரத்வஸர்வகல்யாணகுணாகரத்வஸத்யகாமத்வஸத்யஸங்கல்பத்வாதிவாக்யம் ததுபபாதநதயைவ ஸார்த்தகம்। ஜ்ஞாநாநந்தைகஸ்வரூபத்வாதி ச, ஸர்வ

---

களைககாட்டிலும விலக்ஷணம் ; மறறவைகளுககெல்லாம சேஷி ; மறறவைகளுக் கெலலாம நியந்தா; ஸகல கலயாண குணஙகளுககும இருப்பிடம ; அதன ஸங கலபம காமம எல்லாம ஸத்யமே' எனபதைச சொலலும வாகயஙகளெல்லாம, அந்தக குணங்கள் யாவும நமமால் உளளபடி ஒததுககொளளப படுகிறபடியால் அப்படி யே நிலைபெறுகினறன 'பரஹ்மம கேவலம ஜ்ஞாநமே. கேவலம ஆநந்தமே' என்பதைச சொல்லும வாகயஙகளும முகயாரததததை உடையனவே; எபபடியெனறல், பரஹமத

---

ஸர்வவிலக்ஷணத்வ— இது 'பரஹ்மம வேறு. மறறவை வேறு' எனறு பேதததைச சொலலும வாகயம நமமுடைய பக்ஷம 'அவை வேறு' எனபதே; ஆத லால், இதறகு முகயாரததவம வ்பகதம

ஜ்ஞாநாநந்தைகஸ்வரூபத்வாதி—'ப்ரஹ்மம கேவலம ஜ்ஞாநமே' என்று சில சுருதி கள் சொலலுகினறன இதைப் பாரதது 'அதற்கு தாம பூதமாக வேறு ஜ்ஞாந மொனறும இல்லை' எனறு நிர்விசேஷ வாதிகள் வாதிககிறாகள 'பரஹ் மம ஸாவஜ்ஞம' எனறு சொலலும சுருதி வாக்யஙகளை அவாகள ஆதரிககிறாக ளிலலை நாம 'பரஹ்மததின ஸ்வரூபம கேவலம் ஜ்ஞாநம' எனபதை முதல் வாகயங கள சொலலுகினறன வெனறும், 'ஜ்ஞாந ஸ்வரூபமாயுளள ப்ரஹ்மததிறகு ஜ்ஞாந மெனனும ஒரு தர்மமும உணடு' என்பதை இரணடாவது வாக்யங்கள் சொலலு கினறன வெனறும பொருள கொள்ளுகிறபடியால், இரணடு வித வாக்ய ஙகளும நமது பக்ஷததில் ஆதரிககபபட்டவையாகினறன ஆனால், 'எவ்விடததிலாவது ஜ்ஞாநததிறகு ஜ்ஞாநம் தாமமாக இருப்பதை நாம பாாத்திருககிறோமா ? ஆகையால் நீஙகள சொலவது யுகதிககு விருத்தம' எனறு அவாகள் ஆக்ஷேபிககககூடும சுருதியில் சொலலப்பட்டுளள விஷயஙகளில நாம யுகதி விசாரம செயயககூடாது எனபது நமது முதல ஸமாதாநம இரணடாவது, 'யுகதி விரோதம இலலை' என்றும நிரூபிபபோம லோகததில் ஜ்ஞாநததை ஜ்ஞாநம தர்மமாக ஆச்ரயிககவில்லை எனபது உண்மையே அதாவது, 'மற்றொனறுககு தாமமாக நிறகும தாம பூத ஜ்ஞாநததிறகு வேறொரு ஜ்ஞாநம தாமமாக நிறகமாட்டாது' எனறு சொன்னதாயிறறு அது யுகதமே பரகருததில மறறொனறுககு தாமமாக நிற்கும ஜ்ஞாநததிறகு ஜ்ஞாநாச்ரயம சொலலப் படவில்லை பரஹ்மததின ஸ்வரூபமாகிற ஜ்ஞாநம மறறொனறுககும தாம பூதமனறு ஆகையால அதை ஜ்ஞாநமாகிற ஒரு தாமம ஆச்ரயிதது நிறகினறது எனறு சொல்வதில் எவ்வித அநுபபததியும பரஸஙகிகக மாட்டாது தவிரவும், லோகத்தில் காணபபடும் வ்யாபதி பலம போதுமான பலமாக மாட்டாது 'லோகததில ஜ்ஞாநம எனபது ஒரு

[illegible] ஸர்வகல்யாணகு³ணாஶ்ரயஸ்ய ஸர்வேஶ்வரஸ்ய ஸர்வஶேஷிண: ஸர்வாதா⁴ரஸ்ய ஸர்வோத்பத்திஸ்தி²திப்ரலயஹேதுபூ⁴தஸ்ய நிரவத்³யஸ்ய நிர்விகாரஸ்ய ஸர்வாத்மபூ⁴தஸ்ய பரஸ்ய ப்³ரஹ்மண: ஸ்வரூபநிரூபகத⁴ர்மோ மலப்ரத்யநீகாநந்த³ரூபஜ்ஞாநமேவேதி ஸ்வரூபநிரூபகதயா ஸ்வரூபமபி ஜ்ஞாநமேவேதி ச ஶ்ருதிவாதா³நாமர்த²: ।

---

தின ஸ்வரூபத்தை விளக்கும் தர்மமானது தோஷமற்ற ஆநந்த ரூபமான ஜ்ஞானமென்பதே நம்முடைய கொள்கை; அந்தத் தர்மத்தை யுடைய தர்மியும் ஸ்வயம் ப்ரகாசமாக இருக்கிறபடியால் அந்த தர்மி ஸ்வரூபமும் கேவலம் ஜ்ஞானமென்றன்றோ ப்ரதிபாதனம் செய்யப்பட்டிருக்கின்றது? தவிரவும், அந்த பரப்ரஹ்மம், ஸமஸ்த கல்யாண குணங்களுக்கும் இருப்பிடமாக இருக்கிறபடியால், அது வேறு வஸ்துக்களெல்லாவற்றையும் காட்டிலும் விலக்ஷணம், எல்லாவற்றுக்கும் நியந்தா, சேஷி, ஆதாரம்; எல்லாவற்றினுடைய உத்பத்தி ஸ்திதி ப்ரளயங்களுக்குக் காரணம், தோஷமற்றது; விகாரமற்றது; எல்லா வற்றுக்கும் ஆத்மாவாக இருக்கின்றது' என்று சுருதி சொல்லுகின்றதன்றோ?

---

வஸ்துவின் தர்மமாகவே காணப்படுகிறபடியால் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபமாகிற ஜ்ஞானமும் வேறொரு வஸ்துவுக்குத் தர்மமாக ப்ரஸங்கிக்குமே' என்று லோக வ்யாப்தியை அவலம்பித்துச் செய்யப்படும் சோத்யத்திற்கு அவர்களும், 'சுருதி பலத்தால் அந்த ப்ரஸக்தி தடைபடும்' என்றே ஸமாதானம் சொல்ல வேண்டு மாகையால், சுருதி பலத்தை லௌகிக வ்யாப்தி பாதிக்கமாட்டாது என்றே ஒத்துக் கொள்ளவேண்டும். அப்படிப்பட்ட சுருதி பலமே ப்ரக்ருதத்தில் நமக்கு அவலம்பம் என்பதைக் காண்பிப்பதற்காகவே, இவ்விடத்தில் 'ஸ்தா²[illegible]' இத்யாதியான அநேக விசேஷணங்கள் ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கின்றன. ப்ரஹ்மத்தின் ஸர்வ வைலக்ஷண்யம் முதலியவைகளை நாம் எப்படி சுருதி பலத்தால் அங்கீகரிக் கிறோமோ, அப்படியே ஸ்வரூபமாயுள்ள ஜ்ஞானத்திற்கு, ஒரு தர்ம பூத ஜ்ஞானத்தின் ஆச்ரயத்தை நாம் அங்கீகரிக்கவேண்டும் என்பது குறிப்பு.

பரஸ்ய ப்³ரஹ்மண: ஸ்வரூபநிரூபகத⁴ர்ம: ஶுத்³தா⁴நந்த³ரூபஜ்ஞாநமேவ ஸ்வரூபநிரூபகத⁴ர்ம:— நிர்மலமான ஆநந்தரூபமான ஜ்ஞானமே ப்ரஹ்மத்தின் ஸ்வரூப நிரூபக தர்மம் எந்தத் தர்மத்தைக் கொண்டு நாம் ஒரு வஸ்துவின் ஸ்வரூபத்தை அறிகிறோமோ, அந்தத் தர்மம் அந்த வஸ்துவுக்கு ஸ்வரூப நிரூபக தர்மமாகும்.

ஶாஸ்த்ரவாக்யாநாம்—'எல்லாம் ப்ரஹ்மமே' என்று சொல்லும் வாக்யங்கள் நாம, சரீராத்ம பாவத்தை அவலம்பித்து ஸாமாநாதிகரண்ய முக்யார்த்தம் சொல்லுகிற படியால் இந்தவாக்யங்களெல்லாம் நம்மால் முக்யார்த்தம் சொல்லப்பட்டவையாகின்றன

ஐக்யவாக்யாநாம் ஶரீராத்மபா⁴வஸாமாநாதி⁴கரண்யேந முக்²யார்த²தோ-பபாத³நாதே³வ ஸமர்தி²தா:।

ஏவம் ச ஸதி, கோ பே⁴தோ³ வா அபே⁴தோ³ வா த்³வ்யாத்மகதா வா வேதா³ந்தவேத்³ய: கோ(அ)யமர்த²: ஸமர்தி²தோ ப⁴வதி? ஸர்வஸ்ய வேத³வேத்³யத்வாத் ஸர்வம் ஸமர்தி²தம்। ஸர்வஶரீரதயா ஸர்வப்ரகாரம் ப்³ரஹ்மைவாவஸ்தி²தமித்யபே⁴த³: ஸமர்தி²த:। ஏகமேவ ப்³ரஹ்ம நாநாபூ⁴தசித³சித்ப்ரகாரம் நாநாத்வேநாவஸ்தி²தமிதி பே⁴தா³பே⁴தௌ³ ஸமர்தி²தௌ। அசித்³வஸ்துநஶ்சித்³வஸ்துநஶ்சேஶ்வரஸ்ய ச ஸ்வரூபஸ்வபா⁴வவைலக்ஷண்யாத³ஸங்கராச்ச பே⁴த³: ஸமர்தி²த:।

---

*பரஹ்மமே என்று சொல்லும் வாக்யங்களும், சரீராத்ம ஸம்பந்தத்தை ஆதாரமாகக் கொண்டு முக்யார்த்த முள்ளவை யென்று உபபாதநம் செய்யப்படுகிறபடியால் ஸமர்த்திதங்களாகின்றன*

ஏவம் ச ஸதி — 'இப்படிச் சொல்வதால், பேதம் அபேதம் பேதாபேதம் ஆக இம்மூன்று ஸித்தாந்தங்களுள் எது வேதாந்த சாஸ்த்ரத்தால் போதிக்கப்படுவதாக ஸமர்த்திகப் பட்டதாகின்றது?' என்று கேட்கும் பக்ஷத்தில், 'மூன்றும் வேதத்தால் போதிக்கப்படுகிறபடியால் மூன்றும் ஸமர்த்திக்கப்படுகின்றன' என்று உத்தரம் சொல்வோம் 'ஸகல வஸ்துக்களையும் சரீரமாக உடைத்தாயிருக்கிற படியால் ஸகலத்தையும் ப்ரகாரமாக உடைத்தாயிருக்கும் ப்ரஹ்மம் ஒன்றே' என்பது எங்கள் மதமாதலால், அபேதம் ஸமர்த்திதமாகின்றது; ஒரே ப்ரஹ்மம் பலவகைப்பட்ட சேதநாசேதந வஸ்துக்களை ப்ரகாரமாக உடைத்தா யிருந்துகொண்டு பலவாக நிற்கின்றது' என்று நாங்கள் சொல்லுகிறபடியால் பேதாபேதம் ஸமர்த்தித மாகின்றது; 'அசித் வஸ்துக்களும் சித் வஸ்துக்களும், ஸ்வரூபம் ஸ்வபாவம் அந்த இரண்டு அம்சங்களிலும் ஈச்வரனைக் காட்டிலும் விலக்ஷணங்கள், அவைகளுக்கும் ஈச்வரனுக்கும் ஸாங்கர்யம் இல்லை' என்றும் நாங்கள் ஒத்துக்கொள்ளுகிற படியால், பேதம் ஸமர்த்திதமாகின்றது

---

*சரீரத்தைச் சொல்லும் சப்தங்களெல்லாம் சரீரி பர்யந்தம் முக்யார்த்தமுள்ளவை என்பது நமது ஸித்தாந்தம்*

ஏவம் ச ஸதி—'இப்படி எல்லா ச்ருதிகளையும் நீங்கள் ஆதரிக்கும் பக்ஷத்தில் நீங்கள் பேதவாதிகளா? இல்லாவிட்டால், அபேத வாதிகளா? இல்லாவிட்டால் பேதாபேதவாதிகளா?' என்று ஒரு சோத்யம் செய்யப்படுகின்றது ஸர்வஸ்ய வேதவேத்யத்வாத்—'மூன்றும் வேதங்களால் அறியப்பட வேண்டியவை யாதலால் மூன்றையும் நாங்கள் ஸமர்த்திக்கிறோம்' என்பது ஸமாதாநம் எப்படி மூன்றும் ஸமர்த்திக்கப்படுகின்றன என்பதை 'ஸர்வசரீரதயா' இத்யாதியால் உபபாதிக்கிறா

நநு ச, 'தத்த்வமஸி ச்வேதகேதோ' 'தஸ்ய தாவதேவ சிரம்' [஛ா 6-8-7] இதி ஸர்வஸ்ய ப்ரஹ்மாத்மகத்வஜ்ஞாநமேவ பரமபுருஷார்த்தலக்ஷண மோக்ஷஸாதநமிதி கம்யதே । நைதேவம் । "ப்ருதகாத்மாநம் ப்ரேரிதாரஞ்ச மத்வா ஜுஷ்டஸ்ததஸ்தேநாம்ருதத்வமேதி" [ச்வே 1] இதி ஆத்மாநம்

---

நநு ச 'தத்த்வமஸி' இத்யாதியான வாக்யத்தைப் பார்க்கும் பொழுது பரம புருஷார்த்தமாகிற மோக்ஷத்திற்கு ஐக்ய ஜ்ஞாநமே (எல்லாம் ஒன்றே என்னும் ஜ்ஞாநமே) ஸாதநம் என்று சொல்வது போலன்றோ தோன்றுகின்றது?" என்று ஆக்ஷேபிக்கக்கூடும், அது அவ்விதமன்று. ப்ருதக் ஜ்ஞாநமே (வஸ்துக்களெல்லாம் வெவ்வேறு என்னும் ஜ்ஞாநமே) மோக்ஷத்திற்கு ஸாதநம் என்று 'ப்ருதகாத்மாநம்' என்னும் ச்ருதி போதிக்கின்றதன்றோ? ஜீவாத்மாவையும் அதை ஏவுகிறவனுமிருக்கும் அந்தர்யாமியையும் வெவ்வே

---

நநு ச— இப்படி மூன்றும் அங்கீகரிக்கப்படுகின்றன என்று சொல்வது அயுக்தம். ஐக்ய ஜ்ஞாநமொன்றே மோக்ஷத்திற்கு ஸாதநமென்றன்றோ ச்ருதிகள் சொல்லுகின்றன?" என்னும் ஒரு சோத்யத்தைச் சங்கித்துக் கொண்டு அதற்கு ஸமாதாநம் சொல்லுகிறார். அந்த ஸமாதாநத்தின் ரீதி பின் வருமாறு நிற்கின்றது. 'சில வாக்யங்கள் ஐக்ய ஜ்ஞாநத்தை மோக்ஷ ஸாதநமாகச் சொல்வது என்பதை ஒத்துக் கொண்ட போதிலும், மற்றும் சில வாக்யங்கள் பேத ஜ்ஞாநத்தையே மோக்ஷ ஸாதநமாகச் சொல்லுகின்றனவே! அவைகளின் கதி என்ன? ஐக்ய ஜ்ஞாநத்தைப் போதிக்கும் வாக்யங்களுக்கு அவை விருத்தங்களாய் இருக்கிறபடியால், அவை அநாதரிக்கத் தக்கவை என்று சொல்வது ஸமஞ்ஜஸமாக மாட்டாது. 'இவைகள் தாம் அநாதரணீயங்களாகட்டுமே' என்று ஒருவன் ஆக்ஷேபித்தால் அதற்கு ப்ரத்யுத்தரம் சொல்வது ஸாத்யமில்லை. ஆகையால் இம்மாதிரி பரஸ்பர விருத்தங்கள் போலக் காணப்படும் ச்ருதி வாக்யங்களுள் ஒன்றுக்கும் எவ்வித விரோதமும் வராமல் விஷய விபாகம் செய்யவேண்டும்' இது தான் ஸமாதாநம். எப்படி விரோதம் வராமல் விஷய விபாகம் செய்யக்கூடும் என்பதைக் காண்பித்து விட்டு இவ்வித விபாகம் செய்வது தாமாகச் செய்யும் கார்யமன்று என்றும் பூர்வாசார்யர்கள் அம்மாதிரி செய்திருக்கிறார்கள் என்றும் நிரூபிக்கிறார்.

கம்யதே—'ஐக்ய ஜ்ஞாநம் மோக்ஷத்தை ஸாதித்துக் கொடுக்கும்' என்று தெளிவாகச் சொல்லப்படவில்லை என்பதை இந்த 'கம்யதே' [ஊஹிக்கப்படுகின்றது] என்னும் பதம் ஸூசிப்பிக்கின்றது. இதற்கு எதிர்த்தட்டாக 'ஸாக்ஷாதம்ருதத்வப்ராப்தி ஸாதநம்' என்று பின்னால் சொல்லப்படுவது கவனிக்கத்தக்கது. உண்மையாகவே 'தத்த்வமஸி' இத்யாதியான ஐக்ய ச்ருதி வாக்யங்களில் 'மோக்ஷம் ஸாதிக்கப்படும்' என்பது கண்டோக்தமாகச் சொல்லப்படவில்லை, 'ப்ருதகாத்மாநம்' இத்யாதியான பேத ச்ருதி வாக்யங்களில் 'அம்ருதத்வமேதி' (மோக்ஷத்தை அடைகிறான்) என்பது தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

ப்ரேரிதாரம் சாந்தர்யாமிணம் ப்ருதங்மத்வா, 'தத:'—ப்ருதக்ஜ்ஞாநாத்தே-
தோ:, 'தேந'—பரமாத்மநா, ஜுஷ்டோ(அ)ம்ருதத்வமேதீதி ஸாக்ஷாதம்ருத-
த்வப்ராப்த்யுபாயதயா ஆத்மநோ நியந்துஶ்ச ப்ருதக்பாவஜ்ஞாநமேவாபிதீய-
தே। 'ஐக்யவாக்யவிரோதாத் ததபரார்த்தஸகுணப்ரஹ்மப்ராப்திவி-
ஷயமித்யவகந்தவ்யம்' இதி சேத், ப்ருதக்ஜ்ஞாநஸ்யைவ ஸாக்ஷா-
தம்ருதத்வப்ராப்த்யுபாயத்வஶ்ரவணாதிதி விபரீதம் கஸ்மாந்ந பவதி? நைதத்யுக்தம்
பவதி, உபயோஸ்துல்யயோர்விரோதே ஸதி அவிரோதேந தயோர்விஷ-
யோ விவேசநீய இதி। கதமவிரோத இதி சேத், அந்தர்யாமிரூபே-
ணாவஸ்திதஸ்ய பரஸ்ய ப்ரஹ்மண: ஶரீரதயா ப்ரகாரத்வாஜ்ஜீவாத்ம-
ப்ரகாரம் ப்ரஹ்மைவ த்வமிதி ஶப்தேநாபிதீயதே, ததேவ ஜ்ஞாதவ்யமிதி

---

றென்று அறிந்து அந்த அறிவு காரணமாக அந்தப் பரமாத்மாவினால் அநுக்ரஹிக்கப்பட்டவன் அது வழியாக அம்ருதத்வம் என்று சொல்லப்படும் மோக்ஷத்தை அடைகிறான் என்பது அதன் அர்த்தமாகையால் ஜீவாத்மாவினுடையவும் அவனை நியந்தாவாகிற பரமாத்மாவினுடையவுமான ப்ருதக் ஜ்ஞாநத்தையே மோக்ஷ ஸாதநமாக அது சொல்லுகின்றதே; அதற்குக் கதி என்ன?" என்று நாங்கள் திருப்பக்கேட்க மாட்டோமோ? 'ஐக்ய ஜ்ஞாநத்தை மோக்ஷ ஸாதநமாகச் சொல்லும் வாக்யத்திற்கு இது விரோதிக்கிறபடியால் இந்த வாக்யம் அபரமாத்தமான ஸகுண ப்ரஹ்மத்தை அடைவிக்கும் உபாயத்தைச் சொல்லுகின்றது என்றே நாம் ஒத்துக்கொள்ளவேண்டும்' என்னில், 'ப்ருதக் ஜ்ஞாநத்தையே ஸாக்ஷாத் அம்ருதத்வத்தின் (மோக்ஷத்தின்) ப்ராப்திக்கு ஸாதநமாக இந்த ச்ருதி சொல்லுகிறபடியால் இதற்கு அநுகுணமாகவே ஐக்ய ஜ்ஞாநத்தை ஸாதநமாகச் சொல்லும் ச்ருதியை நாம் நயிப்பிக்கவேண்டும்' என்று நாம் ஏன் பதில் கேட்கக்கூடாது? இவையெல்லாம் யுக்தங்களான வாதங்கள் ஆகமாட்டா. யுக்தமானது எதுவென்றால் ஸமாந பலத்தை உடைய இரண்டு ச்ருதிவாக்யங்கள் பரஸ்பரம் விரோதிக்கும் பொழுது, ஒன்றுக்கும் விரோதம் வராமல் நாம் தாத்பர்யம் சொல்லுவதே யுக்தமாகும். 'பரஸ்பரத்தில் விரோதம் வராமல் எவ்விதம் அர்த்தம் சொல்லக்கூடும்?' என்று கேட்டால் பின்வருமாறு அர்த்தம் சொல்லும் பக்ஷத்தில் விரோதம் வரமாட்டாது என்று நாம் பதில் சொல்வோம். பர ப்ரஹ்மம் எல்லாவற்றினுள்ளிலும் அந்தர்யாமியாக இருக்கின்றது. ஆகையால் எல்லா வஸ்துக்களும் ப்ரஹ்மத்திற்குச் சரீரம், ஆகையால் அவை அதற்கு ப்ரகாரமாகின்றன, அப்படிப்பட்ட ப்ரஹ்மமே, "தத்த்வமஸி" என்னும் வாக்யத்திலுள்ள "த்வம்" (நீ) என்னும் சப்தத்தால் சொல்லப்படுகின்றது;

---

அந்தர்யாமிரூபேணாவஸ்திதஸ்ய— ஐக்ய ஜ்ஞாநம் மோக்ஷத்தை ஸாதித்துக்கொடுக்கும் என்று சொல்லும் ச்ருதி வாக்யத்தின் விஷயம் இந்த வாக்யத்தாலும் 'ப்ருதக்த்வ ஜ்ஞாநம் மோக்ஷ ஸாதநம்' என்று சொல்லும் ச்ருதியின் விஷயம் '[illegible]' இத்யாதியாலும் விவரிக்கப்படுகின்றன. இந்த விவரணங்கள் பூர்வமே பல

தஸ்ய வாக்யஸ்ய விஷய: । ஸர்வாஸ்வபி தஶாஸு ஜீவாத்மந: தச்சரீரதயா அவஸ்திதஸ்ய பரமாத்மநோ நிகிலதோஷரஹிததயா ஸத்யஸங்கல்பத்வாத்யநவதிகாதிஶயாஸங்க்யேயகல்யாணகுணாகரத்வேந ய: ப்ருதக்பாவ: ஸோऽநுஸந்தேய இத்யஸ்ய வாக்யஸ்ய விஷய இத்யயமர்த: பூர்வமேவாஸக்ருதுக்த: ।

“போக்தா போக்யம் ப்ரேரிதாரம் ச மத்வா” இதி । போக்ய

---

அப்படியே அநுஸந்திக்க வேண்டும்’ என்பது தான் ஐக்ய ஜ்ஞானத்தை மோக்ஷஸாதநமாகச் சொல்லும் சுருதியின் தாத்பர்யம். ப்ருதக் ஜ்ஞானத்தை ஸாதநமாகச் சொல்லும் சுருதியின் தாத்பர்யமும், ‘ப்ரஹ்மத்திற்குச் சரீரமாக இருக்கும் ஜீவாத்மாவைக் காட்டிலும் அந்த ஜீவாத்மாவுக்கு ஆத்மாவாக இருக்கும் ப்ரஹ்மம் வேறு, அந்த ப்ரஹ்மம் எவ்வித தோஷமும் மற்றது, ஸத்ய ஸங்கல்பம் முதலிய கணக்கற்ற சிறந்த கல்யாண குணங்களுக்கெல்லாம் இருப்பிடம், இப்படி இருப்பதே அந்த வேறுபாட்டுக்குக் காரணம், இதுதான் அநுஸந்திக்க வேண்டிய விஷயம்’ என்பதே. இந்த வாக்யங்களுக்கு இதுவே அர்த்தமென்று ஏற்கெனவே பல தடவை நாம் சொல்லியிருக்கிறோம்.

“போக்தா போக்ய ... ”—போக்தா இத்யாதியான வாக்யத்தில் சொல்லப்பட்டுள்ள போக்யமான வஸ்துவுக்கு அறிவின்மை பரார்த்தத்வம் எப்பொழுதும் மாறிக்கொண்டிருப்பது இவை முதலானவைகளே ஸ்வபாவங்கள். போக்தாவான

---

தடவைகளில் இந்த க்ரந்தத்திலேயே செய்யப்பட்டிருக்கிறபடியால் இவ்விடத்தில் ஸங்க்ரஹமாக ஸூசிக்கப்படுகின்றன.

போக்தா போக்யம் ப்ரேரிதாரம் ச மத்வேதி—ப்ரக்ருத சுருதி வாக்யங்களுக்கு ‘அபேத ஜ்ஞானம் மோக்ஷ ஸாதநம்’ என்பதில் தாத்பர்யமில்லை என்பது இது வரை நிரூபிக்கப்பட்டது. இப்பொழுது அந்த வாக்யங்களுக்கு ‘பேதாபேத ஜ்ஞானம் மோக்ஷ ஸாதநம்’ என்பதிலும் தாத்பர்யமில்லை என்பது நிரூபிக்கப்படுகின்றது. ப்ரஹ்மம் அசேதந பதார்த்தங்களுக்கு அந்தர்யாமியாகவும், சேதநங்களுக்கு அந்தர்யாமியாகவும், கேவலம் தனது ஸ்வரூபத்துடனும் ஆக மூன்று விதங்களான அவஸ்தாநங்களுடன் நிற்கின்றது’ என்பதே இந்த சுருதி வாக்யங்களின் தாத்பர்யம் என்று சொல்லப் போகிறவராய் முதலில் அசேதந பதார்த்தங்களின் ஸ்வபாவங்களையும் பிறகு சேதநங்களுடைய ஸ்வபாவங்களையும் சொல்லுகிறார். இந்த அவஸ்தாநங்களை ஸத்வாரக அவஸ்தாநங்களென்றும் அத்வாரகாவஸ்தாநமென்றும் சொல்வது உண்டு. சேதநாசேதநங்களுக்கு அந்தர்யாமியாக இருப்பது ஸத்வாரகம். கேவலம் ஸ்வரூபத்துடன் இருப்பது அத்வாரகம்.

ரூபஸ்ய வக்ஷ்யமாணே அசேதநத்வம் பாரார்த்யம் ஸததம் விகாராஸ்பதத்வமித்யாதய: ஸ்வபாவா:, போக்து: ஜீவாத்மந: அமலாபரிச்சிந்நஜ்ஞாநாநந்தஸ்வரூபஸ்யைவ அநாதிகர்மரூபாவித்யாக்ருத நாநாவிதஜ்ஞாநஸங்கோசவிகாஸா: போக்யபூதாசித்வஸ்துஸம்ஸர்கஸ்ச பரமாத்மோபாஸநாந்மோக்ஷஸ்சேத்யாதய: ஸ்வபாவா:, ஏவம்பூதபோக்த்ருபோக்யயோரந்த

---

ஜீவாத்மாவுக்கு மலமற்றதாயும் அளவுக்கு உட்படாததாயுமுள்ள ஜ்ஞாநம் ஆநந்தம் இவைகளே ஸ்வரூபம், அநாதி கர்மமாகிற அவித்யையினாலே ஸம்பவிக்கும் ஜ்ஞாநக் குறைவும் ஜ்ஞாந ஏற்றமும் போக்யங்களாயுள்ள அசேதந வஸ்துவின் சேர்க்கையும், பரமாத்மாவினிடத்தில் செய்யப்படும் பக்தியால் மோக்ஷம் பெறுவதும் இன்னும் இவை போன்ற மற்றும் சில அம்சங்கள் அதன் ஸ்வபாவங்கள் இப்படிப்பட்ட போக்தாவாகிற ஜீவனுக்குள் அந்தர்யாமியாக இருப்பு போக்யமாகிற அசேதநங்களுக்குள் அந்தர்யாமியாக இருப்பு அளவற்ற குணங்களுக்கெல்லாம் ஆச்ரயமாகக் கேவலம் தனது ஸ்வரூபத்துட

---

அசேதநத்வம், பாரார்த்யம் ஸததம் விகாராஸ்பதத்வம்—இவை போக்ய வஸ்துக்களின் ஸ்வபாவங்கள் போக்ய வஸ்துக்களெல்லாம் அசேதநங்கள் [அதாவது அவைகளுக்கு அறிவு என்பது இல்லை], அவை பரார்த்தங்கள் [அதாவது, பிறருடைய ப்ரயோஜநத்திற்காகவே இருப்பவை], அவை எப்பொழுதும் மாறிக்கொண்டே இருக்கும் [அதாவது, அவைகளின் ஸ்வரூபம் ஸ்ருஷ்டி தசையிலும் ப்ரளய தசையிலும் மாற்றத்தை அடைந்து கொண்டே இருக்கும்] இந்த அர்த்தத்தை

“ அசேதநா பரார்த்தா ச நித்யா ஸததவிக்ரியா ”

என்னும் ச்லோகம் சொல்லுகின்றது

நாநாவிதஜ்ஞாநஸங்கோசவிகாஸா: அசித்வஸ்துஸம்ஸர்க:, உபாஸநாந்மோக்ஷ:—இவை போக்தாவாகிற ஜீவனுடைய ஸ்வபாவங்கள் ஜீவனுக்கு ஸ்வரூப மாறுதல் இல்லாவிடினும் தர்மபூத ஜ்ஞாநத்தின் மாறுதல் உண்டு என்பது நமது கொள்கை இந்த மாறுதல் ஜந்மாந்தர கர்மத்தின் கார்யம் அந்தக் கர்மத்தின் பலமாகவே ஜீவனுக்கு அசேதநமாகிற தேஹத்தின் சேர்க்கையும் ஏற்படுகின்றது பகவதுபாஸநத்தியால் அந்தக் கர்ம பந்தம் விலகி ஜீவனுக்கு மோக்ஷம் ஸித்திக்கின்றது இவை ஜீவனுடைய ஸ்வபாவங்கள் இப்படி அத்யந்தம் பிந்நங்களாயுள்ள போக்ய போக்தாக்களாகிற வஸ்துக்களுக்கு அபேதம் எவ்விதம் சொல்லக்கூடும் என்பது குறிப்பு

போக்த்ருபோக்யயோரந்தராத்மத்வம்— இதை போக்தாவுக்கு அந்தர்யாமியாக இருப்பது போக்யத்திற்கு அந்தர்யாமியாக இருப்பது’ என்று

ஸ்தூ²லரூபேணாவஸ்தா²நம் ஸூக்ஷ்மரூபேண வாவஸ்தி²திஸ்தது³பாஸ்யஸ்ய சேதநாவஸ்தா²நமிதி வாஸ்ய ப்³ரஹ்மணஸ்த்ரிவிதா⁴வஸ்தா²நம் ஜ்ஞாதவ்யமித்யர்த²:

“தத் த்வமஸி” இதி வாக்யம். ஸத்³வித்³யாயாமுபாஸ்யம் ப்³ரஹ்ம ஸகு³ணம், ஸகு³ணப்³ரஹ்மப்ராப்திஶ்ச ப²லமிதி த்³ருஶ்யதே பூர்வாசார்யைர்வ்யாக்²யாதம். யதோ²க்தம் வாக்யகாரேண “யுக்தம், தத்³கு³ண

---

னேயே இருப்பு, ஆக இம்மூன்றும் ப்ரஹ்மத்தின் அவஸ்தாநங்கள் இதுதான் அறியப்பட வேண்டிய விஷயம்' என்பதே இந்த ச்ருதி வாக்யங்களின் தாத்பர்யம்

“தத் த்வமஸி” — தவிரவும் “தத் த்வமஸி” இத்யாதியான ச்ருதி ஸத்வித்யையினால் உபாஸிக்கப்பட வேண்டிய ப்ரஹ்மமானது குணங்களுடன் கூடினது என்பதையும், அப்படிச் செய்யப்படும் உபாஸதியின் பலமும் ஸகுணமான ப்ரஹ்மத்தை அடைவதே என்பதையும் சொல்லுகின்றது என்றே பெரியோர்களான பூர்வாசார்யர்கள் வ்யாக்யானம் செய்திருக்கிறார்கள் வாக்யகாரர் “யுக்தம், தத்குணகோபாஸநாத்”

---

இரண்டாகப் பகுத்துக்கொள்ள வேண்டும் மேல் ‘த்ரிவிதாவஸ்தாநம்’ என்று சொல்லப்பட்டிருக்கின்றதன்றோ? ‘இப்படி ப்ரஹ்மம் மூன்று வித அவஸ்தாநங்களை உடையது’ என்னும் ஜ்ஞானமே மோக்ஷ ஸாதநம் என்பது தான் இந்த ச்ருதி வாக்யத்தின் அர்த்தம் என்று விவரிக்கப்பட்டது

தத் த்வமஸீதி — இந்த ஸத்வித்யா வாக்யம் பூர்வாசார்யர்களால் ஸகுண பரமாகவே விவரிக்கப்பட்டிருக்கின்றது என்பதைச் சொல்லுகிறார் [ப்ருதக்த்வ ஜ்ஞானத்தை மோக்ஷோபாயமாகச் சொல்லும் “போக்தா போக்யம்” இத்யாதியான ச்ருதி, “தத் த்வமஸி” என்னும் ச்ருதிக்கு விருத்தமன்று என்பதும், ஆகையால் அதற்கு அபரமார்த்த விஷயத்வம் சொல்லவேண்டுவதில்லை என்பதும் குறிப்பு]

“யுக்தம் தத்குணகோபாஸநாத்” — இது வாக்யகாரருடைய வாக்யம் ‘ஸகுணமான ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்வதால் ஸகுணமான ப்ரஹ்மமே ப்ராப்யமாகின்றது என்பது யுக்தம்’ என்பது அர்த்தம் ஸத்வித்யை சொல்லுகிறபடி ப்ரஹ்மத்தை உபாஸதி செய்கிறவன் கல்யாண குணங்களுடன் கூடிய ப்ரஹ்மத்தையே அடைகிறான் என்பது எல்லோராலும் ஒத்துக்கொள்ளப்பட வேண்டும் ஆகையால், அவனுக்கு அந்தக் குணங்களுடன் கூடிய ப்ரஹ்மமே ப்ராப்யமாக வேண்டும் என்பது யுக்தமே

இந்த வாக்யத்திற்கு த்ரமிடாசார்யர் பாஷ்யம் செய்திருக்கிறார் ‘யத்யபி … ப்ராப்யதே’ என்பதால்

கோபாஸநாத்" இதி। வ்யாக்யாதம் ச ச்ருதிவாக்யேந வித்யாவிகல்பம் வததா "யத்யபி ஸச்சித்தோ ந நிர்புக்ந தைவதம் குணகணம் மநஸாऽநுதாவேத் ததாऽப்யந்தர்குணாமேவ தேவதாம் பஜத இதி தத்ராபி ஸகுணைவ தேவதா ப்ராப்யதே" இதி। ஸச்சித்த:—ஸச்சி

---

என்று சொல்லியிருக்கிறார். இது தஹர வித்யைக்கும் ஸத் வித்யைக்கும் உள்ள விகல்பத்தைச் சொல்லும் அவஸரத்தில் த்ரமிடாசார்யரால் "யத்யபி ... ப்ராப்யதே இதி" என்று வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்கின்றது. இந்த வ்யாக்யானத்தின் அர்த்தமென்னவென்றால் ஸச்சித்த:—ஸத்வித்யை ப்ரகாரம் பகவதுபாஸ்தி செய்

---

வித்யாவிகல்பம் வததா—உபநிஷத்துக்களில் ப்ரஹ்மத்தை உபாஸிப்பவனுக்குப் பல வழிகள் காண்பிக்கப்பட்டிருக்கின்றன. இந்த வழிகளுக்கு 'ப்ரஹ்ம வித்யை' என்று பெயர். ஒவ்வொரு வித்யையிலும் அந்தந்த உபாஸகனுடைய சக்தி முதலியவைகளுக்கு அநுகுணமாக ப்ரஹ்மத்தின் சிற்சில குணங்களே அநுஸந்திக்கத்தக்கவை என்று சொல்லப்பட்டிருக்கின்றது. அப்படி அநுஸந்திக்கப்படும் குணங்கள் அந்த வித்யைக்கு அஸாதாரண குணங்களாகும். இவ்விதம் சிற்சில குணங்களே ஒவ்வொரு உபாஸகனாலும் அநுஸந்திக்கப்பட்ட போதிலும் கடைசியாக எல்லா உபாஸகர்களாலும் அடையப்படும் வஸ்து பரிபூர்ணமான ப்ரஹ்மமே. உபாஸந காலத்தில் சிற்சில குணங்களுடன் கூடியதாகவே ப்ரஹ்மம் உபாஸிக்கப்படுகின்றது என்பது உண்மைதான்; ஆனால் உபாஸிக்கப்படும் ப்ரஹ்மம் எப்பொழுதும் ஸகல கல்யாண குணங்களுடனும் கூடியதாகவே இருக்கிறபடியால் அப்படிப்பட்ட ஸகல கல்யாண குண விசிஷ்ட ப்ரஹ்மமே எல்லா உபாஸகர்களாலும் கடைசியில் அடையப்படுகின்றது என்பதில் எவ்வித அநுபபத்தியும் இல்லை. ஸத் வித்யை என்னும் வித்யைக்கு நிகில ஜகத் காரணத்வம் முதலியவை அஸாதாரண குணங்கள். அவைகளுடன் கூடியதாக ஸத் வித்யா நிஷ்டன் ப்ரஹ்மத்தை உபாஸிக்கிறான். அந்த உபாஸதியால் அவன் அடையும் ப்ரஹ்மம் ஸகல கல்யாண குண விசிஷ்டமான பரிபூர்ண ப்ரஹ்மமே. தஹர வித்யா நிஷ்டன் உபாஸந காலத்தில் வேறு சில குணங்களை ஸ்மரித்துக்கொண்டு அந்தக் குணங்களுடன் விசிஷ்டமாக ப்ரஹ்மத்தை உபாஸித்தபோதிலும், அவனால் அடையப்படும் ப்ரஹ்மமும் ஸகல கல்யாண குண விசிஷ்டமான பரிபூர்ண ப்ரஹ்மமே. இந்த இரண்டு வித்யைகளுள் எதை அவலம்பித்தாலும் ப்ராப்யத்தில் வாசியில்லையாதலால் இவை விகல்பங்கள். இந்த விகல்பத்தன்மையை த்ரமிடாசார்யர் இந்த அவஸரத்தில் நிரூபிக்கிறார்.

ஸச்சித்த:—ஸத்தை (அதாவது, ப்ரஹ்மத்தை) த்யானிப்பவன்; ஸத் வித்யா நிஷ்டன் என்பது தாத்பர்யம். நிர்புக்ந தைவதம்—தைவதத்திலிருந்து விடப்பட்டிருக்கும் (அதாவது, கேவல குணங்களை)

ப்ரேரித்ருத்வேநாவஸ்தாநம் ஸ்வரூபேண சாவஸ்திதி தத்குணாஶ்ரய சேதநாவஸ்தாநமிதி ஏவம்பூதஸ்ய ப்ரஹ்மணஸ்த்ரிவிதாவஸ்தாநம் ஜ்ஞாதவ்யமித்யர்த²:

“ தத்த்வமஸி ” இதி வாக்யம், ஸத்³வித்³யாயாம் உபாஸ்யம் ப்³ரஹ்ம ஸகு³ணம், ஸகு³ணப்³ரஹ்மப்ராப்திஶ்ச ப²லமிதி வ்ருத்திக்ருத்³பி⁴: பூர்வாசார்யைர்வ்யாக்²யாதம் । யதோ²க்தம் வாக்யகாரேண “ யுக்தம், தத்³கு³ண

---

ணேயே இருப்பு, ஆக இம்மூன்றும் ப்ரஹ்மத்தின் அவஸ்தாநங்கள் இதுதான் அறியப்பட வேண்டிய விஷயம்' என்பதே இந்த ச்ருதி வாக்யங்களின் தாத்பர்யம்

“ தத்த்வமஸி ”—தவிரவும் “தத்த்வமஸி” இத்யாதியான ச்ருதி ஸத்வித்யையினால் உபாஸிக்கப்பட வேண்டிய ப்ரஹ்மமானது குணங்களுடன் கூடினது என்பதையும், அப்படிச் செய்யப்படும் உபாஸநத்தின் பலமும் ஸகுணமான ப்ரஹ்மத்தை அடைவதே என்பதையும் சொல்லுகின்றது என்றே பெரியோர்களான பூர்வாசார்யர்கள் வ்யாக்யானம் செய்திருக்கிறார்கள் வாக்யகாரர் “ யுக்தம், தத்குணகோபாஸநாத் ”

---

இரண்டாகப் பகுத்துக்கொள்ள வேண்டும் மேல் 'த்ரிவிதாவஸ்தாநம்' என்று சொல்லப்பட்டிருக்கின்றதன்றோ? 'இப்படி ப்ரஹ்மம் மூன்று வித அவஸ்தாநங்களை உடையது' என்னும் ஜ்ஞாநமே மோக்ஷ ஸாதநம் என்பது தான் இந்த ச்ருதி வாக்யத்தின் ஆசயம் என்று விவரிக்கப்பட்டது

தத்த்வமஸீதி—இந்த ஸத்வித்யா வாக்யம் பூர்வாசார்யர்களால் ஸகுண பரமாகவே விவரிக்கப்பட்டிருக்கின்றது என்பதைச் சொல்லுகிறார் [ப்ருதக்த்வ ஜ்ஞாநத்தை மோக்ஷோபாயமாகச் சொல்லும் “ ஸோऽஶ்நுதே ஸர்வான் ” இத்யாதியான ச்ருதி, “ தத்த்வமஸி ” என்னும் ச்ருதிக்கு விருத்தமன்று என்பதும், ஆகையால் அதற்கு அபரமார்த்த விஷயத்வம் சொல்லவேண்டுவதில்லை என்பதும் குறிப்பு]

“ யுக்தம் தத்குணகோபாஸநாத் ”—இது வாக்யகாரருடைய வாக்யம் 'ஸகுணமான ப்ரஹ்மத்தை உபாஸநம் செய்தால் ஸகுணமான ப்ரஹ்மமே ப்ராப்யமாகின்றது என்பது யுக்தம்' என்பது ஆசயம் ஸத்வித்யை சொல்லுகிறபடி ப்ரஹ்மத்தை உபாஸ்தி செய்கிறவன் கல்யாண குணங்களுடன் கூடிய ப்ரஹ்மத்தையே த்யானிக்கிறான் என்பது எல்லாராலும் ஒத்துக்கொள்ளப்பட வேண்டும் ஆகையால், அவனுக்கு அந்தக் குணங்களுடன் கூடிய ப்ரஹ்மமே ப்ராப்யமாக வேண்டும் என்பது யுக்தமே

இந்த வாக்யத்திற்கு த்ரமிடாசார்யர் பாஷ்யம் செய்திருக்கிறார் 'யத்³யபி .. .. ப்ராப்யதே' என்பதால்

கோபாஸநக:" இதி। வ்யாக்யாதம் ச த்ரமிடாசார்யேண வித்யாவிகல்பம் வததா "யத்யபி ஸச்சித்தோ ந நிர்புக்நதைவதம் குணகணம் மநஸாநுதாவேத் ததாப்யந்தர்குணாமேவ தேவதாம் பஜத இதி தத்ராபி ஸகுணைவ தேவதா ப்ராப்யதே" இதி। ஸச்சித்த:—ஸத்வி

---

என்று சொல்லியிருக்கிறார். இது தஹர வித்யைக்கும் ஸத் வித்யைக்கும் உள்ள விகல்பத்தைச் சொல்லும் அவஸரத்தில் த்ரமிடாசார்யரால் "யத்யபி ... ப்ராப்யத இதி" என்று வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்கின்றது. இந்த வ்யாக்யானத்தின் அர்த்தமென்னவென்றால் ஸச்சித்த:—ஸத்வித்யை ப்ரகாரம் பகவதுபாஸ்தி செய்

---

வித்யாவிகல்பம் வததா—உபநிஷத்துக்களில், ப்ரஹ்மத்தை உபாஸிப்பவனுக்குப் பல வழிகள் காண்பிக்கப்பட்டிருக்கின்றன. இந்த வழிகளுக்கு 'ப்ரஹ்ம வித்யை' என்று பெயர். ஒவ்வொரு வித்யையிலும் அந்தந்த உபாஸகனுடைய சக்தி முதலியவைகளுக்கு அநுகுணமாக ப்ரஹ்மத்தின் சிற்சில குணங்களே அநுஸந்திக்கத்தக்கவை என்று சொல்லப்பட்டிருக்கின்றது. அப்படி அநுஸந்திக்கப்படும் குணங்கள் அந்த வித்யைக்கு அஸாதாரண குணங்களாகும். இவ்விதம் சிற்சில குணங்களே ஒவ்வொரு உபாஸகனாலும் அநுஸந்திக்கப்பட்ட போதிலும், கடைசியாக எல்லா உபாஸகர்களாலும் அடையப்படும் வஸ்து பரிபூர்ணமான ப்ரஹ்மமே. உபாஸந காலத்தில் சிற்சில குணங்களுடன் கூடியதாகவே ப்ரஹ்மம் உபாஸிக்கப்படுகின்றது என்பது உண்மைதான்; ஆனால் உபாஸிக்கப்படும் ப்ரஹ்மம் எப்பொழுதும் ஸகல கல்யாண குணங்களுடனும் கூடியதாகவே இருக்கிறபடியால் அப்படிப்பட்ட ஸகல கல்யாண குண விசிஷ்ட ப்ரஹ்மமே எல்லா உபாஸகர்களாலும் கடைசியில் அடையப்படுகின்றது என்பதில் எவ்வித அநுபபத்தியும் இல்லை. ஸத் வித்யை என்னும் வித்யைக்கு நிகில ஜகத் காரணத்வம் முதலியவை அஸாதாரண குணங்கள். அவைகளுடன் கூடியதாக ஸத் வித்யா நிஷ்டன் ப்ரஹ்மத்தை உபாஸிக்கிறான். அந்த உபாஸதியால் அவன் அடையும் ப்ரஹ்மம் ஸகல கல்யாண குண விசிஷ்டமான பரிபூர்ண ப்ரஹ்மமே. தஹர வித்யா நிஷ்டன் உபாஸந காலத்தில் வேறு சில குணங்களை ஸ்மரித்துக் கொண்டு அந்தக் குணங்களுடன் விசிஷ்டமாக ப்ரஹ்மத்தை உபாஸித்தபோதிலும், அவனால் அடையப்படும் ப்ரஹ்மமும் ஸகல கல்யாண குண விசிஷ்டமான பரிபூர்ண ப்ரஹ்மமே. இந்த இரண்டு வித்யைகளுள் எதை அவலம்பித்தாலும் ப்ராப்யத்தில் வாசியில்லையாதலால் இவை விகல்பங்கள். இந்த விகல்பத்தன்மையை த்ரமிடாசார்யர் இந்த அவஸரத்தில் நிரூபிக்கிறார்.

ஸச்சித்த:—ஸத்தை (அதாவது, ப்ரஹ்மத்தை) த்யானிப்பவன், ஸத் வித்யா நிஷ்டன் என்பது தாத்பர்யம். நிர்புக்நதைவதம்—தைவதத்திலிருந்து விடப்பட்டிருக்கும் (அதாவது, கேவல குணங்களை)

ஜ்ஞாநிஷ்ட₂:, யத்₃யபி ந நிர்ஹ்ருத்ய தை₃வதம் கு₃ணக₃ணம் அநுஸந்தா₄ய வேத₃ தஹரவித்₃யாநிஷ்ட₂வத் அபஹதபாப்மத்வாதி₃கல்யாணகு₃ணக₃ணம் தை₃வதாதோ விவிச்ய யத்₃யபி ஸத்₃வித்₃யாநிஷ்ட₂ ஏவ ந ஸ்மரேத், ததா₂ப்யநுஷங்கே₃ணைவ தை₃வதாம் ப₄ஜதே — தை₃வதாஸ்வரூபாநுப₃ந்தி₄த்வாத் ஸகலகல்யாணகு₃ணக₃ணஸ்ய கேநசித் பரதை₃வதாஸாதா₄ரணேந நிகி₂லஜக₃த்காரணத்வாதி₃நா கு₃ணேநோபாஸ்யமாநாபி தை₃வதா ஸ்வஸ்வரூபாநுப₃ந்தி₄ஸகலகல்யாணகு₃ணவிஶிஷ்டைவோபாஸ்யதே, அத: ஸகு₃ணமேவ ப்₃ரஹ்ம தத்ராபி ப்ராப்யமிதி ஸத்₃வித்₃யாத₃ஹரவித்₃யயோர்விகல்ப இத்யர்த₂:।

---

இறைவன், யத்₃யபி ந நிர்ஹ்ருத்ய தை₃வதம் கு₃ணக₃ணம் அநுஸந்தா₄ய வேத₃—தேவதையினிடமிருந்து பிரிக்கப்பட்டுள்ள அபஹதபாப்மத்வம் முதலிய கல்யாண குண கணங்களைத் தஹர வித்யாநிஷ்டனைப் போல் அநுஸந்தாநம் செய்யாவிட்டாலும், ததா₂ப்யநுஷங்கே₃ணைவ தை₃வதாம் ப₄ஜதே—ஸகல கல்யாண குணகணங்களும் தேவதா ஸ்வரூபத்தை அநுபந்தித்தே நிற்கிறபடியால், உபாஸந காலத்தில் ஜகத் காரணத்வம் முதலான குணங்களுள் ஏதாவது ஒரு குணத்துடன் விசிஷ்டமாக மாத்ரம் தேவதை உபாஸிக்கப்பட்ட போதிலும், உண்மையாக அந்த தேவதை தன்னுடைய ஸ்வரூபத்திற்கு இயற்கையாயுள்ள ஸகல கல்யாண குணங்களுடனும் கூடினதாகவே உபாஸிக்கப்பட்டதாகின்றது; இதி தத்ராபி ஸகு₃ணைவ தை₃வதா ப்ராப்யேதி—ஆகையால் ஸகுணமான ப்ரஹ்மமே இதற்கு ப்ராப்யமான வஸ்து ஆகையால் தான் ஸத்வித்யைக்கும் தஹரவித்யைக்கும் விகல்பம்' என்பது தான

---

தை₃வதாஸ்வரூபாநுப₃ந்தி₄த்வாத் ஸகலகல்யாணகு₃ணக₃ணஸ்ய—உபாஸகனால் த்யாநிக்கப்படுமவை சிற்சில குணங்களேயாயினும், உபாஸிக்கப்படும் தைவதம் எப்பொழுதும் ஸகல கல்யாண குணங்களுடனும் கூடியதே

இதி ஸத்₃வித்₃யாத₃ஹரவித்₃யயோர்விகல்ப:—இப்படி இரண்டு வித்யைகளுக்கும் ப்ராப்யமான வஸ்து ஸகுண ப்ரஹ்மமே யாதலால், அவை இரண்டும் விகல்பங்கள் என்பது ஏற்படுகின்றது. இந்த த்ரமிட பாஷ்ய வாக்யத்திலிருந்து ஸத்வித்யா நிஷ்டனும் ஸகுண ப்ரஹ்மத்தையே அடைகிறான் என்பது விளங்கின்றது ஆகையால் 'தத்த்வமஸி' என்னும் வாக்யம் ஸகுண ப்ரஹ்ம பரமே ஆகவேண்டும்; ஆகையால் இது ஐக்யத்தைச் சொல்லமாட்டாது; ஆகையால் "ஸோऽகாமயத ப₃ஹு ஸ்யாம் ப்ரஜாயேய" என்னும் வாக்யம் இதற்கு விருத்தமன்று, ஆகையால் அதற்கு அபார்மார்த்த விஷயத்வம் கல்பிக்கப்படவேண்டாம், இது தான் குறிப்பு

நநு ச ஸர்வஸ்ய ஜந்தோ: பரமாத்மா அந்தர்யாமீ, தந்நியாம்யம் ச ஸர்வமிதி உக்தம் । ஏவம் ச ஸதி விதிநிஷேதசாஸ்த்ராணாமதிகாரீ ந த்ருச்யதே । ய: ஸ்வபுத்த்யைவ ப்ரவ்ருத்திநிவ்ருத்திசக்த:, ஸ ஏவ 'ஏவம் குர்யாத் ந குர்யாத்' இதி விதிநிஷேதயோக்ய: । ந சைஷ த்ருச்யதே । ஸர்வஸ்மிந் ப்ரவ்ருத்திஜாதே ஸர்வஸ்ய ப்ரேரக: பரமாத்மா காரயிதேதி

---

நநு ச ......" இவ்விடத்தில மற்றுமொரு ஆக்ஷேபம வரககூடும. 'ஸகல ஜநதுககளுககும பரமாத்மா அநதர்யாமியாக இருககிறுனென்றும, அவனுலேயே ஸகலமும நியமிககபபட்டு வருகினறதெனறும சொல்லபபட்டிருககிறதன்றே ? இது வஸ்து ஸ்திதியாக இருககும பக்ஷத்தில், 'இதைச செய இதைச செயயவேண்டாம' என்று சொலலும சாஸ்தரஙகளுககு அதிகாரியே இராமறபோயவிட ப்ரஸஙகிககும எவன தன புத்தியைக கொண்டே ஒரு காரயத்தில ப்ரவ்ருத்திககவோ ஒன்றிலிருநது நிவ்ருத்திக கவோ சகதனுக இருககிறுனே, அவன ஒருவனே ' இதைச செய இதைச செயயவேண டாம ' எனனும விதி நிஷேதஙகளுககு யோகயனுவான அம்மாதிரி ஸ்வாதநதர்யத துடன் கூடினவனுக ஒருவன கூட இல்லையே ! தவிரவும, எல்லாருககும ப்ரேரகனுக இருககும் பரமாத்மாவே ஸர்வ ப்ரவ்ருத்திகளிலும காரயஙகளைச் செயவிககிறவனுகிறுன

---

நநு ச—இவ்விதம், 'தாம சொன்ன அர்த்தம பூர்வாசார்யர்களால் சொல் லபபட்டதே' எனபதை நிரூபிதது விட்டு, இபபொழுது மற்றுமொரு சஙகையைச் செயதுகொண்டு அதறகு ஸமாதானத்தைச் சொலலுகிறூர 'பரமாத்மா ஸர்வ நியநதா வென்பதும், ஜீவ வர்ககம முழுவதும அவனுல நியமிக்கபபட்டுக காரயஙகளில் ப்ரவருத திககினற தெனபதும உண்மையானுல, சாஸ்தரஙகளில் சொல்லபபட்டுள்ள விதி நிஷேதஙகளெல்லாம் அர்த்த மற்றவையாக வன்றே ப்ரஸஙகிககும?' எனபது சஙகை இது மாத்ரமனறு 'ஸர்வ நியநதாவாகிற பரமாத்மா, ஒருவனை ஸத் கார்யத்திலும மற ருெருவனை அஸத காரயத்திலும ப்ரவ்ருத்திப்பிககிறுன் என்று சொலலும பக்ஷத்தில் அததப பரமாத்மாவுக்கு வைஷமயம (பக்ஷபாதம) நைர்கருணயம (தயையற்றிருககும் தனமை) முதலிய கெட்ட குணஙகள ப்ரஸஙகிககுமே' எனபதும இவ்விடத்தில் சஙகிக கப படுகினறது

ஸர்வஸ்மிந் ப்ரவ்ருத்திஜாதே ஸர்வஸ்ய ப்ரேரக: பரமாத்மா காரயிதா ச—'லோகத்தில் அரசன நியமிககிறவனுகவும ப்ரஜைகள நியமிககப படுகிற வர்களாகவும இருககையிலும், 'இதைச செய்' 'இதைச செயயாதே' எனறு ராஜாஜ்ஞை ஸார்த்தகமாக விலலையா? அம்மாதிரி ஏன சாஸ்தர விதி நிஷேதஙகள ஸார்த்தகஙகளாகக் கூடாது?' எனறு ஸநதேஹம ஜநிககலாம அரசனுககும ப்ரஜைகளுககு முள்ள நியநதரு

தஸ்ய ஸ்வ-ருநியம்ந்ம் வ்ரதிவாதிதம்। தயா அ ஶ்ரூயதே—"ஏஷ ஹ்யேவ ஸாது கர்ம காரயதி தம், யமேப்யோ லோகேப்ய உந்நிநீஷதி, ஏஷ ஏவாஸாது கர்ம காரயதி தம், யமதோ நிநீஷதி" [கௌஷீ, 3-9] இதி। ஸாத்வஸாது-கர்ம-காரயித்ருத்வேந வைஷம்யம் அ ப்ரஸஜ்யதே।

---

என்று பரமாதமாவுககுமஎலலாரையும நியமிககும சகதிபரதிபாதிககபபடடிருககின்றது "ஏஷஹ்யேவ" இதயாதியான சருதியும அமமாதிரி சொலலுகின்றது இபபடிச சிலரை நலல காரியங்களைச செயவிககிறபடியாலும மறறும சிலரைக கெடட காரியங்களைச செயவிககிறபடியாலும, பரமாதமா தயையறறவன பக்ஷபாதி என்று சொலலும படியும நேருகின்ற தனறோ?

---

நியாமய பாவம போன்றதன்று பரமாதமாவுககும ஜீவனகளுககு முளள பாவம பரஜை கள் ஸ்வாதீநமாகவே பரவருததியைச செயகிறாரகள, அபராதததைச செயதால, அதன் பலமாகிற துககததை அநுபவிபபதில மாதரம ராஜ நியாமயதவம அவாகளுககு ஏறபடு கின்றது ஜீவனகள விஷயததிலோ வென்றால் ஸாதநததை அநுஷ்டிககும காலததிலும அவாகள பரமாதமாவுககுப பராதீநாகளாக இருககிறாரகள இபபடி அதயநதம அஸ்வா தீநமாக இருபபவாகளுககு விதி நிஷேத யோகயதை எபபடி ஏறபடும? இது 'ஸ்வதுஷிநு ப்ரவ்ருத்திஜாதே' இதயாதியால சொலலபபடும கருதது

**ஏஷ ஹ்யேவ** "**யம்**—எநத ஜீவனை, **ஏப்யோ லோகேப்ய:**—இநத லோகஙகளிலிருநது, **உந்நிநீஷதி**—உயரத தூககுவதறகு இசசிககிறானோ, **தம்**—அவனை, **ஏஷ ஏவ**—இநதப பரமாதமாவே, **ஸாது கர்ம**—நலல காமஙகளை, **காரயதி**—செயவிககிறான **யமதோ நிநீஷதி**—எவனைக கீழே தள்ளுவதறகு இசசிககிறானோ, **தம்**—அவனை, **ஏஷ ஏவ**—இநதப பரமாதமாவே, **அஸாது கர்ம காரயதி**—கெடட காரியஙகளைச செயவிககிறான இநத சருதி வாகயஙகள பரமாத மாவுககு வைஷம்ய நைர்க்ருண்யஙகளைச சொல்வனபோலவே காணபபடுகின்றன

**அசோத்யதே**—இநதச சஙகைககு ஸமாதாநம சொலலுகிறா ஜீவனகளதமது சைதநய சகதியையும பரவருததி நிவருததிகளுககு அபேக்ஷிதமாயுளள சகதியையும கரணகளேபரம முதலியவறறையும பரமாதமாவினிட மிருநதே பெறுகிறபடியால, அவாகள எபபொழுதும பரமாதமாதீநமான பரவருததியை உடைததாயிருககிறாரகள என்பது உணமையே ஆனால், அநதச சைதநயம முதலியவறறைககொணடு அநத ஜீவனகள ஒரு பரவருததியை ஆரமபிககும பொழுது அவாகள ஸவதநதராகளாகவே

அத்ரோச்யதே । ஸர்வேஷாமேவ சேதநாநாம் சிச்சக்தியோக: ப்ரவ்ருத்திசக்தியோக இத்யாதி ஸர்வம் ப்ரவ்ருத்திநிவ்ருத்திபரிகரம் ஸாமாந்யேந

---

அத்ரோச்யதே ... இந்தச் சங்கைக்கு ஸமாதானம் சொல்லப்படுகிறது பரமாத்மாவாகிற பகவான், ஸகல ஜீவன்களுக்கும், சைதந்யம் என்னும் சக்தியையும் கார்யங்களில் ப்ரவ்ருத்திக்கும் சக்தியையும் இம்மாதிரி ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்கு

---

ஆரம்பிக்கிறார்கள். அந்த ப்ரவ்ருத்தியின் ஆரம்பத்திற்குப் பரமாத்மாவின் அபேக்ஷையே இல்லை, அப்பொழுது அவன் கேவலம் உபேக்ஷகனாகவே இருக்கிறான். அப்படிப் பரமாத்மாவின் அபேக்ஷை இராமல் ஜீவன்கள் ப்ரவ்ருத்திக்கச் சக்தர்களாக இருக்கையிலும், அவர்கள் எப்பொழுதும் நியமிக்கப்படும் ஆஹனை உள்ளவரானபடியாலும், பரமாத்மா எப்பொழுதும் நியமிக்க ஆஹனா யிருக்கிறபடியாலும், 'பரமாத்மா எப்பொழுதும் நியமித்துக்கொண்டிருக்கிறான்' என்று நாம் வ்யவஹரிக்கிறோம். தவிரவும், ஒவ்வொரு ப்ரவ்ருத்தியிலும் ஸாதக ரூபங்களான பலன்களைக் கொடுப்பவன் பரமாத்மாவே. எந்தத் தேஹாதிகளைக்கொண்டு நாம் ப்ரவ்ருத்திக்கிறோமோ அவைகளும் அப்படி ஸ்வதந்த்ரமாகப் ப்ரவர்த்திக்கும் சக்தியும் அவனால் கொடுக்கப்பட்டவைகளே, அவனாலேயே அவை தரிக்கப்பட்டும் வருகின்றன, அவன் சேஷி, நாம் சேஷ பூதர்கள் ஆகையால் பகவானுடைய நியந்த்ருத்வத்திற்கு ஒரு விதமான குறைவுமில்லை. ப்ரதம ப்ரவ்ருத்தியில் இம்மாதிரி உபேக்ஷகனாக இருந்து விட்டுப் பிறகு பரமாத்மா, 'அந்த ப்ரவ்ருத்திக்கு அநுமதி கொடுக்கிறான்' என்றும் நாம் சொல்லுகிறோம். ஆனால், 'அநுமதி கொடுக்கிறான்' என்பதற்கு 'ப்ரவ்ருத்திக்காமல் இருக்கும் ஒருவனைப் ப்ரவ்ருத்திக்கும்படி செய்கிறான்' என்பது அர்த்தமன்று. ஆரம்பிக்கப்பட்ட ப்ரவ்ருத்தி பலவத்தாகப் பரிணமிக்க மாத்ரம் அந்த அநுமதி ஹேதுவாகின்றது. இப்படி ஜீவன்கள், தமது ஜ்ஞானம், ஒரு கார்யத்தைச் செய்ய வேண்டும் என்னும் இச்சை, அதற்காகச் செய்யப்படும் ப்ரயத்னம் இந்த அம்சங்களெல்லாவற்றிலும் ஸ்வதந்த்ரர்களாகவே இருக்கிறபடியால், அவர்கள், 'இதைச் செய், இதைச் செய்யக்கூடாது' என்பவை முதலிய விதி நிஷேதங்களுக்கு யோக்யர்களாகிறார்கள் என்பதில் ஆக்ஷேபமில்லை.

'அகார்யத்தைச் செய்யப்போகும் ஒரு ஜீவனைப் பரமாத்மா உபேக்ஷகனாகப் பார்த்துக்கொண்டு அதற்கு அவன் அநுமதியையும் கொடுக்கிறான் என்றால் அது பரமாத்மாவுக்குத் தோஷமாகமாட்டாதோ?' என்று ஒரு சங்கை உதிக்கலாம். இந்தச் சங்கைக்கும் அவகாசமில்லை. பரமாத்மா அப்படி அத்யந்தம் உபேக்ஷித்து நிற்கவில்லை; சாஸ்த்ர ப்ரவர்த்தனம் முதலியவைகளால், அவன், முதலிலேயே நம்மை அஹிதங்களான கார்யங்களிலிருந்து தடுத்திருக்கிறானன்றோ? அந்தத் தடையைக் கடந்து அஹிதங்களில் நாம் ப்ரவர்த்திக்க ஆரம்பித்தால், அப்பொழுது அவன் உபேக்ஷித்திருக்கிறான் என்பது எப்படி தோஷமாகும்?

च सामर्थ्याय, तन्निर्वहणाय तदाधारो भूत्वा, अन्तः प्रविश्य अनुमन्तृतया च नियमनं कुर्वन् शेषित्वेनावस्थितः परमात्मा। जीवश्च तदाहितशक्तिस्सन् प्रवृत्तिनिवृत्त्यादि स्वयमेव कुरुते। एवं कुर्वाणमीक्षमाणः परमात्मा उदासीन आस्ते। अतः सर्वमुपपन्नम्। साध्वसाधुकर्मकारयितृत्वं च व्यवस्थितविषयम्, न सर्वसाधा

---

வேண்டுமவையான கரண களேபரங்களையும், அந்தந்த ஜீவன்களுக்கு ஸ்வதந்த்ரங்களாக இருக்கும்படி பொதுவாக முதலில் கொடுக்கிறான். அப்படிக் கொடுக்கப்பட்டவைகளின் நிர்வஹணத்திற்காக, அவைகளுக்குத் தானே ஆதாரமாகவும் இருக்கிறான். அந்தக் கரண களேபரங்களைக் கொண்டு அந்த ஜீவன்களால் செய்யப்படும் வ்யாபாரங்கள் சிதிலமாகாமல் பலத்துடன் கூடினவைகளாக ஆகும்பொருட்டு, அந்தந்த ஜீவன்களுக்குள் தானே அநுப்ரவேசித்து, அந்த வ்யாபாரங்களுக்குத் தனது அநுமதியைக் கொடுத்து அவர்களை நியமித்தும் வருகிறான். இப்படியெல்லாம் இருக்கையில், அவனுக்கும் ஜீவன்களுக்குமுள்ள ஆத்ம சரீரபாவமும் தொடர்ந்தே வருகிறபடியால், அவனுடைய சேஷித்வமும் குறையாமலே நிற்கின்றது. ஜீவன், இவ்விதம் பகவானால் கொடுக்கப்பட்ட சக்தியை உடையவனாய், ஒரு காரியத்தைச் செய்வது மற்றொன்றை விடுவது முதலான வ்யாபாரங்களை ஸ்வயமே ஸ்வதந்த்ரமாகச் செய்கிறான். அப்பொழுது பரமாத்மா கேவலம் உபேக்ஷகனாகவே இருக்கிறபடியால், ஜீவன்களுக்குச் சொல்லப்பட்டுள்ள விதி நிஷேத யோக்யத்வமெல்லாம் உபபந்நமே. நல்ல காரியங்களையும் கெட்ட கா

---

**அநுமந்த்ருதயா:**—'சைதந்யம்' என்னும் சக்தியைப் பகவானே நமக்குக் கொடுக்கிறான். ஆனால் அது அவனுடைய நித்யேச்சையால் கொடுபட்டிருக்கிறபடியால் அது நமக்கு நித்யமாக இருக்கின்றது. ஆகையால்தான் ஜீவன்களை நித்யர்களென்றும் ஸ்வதந்த்ரர்களென்றும் நாம் சொல்லுகிறோம்.

**ஸாத்வஸாத்வகர்மகாரயித்ருத்வஞ்ச**—பரமாத்மா, சிலரை நல்ல காரியங்களைச் செய்விக்கிறானென்றும், மற்றும் சிலரைக் கெட்ட காரியங்களைச் செய்விக்கிறானென்றும் ச்ருதி ஸ்ம்ருதிகள் சொல்வது உண்மையே. ஸகல ஜீவன்களையும் அவன் அம்மாதிரி ப்ரவ்ருத்திப்பிக்கும் பக்ஷத்தில், அவனுக்குப் பக்ஷபாதம் நிர்தயத்வம் முதலிய தோஷங்கள் ப்ரஸங்கிக்கும். அப்படி எல்லாருடைய விஷயத்திலும் அவன் ப்ரவ்ருத்திக்கவில்லை. எவன் அதிமாத்ரம் பரம புருஷாநுகூல்யத்தில் உறுதியுடன் ஏற்கெனவே ஸ்வயமாக ப்ரவ்ருத்தித்திருக்கிறானோ, அவனை ப்ரீதியுடன் ப்ரமாத்மா அநுக்ரஹித்து, தன்னை அடையும் உபாயங்களில் அவனை ப்ரவ்ருத்திப்பிக்கிறான்; ப்ராதிகூல்யத்தில் அதிமாத்ரம் ப்ரவ்ருத்தித்திருப்பவனை நிக்ரஹித்து மேன்மேல் துஷ்கர்மங்களிலேயே அவனை ப்ரவ்ருத்திப்பிக்கிறான். இந்தச் சிஷ்டாநுக்ரஹ துஷ்டநிக்ரஹ ரூபமான பரிபாலனம் எப்படி தோஷமாகும்?

𑌰𑌣𑌮𑍍 । 𑌯𑌸𑍍𑌤𑍁 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌸𑍍𑌵𑌯𑌮𑍇𑌵𑌾𑌤𑌿𑌶𑌯𑌿𑌤𑌾𑌨𑍁𑌕𑍂𑌲𑍍𑌯𑍇 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌃, 𑌤𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌪𑍍𑌰𑍀𑌤𑌃 𑌸𑍍𑌵𑌯𑌮𑍇𑌵 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌦𑌾𑌨𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑍇 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌯𑌤𑌿 । 𑌯𑌃 𑌪𑍁𑌨𑌰𑌤𑌿𑌶𑌯𑌿𑌤𑌂 𑌪𑍍𑌰𑌾𑌤𑌿𑌕𑍂𑌲𑍍𑌯𑍇 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌕𑍍𑌰𑍂𑌰𑌾𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌂 𑌦𑌦𑌨𑍍 𑌸𑍍𑌵𑌯𑌮𑍇𑌵 𑌕𑍍𑌰𑍂𑌰𑍇𑌷𑍍𑌵𑍇𑌵 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 𑌪𑍍𑌰𑍇𑌰𑌯𑌤𑌿 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍: 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌂 𑌭𑌗𑌵𑌤𑌾—

“𑌤𑍇𑌷𑌾𑌂 𑌸𑌤𑌤𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌭𑌜𑌤𑌾𑌂 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌮𑍍 ।
𑌦𑌦𑌾𑌮𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌂 𑌤𑌂 𑌯𑍇𑌨 𑌮𑌾𑌮𑍁𑌪𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 ॥

---

மங்களையும் பரமாத்மாவே செய்விக்கிறான் என்பது சில வ்யவஸ்தித இடங்களில் மாத்ரமே ஒழிய, ஸகல ஜந்துக்கள் விஷயத்திலும் என்பது இல்லை. எவன் ஏற்கெனவே ஸ்வயமாக அதிமாத்ரம் பகவத் ப்ரியங்களான கார்யங்களில் ப்ரவ்ருத்தியைச் செய்து வருகிறானோ, அவனுக்கு இன்னும் அதிகமான நல்ல புத்தியைக் கொடுத்து, அம்மாதிரி ஸத் காமங்களிலேயே மேன்மேல் ப்ரவ்ருத்தியைப் பகவான் மிகுந்த ப்ரீதியுடன் செய்

---

“𑌤𑍇𑌷𑌾𑌂 𑌸𑌤𑌤𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂”—கீழ்ச் சொல்லப்பட்டுள்ள விஷயம் ஸ்ரீ பகவத் கீதையில் தெளிவாக விவரிக்கப்பட்டிருக்கிறபடியால், அந்தக் கீதா வாக்யங்களை இவ்விடத்தில் உதாஹரிக்கிறார். பத்தாவது அத்யாயத்தில், பகவானுடைய குணங்களுடையவும் அவனுடைய விபூதிகளுடையவுமான ஜ்ஞானம் பக்தியின் உத்பத்திக்கும் வ்ருத்திக்கும் காரணங்களாகின்றதென்பதைச் சொல்லிவிட்டு, பகவான், அப்படித் தோன்றின பக்தியை உடையவனுக்கு, தான் செய்யும் அநுக்ரஹ விசேஷத்தை இந்த ச்லோகத்தால் சொல்லுகிறான். 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌸𑌤𑌤𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌭𑌜𑌤𑌾𑌮𑍍—கீழ்ச் சொல்லியபடி பக்தி விவ்ருத்தமாகி அதனால் எப்பொழுதும் என்னுடன் சேர்க்கையைக் கோருகிறவர்களுக்கு, 𑌤𑌮𑍇𑌵 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌂 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌂 𑌦𑌦𑌾𑌮𑌿—என்னுடைய ப்ராப்திக்கு அவச்யம் அபேக்ஷிதமாயும் அதற்குப் பூர்வ பாவியுமான ஸாக்ஷாத்கார ரூப புத்தி யோகத்தை நானே ப்ரீதி பூர்வகமாகக் கொடுக்கிறேன். 𑌯𑍇𑌨 𑌤𑍇 𑌮𑌾𑌮𑍁𑌪𑌯𑌾𑌨𑍍𑌤𑌿—அந்த விசததமமான ஸாக்ஷாத்கார ரூப புத்தி யோகத்தாலேயே அவர்கள் என்னை அடைகிறார்கள். இதனால், முதலில் பகவத் குண ஜ்ஞானத்தால் பக்தி உண்டாகிறதென்றும், அவனுடைய விபூதி ஜ்ஞானத்தால் அது வ்ருத்தி அடைகின்றதென்றும், அதற்குப் பிறகு பகவத் ப்ராப்திக்கு அபேக்ஷிதமான விசததம ஸாக்ஷாத்கார ரூப அவஸ்தா விசேஷமானது நம்மால் ஸாதித்துக் கொள்ளக் கூடியதன்றாதலால் அதை அந்தப் பகவானே நமது ப்ரயத்நத்தால் ப்ரீதனாகி நமக்குக் கொடுக்கிறானென்றும் சொல்லப்பட்டதாகிறது. இந்தக் கொடையைத்தான், ச்ருதி, ‘நல்ல கர்மாவைச் செய்விக்கிறான்’ என்று சொல்லுகிறது.

தேஷாமேவாநுகம்பார்த்தமஹமஜ்ஞாநஜம் தம: ।
நாசயாம்யாத்மபாவஸ்தோ ஜ்ஞாநதீபேந பாஸ்வதா ॥ ”

[ஸ. கீ. 10—10, 11.]

---

விக்கிறான், எவன் அதிமாத்ரம் துஷ்காமங்களில் ஏற்கெனவே ப்ரவ்ருத்தித்திருக்கிறானோ, அவனுக்கு இன்னும் அதிகமான பாப புத்தியைக் கொடுத்து, அம்மாதிரி துஷ்காமங்களிலேயே மேன்மேல் ப்ரவ்ருத்தியைச் செய்விக்கிறான் இந்த அர்த்தத்தை, ஸ்ரீ பகவானே, “**தேஷாம் ஸததயுக்தாநாம்**”, ‘‘**தாநஹம் த்விஷத:**” இத்யாதியான தனது வாக்யங்களாலேயே தெளிவித்திருக்கிறான்

---

“**தேஷாமேவ** ... .”—நம்முடைய ஜன்மாந்தர பாபங்கள் ஏராளமாக இருக்கிறபடியால், அவை, பகவத் ப்ராப்திக்குப் பூர்வ பாவியான அந்தப் புத்தி யோகத்தை ஜநிக்கவொட்டாமல் தடுக்கின்றன. அந்தப் பாபங்களெல்லாம் பகவானுடைய ப்ரஸாதத்தாலேயே நாசமடையக் கூடியவையாதலால் இந்த அம்சத்தில் அவனுடைய அநுக்ரஹம் அவச்யம் அபேக்ஷிதமாகின்றது இந்த ச்லோகம், ‘பகவானே அத்த ப்ரதிபந்தகங்களெல்லாவற்றையும் நசிப்பிக்கிறான்’ என்பதைச் சொல்லுகிறது **தேஷாமேவாநுகம்பார்த்தம்**—அப்படிப்பட்ட பக்தர்களுடைய அநுக்ரஹத்திற்காகவே, **அஹமாத்மபாவஸ்த: ஸந்**—நான் அவர்களுடைய மனோவ்ருத்தியில் என்னுடைய குண கணங்களை ஆவிஷ்கரித்து நின்று கொண்டு, **பாஸ்வதா ஜ்ஞாநதீபேந**—என் விஷய ஜ்ஞானமாகிற ஜ்வலிக்கும் தீபத்தினுலே, **அஜ்ஞாநஜம் தம: நாசயாமி**—அந்தப் புத்தி யோகத்திற்கு விரோதிகளான காமங்களெல்லாவற்றையும் நசிப்பிக்கிறேன்

**தாநஹம் த்விஷத:** . . . ’—எவர்களைப் பகவான் ஸத்காம ப்ரவ்ருத்தியால் அநுக்ரஹிக்கிறான் என்பது கீழ்ல் நிரூபிக்கப்பட்டது, இந்த ச்லோகத்தால், துஷ்காம ப்ரவ்ருத்தியால் எவர்களை அவன் நிக்ரஹிக்கிறான் என்பது சொல்லப்படுகிறது. பதினாறாவது அத்யாயத்தில், சாஸ்த்ரத்தை அதிலங்கனம் செய்யும் ஆஸுர ஸ்வபாவத்தைச் சொல்லி வரு மிடத்தில், தன்னை த்வேஷிக்கும் துஷ்கருதிகளைத் தானே நிக்ரஹிப்பதாகப் பகவானால் சொல்லப்பட்டிருக்கிறது **த்விஷதஸ்தாந் க்ரூராந் நராதமாநஹம்**—சாஸ்த்ரத்தை அதிலங்கனம் செய்து துஷ்காமங்களிலேயே ப்ரவ்ருத்திக்கும் பாபிகளை, **அஜஸ்ரம் ஸம்ஸாரேஷு, (தத்ராபி) ஆஸுரீஷ்வேவ யோநிஷு க்ஷிபாமி**—இறப்புப் பிறப்பு ரூபமாகச் சுழன்று வரும் ஸம்ஸாரங்களிலும், அதிலும் என்னுடைய ஆநுகூல்யத்திற்கு விரோதிகளாக இருக்கும் ஜன்மங்களிலேயே போடுகிறேன் இப்படிப்பட்டவர்களுக்குப் பாப புத்தியைக்கொடுப்பது பகவத் க்ருபா கார்யமே தவிர நைர்க்ருண்யமாக மாட்டாது இம்மாதிரி பாப காமங்களால் அவர்கள் சீக்ரத்திலேயே சாஸ்த்ர விதி நிஷேதங்களுக்கு அநர்ஹமான ஜன்மங்களைப் பெற்று

"தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் |
க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு ||" இதி [ஸ்ரீ.கீ.]

ஸோऽயம் பரப்ரஹ்மபூத: புருஷோத்தமோ நிரதிஶய புண்ய ஸம்சயக்ஷீணாஶேஷஜந்மோபசிதபாபராஶே: பரமபுருஷசரணாரவிந்தஶரணாகதிஜநிததபிமுக்யஸ்ய ஸதாசார்யோபதேஶோபப்ரும்ஹிதஶாஸ்த்ராதிகததத்த்வயாதாத்ம்யாவபோதபூர்வகாஹரஹருப

---

**ஸோऽயம் பரப்ரஹ்மபூத:** . . —எவன் அளவற்ற புண்ய விசேஷத்தால் நாசத்தை அடைந்திருக்கிற ஸகல ஜந்மாந்தர பாபங்களை உடைத்தாயும், பரம புருஷனுடைய பாதாரவிந்தங்களையே தஞ்சமாகக் கைப்பற்றி அதனால் அந்தப் பகவானுடைய ஆபிமுக்யத்தை ஸம்பாதித்துக்கொண்டும், சாஸ்த்ரங்களிற் சொல்லப்பட்டுள்ள தத்வங்களின் உண்மையை ஸதாசார்யர்களுடைய உபதேசத்தினால் தெளியப்பெற்று அந்தத் தெளிவினால் பக்தி தினமும் மேன்மேல் வளர்ந்துவரும்

---

பிறகு உஜ்ஜீவநத்தைத் தேடக்கூடிய தசையை அதிக விளம்பமில்லாமல் அடைவதற்கு ஆஹராகிறார்கள், பாப புத்தியைக்கொடா விட்டால், அவர்கள், சாஸ்த்ர விதி நிஷேதங்களுக்கு ஆஹமான ஜந்மங்களையே பஹு காலம் அடைந்தவர்களாய், அந்த ஜந்மங்களிலும் அதிகமான பாபத்தை ஸம்பாதித்துக்கொண்டே உஜ்ஜீவநோபாயத்திற்கு அதிமாத்ரம் விப்ரக்ருஷ்டராவார்களன்றோ ?

**ஸோऽயம் பரப்ரஹ்மபூத:** . . . . —ஜீவாத்மாக்களெல்லாம் பரமாத்மாவின் நியமநத்திற்கு உட்பட்டவைகள் என்று சொல்வதால் ப்ரஸங்கிக்கும் சங்கைகள் இதுவரை பரிஹரிக்கப்பட்டன இந்தப் பரிஹாரத்தில் பரமாத்ம ப்ராப்திக்கு உபாயமான பக்தி ப்ரஸக்தமானதால், இப்பொழுது அந்த உபாயத்தைத் தெளிய விசாரிக்கப் ப்ரவர்த்திக்கிறார் ஏற்கெனவே "**அத்ரேதம் ஸர்வஶாஸ்த்ரஹ்ருதயம்**" [213-வது பக்கத்தைப் பார்க்க] என்று ஆரம்பித்து இந்த உபாயம் ஸங்க்ரஹமாக விசாரிக்கப்பட்டிருக்கிறது இவ்விடத்தில் அதை ஸ்புடமாகச் சொல்லுகிறார்

**பரமபுருஷசரணாரவிந்தஶரணாகதி**—இது, "**மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே**" என்று சொல்லப்படும் அங்க ப்ரபத்தியைச் சொல்லுகிறது

**உபப்ரும்ஹித**—புஷ்கலமாகச் செய்யப்பட்ட ஸதாசார்யர்களின் உபதேச முகமாக அடையப்பட்ட ஜ்ஞாநமே தெளிந்த ஜ்ஞாநமாகு மென்பது குறிப்பு.

***ஶமதமதப:ஶௌசக்ஷமார்ஜவபயாபயஸ்தாநவிவேகதயாஹிம்ஸா த்யாத்மகுணோபேதஸ்ய வர்ணாஶ்ரமோசிதபரமபுருஷாராதநவேஷ நித்யநைமித்திககர்மோபஸம்ஹ்ருதிநிஷித்தபரிஹாரநிஷ்டஸ்ய பரம புருஷசரணாரவிந்தயுகளந்யஸ்தாத்மாத்மீயஸ்ய தத்பக்திகாரிதாநவரதஸ்துதி***

---

சமம் தமம் தபஸ் சௌசம் க்ஷமை ஆர்ஜவம் பகவதபசாராதிகளிலிருந்து பயம் பகவான் ரக்ஷிப்பன் என்னும் விச்வாஸத்தால் ஜநிக்கும் தைர்யம் தயை அஹிம்ஸை இவை முதலிய ஆத்ம குணங்களை உடையவனும், தனது வர்ணத்திற்கும் ஆச்ரமத்திற்கும் உசிதமான நித்ய நைமித்திக கர்மங்களைப் பரம புருஷாராதந ரூபமாக விடாமற் செய்வதிலும் நிஷித்த கர்மங்களைப் பரிஹரிப்பதிலும் நிஷ்டையை உடையவனும், தான் தன்னைச் சேர்ந்தவை இவையெல்லாவற்றையும் பரம புருஷனுடைய பாதாரவிந்தங்களில் ஸமர்ப்பித்துவிட்டு அவனிடத்திலுள்ள பக்தியை உள்ளடக்கக் கூடாமல் எப்பொழுதும் அவனுடைய ஸ்தோத்ரம் ஸ்மரணம் நமஸ்காரம் வந்தநம் கைங்கர்யங்களில் ப்ரயத்நம் நாம ஸங்கீர்த்தநம் குண ச்ரவணம் குணவசநம் த்யாநம் அர்ச்சநம் ப்ரணாமம் இவை முதலானவைகளைச் செய்துகொண்டு அவைகளால் ப்ரீ

---

**தத்யாதாத்ம்ய**—'**தத்**' என்பது ஸ்வாமியையும் '**யாதாத்ம்யம்**' என்பது அதன் ப்ரகாரத்தையும் குறிக்கின்றன.

**ஶம:**—அந்த:கரணத்தின் ஜயம், **தம:**—பாஹ்யேந்த்ரியங்களின் ஜயம்; **தப:**—க்ருச்ராதிகளால் ஏற்படும் பரிசுத்தி; **க்ஷமா**—துக்கத்தைப் பொறுக்கும் தன்மை; **பயஸ்தாநவிவேக:**—பகவத் பாகவதாபசாராதிகளிலிருந்து பயப்படும் தன்மை, **அபயஸ்தாநவிவேக:**—பகவானே ரக்ஷகன் என்னும் த்ருட நிச்சயத்தால் ஏற்படும் தைர்யம்; **தயா**—பிறர்களின் துக்கத்தை ஸஹியாமலிருக்கும் தன்மை, **அஹிம்ஸா**—பிறர்களுடைய துக்கத்திற்குக் காரணமாகாமல் இருப்பது.

**பரமபுருஷாராதநவேஷ**—நாம் நித்ய நைமித்திக ரூபங்களான கர்மங்களைச் செய்யும்பொழுதெல்லாம் அவைகளைப் பகவதாராதந ரூபமாகவே செய்ய வேண்டும். **உபஸம்ஹ்ருதி**—அநுஷ்டாநம்; **நிஷித்தபரிஹார**—சாஸ்த்ரங்களில் விஹிதங்களான கர்மங்களைச் செய்வதுபோல் சாஸ்த்ரத்தில் நிஷித்தங்களாக இருக்குமெல்லாவற்றையும் ஸாவதாநமாகப் பரிஹரிக்க வேண்டுவதும் அவசியம்.

**ந்யஸ்தாத்மாத்மீயஸ்ய**—இது பரஸமர்ப்பணத்தைக் குறிக்கிறது. **பக்திகாரித**—பகவானை ஸ்தோத்ரம் செய்வது முதலியவையெல்லாம், உள்ளிருக்கும் பக்தியின் பரீவாஹமாக இருத்தல்வேண்டும். **ஸ்துதி:**—குணங்களைச் சொல்லுவது, **யதநம்**—பகவத் த்யாநம் முதலியவைகளைச் செய்வது; **கீர்த்தநம்**—நாமோச்சாரணம்; **வசநம்**—மற்றவர்களுக்குப் பகவத் குணங்களைச் சொல்லுவது, **த்யாநம்**

[illegible]

---

தன்ன பரம காருணிகனுயிருக்கும் பரம புருஷனுடைய அநுக்ரஹத்தைப் பெற்று அதனால் த்வம்ஸம் அடைந்திருக்கும் அந்த கரண அந்தகாரங்களையும் உடைத்தாயுமிருக்கிறதே, அவனுடைய அநந்ய ப்ரயோஜநமும் எப்பொழுதும்

---

இது அங்கியாகிற அவிச்சின்ன ஸ்ம்ருதி ஸந்ததி ரூபமான அநுத்யானத்தைக் குறிக்கவில்லை, கேவலம் ஆரம்பண ஸம்சீலநத்தை மாத்ரம் குறிக்கின்றது. [illegible]—சில இடங்களில் ஆச்சரணாதிகள் அங்கியாகச் சொல்லப்பட்டிருந்தபோதிலும், அவைகள் அங்கங்களாகவும் சொல்லப்படக்கூடும். த்ருவாணுஸ்ம்ருதி விதிக்கும் வரையில் செய்யப்படும் ஆச்சராதிகள் அங்கம், பிறகு அநுஷ்டிக்கப்படுமவை அங்கி என்பது விபாகம். [illegible]—பாபங்களை மூலமாக உடைய ரஜஸ் தமோ குணங்கள், இவைகள் பரம புருஷனுடைய அநுக்ரஹத்தாலேயே விலகவேண்டும். [illegible]—அநந்ய ப்ரயோஜனமாயும் நிரதிசய ப்ரியமாயும் மிகத் தெளிவான ப்ரத்யக்ஷத் தன்மையை அடைந்து மிருக்கும் அவிச்சின்ன ஸ்ம்ருதி ஸந்ததி ரூபமான அநுத்யானமே பக்தி என்று இவ்விடத்தில் சொல்லப்பட்டிருக்கிறது இது தான் பகவதநுபவ அபிநிவேசமாகிற பரம பக்தி. இதற்குப் பூர்வ பாவியானது பகவத் ஸாக்ஷாத்காரத்தால் ஏற்படும் பர ஜ்ஞானம். அதற்குப் பூர்வ பாவியான ஸாக்ஷாத்கார அபிநிவேசத்தைப் பர பக்தியென்று சொல்லுவார்கள். "தேஷாம் ஸததயுக்தாநாம்" என்கிறபடி இவையெல்லாம் பகவானாலேயே ப்ரீதி பூர்வகமாகக் கொடுக்கப்படுமவை அதற்குப் பாத்ரமாக நாம் நம்மைச் செய்துகொள்ளவேண்டும்

இந்த ப்ரகரணத்திலுள்ள வாக்யங்களை நன்றாக அறிவதற்கு, இது விஷயமான நமது ஸித்தாந்தம் யாது என்பதை நாம் தெரிந்துகொள்ளவேண்டும். இவ்விடத்தில் ஸ்ரீ பாஷ்யகாரர், உபேயமாகிற ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை விவரித்த பிறகு, அந்த ப்ரஹ்மத்தை அடைவிக்கும் உபாயத்தின் ஸ்வரூபத்தை "ஸோऽயம் பரப்ரஹ்மபூத:......" இத்யாதியான வாக்யங்களால் விஸ்தாரமாக விசாரிக்க ஆரம்பிக்கிறார். லோகத்தில் நாம் ஒரு பலத்தைப் பெறுவதற்காகச் சில ஸாதநங்களைச் செய்கிறோம். அந்தப் பலம் உபேயமென்றும் அதை அடைவதற்காகச் செய்யப்படும் ஸாதநங்கள் உபாயமென்றும் வ்யவஹரிக்கப்படும். அவை இரண்டும் வெவ்வேறே. அம்மாதிரியே பகவத் ப்ராப்தியை உத்தேசித்து ஒருவன் பக்தி முதலிய சில ஸாதநங்களைச் செய்யும் பொழுது பகவானை உபேயமென்றும் அந்த ஸாதநங்களை உபாயமென்றும் சொல்லக்கூடும். ஆனால் பகவானை அடைவதற்காகச் செய்யப்படும் வ்யாபாரங்களெல்லாம் அந்தப்

***ஸ்தி ஸந்தத்யநவதிகாதிசயப்ரியவிசததமப்ரத்யக்ஷதாப
ந்நாநுத்யாநரூபபக்த்யேகலப்ய: ।***

---

*தொடர்ந்து நிற்பதும் அளவற்ற ப்ரீதியுடன் கூடியதும் மிகத் தெளிந்ததும் ஆகையால் ஸாக்ஷாத்காரத் தன்மையை அடைந்ததுமான அநுத்யானம் என்று சொல்லப்படும் பக்தி ஒன்றுக்கே அந்தப் பரமாத்மா வசப்படுகிறான்.*

---

பகவததீனங்களாகவே இருக்கிறபடியால், பகவானை அடைய ப்ரயத்நப்படுபவர்கள விஷயத்தில் அந்தப் பகவானே உபாயமாகவும் உபேயமாகவும் ஆகிறான் என்று பெரியோர்கள் நிர்வஹிக்கிறார்கள். நம்மால் செய்யப்படும் பக்தி முதலியவையெல்லாம், பகவானை அடையவொட்டாமல் தடுத்துக்கொண்டு நிற்கும் பகவந் நிக்ரஹ ரூபமான காலுஷ்யத்தை நிவ்ருத்திப்பதில் மாத்ரம் உபாயங்களாகின்றனவே தவிர, பகவத் ப்ராப்திக்கு பகவானே அவ்யவஹித உபாயம் ஆகிறான். வ்யவஹித உபாயங்களாக இருக்கும் பக்தி முதலியவைகளே இவ்விடத்தில் 'உபாயம்' என்னும் சப்தத்தால் குறிக்கப்படுகின்றன. அப்படிப்பட்ட உபாயங்கள பக்தி ப்ரபத்தி என்று இருவகைப்பட்டவை என்பது நமது ஸித்தாந்தம். இவ்விடத்தில் பக்தி என்னும் உபாயமே ப்ரஸ்தாவிக்கப்படுகின்றது.

இந்தப் பக்தியின் வரலாறு பின்வருமாறு ஸ்ரீ பகவத் கீதை முதலிய க்ரந்தங்களில் விவரிக்கப்பட்டிருக்கின்றது முமுக்ஷுவானவன், முதலில், சாஸ்த்ரங்களைக் கொண்டு, ஜீவன் பரமாத்மா இவை முதலியவைகளின் உண்மையான ஜ்ஞானத்தை ஸம்பாதித்து, பிறகு அந்த ஜ்ஞானத்துடன், பலம் முதலியவைகளில் பற்றில்லாமலும் சிற்சில நியமங்களுடனும் சில, கர்ம விசேஷங்களை இடைவிடாமல் செய்து வரவேண்டும். அப்படிச் செய்து வந்தால், அவனுக்கு அந்த:கரண ஜயம் பிறக்கின்றது, சாஸ்த்ரத்தால் ஏற்பட்ட ஜ்ஞானமும் த்ருடப்படுகின்றது. இந்தக் கர்ம விசேஷங்களின் அநுஷ்டானத்தைக் கர்மயோகம் என்று சொல்வார்கள். பிறகு, அந்த அந்த:கரண ஜயத்துடன் தனது ஆத்ம ஸ்வரூபத்தை, ப்ரக்ருதி முதலியவைகளைக் காட்டிலும் வேறுபட்டதாகவும் ஈச்வரனைப் பற்ற சரீரத்தன்மையினால பரகாரமாவும் நிரந்தரம் சிந்தனம் செய்துகொண்டு வந்தால், அந்தச் சிந்தனம் அஷ்டாங்க யோகத்தின் வழியாக ஆத்மாவலோகநத்தைப் பிறப்பிக்கும். இப்படி ஆத்ம ஸ்வரூபத்தை நிரந்தரம் சிந்திப்பதை ஜ்ஞாநயோகம் என்று சொல்வார்கள் இந்த ஜ்ஞான யோகமின்றிக்கே கர்ம யோகமே ஸாக்ஷாத்தாக ஆத்மாவலோகநத்தை ஸாதித்துக் கொடுக்கும் என்றும் ஒரு பக்ஷமுண்டு. இந்த வ்யாபாரங்கள் ஒவ்வொன்றிலும் பகவானிடத்தில் ஒரு ப்ரீதி விசேஷம் அவச்யம் அபேக்ஷிதம். அவனுடைய கடாக்ஷமின்றிக்குச் சாஸ்த்ரங்களால் ஏற்படும் ஜ்ஞானம் கூட சரியானபடி ஏற்படமாட்டாது. இந்த ப்ரீதி விசேஷத்தை ஸாமாந்யமாகப் பக்தி என்று சொல்வார்கள். இது ஸாத்விக ஸம்ஸர்க்கத்தாலும் ஸாத்விக பரிசீலநம் முதலியவைகளாலும் ஏற்படவேண்டும். இப்படி ஆத்மாவலோகநம் கிடைத்த பிறகு அந்த

ததேதத் பகவத்யாமுநாசார்யபாதை:—“உபய பரிகர்மித ஸ்வாந்தஸ்ய ஐகாந்திகாத்யந்திக பக்தியோகலப்ய:” இதி ।

---

பகவத் யாமுநாசாரியர், “உபய பரிகர்மித” இத்யாதி வாக்யத்தால் இந்த அர்த்தத்தை அநுக்ரஹித்திருக்கிறார். இந்த வாக்யத்திலுள்ள “உபய பரி

---

ஆத்மாவுக்கு அந்தர்யாமியாக இருக்கும் பகவானுடைய ஸ்வரூபம் முதலியவைகளை அளவற்ற ப்ரீதியை முன்னிட்டு த்யாநம் செய்து வந்தால், அது பகவானை ஸாக்ஷாத்கரிப்பதற்குத் துல்யமான ஒரு தெளிவை உண்டாக்கும். இப்படிப் பகவானை த்யாநம் செய்து வருவதைப் பக்தி யோகம் என்று சொல்வார்கள். இந்த த்யாநத்தை அநுஷ்டிக்க அநுஷ்டிக்க, அதனால் ஏற்படும் தெளிவும் அதிகமாகி வரும். இந்த ஜ்ஞாந விகாஸத்திற்கு ஸத்வ குணத்தின் வ்ருத்தி முக்ய ஹேது வாதலால், அந்த ஸத்வ வ்ருத்திக்கு ப்ரதிபந்தகங்களாக இருக்கும் பாபங்களை நசிப்பிக்கக் கூடியவையான வர்ணாச்ரம தர்மங்களை நாம் தவறாது அநுஷ்டித்து வருவது அவசியமாகின்றது. இவ்விதம் ஸத்வம் வ்ருத்தியாகி ஜ்ஞாநம் விகாஸத்தை அடைந்து, ஸாக்ஷாத்காரத்துக்குத் துல்யமான வைசத்யம் ஏற்பட்டால், அப்பொழுது, பகவானை ஸாக்ஷாத்கரிப்பதில் ஒரு தீவ்ரமான அபிநிவேசம் உண்டாகும். அந்த அபிநிவேசத்தைப் பிறப்பிக்கும் ஜ்ஞாந விகாஸத்திற்குப் பர பக்தி என்று பெயர். இந்த அபிநிவேசம் உத்கடமாகி, அது கேவலம் ப்ரீதி காரணமாய் அந்தப் பகவானுடைய ஸ்துதி நமஸ்கார கீர்த்தநம் முதலியவைகளில் ப்ரவஹித்தால், அப்பொழுது பகவான் அந்தப் பக்தனை அநுக்ரஹித்து, அந்தக் காலத்தில் மாத்ரம் இருக்கக்கூடிய ஒரு பரிபூர்ண ஸாக்ஷாத்காரத்தைப் பிறப்பிக்கிறான். அந்த ஸாக்ஷாத்காரத்திற்குப் பர ஜ்ஞாநம் என்று பெயர். இப்படிப் பகவத் ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரித்தவாறே, பகவானிடத்தில் இருக்கும் ப்ரீதி வளர்ந்து, அது பரம பக்தி என்னும் தசையை அடைகின்றது. அப்பொழுது, எவ்வித குறைவுமின்றி இருக்கும் பகவானை அநுபவித்தாலல்லது ஆத்ம தாரணம் ஸாத்யமில்லாமல் இருக்கும். அந்தத் தசையில் ஸர்வேச்வரனுக்கு த்வரை உண்டாகி சாச்வதமான பரிபூர்ண ப்ரஹ்மாநுபவம் என்னும் மோக்ஷத்தைக் கொடுக்கிறான். இந்தப் பரம பக்தியானது சாஸ்த்ர ஜந்ய தத்வஜ்ஞாநம் முதலான பரம்பரையாலேயே ஜநிக்கக்கூடியது. இது தான் இவ்விடத்தில் மோக்ஷத்திற்கு உபாயமாகச் சொல்லப்படுகிறது; இதைத் தவிர்த்து பகவானை அடைவதற்கு வேறு உபாயமில்லை.

“உபய பரிகர்மித ஸ்வாந்தஸ்ய........” இது ஸ்ரீ ஆளவந்தாருடைய திவ்ய ஸூக்தி. ‘கர்ம யோகம் ஜ்ஞாநயோகம் ஆகிய இவைகளால் ஸம்ஸ்கரிக்கப்பட்டுள்ள அந்த:கரணத்தை உடையவனே, தனது ஐகாந்திக ஆத்யந்திக பக்தியால் பகவானை அடைகிறான்’ என்பது அதன் பொருள். இதனால், உபாயமாகிற பக்திக்கு கர்மயோக ஜ்ஞாநயோகங்கள் அங்கங்கள் என்பது விவரிக்கப்பட்டது. ‘கர்மயோகம்

உபயபரிகர்மிதஸ்வாந்தஸ்ய — ஜ்ஞாநயோககர்மயோகஸம்ஸ்க்ருதாந்த:கரணஸ்யேத்யர்த்த: । ததா ச ஶ்ருதி: —

“ வித்யாம் சாவித்யாம் ச யஸ்தத்வேதோபயம் ஸஹ ।
அவித்யயா ம்ருத்யும் தீர்த்வா வித்யயாம்ருதமஶ்நுதே ॥ ”

இதி । அத்ராவித்யாஶப்தேந வித்யேதரவர்ணாஶ்ரமாசாரவிஹிதம் கர்மோச்யதே । வித்யாஶப்தேந ச த்யாநரூபம் ஜ்ஞாநமுச்யதே । யதோக்தம் —

---

கர்மிதஸ்வாந்தஸ்ய ” என்பதற்கு ‘ஜ்ஞாந யோகத்தாலும் கர்மயோகத்தாலும் ஸம்ஸ்காரத்தை அடைந்திருக்கும் அந்த:கரணத்தை உடையவனுக்கு’ என்பது பொருள். “வித்யாம் ச” இத்யாதியான வேதவாக்யமும் அப்படியே சொல்லுகின்றது. இவ்விடத்தில் ‘அவித்யா’ என்னும் சப்தம், வித்யையைக்காட்டிலும் வேறுபட்டதான வர்ணாச்ரமாசாரம் முதலிய கர்மத்தைக் குறிக்கின்றது. ‘வித்யா’ என்பது, ‘பக்தி’ என்னும் தன்மையை அடைந்திருக்கும் த்யாநத்தைக் குறிக்கின்றது.

---

ஜ்ஞாந யோகம் இவைகள் பகவத் ப்ராப்திக்கு உபாயங்கள்’ என்று சில இடங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது. அதற்கு ‘பக்தியின் வழியாக இவை உபாயங்களாகின்றன’ என்று பொருள் சொல்ல வேண்டும். ‘ஐகாந்திகம்’ என்பதற்கு ‘ஸர்வேச்வரன் ஒருவனைத் தவிர்த்து மற்றொன்றிலும் செல்லாமல் இருக்கும்’ என்பது பொருள். ‘ஆத்யந்திகம்’ என்பதற்கு ‘எப்பொழுதும் இருக்கக்கூடிய’ என்பது பொருள்.

“ வித்யாம் ச . . ” ‘பக்திக்குக் கர்மாநுஷ்டானம் அவச்யம் அபேக்ஷிதம்’ என்பதற்கு ப்ரமாணமாக, இது இவ்விடத்தில் கூறப்படுகிறது. ‘எவன் வித்யை அவித்யை இரண்டையும் தெரிந்து கொள்ளுகிறானோ அவன், அவித்யையால் ம்ருத்யுவாகிற பாபத்தைக் கடந்து வித்யையால் மோக்ஷத்தை அடைகிறான்’ என்பது இந்த வாக்யத்தின் அர்த்தம். இவ்விடத்தில் ‘வித்யை’ என்னும் சப்தம் பக்தி ரூபத்தை அடைந்திருக்கும் த்யாநத்தைச் சொல்லுகின்றது. அதனுடன் கூடச் சொல்லப்பட்டிருக்கும் ‘அவித்யை’ என்னும் சப்தம், ‘அந்த வித்யையைக் காட்டிலும் வேறான’ அதாவது ‘வர்ணாச்ரமங்களுக்குரிய கர்மங்கள்’ என்பதைக் குறிக்கின்றது. இம்மாதிரி சப்த ப்ரயோகம் செய்வது ஸாதாரணமே. “ மஹாத்மாநு மஹாத்மாநம்ஸ்ம்ரு ” என்னும் பகவத் கீதா வாக்யத்தில், ‘மஹாத்மா’ என்பதற்கு ‘தேஹம்’ என்னும் அர்த்தம் கிடைக்கவே, ‘அமஹாத்மா’ என்பதற்கு, ‘தேஹத்தைக் காட்டிலும் வேறுபட்டதான ஆத்மா’ என்னும் அர்த்தம் க்ரஹிக்கப்படுகின்றது. இம்மாதிரி இன்னும் அநேக இடங்களைக் காணலாம்.

" இயாஜ ஸோऽபி ஸுபஹூந் யஜ்ஞாந் ஜ்ஞாநவ்யபாஶ்ரய: ।
ப்ரஹ்மவித்யாமதிஷ்டாய தர்த்தும் ம்ருத்யுமவித்யயா ।"

இதி ।

" தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி ।
நாந்ய: பந்தா அயநாய வித்யதே । "
" ய ஏநம் விதுரம்ருதாஸ்தே பவந்தி "
" ப்ரஹ்மவிதாப்நோதி பரம் "
" ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி "

---

"'இயாஜ' என்னும் ச்லோகத்தில், இம்மாதிரியே 'அவித்யா' என்னும் சப்தம் கர்மத்தைக் குறிப்பதாக ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கிறது. "தமேவம் வித்வாந்....", 'நாந்ய: பந்தா:......', 'ய ஏநம் விது:... ..', 'ப்ரஹ்மவிதாப்நோதி.........' 'ப்ரஹ்மவேத... ...' இத்யாதிகளான வாக்யங்களில் காணப்படும் 'வேதந' என்னும் சப்தத்தால் த்யானமே குறிக்கப்படுகின்றது, 'நிதித்யாஸிதவ்ய:' இத்யாதியான சப்தங்களுக்கும் இதற்கும் ஒரே அர்த்தமன்றோ? 'நாயமாத்மா ..... ...' இத்யாதி

---

"இயாஜஸோऽபி. . . " அவித்யா' என்னும் சப்தம் 'காமம்' என்னும் அர்த்தத்தில் ஸாக்ஷாத்தாக ப்ரயோகிக்கப்படுவது உண்டு என்பதற்கு இந்த வாக்யம் ப்ரமாணமாகக் கூறப்படுகின்றது. ப்ரஹ்மவித்யாமதிஷ்டாய—விவேகத்தால் உண்டாகும் ஜ்ஞானத்தை உடையவனாய், அவித்யயா ம்ருத்யும் தர்த்தும்—காமங்களால் ப்ரதிபந்தங்களை விலக்கிக்கொள்வதற்காக, ஸ ஸுபஹூந் யஜ்ஞாந் இயாஜ—அவர் அநேக யாகங்களைச் செய்தார். 'அவித்யையால் பாபங்களைப் போக்கிக் கொள்வதற்காக யாகங்களைச் செய்தார்' என்று சொன்னதால், 'அவித்யை' என்னும் சப்தம் யாகாநுஷ்டானம் முதலிய காமங்களைக் குறிக்கின்றது என்பது வ்யக்தம்.

'தமேவம் .... .. ..........'பக்தி என்பது கீழ்ச் சொன்ன ப்ரகாரம் கர்மாநுக்ருஹீதமாக இருக்க வேண்டும் என்பதை உபபாதித்து விட்டு, இப்பொழுது 'அப்படிப்பட்ட பக்தி பகவத் ப்ராப்திக்கு உபாயம்' என்பதைச் சொல்ல ஆரம்பிக்கிறார். முதலில் பக்தியை உபாயமாக விதிக்கும் ச்ருதி வாக்யங்களை எடுத்துக்கொண்டு, அவைகள் எல்லாவற்றுக்கும் ஒற்றுமையாயிருக்கும் அர்த்தத்தை விவரிக்கிறார் அந்த வாக்யங்களின் அர்த்தமாவது: 'அவனை இவ்விதம்

உத்யாதிவாக்யேஷு வேதநசப்தேந த்யாநமேவாபிஹிதம்; 'நிதித்யாஸிதவ்ய:' இத்யாதிபிரைகார்த்யாத் । தஸ்யைவ த்யாநஸ்ய ஸ்வரூபமபி விசிநஷ்டி—

"நாயமாத்மா ப்ரவசநேந லப்யோ ந மேதயா ந பஹுநா ச்ருதேந । யமேவைஷ வ்ருணுதே தேந லப்யஸ்தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்" [கட 1-2-23.]

இதி । ப்ரியதமஸ்யைவ ஹி வரணீயத்வம்; யஸ்யாயம் நிரதிசயப்ரியஸ்ஸ ஏவாஸ்ய ப்ரியதமோ பவதி । யதாயம் ப்ரியதம ஆத்மாநம் ப்ராப்நோதி ததா ஸ்வயமேவ பகவாந் ப்ரயததே இதி பகவதைவோக்தம் — ...

வதா—

யான வாசயம், அந்த த்யாநம் எப்படிப்பட்டது என்பதைத் தெளிய விளக்குகின்றது. 'பக்தி ரூபத்தை அடைந்திருக்கும் அநுத்யாநத்தால மாத்ரம் (அவன்) அடையப்படுகிறான்; கேவலம் வேதநத்தால (அதாவது த்யாநத்தால்) அவன் அடையப்படுகிறானில்லை' என்பது இந்த வாக்யத்தின் கருத்து, 'ந மேதயா' என்று கேவலமான மேதை (அதாவது தயாநம்) நிஷேதிக்கப்பட்டிருக்கிறதன்றோ? இவ்வளவு சொன்னதன் தாத்பர்யமாவது, 'எவன் மோக்ஷத்தில் விருப்பமுள்ளவனாய் வேதாந்த சாஸ்த்ரத்திற் சொல்லப்பட்

த்யாநம் செய்கிறவன மோக்ஷத்தை அடைகிறான; மோக்ஷத்திற்கு வேறு மார்க்கம இல்லை'. 'இவ்விதம எவர்கள த்யாநிக்கிறார்களோ, அவர்கள மோக்ஷத்தை அடைகிறார்கள்', 'ப்ரஹ்மத்தை தயாநிக்கிறவன் ப்ரஹ்மத்தை அடைகிறான்'. இந்த வாக்யங்கள் எல்லாவற்றிலும் 'வேதநம்' எனனும் சப்தம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. அந்த சப்தத்தால த்யாநமே குறிக்கப்படுகின்றது எனபது ஸ்ரீபாஷ்யகாரருடைய திருவுள்ளம். ஏனென்றால், மற்றொரு ச்ருதியில் ப்ரஹ்ம ப்ராப்திக்கு உபாயத்தைச் சொல்லுமிடத்தில், 'நிதித்யாஸிதவ்ய:' என்று தயாநத்தைச் சொலலும் சப்தமே ப்ரயோகிக்கப்பட்டிருக்கின்றது. எல்லா ச்ருதிகளுக்கும் ஐககண்ட்யம் சொலலவேண்டியது அவச்யமாதலால் இவ்விடத்தில் ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கும 'வேதந' சப்தமும் அந்த அர்த்தத்தையே சொல்லவேண்டும் என்பதுதான் காரணம்.

'நாயமாத்மா.........' 'இப்படி வேதந சப்தத்திற்கு த்யாநமே பொருள் என்பதை ஒத்துக்கொண்டாலும, உபாயமாகச் சொல்லப்பட்டிருப்பது தயாநமே

" புருஷ: ஸ பர: பார்த்த பக்த்யா லப்யஸ்த்வநந்யயா | "

[ஸ. கீ. 8-22.]

" பக்த்யா த்வநந்யயா சக்ய: அஹமேவம்விதோऽர்ஜுந |
ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப || "

[ஸ. கீ. 11-54]

" பக்த்யா மாமபிஜாநாதி யாவாந் யச்சாஸ்மி தத்த்வத: |
ததோ மாம் தத்த்வதோ ஜ்ஞாத்வா விசதே ததநந்தரம் || "

[ஸ. கீ. 18-55.]

---

ளள வேதநம் என்னும் த்யாநம் முதலியவைகளுடன் கூடினவனாக இருக்கிறானோ, அவனுக்கு அந்த த்யாநம் அளவற்ற ப்ரீதியுடன் செய்யப்பட்டதாக ஆகும்பொழுதே பரம புருஷனை லப்யனாகிறான்' என்பதுதான். ஸ்ரீ பகவானும், 'புருஷ: ஸ பர:' 'பக்த்யா த்வநந்யயா.........', 'பக்த்யா மாமபிஜாநாதி.........' இத்யாதி வாக்யங்களால் அப்படியே சொல்லுகிறான். 'ததநந்தரம் மாம் தத ஏவ விசதே' என்பதற்கு, 'அதற்குப் பிறகு அந்தப் பக்தி என்னும் உபாயத்தாலேயே என்னை உள்ளபடி அநுபவிக்கிறான்' என்பது அர்த்தம் இவ்விடத்தில், அளவற்ற ப்ரீதியுடன்

---

தவிர, பக்தி யன்றே' என்னும் சங்கையை, 'நாயமாத்மா.......' என்னும் வாக்யத்தைச் சொல்லிப் பரிஹரிக்கிறார். 'நாயமாத்மா.........' என்னும் வாக்யத்தின் அர்த்தத்தைப் பார்த்தால் 'பக்தியே உபாயம்' என்பது ஸித்திக்கும். இந்த வாக்யத்தின் அர்த்தம்:— அயமாத்மா—இந்தப் பரமாத்மாவானது, ப்ரவசநேந ந லப்ய:—மநநத்தால் மாத்ரம் அடையத்தகுந்ததன்று; மேதயா ந (லப்ய:)--த்யாநத்தால் மாத்ரம் அடையத் தகுந்ததன்று; பஹுநா ச்ருதேந ந (லப்ய:)—ச்ரவணத்தால் மாத்ரம் அடையத் தகுந்ததன்று. யமேவைஷ வ்ருணுதே—எவனை அந்தப் பரமாத்மாவே வரிக்கிறதோ, தேந லப்ய:—அவனாலேயே அது அடையத்தகுந்தது. ஏஷ ஆத்மா ஸ்வாம் தநூம் தஸ்ய விவ்ருணுதே—அவனுக்கே அந்தப் பரமாத்மா தனது ஸ்வரூபத்தை ப்ரகாசிப்பிக்கின்றது. இதில் பக்தி ஒன்றே உபாயம் என்பது எப்படி ஏற்படுகின்றது என்பது பின்வருமாறு உபபாதிக்கப்பட்டிருக்கின்றது. பகவானால், வரிக்கப்படுகிறவன் பகவானுக்கு ப்ரியதமனாக இருத்தல் வேண்டும்; அப்படிப் புத

இதி । ததநந்தரம் மாம் தத ஏவ பக்த்யா விஶத இத்யர்த: । பக்திரபி நிரதிஶயப்ரியாநந்யப்ரயோஜநஸகலேதரவைத்ருஷ்ண்யாவஹ ஜ்ஞாநவிஶேஷ ஏவ । தத்யுக்த ஏவ தேந வரணீயோ பவதீதி தேந லப்ய இதி ஶ்ருத்யர்த: ।

---

கூடியதும் மற்றை எவ்வித ப்ரயோஜநமுமற்றதும் மற்றை ஸகல வஸ்துக்களிலும் வைராக்யத்தை ஜநிப்பிக்கக் கூடியதுமான ஜ்ஞாந விசேஷமே பக்தி என்று சொல்லப்படுகிறது. அப்படிப்பட்ட பக்தியுடன் கூடியவனே பரமாத்மாவால் வரிக்கத் தகுந்தவனானதால், 'தேந லப்ய:' [அந்த உபாஸகனால் பகவாந் அடையப்படுகிறான்] என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இதுதான் ச்ருதியின் அர்த்தம்.

---

வானுக்கு ப்ரியதமனாக இருக்கும் தன்மை பகவானிடத்தில் ப்ரீதி உள்ளவனுக்கே ஏற்படுமாகையால், அப்படி ப்ரீதி உள்ளவனே பகவானால் வரிக்கப்படுகிறான் என்பது ஸித்திக்கின்றது

ஏததுக்தம் பவதி.........இதி ஶ்ருத்யர்த:—கீழ்ச் சொல்லப்பட்டுள்ள உபபாதநமே இதனால் செய்யப்படுகின்றது

'புருஷ: ஸ பர:.........' இந்தக் கீதா வாக்யங்களெல்லாம், கீழ்ச் சொல்லப்பட்டுள்ள அர்த்தத்திற்கு ப்ரமாணங்களாகக் கூறப்படுகின்றன. இந்த வாக்யங்களின் அர்த்தம்: 'ஸ பர: புருஷ:—அந்த பரம புருஷன், அநந்யயா பக்த்யா லப்ய:—ஐகாந்திகமான பக்தியினாலேயே அடையப்படுகிறான்; மாம் தத்த்வதோ ஜ்ஞாதும் த்ரஷ்டும் ப்ரவேஷ்டும் ச—சாஸ்த்ரங்களைக் கொண்டு என்னை உள்ளபடி அறிவதும், என்னை உள்ளபடி ஸாக்ஷாத்கரிப்பதும், என்னை உள்ளபடி அநுபவிப்பதும், அநந்யயா பக்த்யா ஶக்ய:—அநந்ய ப்ரயோஜநமான பக்தி ஒன்றாலேயே ஸாத்யம்.' யாவாந் யஶ்சாஸ்மி—'என்னுடைய குண விபூதிகள் எவை என்பதையும் என்னுடைய ஸ்வரூபம் எப்படிப்பட்டது என்பதையும், பக்த்யா அபிஜாநாதி—பரபக்தியைக்கொண்டே அறிகிறான், மாம் தத்த்வதோ ஜ்ஞாத்வா—என்னை அவ்விதம் உள்ளபடி அறிந்துகொண்டு, ததநந்தரம் தத ஏவ விஶதே—அதற்குப் பிறகு அந்தப் பரபக்தியினாலேயே என்னை அநுபவிக்கிறான்.'

ஸாவம்வியவார ஹக்ஷிர ஷேவஜ்ஞாநவிஶேஷஸெஷ்தாக: வர
ஷெப்ராத்தாஹரஹர-வவிபவாஜ்ஞாநவாஷெவஷகப்ராந-ஸ்ரஹீதஹக்ஷியொக
ஸாவ | யபெளாக்தம் ஹறவதா வாரமரெண,

---

ஸாவம்விய ... ... ... வஷஶா:—இபபடிபபட்ட பரம பகதியாகிற ஜ்ஞான
விசேஷததிறகு, கீழச சொலலபபட்டிருககும் பரகாரம செயயபபடும் பகதி யோகமே
காரணம அதாவது. ஆதம யாதாதமய ஜ்ஞானததுடன கூட வாணுசரம தர்மங்களை

---

ஹக்ஷிரவி .... ஜ்ஞாந விஶேஷ ஸாவ—'பரிபூரண ஸாக்ஷாதகாரமாகிற பர
ஜ்ஞானம வநத பிறகு பிறகும் பரீதயதிசயமாகிற பகதியினாலே எனனை அநுபவிக
கிறான (தஜோ ஊம் விஶதெ)' எனறு சொலலும வாகயததிலுளள 'பகதி' என்னும
பதத்தின அாததததை இவவிடததில விவரிககிறார அநதப பகதியானது 'பரம பகதி'
எனறு சொலலபபடும பரீதயதிசயமே நிரதிசய ப்ரியமாக இருககிறபடியால இது
அநனய பரயோஜநமாகினறது அபபடி நிரதிசய ப்ரியமாக இருககிறபடியால பகவத
ப்ராபதியில கூட அபேக்ஷை ஜநிககமாட்டாது எனபதை 'வரகமெருதாரவெதூ
ஷ்ணாவஸஷ்' எனனும பதம குறிககினறது இபபடியெலலாம விசேஷிததிருககிற
படியால பரம பகதியே இஙகுச சொலலபபடுகிறது என்று சொலலவேணடும தவிரவும்,
'விஶதெ' எனனும பதம், பாகருதி பநதததிலிருநது விடுபபட்டவனுடைய அநுப
வததைக குறிககும் அபபடிபபட்ட வீடு பெறப்பணணும பகதி பரம பகதியே ஆகு
மனறோ ?

தஷ்ஷக்த ஸாவ தெந வரணீயொ ஹவதி—அபபடிபபட்ட பகதன விஷ
யததிலதான் ஸாவேசவரனுககு தவாதிசயம உணடாகின்றது, அநதப பகதனுககுத
தான அவன கடுக மோக்ஷபராபதியைக கொடுககிறான

ஸாவம்வியவார ஹக்ஷிர ஷேவஜ்ஞாநவிஶேஷஸ்ய—இவவிடததில இந்தப
பகதி 'பாபகதி' எனறு சொலலபபட்டிருந்த போதிலும், அநதப 'பரபகதி' எனனும
பதம பரம பகதியையே குறிககினறது.

வர ஹக்ஷெர ஷ்தாவகொ ஹக்ஷியொக ஸாவ—'பகதியோகம்' இந்தப் பரம
பகதியை உதபததி செயகினறது எனபதறகு, பாதிதிநம பகதியோகம அப்யவிககப்
பட்டு வநதால அதுவே பரம பகதி தசையை அடைகினறது' எனபது அர்த்தம.

இவவிடததில உபபாதிககப்படும விஷயம உபாய ஸவரூபம். அது 'காம
யோகம் ஜ்ஞானயோகம எனனும இரண்டினாலும ஏறபடும பகதியோகமே' என்று
கீழச சொலலபபட்டது அதை இவவிடததில 'கூஜ்ஞாந-ஸ்ரஹீதஹக்ஷியொக:'
என்பதால வறபுறுததுகிறார.

“வர்ணாச்ரமாசாரவதா புருஷேண பர: புமாந் |
விஷ்ணுராராத்யதே பந்தா நாந்யஸ்தத்தோஷகாரக: ||”

இதி | நிகிலஜகதுத்தாரணாயாவநிதலேவதீர்ண: பரப்ரஹ்மபூத: புருஷோத்தம: ஸ்வயமேவைததுக்தவாந்—

ஸ்வகர்மநிரத: ஸித்திம் யதா விந்ததி தச்ச்ருணு ||
யத: ப்ரவ்ருத்திர்பூதாநாம் யேந ஸர்வமிதம் ததம் |
ஸ்வகர்மணா தமப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மாநவ: ||”

[ப. கீ. 18—46.

---

யெல்லாம சரிவர அநுஷடிபபதனுல மேன்மேல வளாநது வரும் பகதியோகமே இந்தப பரம பகதியின உதபததிககுக காரணமாகினறது. “வர்ணாச்ரமாசாரவதா” இத்யாதியான சலோகததால் பகவாந பராசரா இநத அாததததை விளககி இருககின ருர். ஜகத் முழுவதையும் காபபாறற வேணடுமெனறு இநதப பூலோகததில அவதாரம் செயத பர பரஹ்மமாகிற புருஷோததமனும, “ஸ்வகர்மநிரத: ஸித்திம் .. ,.. ” இதயாதியான வாகயங்களால் இதே அாததததை வெளியிடடிருககினருா. இநத வாக் யததிலுள்ள “ஸ்வகர்மணா ஸித்திம் விந்ததி” எனபதறகு, ‘சாஸதரஙகளில சொலலி

---

வர்ணாச்ரமாசாரவதா—இநத சலோகம, ‘அநதப பகதி காமாநுகரு ஹீதமாக இருததல் வேணடும’ எனபதறகு பரமாணமாகக கூறபபடுகினறது இதன அாத்தம —தமதம வாணஙகளுககும ஆச்ரமஙகளுககும விஹிதஙகளாயுளள காமங்களைச் சரிவரச் செயவதே ஸாவேசவரனுயிருக்கும விஷ்ணுவை ஆராதிககும் மாாககம, வேறு ஒரு மாாக்கமும அவனுடைய பரீதிககு ஹேதுவாகமாட்டாது’, அதாவது. பகவத பரீதிககு ஹேதுவாயுளள ஜஞாநததுககு வாணசரம தாமாநுஷடாநங்கள அஙகஙகள எனறு சொனனதாயிறறு

நிகிலஜகதுத்தாரண . .. இந்த விஷயததுககு பரமாணமாக பகவத் வசநத்தையும் சொல்லப போகிறவராய, அநத வசநததின மேனமையை ப்ரஸ தாவிககிருர்

ஸ்வகர்மநிரத: ஸித்திம் .. இதன பொருள் — ‘தம தம காமங்களில நிரதனுக இருககுமவன எவவிதம பரமபததததை அடைவான் எனபதைச சொல்லு கிறேன்; கேள். எனனுல் ஸருஷ்டிககபபடடவாகளாகவும என்னுடைய சரீரமாகவும் இருககும் ‘இந்தரன’ முதலானவாகளைச சொலலும் சபதஙகளால, ஸாவகாரண பூத னும் ஸர்வாநதாயாமியாகவும இருககும நானன்றே குறிககபபடுகிறேன? ஆகையால்

இதி | யதோதிதக்ரமபரிணதபக்த்யேகலப்ய ஏவ வேதாந்தவேத்ய: | ஸர்வஸ்யாயமநந்தரோக்தோபாயஸ்வரூபப்ரகார: ஸகலசிஷ்டபரிக்ருஹீதபுராதனவேதவேதாந்தவ்யாக்யானஸுவ்யக்தார்த்தச்ருதிநிகரநிதர்சிதோ(அ)யம் பந்தா: |

---

யிருக்கிறபடி கர்மங்களை அநுஷ்டிப்பதால் ஸித்தித்தும் அதனாலேயே யதாகாமம் வளர்ந்தும் வரும் பக்தியினாலேயே ஸித்தியைப் பெறுகிறான்' என்பது ஆப்தரும் பகவத் போதாயனர், டங்கர், த்ரமிடர், குஹதேவர், கபர்த்தி, பாருசி முதலான மிகவும் புகழத்தகுந்த சிஷ்டர்களெல்லாராலும் அங்கீகரிக்கப்பட்டும், புராதனமான வேத வேதாந்த வ்யாக்யானங்களால் தெளிய உரைக்கப்பட்டுமுள்ள அர்த்தத்தை யுடைய கணக்கற்ற வேத வாக்யங்களே இந்தவழியைக் காண்பித்திருக்கின்றன.

---

வர்ணாச்ரம தர்மங்களால் அவர்களை ஆராதிப்பதானது என்னை ஆராதிப்பதேயாகும். ஆகையால் வர்ணாச்ரம தர்மாநுஷ்டானங்கள் பரமபதத்திற்கு ஸாதநங்களே'

யதோதித... ... 'ஸ்வகர்மணா ஸித்திம் விந்ததி' [தம்தம்மால் அநுஷ்டிக்கப் படவேண்டிய கர்மங்களை அநுஷ்டிப்பதால், எல்லாரும் பரம பதத்தை அடைகிறார்கள்] என்று சொல்லி இருப்பதைப் பார்த்தால், கர்மமன்றோ பரமபத ப்ராப்திக்கு உபாய மென்று ஏற்படுகின்றது? இதனால் பக்தி உபாயமென்று எப்படிச் சொல்லப்பட்ட தாகும்?' என்று உதிக்கும் சங்கைக்கு இந்த வாக்யத்தால் ஸமாதானத்தைச் சொல்லுகிறார். 'கர்மங்களைச் சரிவர அநுஷ்டிப்பதால் ஸித்தித்தும் அதனாலேயே வளர்ந்தும் வரும் பக்தி ஒன்றினாலேயே அவன் அடையத் தகுந்தவன்' என்பதே 'ஸ்வகர்மணா ஸித்திம் விந்ததி' என்பதன் பொருள். ஆகையால் அந்தச் சங்கைக்கு அவகாசமில்லை.

ஸர்வஸ்யாயம்....... 'இவ்விடத்தில் உபபாதிக்கப்பட்டுள்ள உபாய ஸ்வ ரூபத்தின் ப்ரகாரமானது, பெரியோர்களால் ஸாது வென்று அங்கீகரிக்கப்பட்டிருக்கும் வேத வேதாந்த வ்யாக்யானங்களை மூலமாக உடையது' என்று சொல்லுகிறார். இதற்கு முன், உபேய ஸ்வரூபத்தை நிஷ்கர்ஷிக்கு மிடத்தில், 'நான உபபாதித்திருக்கும் ப்ரகார மெல்லாம் சிஷ்டர்களால் ஒத்துக் கொள்ளப்பட்டிருக்கும் வேத வேதாந்த வ்யாக்யா நத்தை மூலமாக உடையது' ["தச்சைதத்ஸர்வம் ... சிஷ்டபரிக்ருஹீதபுராதனவேதவேதாந்தவ்யாக்யாநஸுவ்யக்தார்த்தம்" 232-வது பக்கத்தைப் பார்க்கவும்] என்று சொல்லியிருப்பது போல, இவ்விடத்திலும் சொல்லப்படுகிறது. 'அத்வைதி முதலானவர்களும் தம் தம்மால் உபபாதிக்கப்படும் விஷயங்களுக்கு வேத வேதாந் தங்களையே ப்ரமாணமாகச் சொல்லுகிறார்கள் என்பது உண்மையே. ஆனால் அவர்

அதேந ஆர்வாசீந பாஹ்யாகுத்ருஷ்டிமதாநி தாநி ஸர்வாணி

நிரஸ்தாநி – ஸத்த்வரஜஸ்தமோமயமூலப்ரக்ருதிகார்யாணீத்யர்த்தமத:

---

அதேந . . . உக்தாநி——சார்வாக மதம், சாக்ய மதம், ஔலூக்ய மதம், அக்ஷ பாத மதம், க்ஷபணக மதம், கபில மதம், பதஞ்ஜலி மதம் ஆகிய இந்த மதங்களை அநுஸரிக்கும் வேத பாஹ்யர்களும், வேதத்தை அவலம்பித்து நிற்கும் குத்ருஷ்டிகளும், இதனாலேயே

---

கள் சொல்லும் அர்த்தம் சிஷ்டர்களால் அங்கீகரிக்கப்படவில்லை. பாஷ்யகாரரால் சொல்லப்படும் அர்த்தமோ வென்றால், பகவத் போதாயநர் முதலான மஹான்களால் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது' என்பது தாத்பர்யம். இம் மஹான்கள் வ்யாக்யானம் செய்திருக்கும் மாதிரி, அர்த்தம் செய்யும் பொழுதே, அந்த வேத வேதாந்த வாக்யங்களின் பொருள் ஸங்கதமாகின்றது என்பதைக் குறிக்கின்றது இவ்விடத்தி லுள்ள 'ஸம்வக்த்' சப்தம். டங்க:——இது ப்ரஹ்மாநந்தி என்பவரின் மற்றொரு பெயர்.

இது வரையில் உபேயத்தின் ஸ்வரூபமும் உபாயத்தின் ஸ்வரூபமும் விளக்கப் பட்டன. 'இவைகளை விளக்குவதில் கேவலம் தர்க்கம் மாத்ரம் ப்ரமாணமாகக் கொள் ளப்படவில்லை, ஆனால் தர்க்கானுக்ருஹீதமான வேதமே ப்ரமாணமாகக் கொள்ளப் பட்டது' என்பதும் ஸூசிப்பிக்கப்பட்டது. இனி, கீழ் உபபாதிக்கப்பட்டிருப்பதற்கு விருத்தமாக உபாயோபேய ஸ்வரூபங்களை வர்ணிக்கும் மதங்களெல்லாம், தர்க்கானு க்ருஹீதமான வேதத்தை விரோதிக்கின்றன என்னும் காரணத்தாலேயே அப்ரமாணங் களாகின்றன' என்பதைச் சொல்லுகிறார்

அதேந——இதனாலேயே. அதாவது 'தர்க்கானுக்ருஹீத வேதத்தை விரோதிக் கிற படியினாலேயே'.

ஆர்வாசீக. . . வேதத்தின் ப்ராமாண்யத்தை ஒத்துக்கொள்ளாமல் கேவலம் தர்க்கத்தையே ஆதாரமாகக் கொண்டு மதஸ்தாபநம் செய்பவர்கள் சிலர். அவர்களை வேத பாஹ்யர்களென்று சொல்லுவார்கள். இவ்விடத்தில் சொல்லப்பட்டுள்ள சார்வாகர் முதலானவரெல்லாரும் வேத பாஹ்யர்களே. சிலர், வேதத்தின் ப்ராமாண் யத்தை ஒத்துக் கொள்கையிலும், வேதத்தின் உண்மையான அர்த்தத்தை அறியாதவர் களாய் வேதத்தின் தாத்பர்யத்துக்கு விருத்தமாக விஷய க்ரஹணம் செய்வார்கள். அவர்களைக் குத்ருஷ்டிகள் என்று சொல்வதுண்டு. நிர்விசேஷ அத்வைத வாதம் செய் பவர்கள் இம்மாதிரியான குத்ருஷ்டிகளுள் ஒரு வகுப்பினர். 'பாஹ்யர்களுடைய மதம் அப்ரமாணமாக இருந்தபோதிலும், வேதத்தை அவலம்பித்தவர்களின் மதம் அப்ரமாண மாகக் கூடுமோ? வேதத்தில் அவர்களுக்கு ருசி இருக்கின்றது என்பதே அவர்களிடம் ஸத்வ குணம் தலையெடுத்து நிற்கின்றது என்பதை ஸூசிப்பிக்கவில்லையா? அப்படி அவர்களிடம் ஸத்வ குணத்தின் உத்ரேகம் இருக்கும் பக்ஷத்தில் அவர்களுடைய மதம் அப்ரமாணமாவது ஏன்?' என்று ஒரு சங்கையைச் செய்துகொண்டு அதற்கு ஸமா

𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑌾𑌃 । 𑌵𑍇𑌦𑌾𑌵𑌲𑌮𑍍𑌬𑌿𑌨𑌾𑌮𑌪𑌿 𑌯𑌥𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌵𑌸𑍍𑌤𑍁𑌵𑌿𑌪𑌰𑍍𑌯𑌯𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍄𑌣𑌾𑌂 𑌬𑌾𑌹𑍍𑌯𑌸𑌾𑌮𑍍𑌯𑌂 𑌮𑌨𑍁𑌨𑍈𑌵𑍋𑌕𑍍𑌤𑌮𑍍 —

“𑌯𑌾 𑌵𑍇𑌦𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌯𑍋 𑌯𑌾𑌶𑍍𑌚 𑌕𑌾𑌶𑍍𑌚 𑌕𑍁𑌦𑍃𑌷𑍍𑌟𑌯𑌃 ।
𑌸𑌰𑍍𑌵𑌾𑌸𑍍𑌤𑌾 𑌨𑌿𑌷𑍍𑌫𑌲𑌾𑌃 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 𑌤𑌮𑍋𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌹𑌿 𑌤𑌾𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌾𑌃”

---

கண்டிக்கப்பட்டவர்களாகிறார்கள். 'வேதத்தை அவலம்பித்து நிற்கும் குத்ருஷ்டிகளும், வேதத்தினுடைய அர்த்தத்தின் யாதார்த்யத்தை அறிய அசக்தர்களாய் விபரீதமாக வஸ்து க்ரஹணம் செய்கிறபடியால், அவர்களும் வேத பாஹ்யர்களைப் போன்றவர்களே' என்று **“𑌯𑌾 𑌵𑍇𑌦𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌃... ...”** இத்யாதியான வாக்யத்தால் மநுவே விளக்கியிருக்க

---

தானம் சொல்லுகிறார். 'கேவலம் ஸத்வ குணம் இருப்பது ப்ராமாண்யத்துக்கு ஹேது ஆகமாட்டாது. ரஜஸ், தமஸ் ஸம்பந்தமற்றதும் எப்பொழுதும் இருக்கக்கூடியதுமான ஸத்வ குணத்தின் இருப்பே ப்ராமாண்யத்துக்கு ஹேது. அதுதான் வேதத்தின் உண்மையான அர்த்தத்தை ஜ்ஞாபிக்கும். குத்ருஷ்டிகளிடம் அப்படிப்பட்ட சுத்த ஸத்வம் இல்லையாதலால் அவர்களின் மதம் அப்ராமாண்யமாகின்றது' என்பது இவ்விடத்தில் சொல்லப்படும் ஸமாதானம்.

**𑌔𑌲𑍂𑌕𑍍𑌯𑌾𑌃**—கணாத மதத்தை அநுஸரிப்பவர்கள். அக்ஷபாத பதஞ்ஜலி முதலிய சிலருடைய மதம், வேதத்தின் ப்ராமாண்யத்தை ஒருவாறு ஒத்துக்கொள்கையிலும், குதர்க்க மூலமான சில வேத விருத்தங்களான அர்த்தங்களை அவர்கள் ஒத்துக் கொள்ளுகிறபடியாலும், வேதம் என்பது ஒரு புருஷனால் செய்யப்பட்ட சாஸ்த்ரமென்று வேதத்துக்குப் பௌருஷேயத் தன்மையைச் சொல்லுகிறபடியாலும், அவர்களும் இவ்விடத்தில் பாஹ்ய கோடியில் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள்.

**“𑌯𑌾 𑌵𑍇𑌦𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌃 ..”** இது மநுவின் வாக்யம். குத்ருஷ்டிகளின் மதம் அப்ராமாணம் என்பதை இது சொல்லுகின்றது. இதன் பொருள்,—'எந்த எந்த ஸ்ம்ருதிகள் வேத பாஹ்யங்களோ, எவை எவை குத்ருஷ்டிகளோ, அவ்வவையெல்லாம் தமோகுண ஸம்பந்தம் பெற்றவை. ஆகையால் அவை அத்ருஷ்ட பலத்திற்கு ஸாதகங்களாகமாட்டா. த்ருஷ்ட பலத்துக்கு அவை ஸாதகங்களாகக் கூடும். ஆகையால் அவைகளை நிஷ்பலங்கள் என்று சொல்லாமல் '𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 𑌨𑌿𑌷𑍍𑌫𑌲𑌾𑌃' (தேஹம் போன பிறகு அவைகளுக்குப் பலமில்லை) என்று சொல்லப்பட்டிருக்கிறது. '𑌤𑌮𑍋𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌃'—

இதி । ரஜஸ்தமோப்யாமஸ்ப்ருஷ்டம் ஸத்த்வமேவ யேஷாம் ஸ்வாபாவிகோ குணஸ்தேஷாமேவ வைதிகீ ருசி: வேதார்த்தயாதாத்ம்யாவபோதஶ்ச பவதீத்யர்த்த: । யதோக்தம் ஶாஸ்த்ரே

'ஸங்கீர்ணா: ஸாத்த்விகாஶ்சைவ ராஜஸாஸ்தாமஸாஸ்ததா''

---

கிரு. 'எவர்களுக்கு, ரஜோ குணம் தமோ குணம் இவைகளுடன் ஸம்பந்தப்படாமல் இருக்கும் உத்தமமான ஸத்வ குணமே ஸ்வபாவத்தால் ஏற்பட்டிருக்கின்றதோ, அவர்களுக்கு மாத்ரம் வேதத்தில் ருசியும் வேதார்த்தத்தின் உண்மையான ஜ்ஞானமும் உண்டு' என்பது இந்த வாக்யத்தின் தாத்பர்யம் மாத்ஸ்ய புராண வசனமாகிற ''ஸங்கீர்ணா:

---

இவ்விடத்தில் 'தமஸ்' என்பது ரஜோ குணத்தையும் குறிக்கின்றது என்பதை 'ரஜஸ்தமோப்யாம்' என்னும் பதம் விளக்குகின்றது.

**ஸ்வாபாவிகோ குண:**—ஸ்வபாவத்தால் ஏற்பட்ட குணம். அதாவது எப்பொழுதும் ஸ்தாயியாய் இருப்பது. இம்மாதிரி ஸ்தாயியாக இருக்கும் ஸத்வ குணத்தை யுடையவர்களிடம் ஒருபொழுதும் தவறுதல் நேரமாட்டாது என்பதை இந்த 'ஸ்வாபாவிக' என்னும் பதம் காண்பிக்கின்றது.

'இப்படிப்பட்ட சுத்த ஸத்வம் எந்த காந்தத்தில் இல்லையோ அது ப்ரமாணமாக மாட்டாது' என்பதைக் காண்பிக்க, ''ஸங்கீர்ணா:'' இத்யாதியான மாத்ஸ்ய புராண வசனம் கூறப்படுகின்றது. இந்த வாக்யத்திலுள்ள 'ஸங்கீர்ணா:' என்பது முதலான சப்தங்கள், கல்பங்களை நோக்கிச் சொல்லப் படுகின்றன. ஏனென்றால், அடுத்து வரும் ச்லோகத்தில் ''யஸ்மிந் கல்பே'' என்று சொல்லப்பட்டிருக்கின்றதன்றோ? 'இந்த வாக்யம், கல்பங்களை ஸங்கீர்ணங்களென்றும் ஸாத்விகங்களென்றும் ராஜஸங்களென்றும் தாமஸங்களென்றும் விபாகம் செய்கின்றதே தவிர, இவை ப்ரமாணம், இவை அப்ரமாணம் என்று சொல்லவில்லையே' என்று ஆக்ஷேபிக்கக் கூடும். ப்ரமாண அப்ரமாண விபாகம் சொல்லப்படாமல் இருக்கையிலும், ஸாத்விகாதி விபாகம் சொன்னதற்கு வேறு ஒரு ப்ரயோஜனம் இல்லையாதலால், ப்ராமாண்ய அப்ராமாண்யங்களின் நிர்ணயம் செய்வதே அந்த விபாகத்தின் தாத்பர்யம் என்று நாம் அறிய வேண்டும். இவ்விடத்தில் கல்பங்களுக்குச் சொல்லப்படும் குணப்ராசுர்ய மெல்லாம் அந்தந்தக் கல்பத்தில் ப்ரஹ்மாவுக்கு ஏற்படும் குண ப்ராசுர்யத்தாலேயே ஸம்பவிக்கின்றது. 'ஸங்கீர்ணா:' என்பதற்கு 'மூன்று குணங்களும் கலந்து நிற்கும் கல்பங்கள்' என்பது பொருள்.

இதி । 'கேசித் கல்பா: ஸங்கீர்ணா:, கேசித் ஸாத்த்விகா:, கேசித் ராஜஸா:, கேசித் தாமஸா:' இதி கல்பவிபாகம் உக்த்வா, 'ஸத்த்வரஜஸ்தமோமயானாம் தத்த்வானாம் மாஹாத்ம்யவர்ணனம் ச தேஷு தேஷு கல்பேஷு புராணேஷு தத்தாதிகுணமயேன ப்ரஹ்மணா க்ரியதே' இதி சோக்த்வா

யஸ்மின் கல்பே து யத் ப்ரோக்தம் புராணம் ப்ரஹ்மணா புரா ।

தஸ்ய தஸ்ய து மாஹாத்ம்யம் தத்ஸ்வரூபேண வர்ண்யதே ॥"

இதி । விசேஷதச்சோக்த்வா

---

ஸாத்த்விகா:" என்பதும், இந்த அர்த்தத்தையே சொல்லுகின்றது. 'சில ப்ரஹ்ம கல்பங்கள் ஸங்கீர்ணங்கள், சில ஸத்வம் நிறைந்தவை, சில ரஜஸ் நிறைந்தவை, சில தமஸ் நிறைந்தவை' என்று இந்த வாக்யத்தால் கல்பங்களைப் பிரித்துவிட்டு, பிறகு "யஸ்மின் கல்பே து . ." என்னும் ச்லோகத்தால், 'ஒவ்வொரு கல்பத்தில் ப்ரஹ்மாவுக்கு ஒவ்வொரு குணம் தலையெடுத்து நிற்கின்றது, எந்தக் கல்பத்தில் எந்தக் குணம் தலையெடுத்து நிற்கின்றதோ, அந்தக் கல்பத்தில் அந்தக் குணம் நிறைந்துள்ள தேவதையின் மஹிமையே அந்தக் கல்பத்தின் ஸ்வரூப ப்ரகாரம் ப்ரஹ்மாவால் வர்ணிக்கப்படுகின்றது' என்று அந்த மாத்ஸ்ய புராணமே விளக்குகின்றது அதே

---

**ஸத்த்வரஜஸ்தமோமயானாம் தத்த்வானாம்**— இவ்விடத்தில் '**தத்த்வ**' என்னும் சப்தத்திற்கு 'தேவதை' என்பது பொருள்

"**யஸ்மின் கல்பே** ....... " இதன் அர்த்தம் **யஸ்மின் கல்பே**—எந்தக் கல்பத்தில், **யத் புராணம்**—எந்தப் புராணமானது, **ப்ரஹ்மணா ப்ரோக்தம்**— ப்ரஹ்மாவினால் சொல்லப்பட்டிருக்கிறதோ, (**தஸ்மின் கல்பே தஸ்மின் புராணே**—அந்தக் கல்பத்தில் அந்தப் புராணத்தில்), **தஸ்ய தஸ்ய**—அந்தந்தக் குணத்தால் நிறைந்துள்ள தேவதையினுடைய, **மாஹாத்ம்யம் தத்ஸ்வரூபேண வர்ண்யதே**—பெருமையானது அந்தந்தக் கல்ப ஸ்வரூபத்துக்குத் தகுந்தபடி வர்ணிக்கப்படுகிறது 'ஸாத்விக கல்பத்தில் ப்ரஹ்மாவுக்கு ஸத்வ குணமே நிறைந்து நிற்கிறபடியால், அப்பொழுது சொல்லப்படும் புராணம் ஸாத்விக தேவதையின் மஹிமையையே வர்ணிக்கின்றது, மற்றைக் கல்பங்களிலும் இம்மாதிரியே என்பது இதன் கருத்து

**விசேஷதச்சோக்த்வா** எந்தத் தேவதை எந்தக் குணத்துடன் கூடியது என்று விசேஷித்தும் சொல்லப்படுகின்றது.

"அக்நே: ஶிவஸ்ய மாஹாத்ம்யம் தாமஸேஷு ப்ரகீர்த்யதே
ராஜஸேஷு ச மாஹாத்ம்யமதிகம் ப்ரஹ்மணோ விது: ॥
ஸாத்விகேஷு ச கல்பேஷு மாஹாத்ம்யமதிகம் ஹரே: ।
தேஷ்வேவ யோகஸம்ஸித்தா கமிஷ்யந்தி பராம் கதிம் ।
ஸங்கீர்ணேஷு ஸரஸ்வத்யா: பித்ருணாம் ச நிகத்யதே ॥"

இத்யாதி । ஸாத்த்விகம் ஹவதி, ஶ்ருதிகேஷ்வப்ரஹ்மகல்பேஷ்வப்ரஹ்மணஸ்த்வஸ்யாவி கேஷுசித்ஸத்த்வம் ஸகஸ்தம், கேஷுசித் ரஜ:, கேஷுசித்தம: ; யதோக்தம் ஹகவதா

"ந தத்ஸ்தி ப்ருதிவ்யாம் வா திவி தேவேஷு வா புந: ।
ஸத்த்வம் ப்ரக்ருதிஜைர்முக்தம் யதேபி: ஸ்யாத்த்ரிபிர்குணை: ॥"

இதி ।

---

புராணத்தில், தாமஸ கல்பங்களில் அக்நி சிவன் இவர்களுடைய மாஹாத்ம்யமும், ராஜஸ கல்பங்களில் ப்ரஹ்மாவின் மாஹாத்மயமும், ஸாத்விக கல்பங்களில் விஷ்ணு வின் மாஹாத்மயமும் சொல்லப்படுகின்றன வென்றும், அந்த ஸாத்விக கல்பங்களில் அந்த ஸாத்விக புராணங்களில் சொல்லப்பட்டிருக்கிறபடி ஸாதிக்கப்பட்டிருக்கும் யோகத் தை உடையவர்களே உத்தம கதியை அடைகிறார்களென்றும், ஸங்கீர்ண கல்பங்களில் ஸரஸ்வதி பித்ருக்கள் இவர்களுடைய மஹிமை சொல்லப்படுகின்றதென்றும் "அக்நே: ஶிவஸ்ய" இத்யாதியான வாக்யங்களால் விசேஷித்துச் சொல்லப்பட்டிருக்கின்றன.

ஸாத்த்விகம் ஹவதி ... இதி—இதனால் ஏற்பட்டது என்னவென்றால்—'ப்ரஹ்மா முதல் முதலில் ஸ்ருஷ்டிக்கப்பட்ட ஜீவன் ஆகையால், அவர் விஷ யத்திலும் சில காலங்களில் ஸத்வ குணம் மேலிட்டும் சில காலங்களில் ரஜஸ் மேலிட்டும் சில காலங்களில் தமஸ மேலிட்டும் நிற்பது உண்டு பகவானே, 'பூமியில் இருக்கும் மநுஷ்யர்கள், தேவ லோகத்தில் இருக்கும் தேவர்கள், இவர்களுள், ஸத்வம் ரஜஸ் தமஸ இவைகளுடன் ஸம்பந்தப்படாத ப்ராணி ஒன்று கூட இல்லை' என்று சொல்லியிருக்க

---

தேஷ்வேவ யோகஸம்ஸித்தா:—'அந்த ஸாத்விக கல்பங்களில், அந்தக் கல்பத் திய ஸாத்விக புராணங்களைக் கொண்டு பரதேவதா பாரமார்த்ய நிச்சயத்தைச் செய்து, மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடிய அநந்ய யோகமாகிற பரமைகாந்தித்வத்தை ஸாதித்துக் கொண்டவர்களே' என்பது தாத்பர்யம்

ஸாத்த்விகஸ்து ஹவதி—இவ்விடத்தில் செய்யப்படும் உபபாதநமாவது.—'ப ஹ்மா ஒரு ஜீவன் ஆகையால் அவர் குணவசரா, சில கல்பங்களில் ஸத்வ குணமும் சில கல்பங்களில் ரஜோ குணமும் சில கல்பங்களில் தமோ குணமும் மற்றும் சில கல்பங் களில் மூன்று குணங்கள் கலந்தும் அவரிடம் நிற்கும் ஸகல புராணங்களுக்கும் அவரே கர்த்தா. ஸத்வ குணம் நிறைந்திருக்கும்பொழுது சொல்லப்பட்டிருக்கும் புராணங்கள் தாம் ப்ராமாணிகங்கள் அவை விஷ்ணுவின் மஹிமையையே கூறுகின்றன ஆகையால் விஷ்ணுவின் பெருமையைச் சொல்லும் புராணங்களையே நாம் ப்ரமாணங் களாக அங்கீகரிக்கவேண்டும்' என்பது தான்.

"𑌯𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌂 𑌵𑌿𑌦𑌧𑌾𑌤𑌿 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌯𑍋 𑌵𑍈 𑌵𑍇𑌦𑌾𑌂𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌹𑌿𑌣𑍋𑌤𑌿 𑌤𑌸𑍍𑌮𑍈"

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋𑌽𑌪𑌿 𑌸𑌂𑌸𑌾𑌰𑌿𑌤𑍍𑌵𑍇𑌨 𑌪𑌾𑌰𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑍇𑌣 𑌚 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌤𑍍𑌵𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑍇 । 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌪𑍍𑌰𑌾𑌯𑍇𑌷𑍁 𑌕𑌲𑍍𑌪𑍇𑌷𑍁 𑌤𑌦𑌿𑌤𑌰𑍇𑌷𑍁 𑌚 𑌯𑌾𑌨𑌿 𑌪𑍁𑌰𑌾𑌣𑌾𑌨𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾𑌨𑌿 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌵𑌿𑌰𑍋𑌧𑍇 𑌸𑌤𑌿

---

கிறா வேதம், 'பகவான் முதலில் பரஹ்மாவை ஸ்ருஷ்டித்தான், அவனுக்கு வேதங்களையும் கொடுத்தான்' என்று பரஹ்மா ஸ்ருஷ்டிக்கப்படுகிறாரென்றும் அவர் சாஸ்த்ர வசயரென்றும் சொல்லுகிறபடியால், அவர் ஒரு க்ஷேத்ரஜ்ஞர் என்பது ஏற்படுகிறது ஸாத்விக காலங்களில் செய்யப்பட்டுள்ள புராணங்களும் ராஜஸ தாமஸ காலங்களில் செய்யப்பட்டுள்ள புராணங்களும் பரஸ்பரம் விரோதிக்கும்பொழுது, 'ஸாத்விக காலத்தில் செய்யப்பட்டவைகளே யதார்த்த

---

'𑌨 𑌤𑌦𑌸𑍍𑌤𑌿 ..", இது கீதா வாக்யம் [18—40] இதன் பொருள் — பூமியில் மநுஷ்யர்களுக்குள்ளும் தேவலோகத்தில் தேவர்களுக்குள்ளும், பரஹ்மா முதலான ஸ்தாவர பர்யந்தங்களான ப்ரக்ருதி ஸம்ஸ்ருஷ்ட ஸம்ஸாரிகளுள்ளும், குண த்ரயத்திற்கு உட்படாத ப்ராணி ஒன்று கூட இல்லை. அதாவது ஸகல ஸம்ஸாரிகளும் குணத்ரய வசயர்கள் என்று சொன்னதாயிற்று 'பரஹ்மாவும் ஸம்ஸாரிகளுள் ஒருவராதலால், அவரும் மற்றை ஸம்ஸாரிகளைப் போல குணவசயரே' என்பதற்கு இது ப்ரமாணம்.

"𑌯𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌂 ...'—இந்த ச்ருதி வாக்யம், பரஹ்மாவும் ஸம்ஸாரி கோடியைச் சேர்ந்தவர் என்பதற்கு ப்ரமாணம் "𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌂 𑌵𑌿𑌦𑌧𑌾𑌤𑌿" என்பதால் பரஹ்மா ஸ்ருஷ்டிக்கப்படும் ப்ராணிகளுள் ஒருவர் என்பதும், "𑌤𑌸𑍍𑌮𑍈 𑌵𑍇𑌦𑌾𑌂𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌹𑌿𑌣𑍋𑌤𑌿" என்பதால் அந்த பரஹ்மா சாஸ்த்ரத்துக்குக் கட்டுப்படவேண்டியவர்களுள் ஒருவர் என்பதும் விளங்குகின்றன. சாஸ்த்ரத்துக்குக் கட்டுப்படவேண்டியவர்களுக்கே சாஸ்த்ரம் கொடுக்கப்படுமென்றோ ?

𑌪𑍁𑌰𑌾𑌣𑌨𑌿𑌰𑍍𑌣𑌯𑌾𑌯𑍈𑌵—'புராணங்களெல்லாம் ஒரே தேவதையின் மாஹாத்மயத்தைப் பற்றி பேசவில்லையே! சில புராணங்கள் விஷ்ணுவையும் மற்றும் சில வேறு தேவதைகளையும் புகழ்கின்றனவே! இவைகளுள் எவை அங்கீகரிக்கத்தக்கவை? எவை த்யஜிக்கத்தக்கவை? என்று ஒரு சங்கை ஜநிக்கும் பொழுது, அந்தச் சங்கையின் பரிஹாரத்தை 'எந்த தேவதையை

ஸாத்விகாஸ்த்வேவ புராணம் யதார்த்தம் தத்வயாதாத்ம்யப்ர-
போதயதீதி புராணநிர்ணயாயைவேதம் ஸத்வநிஷ்டேந ப்ரஹ்மணோக்தமி-
தீதி விஜ்ஞாயத இதி ।

ஸத்வாதீநாம் கார்யம் ச பகவதைவோக்தம்—

"ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம் ரஜஸோ லோப ஏவ ச ।
ப்ரமாதமோஹௌ தமஸோ பவதோऽஜ்ஞாநமேவ ச ॥"

ஸ. கீ [14-1]

---

தும், அதற்கு விரோதிகளும் மற்றவையெல்லாம் அயதார்த்தம்' என்று புராணங்களின் நிர்ணயத்தைச் செய்யும் பொருட்டே 'இது ஸத்வநிஷ்டரான பரஹ்மாவினால் சொல்லப்பட்டிருக்கின்றது' என்று கூறப்படுகிறது.

**ஸத்வாதீநாம் .... இதி**—ஸத்வம் ரஜஸ் தமஸ் இந்த மூன்று குணங்களின் செய்கையை ஸ்ரீ பகவானே ஸ்ரீ பகவத் கீதையில் "**ஸத்வாத் ஸஞ்ஜாயதே ..** "

---

பஹுவான புராணங்கள் புகழ்கின்றனவோ அதைப்பற்றி பேசும் புராணங்களே அங்கீகரிக்கத்தக்கவை, மற்றவை த்யாஜ்யங்கள்' [**ஹூயஸாம் ஸ்யாத் ப்ரமாணதா**] என்னும் ந்யாயத்தை ஆதாரமாகக் கொண்டு நாம் செய்யலாமோவென்று ஒரு எண்ணம் தோன்றக்கூடும். அது சரியன்று, 'எவை ஸத்வநிஷ்டரான பரஹ்மாவால் சொல்லப்பட்டவையோ அவைகளே பரிக்ராஹ்யங்கள், மற்றவை த்யாஜ்யங்கள்' என்று வக்தாவின் குணத்திற்குத் தக்கபடி ப்ராமாண்ய அப்ராமாண்ய விபாகம் செய்யப்படவேண்டும் என்பது தான் இவ்விடத்தில் சொல்லப்படும் விஷயம்.

**ஸத்வாத் ஸஞ்ஜாயதே....** இதன் பொருள் — ஸத்வகுணம் வ்ருத்தி அடைந்தால், அதிலிருந்து ஆத்ம யாதாத்ம்ய அபரோக்ஷ ரூபமான ஜ்ஞானம் ஜனிக்கின்றது, ரஜஸ் வ்ருத்தி அடைந்தால், அதிலிருந்து ஸ்வர்க்கம் முதலிய பலங்களில் லோபம் ஜனிக்கின்றது, தமஸ் வ்ருத்தி அடைந்தால், அதிலிருந்து அனவதான நிமித்தமான அஸத் காமங்களில் ப்ரவ்ருத்தியும், அந்த ப்ரவ்ருத்தியினால் விபரீத ஜ்ஞானமும், அந்த விபரீத ஜ்ஞானத்தால் அதிகதரமான தமஸ்ஸும், அந்தத் தமஸ்ஸால் ஜ்ஞானாபாவமும் ஜனிக்கின்றன. இந்த வாக்யத்திலிருந்து ஸாத்விக மொன்றே அங்கீகரிக்கத்தக்கது என்பது வ்யக்தமாகின்றது.

**ப்ரவ்ருத்திம் ச......** ஸம்ஸாரிகளுடைய ப்ரவ்ருத்தி, குணங்களுக்குத் தக்கபடி மாறுகின்றது என்பதை இந்த ச்லோகங்கள் விளக்குகின்றன. இந்த ச்லோகங்

‘ ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச கார்யாகார்யே பயாபயே ।
பந்தம் மோக்ஷம் ச யா வேத்தி புத்திஸ் ஸா பார்த்த ஸாத்த்விகீ ।
யயா தர்மமதர்மம் ச கார்யம் சாகார்யமேவ ச ।
அயதாவத் ப்ரஜாநாதி புத்திஸ் ஸா பார்த்த ராஜஸீ ॥
அதர்மம் தர்மமிதி யா மந்யதே தமஸாவ்ருதா ।
ஸர்வார்த்தாந் விபரீதாம்ஶ்ச புத்திஸ் ஸா பார்த்த தாமஸீ ॥ ”

ஸ.கீ. 18-30,31,32.]

இதி । ஸர்வாஸு புராணாஸு ப்ரஹ்மண: ஸகாஶாதுபலப்தவேதார்த்தஸ்யைவ ஸர்வாணி புராணாநி புராணகாராஶ்சக்ரு: । யதோக்தம்

---

இதயாதியான ச்லோகததாலும, “ப்ரவ்ருத்திம்ச....” இதயாதியான சலோகங களாலும வெளியிட்டி நக்கிறா ஸகல புராணகாராகளும ஸகல புராணாதகங களையும பரஹமாவினிடமிருநது அறிநது கொணடே ஸகல புராணஙகளையும்

---

களின பொருள —‘இவை மோக்ஷ ரூபமான சரேயஸ்ஸை ஸாதிததுக கொடுககும தாமஙகள , இவை அதைக காட்டிலும வேறுபட்ட ஐஹிக மேனமையை ஸாதிததுக கொடுபபவை’ எனறு உளளபடி அவைகளை அறிவிககும புததி, ஸாதவிக புததி; அமமாதிரியே அநத புததி, தேச கால அவஸதா விசேஷஙகளில் ‘இவை செயயத தககவை’ இவை செயயத தகாதவை’ எனபதையும அறிவிககும; சாஸ்தரததைக கடபபது பயஹேது வெனபதையும சாஸ்தரததை அநுஸரிதது நடபபது அபய ஹேது வெனபதையும, அம்மாதிரியே ஸமஸாரததின உணமையையும மோக்ஷததின உணமையையும அது அறிவிககும கீழச சொலலபபடடுளள இரணடு வித தாமஙகளை யும காரயாகாரயஙகளையும எநத புததி உளளபடி அறிவிககவிலலையோ அது ராஜஸம எநத புததியானது தமஸ்ஸால மூடபபடடதாயக கொணடு, தாமததை அதாமமெனறும அதாமததைத தாமமென்றும, இமமாதிரி ஸகல விஷயஙகளையும விபரீதமாகத தோறறு விககினறதோ அது தாமஸம.

ஸர்வாஸு புராணாஸு ..‘ஸகல புராணஙக்ளுக்கும் பரஹ்மாவையே காததாவாகச சொலலககூடுமோ? பராசரா முதலான மஹாஷிகளைப புராண காததாக களாகப பெரியோாகள செலலியிருககிறாகளே ’ எனனும சஙகைககுப பரிஹாரமாக வஸ்து ஸ்திதியை விவரிககிறா. பரஹமாவினிடமிருநதே புராண விஷயங

"கஶ்யாதி யஶாவலேவ-ஓஂ ஓக்ஷாஜெஷீ ஐ-ஒநிஸாதஜெஃ।
வரஷு஁ வெ்ாவா௶ ஹமவா௶ஜ்யொ௶ஃ விதாஐஹஃ॥"
ஐதி।

ஸவள௱-ஷெயெஷு- வெஓவாகெஷீஷு- வா௱ஹா௱வி௱-ஐெஷு- கஶ்ஸிதி

---

செய்திருக்கிறார்கள் என்பதும் "கஶ்யாதி ....." இத்யாதியான ச்லோகத்தால் வ்யக்தம்

ஸவள௱-ஷெயெஷு- திஷ்யதெ—அபௌருஷேயங்களாயுள்ள வேதவாக்யங்கள் பரஸ்பரம் விரோதித்தால், அந்த விரோதத்துக்கு எவ்விதம் நிர்வாஹம்

---

களை அறிந்து கொண்டு மஹர்ஷிகளெல்லாரும் தம்தம் புராணங்களைச் செய்திருக்கிறார்கள் என்பது தான் வஸ்து ஸ்திதி

ஸவள௱-ஷெயெஷு-. இது வரையில் சொல்லிவந்தது என்னவென்றால் —'தத்வ நிர்ணய விஷயத்தில் சார்வாகன் முதலான வேத பாஹ்யர்களின் வாக்யம் ப்ரமாணமாக மாட்டாது; வேதத்தை அவலம்பிக்குமவர்களுக்குள்ளும் சிலர், வேதத்தின் உண்மையான அர்த்தத்தை அறியுமளவு சுத்த ஸத்வ நிஷ்டர்களன்றிக்கே கேவலம் வேதத்தில் ஒருவித ருசியைப் பெறுவிக்கும் ஸ்வல்ப ஸத்வ குணம் மாத்ரம் பொருந்தினவர்களாக இருக்கிறபடியால் அவர்களுடைய வாக்யமும் ப்ரமாணமாகமாட்டாது, எவர் வேதத்தை ப்ரமாணமாக அவலம்பிப்பதுடன் சுத்த ஸத்வ நிஷ்டர்களாகவும் இருக்கிறார்களோ அவர்களுடைய வாக்யமே ப்ரமாணமாகமாட்டும்' என்று முதலில் நிரூபித்து விட்டு, பிறகு 'வேதத்தையே அவலம்பித்து அதன் அர்த்தத்தை வெளியிடும் பொருட்டு அதற்கு உபப்ருஹ்மணங்களாகிற புராணங்களைச் செய்துள்ள புராண கர்த்தாக்களுள் எவர்கள் சுத்த ஸத்வ நிஷ்டர்கள்? எவர்களுடைய புராணங்களை நாம் ப்ரமாணங்களாக அங்கீகரிக்கக்கூடும்?' என்பதை விளக்கப் புகுந்தவராய், 'ஸகல புராணங்களுக்கும் ப்ரஹ்மா ஒருவரே வக்தாவாக இருக்கச் செய்தேயும், அவர் குண த்ரய வச்யரானபடியால், அவருக்கு ரஜஸ்தமோ குணங்கள் மேலிட்டிருக்கும் பொழுது அவரிடமிருந்து வெளிவந்த புராணங்களை த்யஜித்து விட்டு ஸத்வ குணம் மேலிட்டிருக்கும் பொழுது அவர் சொன்னவற்றை ஸ்வீகரித்தல் வேண்டும்' என்று நிதர்சனம் செய்தார். 'அது தான் எப்படி விளங்கும்?' என்பதை, 'எவையெவை விஷ்ணுவின் மாஹாத்ம்யத்தைக் கொண்டாடுகின்றன

அத² தாத்பர்யநிஶ்சயாயாவிரோத⁴: ஸ ஏவ பூர்வோக்த: । யதா²விரோத⁴ வக்தவ்யமிதி

“ப்ராணம் மநஸி ஸஹ கரணைர் நாதா³ந்தே பரமாத்மநி ஸம்ப்ரதிஷ்டா²ப்ய த்⁴யாயீதேஶாநம்”,

---

செய்யத்தக்கூடும்? என்னில், பூர்வாபர பர்யாலோசனம் செய்து அதனால் தாத்பர்யத்தை நிச்சயிக்கும் பக்ஷத்தில், அந்த விரோதத்துக்கு நிர்வாஹம் ஏற்படுமென்று கீழே சொல்லி இருக்கிறோம் ‘ப்ராணம் மநஸி” “ப்³ரஹ்ம விஷ்ணு

---

வோ அவையவை ஸத்வ குணம் மேலிட்ட காலத்திற் சொல்லப்பட்டவை’ என்னும் ப்ரமாண வாக்யத்தால் தெளிவித்தார் இது தான் இதுவரையில் சொன்ன விஷயம் இனி, ‘பௌருஷேயங்களாயுள்ள புராணங்களின் ப்ராமாண்யத்தையும் அப்ராமாண்யத்தையும் அந்தப் புராணங்களின் வக்தாவினுடைய குணதோஷங்களைக் கொண்டு நிர்த்தாரணம் செய்வது உபபந்நமேயாயினும், அபௌருஷேயமாயுள்ள வேத வாக்யங்கள் பரஸ்பரம் விரோதித்தால் அவ்விடத்தில் எவ்விதம் நிர்வாஹம் செய்யக்கூடும்?’ என்னும் விஷயத்தை விசாரிக்கிறார்

**தாத்பர்யநிஶ்சயாயாவிரோத⁴: ஸ ஏவ பூர்வோக்த:**—‘கீழ்ல, அபேத ச்ருதிகளெல்லாவற்றுக்கும் பூர்வாபர பர்யாலோசனை முதலியவைகளைச் செய்து அது வழியாக அவைகளின் தாத்பர்யத்தை நிச்சயித்து எம்மாதிரி நிர்வாஹத்தைச் செய்தோமோ, அம்மாதிரியே இவ்விடத்திலும் அவிரோத நிர்வாஹம் செய்யக் கூடும் என்று சொல்லுகிறார் இவ்விடத்தில் சங்கிக்கப்படும் விஷயம் என்னவென்றால்—‘ சில ச்ருதி வாக்யங்கள் சிவனை ஜகத் காரண வஸ்துவாகவும் ஆகையால் அவனே த்யாநிக்கப்பட வேண்டியவனென்றும் கூறுகின்றன; மற்றும் சில வாக்யங்கள் ப்ரஹ்மாவையும் இந்த்ரனையும் வேறு மற்றை தேவதைகளையும் த்யேய வஸ்துவாகப் புகழ்கின்றன. மற்றும் சில ச்ருதிகள் விஷ்ணுவை ஜகத்காரணமாகச் சொல்லுகின்றன வேறு சில ச்ருதிகள், ப்ரஹ்மா விஷ்ணு ருத்ரன் இவர்களெல்லாரும் உண்டுபண்ணப்படுகிறார்களென்றும், இவர்களைக் காட்டிலும் உத்க்ருஷ்டமான வேறொன்றே ஜகத்காரணமென்றும் சொல்லுகின்றன இவ்விதம் இருக்கையில் ஸ்ரீமந் நாராயணனே பரப்ரஹ்மமென்றும் அவனே த்யாநம் செய்யத்தகுந்தவனென்றும் சில ச்ருதி வாக்யங்களை மாத்ரம் அவலம்பித்து நாம் நிர்த்தாரணம் செய்யக்கூடுமோ?’ என்பதே

“ப்ராணம் மநஸி . . . . .” இதன் பொருள்:—ஸகல இந்த்ரியங்களையும்

"ப்ரஹ்மவிஷ்ணுருத்ரேந்த்ராஸ்தே ஸர்வே ஸம்ப்ரஸூயந்தே ந காரணம்; காரணம் து த்யேய: ஸர்வைஶ்வர்யஸம்பந்ந: ஸர்வேஶ்வர: ஶம்புராகாஶமத்யே த்யேய:" [அதர்வஶிகா],

'யஸ்மாத் பரம் நாபரமஸ்தி கிஞ்சித் யஸ்மாந்நாணீயோ ந ஜ்யாயோऽஸ்தி கஶ்சித் । வ்ருக்ஷ இவ ஸ்தப்தோ திவி திஷ்டத்யேகஸ்தேநேதம் பூர்ணம் புருஷேண ஸர்வம் ॥" [ஶ்வேதாஶ்வதரோபநிஷத்]

"ததோ யதுத்தரதரம் ததரூபமநாமயம், ய ஏதத்விதுரம்ருதாஸ்தே பவந்தி, அதேதரே து:கமேவாபி யந்தி, ஸர்வாநநஶிரோக்ரீவ: ஸர்வபூதகுஹாஶய: । ஸர்வவ்யாபீ ஸ பகவாந் தஸ்மாத் ஸர்வகத: ஶிவ:",

---

ருத்ரேந்த்ரா:", 'யஸ்மாத் பரம்", "ததோ யதுத்தரதரம்", 'யதத:," ததக்ஷரம்" இத்யாதியான வாக்யங்களுக்கும், கீழே ப்ரதிபாதிக்கப்பட்டுள்ள

---

பாஹ்ய விஷயங்களிலிருந்து நிரோதம் செய்து கொண்டு அவைகளைப் பரமாத்மாவினிடத்தில் நிலை நிறுத்தி ஈசானனை த்யானம் செய்யவேண்டும்

"ப்ரஹ்மவிஷ்ணு . " இதன் பொருள் —ப்ரஹ்மா விஷ்ணு ருத்ரன் இந்த்ரன் இவர்களெல்லாரும் உண்டு பண்ணப்படுகிறார்கள் ஜகத் காரணமொன்றே உண்டுபண்ணப் படுகிறதில்லை அது தான் த்யானம் செய்யப்படத் தகுந்தது. ஸர்வைச்வர்ய ஸம்பந்நனாகவும் ஸர்வேச்வரனாகவுமுள்ள சம்புவே ஆகாசத்தின் நடுவில் த்யானிக்கத் தகுந்தவன்

யஸ்மாத் :—இதற்கு ஆபாதத் தோன்றும் அர்த்தமாவது 'எவனைக் காட்டிலும் பரமான வஸ்துவும் அபரமான வஸ்துவும் இல்லையோ, எவன் வ்ருக்ஷம் போல ஆகாசத்தில் ஒருவனாக நிற்கிறானோ, அவனாலே இந்த விச்வம் முழுவதும் பூர்ணமாய் இருக்கின்றது அதற்கு மேற்பட்டது யாதொன்று உண்டோ அது ரூபமற்றது, தோஷமற்றது எவர்கள் அதை அறிகிறார்களோ அவர்களே மோக்ஷத்தை அடைகிறார்கள், மற்றவர்களெல்லோரும் து:க்கத்தையே அடைகிறார்கள் அந்த வஸ்துவுக்கு எவ்விடத்திலும் முகம் சிரஸ் கழுத்து அது ஸர்வ ப்ராணிகளின் ஹ்ருதய குஹையிலும் வஸிக்கின்றது; அது ஸர்வவ்யாபி, அது சிவனெனப்படும் பகவானே.'

ஸ்ரீவிஷ்ணுபுராணே,

"ஸமஸ்தாஶ்ஶக்தயஶ்சைதா ந்ருப யத்ர ப்ரதிஷ்டிதா: ।
தத்விஶ்வரூபவைரூப்யம் ரூபமந்யத்தரேர்மஹத்"
ஸமூர்த்தம் ப்ரஹ்ம ஸாகாரம் ஸர்வப்ரஹ்மமயோ ஹரி: ।
நித்யைவைஷா ஜகந்மாதா விஷ்ணோ: ஶ்ரீரநபாயிநீ ॥"
"யதா ஸர்வகதோ விஷ்ணுஸ்ததைவேயம் த்விஜோத்தம ।"
"தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ ।
விஷ்ணோர்தேஹாநுரூபாம் வை கரோத்யேஷாத்மநஸ்தநும்"
"ஏகாந்திந: ஸதா ப்ரஹ்மத்யாயிநோ யோகிநோ ஹி யே ।
தேஷாம் தத்பரமம் ஸ்தாநம் யத்வை பஶ்யந்தி ஸூரய: ॥"

---

ஸ்ரீ விஷ்ணுபுராணத்திலும்—' இந்தச் சக்திகளெல்லாம் எவ்விடத்தில் ப்ரதிஷ்டிதங்களாக இருக்கின்றனவோ, அந்த பகவத்ரூபம் விலக்ஷணமான ஸந்நிவேசத்துடன் கூடியது, அது வேறு தாவபமே, அது அளவுக்கு விஞ்சினது,' 'ஹரி என்னும் விஷ்ணு, விக்ரஹத்துடன் கூடிய ப்ரஹ்மம, ஸகல ஜீவன்களும அவனுக்குச் சேஷ பூதங்கள்" ' ஜகத்திற்கெல்லாம் மாதாவாக இருக்கும் நித்யையான இந்த லக்ஷ்மி அந்த விஷ்ணுவை விட்டு ஒரு பொழுதும் விலகாதவள், விஷ்ணு எப்படி எங்கும் வ்யாபித்திருக்கிறாரோ அவ்விதமே இவளும் எங்கும வ்யாபித்திருப்பவள். விஷ்ணு தேவனாக அவதரித்தால் இவளும் தேவர்களுடைய தேஹத்தை எடுத்துக் கொள்ளுகிறாள்; மநுஷ்யாவதாரம் செய்யும் பொழுது மநுஷ்ய தேஹத்தை எடுத்துக் கொள்ளுகிறாள் விஷ்ணு எடுத்துக் கொள்ளும் ரூபங்களுக்கு அநுரூபமான ரூபத்தையே இவள் எப்பொழுதும் தனது ரூபமாகச் செய்து கொள்ளுகிறாள்' 'விஷ்ணுவுக்குப் பரமமான ஸ்தானமொன்று உண்டு; எப்பொழுதும் ப்ரஹ்மத்தையே த்யானம் செய்துகொண்டு ஏகாந்திகளாயும் யோகிகளாயும் இருப்பவர்கள் அந்தப் பரமமான ஸ்தானத்தில் இருக்கிறார்கள், அந்த ஸ்தானத்தை ஸூரிகளென்னும் நித்யர்கள் எப்பொழுதும் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்' ' அந்த

---

என்பதையும் குறிக்கின்றன என்பது தான் இதிலிருந்து பகவானுக்கு நிச்சயமாக திவ்ய மங்கள விக்ரஹமொன்று உண்டு என்பது ஏற்படுகின்றது. '"நித்யஶ்ரீ:" என்னும் பதம் அவனுக்கு லக்ஷ்மி என்னும் பத்நி ஒருவள் உண்டு என்பதைக் குறிக்கின்றது. சங்கம் முதலிய ஆயுதங்களும் அவனுக்கு உண்டு என்பதைக் காண்பிக்கின்றது ஶம்வ 'அக்ஷ மஹாயுதா:' என்னும் பதம்.

ஸர்வப்ரஹ்மமய:.—இவ்விடத்தில் 'ப்ரஹ்ம' என்னும் பதம் ஜீவனைக்குறிக்கின்றது சுத்த ஜீவ ஸ்வரூபம் அவனுக்குச் சேஷம் என்பது தாத்பர்யம்.

ஸமஸ்தா:.—பக்த ஜீவன் முக்த ஜீவன் காம ரூபமான அவித்யை இவை சக்திகள். ' விஶ்வரூபவைரூப்யம்' என்பதற்கு 'ஸந்நிவேசத்தின் வைலக்ஷண்யம்' என்பது பொருள்

நித்யைவைஷா—லக்ஷ்மி அவனுக்கு பத்நி என்பதற்கு இது ப்ரமாணம்.

"கலா முஹூர்த்தாதிமயஶ்ச காலோ
ந யத்விபூதே: பரிணாமஹேது:॥"

மஹாபாரதே ச,

"திவ்யம் ஸ்தானமஜரம் சாப்ரமேயம்
துர்விஜ்ஞேயம் சாகமைர்கம்யமாத்யம் ।
"கச்ச ப்ரபோ ரக்ஷ சாஸ்மான் ப்ரபன்னான்
கல்பே கல்பே ஜாயமான: ஸ்வமூர்த்த்யா॥"
"கால: ஸ பசதே தத்ர ந காலஸ்தத்ர வை ப்ரபு: ।"

இதி । பரமஸ்ய ப்ரஹ்மணோ ரூபவத்த்வம் ஸூத்ரகாரஶ்ச வததி "அந்தஸ்தத்தர்மோபதேஶாத்" இதி । ய ஏஷோऽந்தராதித்யே ஹிரண்மய

---

ஸ்தாநம் நித்யமானது. கலை முஹூர்த்தம் முதலிய காலப் பிரிவுகள் அந்த விபூதிக்கு எவ்வித மாறுதல்களையும் செய்ய சக்தியற்றவை'

மஹா பாரதத்திலும்—'விஷ்ணுவின் ஸ்தாநமாகிற வைகுண்டம் என்பது ஒரு திவ்யமான ஸ்தாநம்; அதற்கு அழிவு இல்லை; அது அளவற்ற பெருமையை உடையது, அது நமது இந்த்ரியங்களால் அறியத் தகுந்ததன்று; சாஸ்த்ரங்களால் மாத்ரம் அதை அறியக்கூடும். அது ஆதி முதல் இருப்பது ஹே ப்ரபோ; அந்த லோகத்திற்கு நீர் போகலாம். ஆனால் ஒவ்வொரு கல்பத்திலும் நீர் உம்முடைய திவ்ய மூர்த்தியுடன் அவதரித்து உரிமை அடைந்திருக்கும் எங்களைக் காப்பாற்றவேண்டும்' 'அவ்விடத்தில் காலத்திற்கு எவ்வித சக்தியுமில்லை; இவ்விடத்தில் அது வஸ்துக்களை மாற்றுவதுபோல அவ்விடத்தில் மாற்ற மாட்டாது'

பர ப்ரஹ்மத்திற்கு ரூபம் உண்டு என்பதை ஸூத்ர காரரும் "அந்தஸ்தத்தர்மோபதேஶாத்" என்னும் ஸூத்ரத்தால் வெளியிட்டிருக்கிறார். அந்த ஸூத்ரத்தின்

---

மஹாபாரதே ச:—பரமமான ஸ்தாநமொன்று உண்டு என்பதற்கு இது ப்ரமாணம்

அந்தஸ்தத்தர்மோபதேஶாத்— இது ப்ரஹ்ம ஸூத்ரங்களுள் ஒன்று. இதன் பொருள் —அந்த:-ஸூர்யனிடத்திலும் கண்ணின் உள்ளிலும் தென்படும் புருஷன் ஜீவனைக்காட்டிலும் விலக்ஷணமான பரமாத்மாவே; ஏனென்றால், 'தத்தர்மோபதேஶாத்'-அந்தப் பரமாத்மாவுக்கே ஸம்பவிக்கக்கூடிய தர்ம விசேஷமானது இந்த உபநிஷத்தில் உபதேசிக்கப்பட்டிருக்கின்றது. சாந்தோக்யத்தில் தென்படும் 'ய ஏஷோऽந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருஶ்யதே' என்றும் 'அத ய ஏஷோऽந்தரக்ஷிணி புருஷோ த்ருஶ்யதே' என்றும் ஆரம்பிக்கும் வாக்யங்களால் விலக்ஷண புண்ய சாலிகளான ஆதித்யன் இந்த்ரன் ப்ரஹ்மா முதலிய ஜீவன்களுள் ஒருவனை சொல்லப்படுகிறதா? இல்லாவிட்டால் அவர்களைக்காட்டிலும் வேறுபட்ட பரமாத்மா சொல்லப்படுகிறதா? என்று ஸந்தேஹித்துக்கொண்டு, 'ஜீவனைக்காட்டிலும் வேறுபட்ட பரமாத்மாவே சொல்லப்படுகிறன்'

**யோ(அ)ஸௌ தப்தகார்தஸ்வர கிரிவர ப்ரப: ஸஹஸ்ராம்ஶு ஶதஸஹஸ்ர கிரண: கம்பீராம்ப: ஸமுத்பூத ஸும்ருஷ்ட நாலரவிகர விகஸித புண்டரீக தலாமலாயதேக்ஷண: ஸுப்ரூலலாட:**

---

தாத்பர்யமாவது — ஸூர்ய மண்டலத்தின் அந்தர்வர்த்தியாகத் தென்படும் புருஷ ச்ரேஷ்டன் ஸாக்ஷாத் பரமாத்மாவாகவும் பரப்ரஹ்மமாகவும் இருக்கும் நாராயணனே; ஏனென்றால் அவனுடைய தர்மங்களல்லவோ அதைச் சொல்லும் உபநிஷத்தில் நிர்தேசிக்கப்பட்டிருக்கின்றன? அந்த உபநிஷத்தில் சொல்லியிருப்பதிலிருந்து அந்தப் பரம புருஷன் ச்ரேஷ்டமான தங்க மலைபோன்ற ப்ரபையுடன் கூடியவனென்றும், கோடி ஸூர்யனுடைய கிரணங்களைப்போல அளவற்ற கிரணங்களை உடையவனென்றும், ஆழமான ஜலத்தில் உத்பத்தியைப் பெற்றும் த்ருடமான தண்டுடன் கூடியதும்

---

என்று இந்த ஸூத்ரத்தால் ஸ்ரீ வ்யாஸர் ஸித்தாந்தம் செய்கிறார். இப்படி ஸித்தாந்தம் செய்வதற்குக் காரணம் பின்வருமாறு இருக்கின்றது. இந்தச் சாந்தோக்யத்திலேயே இந்த வாக்யங்களுக்குப் பின் வரும் வாக்யங்களில் இந்தப் புருஷனைப்பற்றி பேசுமிடத்தில் 'ஸ ஏஷ ஸர்வேப்ய: பாப்மப்ய உதித:' (அவன் எவ்வித கர்ம பந்தத்துடனும் ஸம்பந்தப்படாதவன்) என்று அவனுடைய அபஹத பாப்மத்வம் பேசப்பட்டிருக்கின்றது. அப்படிப்பட்ட அபஹதபாப்மத்வம் ஜீவன்களொருவருக்கும் ஸம்பவிக்கமாட்டாதாகையால் இவ்விடத்தில் ப்ரதிபாதிக்கப்படுமவன் பரமாத்மாவே என்பது ஸித்தம். இந்த உபநிஷத்தில் பகவானுடைய அபஹத பாப்மத்வம் சொல்லப்பட்டிருப்பதுடன் அவனுக்கு திவ்ய மங்கள விக்ரஹமொன்று உண்டு என்பதும், 'ஹிரண்மய: புருஷோ த்ருஶ்யதே' [தங்கம் போல ப்ரகாசித்துக் கொண்டிருக்கும் ஒரு புருஷன் அவ்விடத்தில் தென்படுகிறான்] 'யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ'' [அவனுக்குத் தாமரை புஷ்பம் போன்ற இரண்டு கண்கள் உண்டு] இத்யாதி வாக்யங்களால் ஏற்படுகின்றது. அந்தத் திவ்யமங்கள விக்ரஹம் நம்முடைய ஊனக் கண்ணுக்குத் தெரியமாட்டாது; விசுத்தமான மனஸ்ஸாலேயே அது அறியப்படக் கூடும் என்பதும் அவ்விடத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. அப்படிப்பட்ட அதீந்த்ரிய ரூபம் பரமாத்மாவுக்கே உண்டு என்பது, 'ந சக்ஷுஷா க்ருஹ்யதே நாபி வாசா' [கண்ணுக்கு எட்டாதது அந்த ரூபம், வாக்காலும் வர்ணிக்கமுடியாதது] 'மனஸா து விஶுத்தேன' [சுத்தமான மனஸ்ஸால் மாத்ரம் அதை க்ரஹிக்கக்கூடும்] இத்யாதியான வேறு வாக்யங்களிலிருந்து ஏற்படுகிற படியால் இவ்விடத்தில் ப்ரதிபாதிக்கப்படுமவன் பரமாத்மாவாகவே இருத்தல் வேண்டும். இது தான் இவ்விடத்தில் உபபாதிக்கப்படும் விஷயம்.

**தப்தகார்தஸ்வர கிரிவர ப்ரப:** — ச்ரேஷ்டமான தங்க மலையின் ப்ரபை போன்ற ப்ரபையை உடையவன். இது 'ஹிரண்மய:' என்பதன் பொருள். இவ்விடத்தில் 'ஹிரண்மய:' [ஸ்வர்ண மயமான] என்பது ஔஜ்ஜ்வல்யத்தைக் குறிப்பதற்கு மாத்ரம் ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கின்றது.

ஸுநாஸ: ஸுஸ்மிதாதரவித்ரும: ஸுசிரகோமலகண்ட: கம்புக்ரீவ: ஸமுந்நதாம்ஸவிலம்பிசாருரூபதிவ்யகர்ணகிஸலய: பீநவ்ருத்தாயதபுஜஸ்சாருதராதாம்ரகரதலாநுரக்தாங்குல

---

ஸூர்ய கிரணங்களால் மலரச் செய்யப் பெற்றுமுள்ள தாமரைப் புஷ்பத்தின் தளங்கள் போன்ற அழுக்கற்ற நீண்ட கண்களை உடையவனென்றும், அழகான புருவம் நெற்றி மூக்கு இவைகளை உடையவனென்றும், அழகான மந்த ஸ்மிதத்துடன் கூடிய பழவம் போன்ற உதடுகளையும் மநோஜ்ஞமாயும் கோமளமாயுமுள்ள கன்னங்களையும் சங்கம் போன்ற கழுத்தையும் உயர்ந்த தோள்களில் தொங்கிக்கொண்டிருக்கும் நன்கு அமைந்துள்ள திவ்ய காதுகளையும் திரண்டு உருண்டிருக்கும் புஜங்களையும் உடைத்தாயிருக்கிறானென்றும், மிக்க அழகு பொருந்தியும் மிகச் சிவந்துமிருக்கும் உள்ளங்

---

கம்பீராம்பஸ்ஸமுத்பூத — இது ‘யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ’ என்னும் ச்ருதி வாக்யத்தின் அர்த்தத்தை விளக்குகின்றது. இந்த ச்ருதி வாக்யத்திற்கு மூன்று அர்த்தங்கள் வாக்யகாரரால் உபபந்ந அர்த்தங்களாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. அவையாவன—(1) கே-ஜலத்தில், ஆஸ்தே-நின்றுகொண்டிருக்கிற. ‘கே ஆஸ்தே’ இதி கப்யாஸம் । இவ்விடத்தில் ‘ஆஸ்தே’ என்பதிலுள்ள ‘ஆ’ லோபமடைகிறபடியால், ‘காஸ்யாஸம்’ என்று ரூபம் ஏற்படாமல் ‘கப்யாஸம்’ என்று ரூபம் ஏற்படுகின்றது. ஜலத்தை விட்டு எடுக்கப்பட்ட தாமரைப் புஷ்பத்தைக் காட்டிலும் ஜலத்தில் இருக்கும் புஷ்பத்திற்கு சோபை அதிகமாகையால் அவ்விதம் இவ்விடத்தில் வர்ணிக்கப் பட்டிருக்கின்றது. (2) கம்-ஜலத்தை, பிபதி-குடிக்கின்றது, என்று கபி:, அதாவது ‘தாமரைத் தண்டு’ என்று சொன்னதாயிற்று. கபௌ-அந்தத் தண்டில், ஆஸ்தே-இருக்கின்றது; என்று கப்யாஸம்’ । தண்டிலிருந்து கொய்யப்பட்ட புஷ்பத்தைக் காட்டிலும் தண்டுடன் இருக்கும் புஷ்பத்திற்கு சோபை அதிகமாகையால், இந்த வர்ணநம். (3) கம்-ஜலத்தை, பிபதி ஆகர்ஷிக்கிறான் என்று-கபி:-ஸூர்யன்; கபிநா-ஸூர்யனால், ஆஸ்யதே-மலரச் செய்யப்படுகின்றது, என்று ‘கப்யாஸம்’ । ஸூர்ய கிரணத்தால் மலரும் தாமரைப் புஷ்பத்திற்கு, வேறுவிதமாக மலரச் செய்யப்படும் தாமரைப் புஷ்பத்தைக் காட்டிலும் சோபை அதிகமாகையால் இந்த வர்ணநம். இந்த மூன்று அர்த்தங்களையும் ஸ்ரீ பாஷ்யகாரர், ‘கம்பீராம்பஸ்ஸமுத்பூத’ [ஆழமான ஜலத்தில் உண்டாகியிருக்கிறதும்,] ‘ஸம்ருஷ்டநால’ [தருடமான தண்டுடன் கூடியிருக்கிறதும்,] ‘ரவிகரவிகஸித’ [ஸூர்ய கிரணங்களால் மலரச் செய்யப்பட்டிருக்கிறதும்] என்று மூன்று விசேஷணங்களால் விவரித்திருக்கிறார். ‘புண்டரீக’ என்னும் சப்தம் வெள்ளைத் தாமரைப் புஷ்பத்தையே குறிக்கும். ஆனால், அந்த அர்த்தம் இவ்விடத்தில் உபபந்நமாக மாட்டாதாகையால், இவ்விடத்தில் அந்தச் சப்தம் சிவந்த தாமரைப் புஷ்பத்தையே குறிக்கின்றது என்று நிர்வஹித்திருக்கிறார்கள்.

𑌸𑌂𑌶𑍍𑌲𑌿𑌷𑍍𑌟𑌾𑌙𑍍𑌗𑍁𑌲𑍀𑌭𑌿𑌰𑌲𑌙𑍍𑌕𑍃𑌤𑌸𑍍𑌤𑌨𑍁𑌮𑌧𑍍𑌯𑍋 𑌵𑌿𑌶𑌾𑌲𑌵𑌕𑍍𑌷𑌸𑍍𑌥𑌲𑌃 𑌸𑌮𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌸𑌰𑍍𑌵𑌾𑌙𑍍𑌗𑍋𑌽𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑍍𑌯𑌦𑌿𑌵𑍍𑌯𑌰𑍂𑌪𑌸𑌂𑌹𑌨𑌨𑌃 𑌸𑍍𑌨𑌿𑌗𑍍𑌧𑌵𑌰𑍍𑌣𑌃 𑌪𑍍𑌰𑌬𑍁𑌦𑍍𑌧𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌚𑌾𑌰𑍁𑌚𑌰𑌣𑌯𑍁𑌗𑌲𑌃 𑌸𑍍𑌵𑌾𑌨𑍁𑌰𑍂𑌪𑌪𑍀𑌤𑌾𑌮𑍍𑌬𑌰𑌧𑌰𑍋𑌽𑌮𑌲𑌕𑌿𑌰𑍀𑌟𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑌹𑌾𑌰𑌕𑍌𑌸𑍍𑌤𑍁𑌭𑌕𑍇𑌯𑍂𑌰𑌕𑌟𑌕𑌨𑍂𑌪𑍁𑌰𑍋𑌦𑌰𑌬𑌨𑍍𑌧𑌨𑌾𑌦𑍍𑌯𑌪𑌰𑌿𑌮𑌿𑌤𑌾𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌤𑌦𑌿𑌵𑍍𑌯𑌭𑍂𑌷𑌣𑌃 𑌶𑌙𑍍𑌖𑌚𑌕𑍍𑌰𑌗𑌦𑌾𑌸𑌿𑌶𑌾𑌰𑍍𑌙𑍍𑌗𑌶𑍍𑌰𑍀𑌵𑌤𑍍𑌸𑌵𑌨𑌮𑌾𑌲𑌾𑌲𑌙𑍍𑌕𑍃𑌤𑍋𑌽𑌨𑌵𑌧𑌿𑌕𑌾𑌤𑌿𑌶𑌯𑌸𑍌𑌨𑍍𑌦𑌰𑍍𑌯𑌾𑌹𑍃𑌤𑌾𑌶𑍇𑌷𑌮𑌨𑍋𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌲𑌾𑌵𑌣𑍍𑌯𑌾𑌮𑍃𑌤𑌪𑍂𑌰𑌿𑌤𑌾𑌶𑍇𑌷𑌚𑌰𑌾𑌚𑌰𑌭𑍂𑌤𑌜𑌾𑌤𑍋𑌽𑌤𑍍𑌯𑌦𑍍𑌭𑍁𑌤𑌾𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍌𑌵𑌨𑌃 𑌪𑍁𑌷𑍍𑌪𑌹𑌾𑌸𑌸𑍁𑌕𑍁𑌮𑌾𑌰𑌃 𑌪𑍁𑌣𑍍𑌯𑌗𑌨𑍍𑌧𑌵𑌾𑌸𑌿𑌤𑌾𑌨𑌨𑍍𑌤𑌦𑌿𑌗𑌨𑍍𑌤𑌰𑍋 𑌤𑍍𑌰𑍈𑌲𑍋𑌕𑍍𑌯𑌾𑌕𑍍𑌰𑌮𑌣𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌗𑌮𑍍𑌭𑍀𑌰𑌭𑌾𑌵𑌃 𑌕𑌰𑍁𑌣𑌾𑌨𑍁𑌰𑌾𑌗𑌮𑌧𑍁𑌰𑌲𑍋𑌚𑌨𑌾𑌵𑌲𑍋𑌕𑌿𑌤𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌵𑌰𑍍𑌗𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑌰 𑌉𑌦𑍀𑌰𑍍𑌯𑌤𑍇 । 𑌸 𑌚 𑌨𑌿𑌖𑌿𑌲𑌜𑌗𑌦𑍁𑌦𑌯𑌵𑌿𑌭𑌵𑌲𑌯𑌲𑍀𑌲𑍋 𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑌸𑌮𑌸𑍍𑌤𑌹𑍇𑌯𑌃 𑌸𑌮𑌸𑍍𑌤𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑌨𑌿𑌧𑌿𑌃 𑌸𑍍𑌵

கையுடன் சேர்ந்துள்ள விரல்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கிறானென்றும், அல்பமான மத்யத்துடனும் விசாலமான மார்புடனும் ஸமமாகப் பிரிந்திருக்கும் ஸகல அங்கங்களுடனும் வர்ணத்திற்கு எட்டாத திவ்ய ரூப அமைப்புடனும் ப்ரியமான திருமேனி வர்ணத்துடனும் மலர்ந்த தாமரைப் புஷ்பம்போல இருக்கும் அழகான திருவடி யுகளத்துடனும் தனக்கு அநுரூபமான பீதாம்பரத்தைத் தரித்துக் கொண்டு இருக்கிறானென்றும், நிர்மலமான கிரீடம் குண்டலம் ஹாரம் கௌஸ்துபம் கேயூரம் கடகம் நூபுரம் உதர பந்தனம் இவை முதலிய அளவற்ற ஆச்சர்ய கரங்களான அநந்த திவ்ய பூஷணங்களை அணிந்து கொண்டிருக்கிறானென்றும், சங்கம் சக்ரம் கதை கத்தி சார்ங்கம் ச்ரீவத்ஸம் வநமாலை இவைகளால் அலங்கரிக்கப்பட்டிருக்கிறானென்றும், அளவற்ற மேன்மை பொருந்திய ஸௌந்தர்யத்தால் ஸகல ஜந்துக்களுடைய மநஸ்ஸையும் த்ருஷ்டியையும் ஆகர்ஷித்து நிற்கிறானென்றும், தனது லாவண்யமாகிற அம்ருதத்தால் ஸகல சராசரங்களையும் நிரப்பிக்கொண்டு அத்யாச்சர்ய கரமாயும் மநஸ்ஸால் நினைக்கக்கூடாததாயுமுள்ள நித்யமான யௌவநத்துடன் இருக்கிறானென்றும், புஷ்பம் போன்ற புஞ்சிரிப்பினால் மநஸ்ஸுக்கு மிக ப்ரியனாகவும் தனது புண்யமான கந்தத்தால் ஸகல திக் ப்ரதேசங்களையும் வாஸனையால் வாஸித்துக் கொண்டும், மூன்று லோகங்களையும் தனது காம்பீர்யத்தால் ஆக்ரமித்துக் கொண்டும், தனது ஆச்ரிதர்களெல்லாரையும் கருணையாலும் ப்ரீதியாலும் மதுரமாயுமுள்ள தனது கடாக்ஷங்களால் அநுக்ரஹித்துக் கொண்டும் ப்ரகாசிக்கிறானென்றும் ஒன்றாக விளங்குகின்றது. அவன் ஸகல ஜகத்தினுடையவும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைத் தனது லீலையாகக் கைக்கொண்டிருக்கிறான்; அவனிடம் எவ்வித ஹேயமுமான குணமும் இல்லை; ஸகல கல்யாண குணங்களு

---

'𑌯𑍁𑌵𑌣𑍍𑌯' என்னும் பதம் ஸமுதாய சோபையையும், '𑌸𑍌𑌨𑍍𑌦𑌰𑍍𑌯' என்பது அவயவ சோபையையும் குறிக்கின்றன.

தாவத்ஸர்வஸ்மாத்விலக்ஷண: பரமாத்மா பரம்ப்3ரஹ்ம நாராயண இத்யவகம்யதே | 'தத்3வாக்யசேஷாச்ச'—"ஸர்வேஷாம் ப்ரபு: ஸர்வேஷாம் ரூபா கா(ம)தீஷு ஸர்வேஷாம் காமாநாம்", "ஸ ஸர்வேஷு ஸர்வேஷாம் பாசபந்த உதி3த:" இத்யாதி3ப்ரப்4ருதி | தஸ்யைவ கு3ணா: "ஸர்வஸ்ய வசீ ஸர்வஸ்யேசாந:, அபஹதபாப்மா விஜர:" இத்யாதி3 "ஸத்யஸங்கல்ப:" இத்யந்தா:, "விச்வத: பரமம் நித்யம் விச்வம் நாராயணம் ஹரிம்", "பதிம் விச்வஸ்யாத்மேச்வரம்" இத்யாதி3வாக்ய ப்ரதிபாதி3தா: | வாக்யகாரஶ்சைதத்ஸர்வம் ஸங்க்3ராஹ—'ஹிரண்மய: ப—

---

க்கும் அவன் இருப்பிடம்; தன்னைத்தவிர்த்த மற்றை வஸ்துக்களெல்லாவற்றையும் காட்டிலும் அதிமாத்ரம விலக்ஷணன். இப்படிப்பட்ட ஸ்ரீமந் நாராயணனே அந்த உபநிஷத் வாக்யத்தால் சொல்லப்படுகிறானென்று எப்படி ஏற்படுகின்றதென்றால், அந்த உபநிஷத்தில அப்படிப்பட்ட நாராயணனுக்கு அஸாதாரணங்களான தாமங்களே நிர்த்தேசிக்கப்படுகின்றனவன்றோ? 'அவன ஸர்வ லோகங்களுக்கும் ப்ரபு; எல்லாருடைய இஷ்டங்களையும் நிறைவேற்றி வைப்பவன அவனே; அவனிடத்தில் ஒருவித காம பந்தமும் ஒட்டுகிறதில்லை;' என்பதே அவ்விடத்தில் தென்படும் நிர்த்தேசம். இம்மாதிரியான நிர்த்தேசம 'ஸகலத்தையும் தனது வசத்தில் அடக்கும் திறமையுள்ளவன் ; எல்லாவற்றுக்கும் சேஷி; காம ஸ்பர்ச மற்றவன் ; ஜரை முதலியவை அவனிடம் இல்லை' என்று ஆரம்பித்து 'அவன் ஸத்ய ஸங்கல்பன' என்று முடியும் வாக்யங்களாலும், 'இந்த லோகத்தில் தென்படும் ஸகல சேதநர்களைக்காட்டிலும் அவன் உயர்ந்தவன்; அவன் நித்யன்; அவனே எல்லாவற்றுக்கும் அந்தராத்மா, அவன் தான் நாராயணன்; அவனே ஹரி ; இந்த விச்வம் முழுவதற்கும அவன சேஷி, அவனுக்கு மேற்பட்டு வேறு ஒரு ஈச்வரனுமில்லை ' என்னும் வாக்யங்களாலும் அந்த நாராயணனாகிற பரமாத்மாவுக்கே அம்மாதிரியான குணங்கள உண்டு என்பது வேறு ச்ருதி வாக்யங்களிலிருந்து ஏற்படுகின்றது. வாக்ய காரரும் இந்த அர்த்தத்தைப் பின்வரும் வாக்யத்தால வெளியிட்டிருக்கிறார்—' ஸ்வர்ணமயமான புருஷன காணப்படுகின்றான் என்று சொல்லும உபநிஷத் வாக்யத்தால் ப்ராஜ்ஞனும எல்லாவற்றுக்கும் அந்தராத்மாவாகவும் இருக்கும் பரமாத்மாவே குறிக்கப்படுகின்றான்; ஏனென்றால, 'அவன ஸகல லோகங்களுக்கும ஈசன், ஸகல காமங்களுக்கும ஈசன், அவனை ஒருவித காமமும ஸ்பர்சிக்கமாட்டாது,' என்று அவ்விடத்தில உபதேசிக்கப்பட்டிருக்கின்றதன்றோ ?,

---

தஸ்யைவ கு3ணா:—' இந்த உபநிஷத்தில் காணப்படும வாக்யங்களில் ஸர்வலோகேச்வரத்வம் முதலியவை சொல்லப்பட்டிருக்கின்றன என்பது உண்மையே; அதனால், இவ்விடத்தில ப்ரதிபாதிக்கப்படுமவன் பரமாத்மாவே என்பது எப்படி ஸித்திக்கின்றது?' என்று ஒரு சங்கை ஜநிக்கலாம. அதற்குப் பரிஹாரமாக "தஸ்யைவ கு3ணா:" [அவனுடைய குணங்களல்லவோ இவை?] என்று இவ்விடத்தில் சொல்லப்படுகின்றது.

ஷர ரூபஸ்ய இதி ப்ராஜ்ஞ: ஸர்வஜ்ஞ: ஸ்வ ஸ்வாபாவிகைஶ்வர்ய வமேவாப்ரச்யாவ்ய தேவாதியாகாரநாத்' இத்யாதிநா | தஸ்ய ச ரூபஸ்ய நித்யத்வாதி வாக்யகாரேணைவ ப்ரதிஷித்தம் - 'ஸர்வத்ர ரூபம் க்ருதகஸ்யாநுக்ரஹார்த்தம் தச்சேதநாநாமைஶ்வர்யாத்' இதி [உபாஸிதாநுக்ரஹார்த்த: பரமபுருஷஸ்ய ரூபஸங்க்ரஹ இதி] பூர்வபக்ஷம் க்ருத்வா, 'ரூபம் வா அதீந்த்ரியம் அந்த:கரணப்ரத்யக்ஷம் தந்நிர்தேஶாத்' இதி ஸித்தாந்திதம் | யதா ஜ்ஞாநாதய: பரஸ்ய ப்ரஹ்மண: ஸ்வரூபதயா நிர்தேஶாத் ஸ்வரூபவத் நித்யா: ததா ஸ்வதைவேதம் ரூபம் ஶ்ருத்யா ஸ்வரூபதயா நிர்தேஶாத் ஸ்வரூ-

---

பகவானுடைய இந்த ரூபம் ஒருகால் அநித்யமோ? என்னும் சங்கையும் அந்த வாக்ய காரராலேயே பரிஹரிக்கப் பட்டிருக்கின்றது 'ஒருகால் ஈச்வரன் தனது ஐச்வர்யத்தைக் கைப்பற்றி, இந்த ரூபத்தை ஆச்ரிதர்களின் அநுக்ரஹத்தை உத்தேசித்துச் செய்து கொண்டிருக்கிறானோ?' என்னும் வாக்யத்தால் இந்த ரூபம் உபாஸிக்கிறவனை அநுக்ரஹிக்கும் பொருட்டு பரம புருஷனால் ஒருகால் ஏற்படுத்திக்கொள்ளப்பட்ட ரூபமாக இருக்குமோ வென்று ஒரு சங்கையைச் செய்துகொண்டு, வாக்யகாரர், 'அந்த ரூபம் இந்த்ரியங்களால் க்ரஹிக்கக் கூடாதது, சுத்தமான அந்த: கரணத்தால் மாத்ரம் க்ரஹிக்கக்கூடியரூபமே அது; ஏனென்றால் அப்படிப்பட்ட நிர்தேசமே அவ்விடத்தில் செய்யப்படுகின்றது' என்னும் வாக்யத்தால் அந்தச்சங்கையைப் பரிஹரித்திருக்கிறார். இதன் கருத்து என்ன வென்றால், 'ஜ்ஞானம் முதலியவை பர ப்ரஹ்மத்தின் ஸ்வரூப நிரூபக தர்மங்களென்று நிர்தேசிக்கப்பட்டிருக்கின்றன வென்னும் காரணத்தைக் கொண்டு அவைகளை ஸ்வரூப பூத குணங்களாகவும் [அந்தக் காரணத்தால் நித்யங்களாகவும்] நாம் எப்படி க்ரஹிக்கிறோமோ, அப்படியே இந்த ரூபமும் ச்ருதியில் பர ப்ரஹ்மத்தின் ஸ்வரூப நிரூபக தர்மமாகக் கூறப்பட்டிருக்கிறபடியால் இதையும் அந்தப் பர ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம் போல நித்யமென்றே நாம் க்ரஹித்தல் வேண்டும்' என்

---

ப்ராஜ்ஞ:—இதற்கு 'விபஶ்சித்' என்பது பொருளாகையால், 'விபஶ்சித்' என்று மற்றோரிடத்தில் வ்யக்தமாகக் குறிக்கப்படும் ப்ரஹ்மமே ['ப்ரஹ்மணா ஸஹ விபஶ்சிதா' என்பதில் நோக்கு] இவ்விடத்திலும் ப்ரதிபாதிக்கப்படுகின்றது. அம்மாதிரியே 'ஸர்வஜ்ஞ:' என்னும் பதத்திலும் 'ஸர்வஜ்ஞ: ஸத்யஸங்கல்ப:' என்பதைக் கவனித்தல் வேண்டும்.

ஸ்வாபாவிகைஶ்வர்யமப்ரச்யாவ்ய— இதற்கு 'ஸ்வாபாவிகஸ்வைஶ்வர்யமப்ரச்யாவ்ய' என்பதில் நோக்கு.

தேவாதிநாநாத்— சில கோசங்களில் 'தேவாதிவாத்' என்னும் ஒரு பாடாந்தரம் காணப்படுகின்றது. அந்தப் பாடத்தில் அர்த்தம் யாது என்பது விளங்கவில்லை.

ஸ்வரூபதயா நிர்தேஶாத்—இதற்கு 'ஸ்வரூபமாக நிர்த்தேசிக்கப்

ஸங்க்ருஹீதைவ | பாஷ்யகாரேணைதத் வ்யாக்யாதம்—"ந வா மாயாமாத்ரம், அஞ்ஜஸைவ விஶ்வஸ்ருஜோ ரூபம்; தத்து ந சக்ஷுஷா க்ராஹ்யம், மனஸா த்வகலுஷேண ஸாதநாந்தரவதா க்ருஹ்யதே 'ந சக்ஷுஷா க்ருஹ்யதே நாபி வாசா, மனஸா து விஶுத்தேன' இதி ஶ்ருதே꞉ | ந ஹ்யரூபாயா தேவதாயா ரூபமுபதிஶ்யதே; யதாபூதவாதி ஹி ஶாஸ்த்ரம்; 'மஹாரஜதம் வாஸ꞉,' 'ஆதித்யவர்ணம் தமஸ꞉ பரஸ்தாத்' இதி ப்ரகரணாந்தரநிர்தேஶாஶ்ச ஸாக்ஷிண꞉" இத்யாதினா | "ஹிரண்மய இதி ரூபஸாமாந்யாச்சந்த்ர

---

பதே [த்ரமிடாசார்யராகிய] பாஷ்யகாரராலும் இது இவ்விதமே வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்கின்றது 'ஜகத் ஸ்ரஷ்டாவினுடைய இந்த ரூபம் இந்த்ரஜால வஸ்துக்கள் போல மாயையால் செய்யப்பட்டதன்று. அது இந்த மாம்ஸக் கண்ணால் பார்க்கப் படமாட்டாது; வேறு ஸாதனங்களுடன் கூடிய சுத்தமான மனஸ்ஸால் மாத்ரம் அது க்ரஹிக்கப்படக்கூடும் "ந சக்ஷுஷா க்ருஹ்யதே நாபி வாசா" [அது கண்ணுக்கு எட்டாதது; வாக்குக்கும் எட்டாதது] "மனஸா து விஶுத்தேந" [விசுத்தமான மனஸ்ஸால் மாத்ரம் அதை க்ரஹிக்கலாம்] என்று ச்ருதிகளும் சொல்லுகின்றன. ரூபமற்ற தேவதைக்கு ரூபமுண்டென்று ச்ருதி ஒருகாலும் உபதேசிக்கமாட்டாது, ஏனென்றால் ச்ருதி வஸ்துக்களை உள்ளபடியே உபதேசிக்கின்றதன்றோ? "மஹாரஜதம் வாஸ꞉" [அவனுடைய வஸ்த்ரம் மஹாரஜத வர்ணத்தை உடையது] "ஆதித்யவர்ணம் தமஸ꞉ பரஸ்தாத்" [ப்ரக்ருதி மண்டலத்திற்கு வெளிப்பட்டுள்ள ஒரு ஸ்தான விசேஷத்தில் ஸூர்யனுடைய வர்ணம் போன்ற வர்ணத்தை உடையவனாக அவன் ப்ரகாசிக்கிறான்] என்று வேறு ப்ரகரணங்களில் ச்ருதி செய்யும் நிர்த்தேசங்களும் இதற்கு ஸாக்ஷிகள். நிற்க, "ஹிரண்மய இதி ரூபஸாமாந்யாச்சந்த்ரமுகவத்" [ஹிரண்மய' என்னும் சப்தத்திற்கு 'ஸ்வர்ணத்தால் செய்யப்பட்ட' என்பது பொருளன்று; 'ஸ்வர்ணம்போல உஜ்வலமாயிருக்கிற' என்பது மாத்ரம் அதன் பொருள். ரூபம் ஸமானம் என்பதில் மாத்ரம் நோக்கு. சந்த்ர முகம்' என்னுமிடத்திற்போல] என்பதும் வாக்ய காரருடைய வாக்யம். இதை வ்யாக்யானம் செய்யுமிடத்தில் த்ரமிடாசார்யர் பின் வருமாறு அநுக்ரஹித்திருக்கிறார்—'ஹிரண்மய என்னும் சப்தத்தில் காணப்படும் 'மயட்' என்னும் ப்ரத்யயம் விகாரார்த்த

---

பட்டிருக்கிறபடியால்' என்று பொருள் தோன்றக்கூடும். அது ஜ்ஞானம் முதலியவைகள் விஷயத்தில் விருத்த மாகையால், 'ஸ்வரூபநிரூபகதர்மநிர்தேஶ꞉' என்று பொருள் கொள்ளுதல் வேண்டும்.

ஹிரண்மய꞉—இது ச்ருதியில் காணப்படும் சப்தம். இதற்கு 'ஹிரணயத்தால் செய்யப்பட்ட' என்பது பொருளன்று 'ஹிரண்யம் போல ஜ்வலித்துக் கொண்டிருக்கும்' என்பதே பொருள். முதலில் கூறப்பட்டுள்ள பொருள் விருத்தமாகையால் அது ஏற்றுக் கொள்ளப்படவில்லை.

ஸம்ஸ்ருஷ்டமிவஸத்” இதி ச வாக்யம் । தஸ்ய வ்யாவ்ருத்தி:— “ந யஸ்ய விகாராதி³ரூபாய வ்யஜ்யதே; ஸ நாராயணஸ்தா²ணுர்ந:” இதி । யதா² ஜ்ஞாநாதி³கல்யாணகு³ணக³ணாநந்த்யநிர்தே³ஸாத் ஸகலேதர கல்யாணகு³ணவிஸிஷ்டம் பரம் ப்³ரஹ்ம ப்ரதிபத்³யதே, ததா² 'ஆதி³த்யவர்ணம்' இத்யாதி³ ஸ்ருதிநிர்தே³ஸாத் ஸ்வாபி⁴மதாநுரூபைகரூப ரூபவ: பரப்³ரஹ்மபூ⁴த: புருஷோத்தமோ நாராயண இதி ஜ்ஞாயதே ।

ததா² 'அஸ்யேஸாநா ஜக³தோ விஷ்ணுபத்நீ' 'ஹ்ரீஸ்ச தே லக்ஷ்மீஸ்ச பத்ந்யௌ' 'ஸதா³ பஸ்யந்தி ஸூரய:' 'தமஸ: பரஸ்தாத்' 'க்ஷயந்தமஸ்ய ரஜஸ: பராகே' இத்யாதி³நா பத்நீபரிஜநஸ்தா²நாதீ³நாம்

---

தத்தை [அதனால் செய்யப்பட்ட என்னும் அர்த்தத்தை] குறிக்கவில்லை; ஏனென்றால் விக்ஹரத்துடன் கூடியுள்ள ஆத்மா அம்மாதிரி உண்டுபண்ணக் கூடியதன்றாகையாலே? ஜ்ஞானம் முதலிய கல்யாண குணங்களின் எல்லையற்ற இருப்பைச் சொல்லும் ச்ருதி வாக்ய பலத்தால், பர ப்ரஹ்மத்தைக் கல்யாண குணங்களுடன் கூடியதென்று நாம் எப்படி அறிகின்றோமோ, அப்படியே ‘ஆதித்ய வர்ணம்’ என்பது முதலிய ச்ருதி நிர்தேச பலத்தைக்கொண்டு, பர ப்ரஹ்மமாயும் புருஷோத்தமனாயும் இருக்கிற நாராயணன் தனக்கு அபிமதமாயும் தனக்கு அநுரூபமாயுமுள்ள ஒரு ரூபத்துடன் கூடியிருக்கிறானென்றும் அறிதல் வேண்டும்.

ததா²ஸ்யேஸாநா...“அஸ்யேஸாநா ஜக³தோ விஷ்ணுபத்நீ” [விஷ்ணுவின் பத்நி இந்த ஜகத் முழுவதற்கும் ஈச்வரீ,] “ஹ்ரீஸ்ச தே லக்ஷ்மீஸ்ச பத்ந்யௌ” [பூமியும் லக்ஷ்மியும் உன்னுடைய பத்நிகள்] “ஸதா³ பஸ்யந்தி ஸூரய:” [நித்ய ஸூரிகள் எப்பொழுதும் பார்த்திருக்கிறார்கள்] “தமஸ: பரஸ்தாத்” [ப்ரக்ருதி மண்டலத்திற்கு அப்புறத்தில் (அவனுடைய ஸ்தானம்) இருக்கின்றது] “க்ஷயந்தமஸ்ய ரஜஸ: பராகே” [இந்த ப்ரக்ருதி மண்டலத்திற்கு வெளிப்பட்டு வஸித்துக்கொண்டிருக்கும்] இவை முதலிய ச்ருதி வாக்யங்களாற் செய்யப்படும், நிர்த்தேசத்தைக் கொண்டே பகவானுக்குப் பத்நிகள் உண்டென்றும், பரிஜனங்களுண்

---

யதா² ஜ்ஞாநாதி³—இவ்விடத்தில் சொல்லப்படும் ந்யாயம் இதுவே—‘ எது எது ப்ராமாணிகமோ அது அது அங்கீகரிக்கப்படத்தக்கது. ஜ்ஞானம் முதலிய க[illegible]ண குணங்கள் ப்ராமாணிகங்கள்; அப்படியே ரூபமும் ப்ராமாணிகம் இப்படி இருக்கையில் இவைகளுள் ஒன்றை மாத்ரம் அங்கீகரித்து மற்றொன்றை அங்கீகரியாமல் விடுவது ந்யாயத்திற்கு ஒத்ததாக மாட்டாது ’ என்பதுதான்

ததா²ஸ்யேஸாநா—வாக்ய காரரும் பாஷ்யகாரராகிய த்ரமிடாசார்யரும், ரூபத்தை ஸமர்த்தித்திருக்கிறார்கள். அவர்களால் சொல்லப்பட்டுள்ள ந்யாயம் பத்நீ பரிஜனங்கள் முதலிய விஷயங்களிலும் அந்வயிக்குமாதலால், அவைகளையும் அவர்கள் தமது கருத்தில் கொண்டிருக்க வேண்டுமென்று இவ்விடத்தில் சொல்லப்படுகின்றது.

நிர்தேசாதேவ ததேவ ஸங்க்ருஹ்யதே । யதாஹ பாஷ்யகார: "யதாபூதவாதி ஹி சாஸ்த்ரம்" இதி । ஏததுக்தம் பவதி - யதா 'ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம' இதி நிர்தேசாத் பரமாத்மஸ்வரூபம் ஸகலஹேயப்ரத்யநீகாநந்தஜ்ஞாநாநந்தைகதாநதயா ஸகலேதரவிலக்ஷணமவகம்யதே, யதா ச 'யஸ்ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்' 'பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச' 'தமேவ பாந்தமநுபாதி ஸர்வம்

---

டென்றும் ஒரு ஸ்தாந விசேஷமுண்டென்றும் நாம் அறிதல் வேண்டும். "யதாபூதவாதி ஹி சாஸ்த்ரம்" [உள்ளபடியன்றோ சாஸ்த்ரம் சொல்லுகிறது?] என்று பாஷ்யகாரர் சொல்லியிருக்கிறார் ஆகையால் நாம் அறியவேண்டியது இதுதான்— 'பரமாத்மாவின் ஸ்வரூபமானது ஸகல ஹேய ஸம்பந்தமற்றும் எல்லையிராத ஆநந்தத்திற்கு இருப்பிடமாயும் ஒருவித அளவுக்கும் உட்படாததாயும் இருக்கிறபடியால் மற்றை ஸகல வஸ்துக்களைக் காட்டிலும் அது விலக்ஷணமென்று நாம் எப்படி "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம" என்னும் ச்ருதி நிர்தேசத்திலிருந்து அறிகின்றோமோ, அந்த ப்ரஹ்மத்தின் குணங்களெல்லாம் எல்லையுமற்றவை எண்ணிக்கையுமற்றவை யென்றும் மற்றை வஸ்துக்களில் காணப்படும் குணங்களைக் காட்டிலும் விலக்ஷணங்கள் என்றும் "யஸ்ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்", "பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச", "தமேவ பாந்தமநுபாதி ஸர்வம் தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி" என்னும் இவை முதலிய ச்ருதி நிர்தேசங்களிலிருந்து நாம் எப்படி அறிகின்றோமோ, அப்படியே "ஆதித்யவர்ணம்" என்பது முதலான நிர்த்தேசங்களிலிருந்து பகவானுக்கு ரூபம் உண்டென்றும் பரிஜநங்கள் இருக்கிறார்களென்றும் ஸ்தாநவிசேஷம் முதலியவை

---

ஏதது³க்தம் பவதி—கீழ்ல் "யதா ஜ்ஞாநாதி" என்று ஆரம்பிக்கும் வாக்யத்தால் உபபாதிக்கப்படும் விஷயமே மறுபடியும் இவ்விடத்தில் சொல்லப்படுவது போலத் தோன்றும். கீழ்ல் 'கல்யாண குணங்கள் எப்படி ப்ராமாணிகங்களோ, அப்படியே ரூபமும் ப்ராமாணிக மாகையால் இதுவும் அங்கீகரிக்கப்பட வேண்டும்' என்று சொல்லப்பட்டது. 'கல்யாண குணங்களையும் நாங்கள் ப்ராமாணிகங்களாக ஒத்துக் கொள்ளவில்லை' என்று வாதிப்பவர்களுக்காக இந்த வாக்யம். இதில் சொல்லப்படும் விஷயமாவது—'நீங்கள் பகவத் ஸ்வரூபத்தை அங்கீகரித்து, கல்யாண குணங்களை அங்கீகரியாமல் இருப்பது சரியன்று; ஏனென்றால் ஸ்வரூபம் ப்ராமாணிகமாக இருப்பது போல, குணங்களும் ப்ராமாணிகங்களே' என்பது தான். ஸ்வரூபத்தையும் ப்ராமாணிகமாக ஒத்துக் கொள்ளாதவரும் உளர். அவர்களுக்கு "வேதாஹம் ஏதம் புருஷம்" என்று ஆரம்பிக்கும் மேல் க்ரந்தத்தால் ஸமாதாநம் சொல்லப்படுகின்றது.

ஔத்பத்திக:—உத்பத்தியாலேயே ஏற்பட்டது; அதாவது 'ஸ்வாபாவிகம்' என்று சொன்னதாயிற்று.

தஸ்ய ஸாரஸாரவிசேஷம் விஹாரி' இத்யாதிநிர்தேசைச்ச நிரதிசய ஸம்வேத்யாச்ச குணா: ஸகலேதரவிலக்ஷணா:; ததா 'ஆதித்யவர்ணம்' இத்யாதிநிர்தேசைச்ச திவ்யபரிஜநஸ்தாநாதயச்ச ஸகலேதரவிலக்ஷணா: ஸ்வாஸாதாரணா அநிர்தேச்யஸ்வரூபஸ்வபாவா இதி ।

வேதா: ப்ரமாணம் சேத் விதயர்த்தவாதமந்த்ரகதம் ஸர்வம் அபூர்வம் யதாவஸ்திதமேவ போதயந்தி । ப்ராமாண்யம் ச வேதாநாம் 'ஔத்பத்திகஸ்து சப்தஸ்யார்த்தேந ஸம்பந்த:' இத்யுக்தம் । யதா அக்நிஜலாதீநாம் ஔஷ்ண்யாதிசக்திநியம: ஸ்வாபாவிக:, யதா ச சக்ஷுராதீநாம் இந்த்ரியாணாம் புத்திவிசேஷஜநநசக்தி: ஸ்வாபாவிகீ, ததா சப்தஸ்யாபி போதநசக்தி: ஸ்வாபாவிகீ । ந ச ஹஸ்தசேஷ்டாதிவத் ஸங்கேதமூலம் சப்தஸ்ய போதகத்வமிதி

---

உண்டென்றும் இவையெல்லாம் மற்றை வஸ்துக்களில் காணப்படும் ரூபம் முதலியவைகளைக் காட்டிலும் விலக்ஷணங்களென்றும் இவையெல்லாம் அவனுக்கே அஸாதாரணங்களென்றும் இவைகளின் ஸ்வரூபமும் ஸ்வபாவமும் ஒரு விதத்தாலும் நம்மால் இப்படிப்பட்டவையென்று நிர்தேசிக்கக் கூடாதவையென்றும் அறிகின்றோம்.

வேதா: ப்ரமாணம் சேத்—[அர்த்தவாதங்களாகிற வேத பாகங்களுக்கு ஸ்வார்த்தத்தில் தாத்பர்யமில்லையாதலால் ப்ரஹ்ம ஸ்வரூபமே ஒத்துக்கொள்ளத் தக்கதன்று என்று சங்கிப்பதும் யுக்தமன்று]. வேதங்களில் காணப்படும் விதி பாகங்களோ, அர்த்தவாத பாகங்களோ, மந்த்ர பாகங்களோ, இவையெல்லாம், வேறு ஸாதக ப்ரமாணங்களை இல்லாமலும் மற்றை ப்ரமாணங்களுக்கு விரோதியாமலும் இருக்கும் வரையில், தம் தம்மால் குறிக்கப்பட்டுள்ள அர்த்தங்களை உள்ளபடியே அவை போதிக்கின்றனவென்று சொல்லப்பட்டிருக்கின்றது. வேதங்களிலுள்ள சப்தங்களுக்கும் அவைகளால் போதிக்கப்படும் அர்த்தத்திற்கும் உள்ள ஸம்பந்தமும் இயற்கையாலேயே ஏற்பட்டிருக்கின்றது என்பதை நாம் அறிதல் வேண்டும். நெருப்பு ஜலம் முதலியவைகளுக்கு உஷ்ணமாயிருப்பது முதலியவை போலவும், கண் முதலிய இந்த்ரியங்களுக்கு புத்தி விசேஷத்தை உண்டுபண்ணும் சக்தி இருப்பது போலவும், சப்தங்களுக்கு அர்த்தத்தைப் போதிப்பிக்கும் சக்தி ஸ்வபாவத்தாலேயே உண்டு. ஸங்கேதத்தால் சிற்சில கை ஜாடைகளுக்குச் சிற்சில அர்த்தங்களை நாம் ஏற்பாடு செய்து கொள்வதுபோல,

---

நநு—சப்தங்கள் ஸ்வபாவத்தாலேயே அர்த்தத்தைப் போதிக்குமானால், ஏன் அந்தப் போதம் அவைகளுக்குப் பரஸ்பரமுள்ள ஸம்பந்த ஜ்ஞானத்தை அபேக்ஷித்து நிற்கின்றது? அப்படி அது அபேக்ஷித்து நிற்கிறபடியால், சப்தங்கள் ஸ்வபாவத்தாலேயே அர்த்தத்தை உணர்த்துகின்றன என்று சொல்வது அயுக்தமென்று ஏற்படவில்லையோ? அது ஸங்கேதத்தாலேயே ஏற்பட்டிருக்கின்றது என்று சொல்லவேண்டாமோ? இதுதான் இவ்விடத்தில் செய்யப்படும் ஆக்ஷேபம்.

வக்தும் யுக்தம், அநாத்யநுஸந்தாநாவிச்சேதேऽபி ஸங்கேதயித்ரு-
புருஷஜ்ஞாநாஸம்பவாத் । யாநி ஸங்கேதக்ருதாநி தாநி ஸர்வாணி
ஸாக்ஷாத் பரம்பரயா வா ஜ்ஞாயந்தே । ந ச தேவதத்தாதிஶப்த-
வத் கல்பயிதும் யுக்தம், தேஷு ச ஸாக்ஷாத் பரம்பரயா வா ஸம்-
கேதோ ஜ்ஞாயதே । கவாதிஶப்தாநாம் து அநாத்யநுஸந்தாநா-
விச்சேதேऽபி ஸங்கேதயித்ருஜ்ஞாநாபாவாத் போதகத்வஶக்தி: ஸ்வாபா-
விகீ । அக்நிப்ரப்ருதீநாம் தாஹகத்வாதிஶக்திவதிந்த்ரியாணாம் போத-
கத்வஶக்திவச்ச ஶப்தஸ்யாபி போதகத்வஶக்திராஶ்ரயணீயா ।

நநு ச இந்த்ரியவச்சப்தஸ்யாபி யதி போதகத்வம் ஸ்வாபாவிகம்,
ஸம்பந்தக்ரஹணம் போதகத்வாய கிமித்யபேக்ஷ்யதே இதி சேத்,
தத்ரோச்யதே । யதா ஜ்ஞாதஸம்பந்தநியமம் தூமாதி அக்ந்யாதிவிஜ்ஞாந

---

சப்தத்தின் சக்தி ஸங்கேதத்தால் ஏற்படுத்தப்பட்டதன்று என்னென்றால், அப்படி
ஒரு ஸங்கேதம் எவனால் ஏற்படுத்தப்பட்டதென்று இப்பொழுது ஒருவராலும் அறியப்
படவில்லையன்றோ? அதன் அநுஸந்தாநம் அநாதிகாலமாய் எவ்வித பங்கமுமிராமல்
அநுவர்த்தித்துக்கொண்டு வந்திருக்கிறபடியால், ஸங்கேதத்தை ஏற்படுத்தின புருஷ
னுடைய ஜ்ஞானம் மறக்கப்பட்டுப் போய்விட்டது என்று சொல்வதும் ஸாத்யமில்லை.
எவை எவை ஸங்கேதத்தால் ஏற்பட்டிருக்கின்றனவோ, அவை ஸம்பந்தப்பட்ட
விஷயங்களெல்லாவற்றிலும் அந்த ஸங்கேதம் எவனால் ஏற்படுத்தப்பட்டது என்பது
ஸாக்ஷாத்தாகவோ பரம்பரையாகவோ அறியப்பட்டே இருக்கின்றது. '[ஒருவன் பெய
ராக வழங்கிவரும்] தேவதத்தன் போன்ற சப்தங்களிற்போல், இவைகளிலும் நாம்
ஒரு ஸங்கேதத்தைக் கல்பிக்கக் கூடாதோ?' என்று கேட்பதும் யுக்தமன்று. தேவ
தத்தன் முதலிய பெயர்களிலும், ஸாக்ஷாத்தாகவோ பரம்பரையாகவோ ஸங்கேதம்
அறியப்பட்டே இருக்கின்றது 'கோ' (பசு) முதலிய சப்தங்கள் விஷயத்திலோ
வென்றால், அநாதி காலமாக அநுஸந்தாநம் எவ்வித பங்கமுமிராமல் அநுவர்த்தித்து
வந்துகொண்டிருக்கையிலும், ஸங்கேதத்தை ஏற்படுத்தினவன் எவனென்பது அறியப்
படவில்லை ஆகையால் அந்தச் சப்தங்களில் காணப்படும் அந்த போதகத்வ சக்தி
ஸ்வபாவ ஸித்தமென்றே சொல்ல வேண்டும் ஆகையால் நெருப்பினிடத்தில் காணப்
படும் எரிக்கும் சக்தி போலவும், இந்த்ரியங்களில் காணப்படும் புத்திவிசேஷ போத
கத்வ சக்தி போலவும், சப்தத்தில் காணப்படும் அந்த போதகத்வ சக்தியும் ஸ்வபாவ
ஸித்தமென்பதே ஸித்தம்

---

யதோக்தம் — மலையில் புகை தெரிகிறபடியால் அவ்விடத்தில் அக்னியும் இருக்
கின்றது என்று அறிவதற்கு, புகைக்கும் அக்னிக்குமுள்ள ஸம்பந்த ஜ்ஞானம் அவச்யம்
வேண்டுமன்றோ? அது போலவே இவ்விடத்திலும் இவ்விடத்தில் வேறு ஒரு தருஷ
டாந்தமும் சொல்லலாம் இந்த்ரியங்களுக்குப் பதார்த்தங்களை அறிவிக்கும் சக்தி இயற்
கையாக இருக்கையிலும், அவை வெளிச்சம் முதலானவைகளை அபேக்ஷித்து நிற்கின்
றனவன்றோ? அதுபோலவே இவ்விடத்தில் ஸம்பந்த ஜ்ஞானம் உதவுகின்றது.

𑌜𑌨𑌕𑌂, 𑌧𑍂𑌮𑍋 𑌜𑍍𑌞𑌾𑌤𑌸𑌂𑌬𑌂𑌧𑌨𑌿𑌯𑌮𑌃 𑌶𑌬𑍍𑌦𑍋𑌽𑌪𑌿 𑌅𑌰𑍍𑌥𑌵𑌿𑌶𑍇𑌷𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌜𑌨𑌕𑌃 । 𑌏𑌵𑌂 𑌤𑌰𑍍𑌹𑌿 𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌵𑌿𑌶𑍇𑌷𑌸𑍍𑌯 𑌲𑌿𑌂𑌗𑌤𑍍𑌵𑍇𑌨𑌾𑌨𑍁𑌮𑌾𑌨𑌮𑍇𑌵 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌨𑍈𑌵𑌮𑍍, 𑌶𑌬𑍍𑌦𑌾𑌰𑍍𑌥𑌯𑍋𑌃 𑌸𑌂𑌬𑌂𑌧𑍋 𑌬𑍋𑌧𑍍𑌯𑌬𑍋𑌧𑌕𑌭𑌾𑌵 𑌏𑌵, 𑌧𑍂𑌮𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌤𑍁 𑌸𑌂𑌬𑌂𑌧𑌾𑌨𑍍𑌤𑌰𑌮𑌿𑌤𑌿 𑌤𑌸𑍍𑌯 𑌸𑌂𑌬𑌂𑌧𑌸𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌣 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌜𑌨𑌕𑌤𑍍𑌵𑌮𑌿𑌤𑌿 𑌵𑌿𑌶𑍇𑌷𑌃 । 𑌏𑌵𑌂 𑌗𑍃𑌹𑍀𑌤𑌸𑌂𑌬𑌂𑌧𑌸𑍍𑌯 𑌬𑍋𑌧𑌕𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌚𑍍𑌚 𑌅𑌨𑌾𑌦𑍍𑌯𑌨𑍁𑌸𑌂𑌧𑌾𑌨𑌾𑌵𑌿𑌚𑍍𑌛𑍇𑌦𑍇𑌽𑌪𑌿 𑌸𑌂𑌕𑍇𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌚𑍍𑌚 𑌬𑍋𑌧𑌕𑌤𑍍𑌵𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑍇𑌵𑍇𑌤𑌿 𑌨𑌿𑌶𑍍𑌚𑍀𑌯𑌤𑍇 । 𑌏𑌵𑌂 𑌬𑍋𑌧𑌕𑌾𑌨𑌾𑌂 𑌪𑌦𑌸𑌂𑌘𑌾𑌤𑌾𑌨𑌾𑌂

---

இவ்விதம் இந்த்ரியங்களைபோல சப்தங்களும் ஸ்வபாவத்தாலேயே அர்த்தத்தை உணர்த்தும் சக்தியை உடையவையானால், அப்படி அவை அர்த்தத்தை உணர்த்துவதில் தமக்கும் தமது அர்த்தத்திற்குமுள்ள ஒரு வித ஸம்பந்த ஜ்ஞானத்தையும் சார்ந்திருப்பது ஏன்? என்றால், 'லிங்கத்தில் தெரிவதுபோலவே இவ்விடத்திலும்' என்பதே அதற்கு ஸமாதானம். அதாவது—புகையைப் பார்த்தவுடன் அந்தப் புகையிருக்குமிடத்தில் நெருப்புமிருக்கின்றது என்று அறிவதற்கு, புகைக்கும் நெருப்புக்கும் உள்ள ஸம்பந்த நியமத்தின் ஜ்ஞானம் எப்படி அபேக்ஷிதமோ, அப்படியே ஒரு சப்தத்தைக் கேட்டவுடன் அதன் அர்த்தம் ஸ்புரிப்பதற்கும் அந்தச் சப்தத்திற்கும் அதன் அர்த்தத்திற்குமுள்ள ஸம்பந்த நியமத்தின் ஜ்ஞானம் அபேக்ஷிதமே என்பது தான். 'அப்பொழுது சப்தத்திற்கு அர்த்தம் தோன்றும் பொழுது ஏற்படும் தோற்றமெல்லாம், ஹேதுவைக்கண்டு அநுமானம் செய்வதுபோல அநுமானமே ஆகிவிடுமென்றோ?' என்று சங்கிக்கலாம். அப்படி இல்லை; சப்தத்திற்கும் அர்த்தத்திற்குமுள்ள ஸம்பந்தம் ஒரு வகைப்பட்டது, ஹேதுவுக்கும் ஸாத்யத்திற்குமுள்ளது வேறு வகைப்பட்டது. ஒருவித ஸம்பந்த ஜ்ஞானத்தின் வழியாக புத்தி உண்டாகின்றது என்பது மாத்ரம் இரண்டு இடங்களிலும் ஸமானம். இவ்விதம் ஸம்பந்தம் அறியப்பட்டவுடன் சப்தங்கள் அர்த்தத்தைப் போதி

---

𑌏𑌵𑌂 𑌤𑌰𑍍𑌹𑌿—இவ்விதம் சப்தமும் ஸம்பந்த க்ரஹணத்தை அபேக்ஷிக்கும் பக்ஷத்தில், அப்பொழுது சப்தம் அர்த்தத்தை உணர்த்தும் பொழுதெல்லாம் அநுமான வழியாகவே உணர்த்துகின்றதென்றன்றோ ஏற்படும்? அது சரியோ? இதற்கு ஸமாதானமாவது-இவை இரண்டாலும் அபேக்ஷிக்கப்படும் ஸம்பந்த ஜ்ஞானங்கள் வேறுபட்டவை, என்பதே. அநுமானத்தில் ஜந்ய ஜநக ஸம்பந்தமென்றும் சப்தத்தில் போத்ய போதக ஸம்பந்தமென்றும் அவைகளுக்குப் பரஸ்பரம் பேதம் சொல்லப்படும்.

𑌏𑌵𑌂 𑌗𑍃𑌹𑍀𑌤—இப்படி எல்லா சப்தங்களுக்கும் போதகத்வ சக்தியானது ஸ்வாபாவிகமாக இருந்தால், லௌகிக சப்த ராசிகளென்றும் வைதிக சப்த ராசிகளென்றும் வழங்கி வரும் விபாகம் எப்படி ஏற்படுமென்றால், அது ஏற்படும் மாதிரியை விளக்குகிறார்.

ஸம்ஸர்கவிசேஷபோதகத்வேந வாக்யசப்தாபிதேயாநாமுச்சாரணக்ரமோ யத்ர புருஷபுத்திபூர்வகः, தே பௌருஷேயாः சப்தா உச்யந்தே, யத்ர து தது³ச்சாரணக்ரமः பூர்வபூர்வோச்சாரணக்ரமஜநிதஸம்ஸ்காரபூர்வகः ஸர்வே அபௌருஷேயாஸ்தே, தே ச வேதா இத்யுச்யந்தே । ஏததேவ வேதாநாமபௌருஷேயத்வம் நித்யத்வம் ச, யத் பூர்வபூர்வோச்சாரணக்ரமஜநித ஸம்ஸ்காரேண தமேவ க்ரமவிசேஷம் ஸ்ம்ருத்வா தேநைவ க்ரமேணோ

---

க்கிற படியால், அந்தப் போதகத்வ சக்தி ஸ்வாபாவிகமென்றும் அது ஒரு ஸங்கேதத்தை இட்டு ஏற்படவில்லை என்றும் நிச்சயிக்கப்படுகின்றது. ஸங்கேதம் செய்தவரின் ஜ்ஞானம் இருந்தாலன்றோ அது ஸங்கேதத்தை இட்டு ஏற்பட்டதென்று சொல்லக்கூடும்? அநுஸந்தானம் அநாதிகாலமாகத் தொடர்ந்து வந்திருக்கையிலும் அம்மாதிரி ஒரு ஸங்கேதாவின் ஜ்ஞானமும் தென்படவில்லையே.

இவ்விதம் சப்தங்கள் அர்த்தத்தை ஸ்வபாவத்தாலேயே உணர்த்துகிறபடியால் பல சப்தங்கள் ஒன்று சேர்க்கப்பட்டு 'வாக்யம்' என்று வ்யவஹரிக்கப்படும் பத ஸமூஹங்களும் தம்மால் குறிக்கப்படும் அர்த்தங்களுக்குப் பரஸ்பரம் இருக்கும் ஸம்பந்தத்தை முன்னிட்டு ஒரு ஜ்ஞான விசேஷத்தை உணர்த்தும். அந்தச் சப்தங்கள் ஒரு மநுஷ்யனுடைய புத்தி க்ரமப்படியாகச் சேர்க்கப்பெற்று அந்த க்ரமத்தில் உச்சரிக்கப்படும் பொழுது, அவைகளைப் பௌருஷேயங்களென்றும் (மனிதனால் ஏற்படுத்தப் பட்டவை என்றும்), அப்படி மநுஷ்யனுடைய புத்தியை முன்னிடாமல் அநாதிகாலமாக உச்சரிக்கப்பட்டு வரும் க்ரமத்தால் ஏற்படும் ஸம்ஸ்காரமடியாக அவை உச்சரிக்கப்பட்டு வந்தால் அப்பொழுது அவைகளை அபௌருஷேயங்களென்றும் அதை அறிந்தவர்கள் சொல்வார்கள். வேதங்களென்று சொல்லப்படுமவையெல்லாம் இம்மாதிரி அபௌருஷேயங்களே. இந்தக் காரணத்தாலேயே வேதங்கள் நித்யங்களென்று சொல்லப்படுகின்றன. அதாவது, பூர்வம் பூர்வம் உச்சரிக்கப்பட்டு வந்த க்ரமத்தால் உண்டாகும் ஸம்ஸ்காரத்

---

ஏததேவ—வேத சப்த ராசிகளின் உச்சாரணம் பூர்வ நினைவை முன்னிட்டு ஏற்படுகின்றது என்று இருந்தாலும், இரண்டு சப்த ராசிகளும் புருஷாதீநங்களாக இருக்கிறபடியால், வேதத்திற்கு மாத்ரம் எவ்விதத்தில் அபௌருஷேயத்வம் சொல்லக்கூடுமென்றால், வேத சப்த ராசிகள் புருஷாதீநங்களாக இருக்கையிலும் புருஷ புத்தியை மூலமாக உடைத்தாயிராமல் இருப்பதாலேயே அவைகளுக்கு அபௌருஷேயத்வம் சொல்லப்படுகின்றது என்பது இவ்விடத்தில் விளக்கப் படுகின்றது.

நித்யத்வம்—இந்த நித்யத்வம், பதங்கள் நித்யங்களாக இருப்பதையாவது அக்ஷரங்கள் நித்யங்களாக இருப்பதையாவது குறிக்கவில்லை; பத நித்யத்வமாவது வர்ண நித்யத்வமாவது அபௌருஷேயமாயிருப்பதற்கு ப்ரயோஜகமென்று சொல்லும் பக்ஷத்தில், மநுஷ்யர்களால் எழுதப்பட்டுள்ள க்ரந்தங்களும் அபௌருஷேயங்களாகத் திரியும். ஆகையால், அநாதிகாலமாக ஒரு ஆநுபூர்வியுடன் உச்சரிக்கப்பட்டு வருவதையே அது குறிக்கின்றது.

ஸ்மரணபூர்வகத்வாத் । தே ச வர்ணக்ரமவிஶேஷேண ஸம்ஸ்திதா அக்ஷரராஶயோ வேதா ருக்யஜுஸ்ஸாமாதர்வபேதபின்னா அநந்தஶாகா வர்தந்தே । தே ச வித்யர்தவாதமந்த்ரரூபா வேதா: பரஸ்ய ப்ரஹ்மணோ நாராயணஸ்ய ஸ்வரூபம் ததாராதனப்ரகாரம் ஆராதிததத்விஶேஷம் ச போதயந்தி । பரஸ்ய ப்ரஹ்மண: தத்வதேவ ததாராதனதத்வாசகவேதராஶிரபி நித்ய ஏவ । வேதானாமானந்த்யாத் துரவகாஹத்வாச்ச பரமபுருஷநியுக்தா: பரமர்ஷய: கல்பே கல்பே நிகிலஜகதுபகாரார்தம் வேதார்தம் ஸ்ம்ருத்வா விதியர்தவாதமந்த்ரமூலானி தர்மஶாஸ்த்ராணீதிஹாஸபுராணானி ச சக்ரு: । லௌகிகாஶ்ச ஶப்தா வேதஶப்தேப்ய ஏவ ப்ரத்யுத்த்ருத்ய தத்தத்ர்தவிஶேஷநாமதயா பூர்வவத் ப்ரயுக்தா: । நனு ச வைதிகா ஏவ ஸர்வே வாசகா: ஶப்தாஶ்சேத், ஸம்ஸ்க்ருதம் பாஷாயாமேவேதி ப்ரத்யக்ஷமஹத:

---

தைக்கொண்டு அந்த க்ரமத்தை நினைத்து நினைத்து அந்த க்ரமப்படி உச்சரிக்கப்படுவதே அபௌருஷேயத்வம், அதுவே நித்யத்வமென்று சொன்னதாயிற்று. இப்படிப்பட்ட க்ரம விசேஷத்துடன் நிற்கும் அக்ஷரக் கூட்டங்களாகிற வேதங்கள் ருக் யஜுஸ் ஸாம அதர்வங்களென்று நாலு வகைப்பட்டு, ஒவ்வொரு வகையிலும் அனந்தங்களான சாகை களுண்டு. ஒவ்வொரு வேதத்திலும் விதியென்று சில பாகங்களும் அர்த்த வாதங்க ளென்று சில பாகங்களும் மந்த்ரங்களென்று சில பாகங்களும் உண்டு. இவையெல்லாம் பர ப்ரஹ்மமாகிற நாராயணனுடைய ஸ்வரூபத்தையும், அவனை ஆராதிக்கும் முறை களையும், அப்படி ஆராதிக்கப்படும் அவனிடமிருந்து நாம் அடையும் பல விசேஷங்க ளையும் போதிக்கின்றன. அப்படி நித்யமான பரம புருஷனைப் போதிக்கிறபடியால், அந்தப் பரம புருஷன் போல அவனுடைய ஸ்வரூபம் முதலிய வற்றைப் போதிக்கும் சப்தங்களும் நித்யங்களே. ஆனால், இந்த வேதங்கள் அனந்தங்களாகவும் ஸுலபமாக அறியக்கூடாதவைகளாகவும் இருக்கிறபடியால், பரம புருஷனாகிற நாராயணனால் ஏவப்பட்டவர்களான சில மஹார்ஷிகள், ஒவ்வொரு கல்பத்திலும் வேதங்களின் பாகங்களா கிற விதி அர்த்தவாதம் மந்த்ரம் இம் மூன்றுகளிலும் சொல்லப்பட்டுள்ள அர்த்தங் களை ஸகல ஜனங்களுடைய நன்மையையும் உத்தேசித்துத் தாம் சாஸ்த்ரங்களென்றும் இதிஹாஸங்களென்றும் புராணங்களென்றும் பல க்ரந்தங்களால் விவரித்திருக்கிறார்கள். லோகத்தில் ஜனங்களுக்கு நித்ய வ்யவஹாரங்களில் வழங்கிவரும் சப்தங்களும

---

ருக்யஜுஸ்ஸாமாதர்வபேதபின்னா:—ருக் யஜுஸ் ஸாமம் அதர்வம் என்று வேதங்கள் பிரிக்கப்பட்டிருக்கிறபடியால் அவைகள் முடிவற்றவை என்று எப்படி சொல்லக்கூடுமென்றால், இவ்விதம் நான்கு பிரிவாக அவை இருந்த போதிலும் ஒவ்வொரு பிரிவிலும் அவை அனந்தங்களான சாகைகளை உடைத்தாயிருக்கிறபடியால் அவை அனந்தங்களாகக் கூடுமன்றோ?

வேதார்த்தம் ஸ்ம்ருத்வா—வேதங்களின் அர்த்தங்களை,

க்ஷயஶப்தவத்வ்ருத்தே | உபவ்ருத்தே - தேஷ்வேவ ஶப்தாநாம் தத்ஸ்தாநே வாசகாநாம் வசநாநாம் ததைவ ப்ரயோக:, ஶப்த ஶ்ருத்யாஜ்ஞாநாநாஞ்சந்யேதி ந கஶ்சித்தோஷ: |

ஸவேதிஹாஸபுராணதர்மஶாஸ்த்ரோபப்ரும்ஹிதஸாங்கவேதவேத்ய: பரப்ரஹ்மபூதோ நாராயணோ நிகிலஹேயப்ரத்யநீக: ஸகலேதரவிலக்ஷணோ ஜ்ஞானாநந்தைகஸ்வரூப: ஸ்வாபாவிகாநவதிகாதிஶயாஸங்க்யேயகல்யாணகுணா

---

வேத ராசியிலிருந்தே எடுக்கப்பட்டு சிற்சில பொருளைக் குறிக்கின்றனவாக பரம்பரையாய் முன் போலவே ப்ரயோகம் செய்யப்பட்டு வருகின்றன. இவ்விதம் எல்லா வாசக சப்தங்களும் வேதங்களிலிருந்தே எடுக்கப்பட்டவையாக இருந்தால், வைதிக சப்தங்களுக்கும் லௌகிக சப்தங்களுக்கும் லக்ஷண பேதம் சொல்வது உபபன்னமாகுமோ? சாஸ்த்ரங்களில் அவைகளுக்கு லக்ஷண பேதம் சொல்லப்பட்டிருக்கின்றதே அதிலிருந்து அவைகளுக்குச் சப்த பேதமும் உண்டென்று ஏற்படவில்லையா? என்றால், அதற்கு ஸமாதானம் சொல்லப்படுகின்றது வேதங்களில் ப்ரயோகம் செய்யப்பட்டுள்ள சப்தங்களுக்கும் லோகத்தில் வழங்கிவரும் சப்தங்களுக்கும் லக்ஷண பேதமுண்டு, அது அவை ஓதப்படும் க்ரம பேதத்தைச் சார்ந்ததே ஒழிய, சப்த பேதத்தைச் சார்ந்ததன்று.

**ஸவேதிஹாஸ** இதிஹாஸம் புராணம் தர்ம சாஸ்த்ரம் இவைகளால் உபப்ருஹ்மிதங்களான ஸாங்க வேதங்களால் ப்ரதிபாதிக்கப்படும் பரப்ருஹ்மமாகிற நாராயணன் ஸகலஹேய பதார்த்தங்களுக்கும் ப்ரதிபடன் என்றும், தன்னைத் தவிர்த்த மற்ற வஸ்துக்களைக் காட்டிலும் விலக்ஷணன் என்றும், அளவற்ற ஜ்ஞானத்தையும் ஆனந்தத்தையும் ஸ்வரூபமாக உடையவன் என்றும், ஸ்வபாவத்தாலேயே ஏற்பட்டவைகளாகவும் எல்லையில்லாத மேன்மையை உடையனவாகவுமான எண்ணிக்கையற்ற கல்யாண குணங்களுக்கெல்லாம் இருப்பிடமென்றும், தனது ஸங்கல்பத்தைச் சார்ந்திருக்கும் ஸ்வரூப

---

விளக்குமவைகளாக உபப்ருஹ்மணங்கள் என்னும் பெயருடன் சில க்ரந்தங்கள் தென்படுகின்றனவே. அப்படி வேதங்கள் உபப்ருஹ்மணங்களை அபேக்ஷித்து நின்றால், அவைகளுக்கு நித்யத்வம் எவ்விதம் சொல்லக்கூடுமே? என்று ஒரு ஆக்ஷேபமுண்டு. வேதங்கள் அனந்தங்களாகவும் ஸ்வல்பமாக விளங்காதவைகளாகவும் இருக்கிறபடியால் மாத்ரம் அவைகளுக்கு உபப்ருஹ்மணங்கள் தேவையாக இருக்கின்றன; ஆகையால் அந்தக் காரணத்தைக் கொண்டு அவைகளுக்கு அநித்யத்வம் சொல்வது ஸாத்யமில்லை என்பதே இந்த ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம்.

**ஸவேதிஹாஸ...** இந்த ப்ரகரணத்தில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்ட விஷயங்களை இவ்விடத்தில் ஸங்க்ரஹித்துச் சொல்லுகிறார்.

**அநந்தமஹாவிபூதி**—இந்தப் பதம் நித்ய விபூதியைக் குறிக்கின்றது அது அநந்தமாக இருப்பதாவது அது எவ்வித அழிவுமில்லாமல் நித்யமாக இருப்பதே. அடுத்துவரும் "நாநாவித" இத்யாதியான பதம் லீலாவிபூதியைக் குறிக்கின்றது,

கூ௮: ஸ்வஸங்கல்பாநுவிதாயிஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்திபேதவிசித்ர த்வஸ்து ஜாதாந்தராத்மதயா ஸ்வாபாவிகாநவதிகாதிசய நாநாவிதாநந்தசேதநாசேதநாத்மகப்ரபஞ்சம் ஸ்வலீலோபகரண மிதி ப்ரதிபாதிதம்।

"ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" "ஐததாத்ம்யமிதம் ஸர்வம் தத்த்வமஸி ச்வேதகேதோ" "ஏதமேகே வதந்த்யக்நிம் மநுமந்யே ப்ரஜாபதிம்। இந்த்ரமேகே பரே ப்ராணமபரே ப்ரஹ்ம சாச்வதம்" "ஜ்யோதீம்ஷி சுக்லாநி ச யாநி லோகே த்ரயோ லோகா லோகபாலாஸ்த்ரயீ ச। த்ரயோऽக்நயச்சாஹுதயச்ச பஞ்ச ஸர்வே தேவா தேவகீபுத்ர ஏவ" "த்வம் யஜ்ஞஸ்த்வம் வஷட்காரஸ்த்வமோங்கார: பரந்தப:। ருததாமா வஸு: பூர்வ: ஸர்வேஷாம் த்வம் ப்ரஜாபதி:" "ஜ்யோதீம்ஷி விஷ்ணுர்புவநாநி விஷ்ணுர்வநாநி விஷ்ணுர்கிரயோ திசச்ச। நத்ய: ஸமுத்ராச்ச ஸ ஏவ ஸர்வம் யதஸ்தி யந்நாஸ்தி ச விப்ரவர்ய"

ஸ்திதி ப்ரவ்ருத்தி பேதங்களை உடைய ஸமஸ்த சேதநாசேதந வர்க்கங்களை உடைத்தாயிருக்கிறானென்றும், அளவிடக்கூடாத ஸ்வரூபத்தையும் ஸ்வபாவத்தையுமுடைய நித்யமான பெரிய விபூதி ஒன்றை உடைத்தாயிருக்கிறானென்றும், பல வகைப்பட்ட அநந்தங்களான சேதநாசேதந வஸ்துக்களால் ஏற்படும் ப்ரபஞ்சத்தைத் தனது லீலைக்குக் கருவியாக உடைத்தாயிருக்கிறானென்றும் இது வரையில் ப்ரதிபாதிக்கப்பட்டது "இவையெல்லாம் ப்ரஹ்மம், இவையெல்லாம் அந்த ப்ரஹ்மத்தையே ஆத்மாவாக உடையவை, ஹே ச்வேதகேதோ! நீயும் அந்த ப்ரஹ்மமே," "இவனைச் சிலர் அக்நியென்றும், சிலர் ப்ரஜைகளுக்கு அதிபனான ப்ரஹ்மாவென்றும், சிலர் இந்த்ரனென்றும், சிலர் ப்ராணனென்றும் மற்றும் சிலர் சாச்வதமான ப்ரஹ்மமென்றும் சொல்லுகிறார்கள்" "இந்த லோகத்தில் தென்படும் ப்ரகாசங்களான ஜ்யோதிஸ்ஸுக்களும், மூன்று லோகங்களும், அந்த லோகங்களைப் பரிபாலித்து வரும் லோகபாலர்களும், மூன்று வேதங்களும், மூவகைப்பட்ட அக்நிகளும், ஐந்து வகைப்பட்ட ஆஹுதிகளும், ஸகல தேவர்களும் இவையெல்லாம் க்ருஷ்ணனே" "நீயே யஜ்ஞனும், நீயே வஷட்காரம், நீயே ஓங்காரம்" "ருததாமா என்னும் வஸு நீயே, நீயே ப்ரஜாபதி," "ஜ்யோதிஸ்ஸுக்களெல்லாம் விஷ்ணு, லோகங்களெல்லாம் விஷ்ணு, காடுகள் மலைகள் திக்குகள் நதிகள் ஸமுத்ரங்கள் இவைகளும் விஷ்ணுவே, இந்த்ரியங்களுக்குப் புலப்படும் பொருள்களும் அவைகளுக்குப் புலப

ஸர்வம் கல்விதம்... இம்மாதிரியான வாக்யங்களில் ப்ரஹ்மமும் ப்ரபஞ்சமும் ஒன்றென்னும் விஷயம் சொல்லப்படுகின்றது. ஸ்ருஷ்டிக்கு முன் காரணாவஸ்தையில் 'ஒன்றே இருந்து' என்று ச்ருதி சொல்லுகிறபடியால், இந்த வாக்யங்களால் சொல்லப்படும் ஐக்யம் 'அவை இரண்டும் ஸ்வரூபத்தாலே ஒன்று' என்பதையே குறிக்கவேண்டும் என்று அத்வைதிகள் சொல்லுகிறார்கள். ஜீவனும் ப்ரஹ்மமும் ஸ்வரூபத்தாலேயே ஒன்று என்று சொல்லும் பக்ஷத்தில் ப்ரஹ்மமே ஸ்வர்க்கம் நரகம் முதலியவற்றை அநுபவிப்பதாக ப்ரஸங்கிக்குமாகையால், அவர்களுக்கு ஸ்வரூபைக்யம் சொல்வது அஸங்க

இத்யாதிஸாமாநாதிகரண்யவ்யபதேஶை: ஸர்வை: ஶப்தை: ஸர்வஶரீரதயா ஸர்வப்ரகாரம் ப்ரஹ்மைவாபிதீயத இதி சோக்தம் | ஸத்யஸங்கல்பம் பரம் ப்ரஹ்ம ஸ்வயமேவ பஹுப்ரகாரம் ஸ்யாமிதி ஸங்கல்ப்ய, அசித்ஸமஷ்டிரூப மஹாபூத ஸூக்ஷ்மவஸ்து போக்த்ருவர்கஸமஷ்டிரூபம் ச ஸ்வஸ்மிந் லீநம் ஸ்வயமேவ விபஜ்ய, தஸ்மாத்

---

படாமல் மனஸ்ஸால் மாத்ரம் நினைக்கக்கூடியவைகளும் அந்த விஷ்ணு தான்” இவ்வாறு எல்லாம் பகவானே என்று ஸாமாநாதிகரண்யத்தைச் சொல்லுமிடங்களெல்லாவற்றிலும், சரீர சரீரி பாவத்தை அவலம்பித்தே அம்மாதிரியான ஸாமாநாதிகரண்யம் சொல்லப்படுகின்றது ஸகல சப்தங்களாலும் அந்த ப்ரஹ்மமே குறிக்கப்படுகின்றதென்று விவரிக்கப்பட்டது ஸத்ய ஸங்கல்பனான அந்த பர ப்ரஹ்மமாகிற பகவான், தானே பஹுப்ரகாரமாக ஆகவேண்டுமென்று ஸங்கல்பித்து, தன்னிடத்தில் லயத்தை அடைந்து கிடந்த மஹா பூத ஸூக்ஷ்மமென்னும் வஸ்துவையும் அதை அநுபவிக்கும்படியான காமத்தைச் செய்துள்ள சேதந வர்க்கத்தையும் தானே பிரித்து, அந்த மஹா பூத ஸூக்ஷ்மத்திலிருந்து ஸ்தூலமான பூமி முதலிய பூதங்களை ஸ்ருஷ்டித்து, அந்த பூதங்களுக்குள் அவைகளின் போக்தாக்களாயுள்ள ஜீவன்களை [அவை அவைகளின் காமங்களுக்குத் தக்கபடி] ஆத்மாவாக ப்ரவேசிக்கச் செய்து, ஜீவன்களுடன் கலந்து நிற்கும் அந்த மஹா பூதங்களை ஒன்றோடொன்று கலந்து, அந்த மஹா பூதங்களைக்கொண்டு ஜகத் முழுவதையும் ஸ்ருஷ்டித்து, தானும் எல்லாவற்றின் உள்ளிலும் அந்தராத்மாவாகப் புகுந்து, இவ்விதம்

---

தமென்றும், சரீர சரீரி பாவத்தைக்கொண்டு ப்ரஹ்மத்தை ஜீவவாசியான சப்தத்தால் சாஸ்த்ரங்கள் பேசுகின்றனவென்று சொல்வதே ஸங்கதமாகுமென்றும் விசிஷ்டாத்வைத வாதிகள் நிர்வஹிக்கிறார்கள் இதுதான் இவ்விடத்தில் விவரிக்கப்படுகின்றது.

**ஸமஷ்டிரூப...** மஹத் அஹங்காரம் முதலியவைகளை அபேக்ஷித்து ப்ரக்ருதி காரணமாகிறபடியால், ப்ரக்ருதியானது இவ்விடத்தில் ஸமஷ்டி என்று சொல்லப்படுகின்றது.

**விபஜ்ய...** ப்ரளய காலத்தில் சேதநம் அசேதநம் எல்லாம் ஒன்றாக ஒரு அவ்யக்தாவஸ்தையை அடைந்து நிற்கின்றன. அவைகளை வ்யக்தமான அவஸ்தையை அடையச் செய்வதே இவ்விடத்தில் ‘பிரித்து’ என்பதால் குறிக்கப்படுகின்றது.

**ஆத்மதயா ப்ரவேஶ்ய...** ஜீவன்களுக்கும் அசேதந வஸ்துவுக்குமுள்ள ஸம்பந்தம் அநாதி ஆகையால், ‘ஜீவன்களை பூதங்களுள் ப்ரவேசிப்பித்து’ என்று சொல்லாமல் ‘ஜீவன்களை பூதங்களுள் ஆத்மாவாக ப்ரவேசிப்பித்து’ என்று சொல்லுகிறார். அப்படி தேஹங்களுள் ஆத்மாவாக ப்ரவேசிப்பது இப்பொழுதே.

**அந்யோந்யஸம்ஸ்ருஷ்டை:**—ப்ருதிவீ முதலிய பூதங்களை ஸ்ருஷ்டித்த பிறகு அவைகளை ஒன்றோடொன்று கலக்கிறதான வ்யாபாரமொன்று உண்டு. அதைப் பஞ்சீகரணமென்று சொல்வார்கள். அதுதான் இவ்விடத்தில் குறிக்கப்படுகின்றது.

நிருக்தம் சாநிருக்தம் ச நிலயநம் சாநிலயநம் ச விஜ்ஞாநம் சாவிஜ்ஞாநம் ச ஸத்யம் சாந்ருதம் ச ஸத்யமபவத்”
இதி வாக்யசேஷோக்தம் ஸர்வம் சேதநாசேதநமேவ ப்ரத்யக்த்வேந வ்யக்த:।
ப்ரஹ்மப்ராப்த்யுபாயஶ்ச ஶாஸ்த்ராதிகததத்த்வஜ்ஞாநபூர்வக

---

ப்ரஹ்மப்ராப்த்யுபாயஶ்ச . ப்ரஹ்மத்தை அடைவதானது பர பக்தியாலே ஸாத்யமென்று ஏற்கெனவே சொல்லப்பட்டிருக்கின்றது. அந்தப் பர பக்தியை ஸாதித்துக்கொள்ளும் மார்க்கம் பின்வருமாறு இருக்கும். முதலில் சாஸ்த்ரங்களிலிருந்து தத்வ ஜ்ஞாநத்தைப் பெற்று, பிறகு அந்த ஜ்ஞாநத்துடன் தம்தம் வர்ணாச்ரம தர்மங்களை அநுஷ்டித்து, பிறகு சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டுள்ள பக்தி யோகத்தை அந்த வர்ணாச்ரம

---

அது பிரமமா யிருக்கையிலும் அது அவைகளுள் அநுப்ரவேசித்து நிற்கிறபடியால் அவைகளைச் சொல்லும் பெயர் அவைகளின் அந்தராத்மாவாக இருக்கும் அந்த ப்ரஹ்மத்தையும் சொல்லும் என்பதையும் காட்டுவதற்காக இந்த ச்ருதி வாக்யம் இவ்விடத்தில் கூறப்படுகின்றது. ஸ:-ஆநந்தமயனான அந்தப் பரமாத்மா, ‘பஹு ஸ்யாம்-தேவ மநுஷ்யாதி ரூபமாக பஹுவாகக் கடவேன், ப்ரஜாயேய-அதற்காக ஆகாசம் முதலியவைகளாக ஆவேன்’ என்று அகாமயத-ஸங்கல்பத்தைச் செய்தது. ஸ: தபோ(அ)தப்யத-அப்படி ஸ்ருஷ்டிக்கப்படவேண்டிய விஷயங்களைப் பற்றி ஆலோசந ரூபமான தபஸ்ஸைச் செய்தது. ஸச்ச-[எப்பொழுதும் ஏகரூபமாக இருக்கும்] சேதந வஸ்துவாகவும், த்யச்ச- [விகாரத்திற்கு ஆஸ்பதமான] அசேதந வஸ்துவாகவும். ‘நிருக்தம்’ என்பதற்கு [‘ஜாதி குணம் முதலியவற்றைச் சொல்லும் சப்தங்களால்] வாச்யமான [அசேதநம்]’ என்பதில் நோக்கு. ‘அநிருக்தம்’ ஜாதி குணங்களிராத [சேதந வஸ்து.] நிலயநம்-[சேதன வஸ்துக்களால்] தரிக்கப்பட்டு நிற்கும் [அசேதநவஸ்து], அநிலயநம்-[அசேதந வஸ்துக்களுக்கு] ஆதாரமாயுள்ள சேதந வர்க்கம் விஜ்ஞாநம்-ஜட ஸ்வரூப மிராத [சேதந வஸ்து;] அவிஜ்ஞாநம்-ஜட ஸ்வரூபமான [அசேதந வஸ்து]; ஸத்யம் ச-நிர்விகாரமாக இருக்கிறபடியால் ஸத்யமென்று சொல்லப்படும் சேதந வஸ்து; அந்ருதம் ச- விகாரத்திற்கு ஆஸ்பதமாக இருப்பதால் அஸத்யமென்று சொல்லப்படும் அசேதந வஸ்து. ஸத்யமபவத்-[இவ்விதம் பல வகைப்பட்ட ரூபத்தை எடுத்துக் கொண்டிருக்கையிலும் அந்தப் பரமாத்மா எப்பொழுமாக இருக்கிறபடியால்] ஸத்யமாகவே இருந்தது. இந்த ச்ருதியால் விளங்கும் விஷயமும் நிர்விகாரமாவது—‘ப்ரஹ்மத்திற்கும் சேதநாசேதந வஸ்துக்களுக்கும் வைலக்ஷண்யம் இருக்கையிலும் ப்ரஹ்மம் அவைகளை அநுப்ரவேசித்து அவையவைகளின் பெயர்களையும் அடைகின்றது’ என்பது தான்.

ப்ரஹ்மப்ராப்த்யுபாயஶ்ச—இவ்வாறு ஸித்த வஸ்துவைப் பற்றிய விஷயங்களை ஸங்க்ரஹித்து விட்டு, இப்பொழுது அதை அடைவதற்கு வேண்டியதான உபாயத்தைப்பற்றி ஸங்க்ரஹிக்கிறார்.

ஸ்வகர்மாநுக்ருஹீதபக்திநிஷ்டாஸாத்யாநவதிகாதிஶயப்ரியவிஶததமப்ரத்யக்ஷதாபந்நாநுத்யாநரூபபரபக்திரேவேத்யுக்தம் । பக்திஶப்தஶ்ச ப்ரீதிவிஶேஷே வர்ததே । ப்ரீதிஶ்ச ஜ்ஞாநவிஶேஷ ஏவ ।

நநு ச ஸுகம் ப்ரீதிரித்யநர்தாந்தரம் । ஸுகஞ்ச ஜ்ஞாநவிஶேஷஸாத்யம் பதார்தாந்தரமிதி ஹி லௌகிகா: । நைவம் । யேந ஜ்ஞாநவிஶேஷேண தத்ஸாத்யமித்யுச்யதே ஸ ஏவ ஜ்ஞாநவிஶேஷ: ஸுகம் । ஏததுக்தம் பவதி—விஷயஜ்ஞாநாநி ஸுகாநி

---

*தாமானுஷ்டானத்துடன் சரிவர அப்யஸித்து, அந்த அப்யாஸத்தால் தனக்கு பகவானிடம் இருக்கும் ப்ரீதி முதிர்ச்சி அடைந்து, அந்தப்ரீதி எல்லையற்ற பெருமையுடன் கூடியதாக ஆகவே தாஸந ஸமாநாகாரமான தெளிந்த பக்வ த்யானமென்று ஏற்படும். அந்த த்யானம் நிலைபெற்று நின்றால் அதைப் பர பக்தி என்று சொல்வார்கள். ஆகையால் இந்தப் பக்தி என்பது ஒரு ப்ரீதி விசேஷம், அந்த ப்ரீதியும் ஒரு ஜ்ஞாந விசேஷம்.*

**நநு ச**...*ஆனால், 'ஸுகம் ப்ரீதி இந்த இரண்டும் ஒரே அர்த்தத்தைக் குறிக்கும் பதங்களல்லவோ? ஸுகம் என்பது ஒரு ஜ்ஞாந விசேஷத்தால் அடையக்கூடிய வேறொரு பொருளென்று லோகத்தில் சொல்லவில்லையா? அப்படி ஜ்ஞானத்தின் கார்யமாயுள்ள ஸுகத்தை ஜ்ஞானமே' என்று எவ்விதம் சொல்லக்கூடும்?' என்று ஒரு ஆக்ஷேபம் இவ்விடத்தில் உதிக்கலாம். 'ஸுகம் ஜ்ஞானத்தால் ஸாதிக்கப்படக் கூடியதாக இருந்தாலும் அது ஜ்ஞானமே' என்று சொன்னால் அது அஸங்கதமே ஆகும். நாங்கள் அப்படிச் சொல்லவில்லை. நாங்கள் சொல்வது என்னவென்றால் – 'ஸுகம்' 'துக்கம்' 'ஸுகமும் துக்கமுமல்லாதது' இந்தச் சப்தங்களெல்லாம், தாம்தாம் ஸம்பந்தப்பட்டுள்ள விஷயங்களின்*

---

**பக்திநிஷ்டா—பக்தி யோகத்தின் அப்யாஸம். 'பரபக்தி' என்பது பகவானை அடைவதற்கு முன்னிருக்கும் அவஸ்தை.**

**ப்ரீதிஶ்ச ஜ்ஞாநவிஶேஷ ஏவ—'ஜ்ஞானமன்றோ மோக்ஷத்திற்கு உபாயமாகவேண்டும்? அப்படி இருக்கையில், பக்தியை மோக்ஷோபாயமென்று சொல்வது எவ்விதம் உபபந்நமாகும்' என்று ஒரு சங்கையைச் செய்துகொண்டு, அதற்கு ஸமாதானமாக 'பக்தியும் ஒரு ஜ்ஞாந விசேஷமே' என்று சொல்லுகிறார்.**

**நநு ச—இவ்விடத்தில் செய்யப்படும் ஆக்ஷேபமாவது—'பக்தி என்பது ஒருவித ப்ரீதியானால், ப்ரீதியும் ஸுகமும் ஒன்றாகையால், பக்தி என்பது ஒருவித ஸுகமென்று ஏற்படுகின்றது. ப்ரீதியும் ஒரு ஜ்ஞாந விசேஷமாகையால், ஜ்ஞாந விசேஷமே ஸுகம் என்றன்றோ ஸித்திக்கும்! அது அநுபபந்நமாயிற்றே! ஏனென்றால், லோகத்தில் (வைசேஷிக மதஸ்தர்கள்) ஸுகத்தை ஜ்ஞானத்தால் ஸித்திக்கும் வேறொரு பதார்த்தமென்றன்றோ சொல்லுகிறார்கள்?' என்பது தான். இதற்கு ப்ரத்யுத்தரம் 'ஜ்ஞானத்தைக் காட்டிலும் வேறுபட்ட பதார்த்தமன்று ஸுகமென்பது; 'ஸுகமென்பது ஒருவித ஜ்ஞாநவிசேஷமே' என்பதுதான். இது தான் இவ்விடத்தில் உபபாதிக்கப்படுகின்றது.**

து:கோபேக்ஷாகாராணி தாநி ச விஷயாதீநவிசேஷாணி ததா பவந்தி | யேந ச விஷயவிசேஷேண விசிஷ்டம் ஜ்ஞாநம் ஸுகஸ்ய ஜநகமித்யுக்தம் தத்விஷயம் ஜ்ஞாநமேவ ஸுகம் | தததிரேகி பதார்த்தாந்தரம் நோபலப்யதே; தேநைவ ஸுகித்வவ்யவஹாரோபபத்தே: |

ஏவம்விதஸுகஸ்வரூபஜ்ஞாநஸ்ய விசேஷகத்வம் ப்ரஹ்மவ்யதிரிக்தஸ்ய வஸ்துந: ஸாதிசயமஸ்திரம் ச ப்ரஹ்மணஸ்த்வநவதிகாதிசயம் ஸ்திரம் சேதி "ஆநந்தோ ப்ரஹ்ம" இத்யுச்யதே | விஷயாயத்தத்வாஜ்ஜ்ஞாநஸ்ய ஸுகரூபதயா ப்ரஹ்மைவ ஸுகம் | ததிதமாஹ 'ரஸோ வை ஸ:" | ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாநந்தீ பவதி" இதி | ப்ரஹ்மைவ ஸுகமிதி ப்ரஹ்ம லப்த்வா ஸுகீ பவதீத்யர்த்த: | பரமபுருஷ: ஸ்வேநைவ ஸ்வயமநவதிகாதிசயஸுகஸ்ஸந் பர

---

ஜ்ஞாநங்களையே குறிக்கின்றன அந்த ஸுகம் முதலியவைகளுக்குப் பரஸ்பரமுள்ள விசேஷங்களெல்லாம் அந்தந்த விஷயங்களையே சார்ந்திருக்கிறபடியால், அவைகள் அந்தந்த விஷயங்களுக்குத் தக்கபடி ஸுகமாயும் துக்கமாயும் ஸுகமும் துக்கமுமல்லாதவைகளாயும் ஆகின்றன ஒரு விஷயத்தில் ஒருவன் ஸுகத்தை அநுபவிக்கும்பொழுது, அந்த விஷயத்தின் ஜ்ஞாநமே அவனுக்கு ஸுகமாகின்றதே தவிர, அந்த ஜ்ஞாநத்தைக்காட்டிலும் ஸுகமென்று வேறொரு வஸ்து உண்டாகின்றது என்பது இல்லை. ஒருவன் ஸுகியாக இருப்பதை அந்த விஷயத்தின் ஜ்ஞாநத்தைக் கொண்டே நிர்வஹிப்பதும் ஸாத்யமே.

ஏவம்விய—இந்த ஸுகரூபமான ஜ்ஞாநமானது, ப்ரஹ்மத்தைத் தவிர்த்த மற்றை வஸ்துக்களின் விஷயத்தில், ஒரு அளவுக்கு உட்பட்டதாகவும் சீக்ரத்தில் நசித்து விடுவதாகவும் இருக்கின்றது, ப்ரஹ்மத்தின் விஷயத்திலோவென்றால் அது அளவற்றதாகவும் சாச்வதமாகவும் இருக்கின்றது சருதியும் 'ஆநந்தோ ப்ரஹ்ம' [ப்ரஹ்மம் என்பது ஆநந்தமே] என்று சொல்லுகின்றது ஜ்ஞாநம் என்பது விஷயத்தைச் சார்ந்திருக்கின்றது, ஆகையால் ஸுக ரூபமாக இருக்கும் ப்ரஹ்மத்தை ஸுகமென்று சொல்வது அயுக்தமாக மாட்டாது சருதியும் 'ரஸோ வை ஸ:' [அவன் ரஸமே] ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாநந்தீ பவதி [அப்படிப்பட்ட ரஸத்தை அடைந்த ஜீவன் ஆநந்தத்தைப் பெற்றவனாகிறான்] என்று சொல்லுகின்றது ப்ரஹ்மம் ஸுகமாகிறபடியால் அந்த ப்ரஹ்மத்தை அடைந்து அவன் ஸுகியாகிறான் என்பது பொருள். பரமபுரு

---

**பரமபுருஷ:—லோகத்தில் எது ஒருவனுக்கு ஸுகமாக இருக்கிறதோ, அது தனக்கும் ஸுகமாக இருப்பதை ஒருவரும் கண்டதில்லையே! ப்ரஹ்மமும் அம்மாதிரி பிறருக்கு மாத்ரம் ஸுகமாக இருக்கின்றதோ?' என்று சங்கித்துக் கொண்டு, 'அவ்விதம் இல்லை; ப்ரஹ்மம் பக்தர்களுக்கு ஸுகமாக இருக்கையில் தனக்கும் ஸுகமாக இருக்கின்றது' என்று சொல்லுகிறார். ப்ரஹ்மம் என்பது எவனுக்கு ஜ்ஞாந விஷயமாகின்றதோ அவனுக்கு அது ஸுகமாகவே இருக்கின்றது; தனக்கும் ஜ்ஞாந விஷயமாவதால் தன்க்கும் ஸுகமென்பதில் ஆக்ஷேபமில்லை.**

ஸ்யாதேவ ஸுகம் ஹவதி | ஸுகரூப ஏவ தாத்ருஶஶ்ச ப்ரஹ்ம யஸ்ய ஜ்ஞாநவிஷயோ ஹவதி ஸ ஸுகீ ஹவதீத்யர்த்த²: | ததேவம் பரஸ்ய ப்ரஹ்மணோ(அ)நவதிகாதிஶயாஸங்க்யேய கல்யாண குண கணாகரஸ்ய நிரவத்யஸ்ய அநந்தமஹாவிபூதே: அநவதிகாதிஶய ஸௌஶீல்ய ஸௌந்தர்ய வாத்ஸல்ய ஜலதே: ஸர்வஶேஷிண ஆத்மந: ஶேஷத்வேந ப்ரதிஸம்பந்திதயாநுஸந்தீயமாநம் அநவதிகாதிஶய ப்ரீதிவிஷயம் ஸத் பரம் ப்ரஹ்மைவ ஜ்ஞாதாரம் ப்ராபயதீதி |

நநு ச 'அத்யந்தஶேஷத்வ ஏவாத்மநோ(அ)நவதிகாதிஶயம் ஸுகவத்த்வம் ஹவதி | ததேதத் ஸர்வலோகவிருத்தம் | ததா ஹி ஸர்வேஷாமேவ சேதநாநாம் ஸ்வாதந்த்ர்யமேவேஷ்டதமம் த்ருஶ்யதே பாரதந்த்ர்யம் து:கதரம் | ஸ்ம்ருதிஶ்ச

---

ஷனுகிற பகவான இம்மாதிரி ஜீவனுககு ஸுகமாக இருநதுகொண்டு தனககும அளவற்ற ஸுகமாக இருககிருன. அவன ஸுகருபமாக இருபபது தன விஷயததில ஒரு விதமாயும ஜீவன் விஷயததில மறறொரு விதமாயும இலலையன்ருே' அவன, தனககோ தன்னைததவிாதத மற்ருெரு வஸதுவுககோ [ஜீவனுககோ] எவனுககு ஜஞாந விஷயமாளுலும, அவனுககு அவன ஸுகமாகிருன் என்பதே இநத சருதி வாகயததின அர்ததம பா பரஹ்மமானது, அளவற்ற பெருமையை உடையவையும எணணிககையற்றவையுமான கலயாண குணஙகளுககெலலாம இருபபிடம, ஒருவித தோஷமும அதனிடததில இலலை; அதனுடைய விபூதியும மிகப பெரியது, [இவவிதம அது மிக உயாநத ஸவருபமாக இருககையிலும] அது மிகவும ஸுலபம, எலலையற்ற ஸௌசீலயம ஸௌநதாயம வாதஸலயம இவைகளை நிரமபப பெற்றது, ஸகல ஜீவாதமாககளுககும அது சேஷி ஸகல ஜீவன்களும அதறகு சேஷம; ஆகையால ஜீவனகளால, தாம் அதற்குச சேஷமென்றும் அது தமககுச சேஷியெனறும அநுஸநதாநம செயயபபடும பொழுது அது அளவற்ற பரீதிககு விஷயமாகினறது, அவ்விதம பரீதி விசேஷததிறகு விஷயமாகிக கொண்டு அது ஜீவன்களைத தனனிடம சோததுககொளளுகினறது.

நநு ச—'இவவிதம சொலவதிலிருநது, பகவானுககு ஜீவன்களெலலாம் அத்யந்தம சேஷமாயிருபபதே அநத ஜீவன்களுடைய ஸுகததின பொருட்டு ஆகினறது எனறு சொன்னதாக ஏறபடுகினறதே. இது லோக விருததமனறோ? லோகத்தில் சே

---

ஶேஷத்வ ப்ரதிஸம்பந்திதயா அநுஸந்தீயமாநம்— பக்தர்கள் ப்ரஹ்மத்தினிடத்தில் செய்யும் ப்ரீதியானது 'தாம் அந்த ப்ரஹ்மத்தின் தாஸர்கள்' என்னும் அநுஸந்தாநத்துடன் கூடியே இருக்குமன்றோ?

நநு ச— 'தாஸ்யம் என்பது எப்பொழுதும் துக்கமன்றோ? அதை எப்படி ஸுகமென்று சொல்லக்கூடும்?' என்பது ஆக்ஷேபம். அதற்கு ஸமாதாநம் 'ஸுகமென்பதும் துக்கமென்பதும் ஸ்வாதந்த்ர்யத்தையும் பாரதந்த்ர்யத்தையும் சார்ந்தவை

